# தாவோ
# ஒரு
# தங்கக் கதவு

ஓஷோ

தமிழில்:
**வரலொட்டி ரெங்கசாமி**



**கவிதா பப்ளிகேஷன்**

தபால் பெட்டி எண் : 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார்,
தி. நகர், சென்னை - 600 017.
© 2436 4243, 2432 2177, 2433 6502

# 1. ஒரு காலியான பாதை

*வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:*

*மேன்மையான தாவோ உருவமற்றது. எனினும் இந்த பூமியையும், சொர்க்கத்தையும் அதுதான் அளித்துக் காக்கிறது.*

*மேன்மையான தாவோ ஆசையற்றது. எனினும் அதன் சக்தியால் தான் சூரியனும் வெண்ணிலவும் அதனதன் பாதையிலிருந்து தவறாமல் சுழன்று கொண்டிருக் கின்றன.*

*மேன்மையான தாவோ பெயரற்றது. எனினும் அதுதான் அனைத்தையும் தாங்கி நிற்கிறது.*

*எனக்கு அதன் பெயர் தெரியாது. என்றாலும், இப்போது நமது பேச்சுக்காக நாம் அதனை தாவோ என்று அழைப்போம்.*

இயற்கையின் தன்மை குறித்த உன்னதமான நுண்ணறிவு தான் தாவோ. இது காலம் கடந்து நிற்கும் தூய்மை.

நான் சொல்வதை நன்றாகக் கவனியுங்கள். நான் இதை தத்துவம் என்றோ, கொள்கை என்றோ மதம் என்றோ சொல்ல வில்லை. அவை எல்லாம் அறிவு சார்ந்தவை. அறிவுஜீவித்தன மானவை. இதை நான் நுண்ணறிவு என்கிறேன். அதாவது உள் நோக்கு. இயற்கை அறிவு சார்ந்தது இல்லை. இருப்புநிலை சார்ந்தது.

மேலே கண்ட வாக்கியங்களைப் பேசியவர் தனது மனதில் இருந்ததைச் சொல்லவில்லை. அவரது நினைவுகளைப் பகிர்ந்து

கொள்ளவில்லை. அவர் தானாக தன்னிலையில் இருந்து இவற்றைப் பேசவில்லை. இந்த மேலான உள்நோக்கு தன் மூலமாக வர, அவர் வெறும் பாதையாக, கருவியாக மட்டுமே இருந்திருக்கிறார். இந்த மேலான நுண்ணறிவு வருகின்ற அந்தப் பாதையில் அவரது எண்ணங்கள், கருத்துகள் எதுவும் தடங்கலாக இல்லை. அவர் காலியான பாதையாக, வெற்று வழியாகத்தான் இருந்திருக்கிறார்.

அப்படித்தான் பெரிய ஞானிகள் வாழ்ந்தார்கள். பேசினார்கள். இவை ஞானிகளின் வார்த்தைகள் இல்லை. அவர்கள் இல்லை. அவர்கள் எப்போதோ மறைந்துவிட்டார்கள். அவர்கள் மூலமாக இந்த பிரபஞ்சத்தையே நிறைத்துக் கொண்டு நிற்கும் அந்த பூரணம், அந்த முழுமை பேசிய வார்த்தைகள்தான் இவை. அந்த வார்த்தைகளின் வடிவங்கள் மாறலாம். ஆனால் அவற்றின் ஊற்றுக்கண் ஒன்றுதான்.

ஏசுநாதர், புத்தர், லா ட்சு, பகவான் கிருஷ்ணர், நபிகள் நாயகம் - இவர்கள் பேசியதெல்லாம் சாதாரண வார்த்தைகள் இல்லை. இவர்கள் யாரும் தங்கள் ஞாபகத்திலிருந்து அந்த வார்த்தைகளைப் பேசவில்லை. தங்கள் ஞான அனுபவத்திலிருந்து பேசினார்கள். இவர்கள் எல்லாம் தெய்விக நிலையைத் தொட்டு விட்டவர்கள். தெய்விக நிலையின் விசேஷம் என்னவென்றால், அதைத் தொட்ட மாத்திரத்தில் தொட்டவர் மறைந்துவிடுவார்.

தெய்விக நிலையோடு இரண்டறக் கலந்துவிடுவார். அதன் பின் தொட்டவர், தொட்டது என்ற பேதம் அழிந்துவிடும். தெய்விகம் வேண்டுமென்றால் முதலாவதாக உங்களுக்குள் இருக்கும் 'நான்' இறக்க வேண்டும்.

இதுதான் தாவோவின் உள்நோக்கு. தாவோ என்பது கடவுளின் இன்னொரு பெயர். அவ்வளவுதான். தாவோ என்ற பெயர் அழகாக இருக்கிறது. கடவுள் என்ற பெயரை அந்த வார்த்தையை நமது பூசாரிகளும், பாதிரியார்களும் மாசுபடுத்திவிட்டார்கள். கடவுளின் பெயரால் காலம் காலமாக மக்களைச் சுரண்டிக் கொண்டிருந்து விட்டார்கள். இவர்களுடைய சுரண்டலால், இவர்களுடைய பித்தலாட்டங்களால் இப்போது கடவுள் என்ற வார்த்தையே அசிங்கமாகப் போய்விட்டது.

அறிவுள்ள எந்த மனிதனும் கடவுள் என்ற வார்த்தையின் பக்கம் தலைவைத்துப் படுக்கவே பயப்படுகிறான். கடவுளின்

பெயரால் பல நூற்றாண்டுகளாக நடந்த அநியாயங்களை, கொலைகளை, கொள்ளைகளை, கற்பழிப்புகளை அந்த வார்த்தை நினைவுபடுத்துகிறது. அதனால் கூடிய மட்டில் அந்த வார்த்தையைப் பிரயோகிப்பதையே தவிர்த்துவிடுகிறான் அவன்.

உலகிலேயே மிகவும் அதிகமாக துஷ்பிரயோகம் செய்யப்பட்ட வார்த்தை 'கடவுள்' தான். வேறு எந்த வார்த்தையையும் விட, இந்த வார்த்தையின் பெயரால் தான் அதிகபட்ச கொடுமைகள் நடந்திருக்கின்றன.

அதனால் தாவோ என்ற வார்த்தை மிக அழகாகத் தோன்றுகிறது. உங்களால் தாவோவை வழிபட முடியாது. ஏனென்றால் தாவோ எப்படி இருக்கும் என்று உங்களால் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது. தாவோ என்றால் ஒரு மனித உருவத்தின் நினைவு வருவதில்லை. தாவோ ஓர் ஆள் இல்லை; அது ஓர் ஆதாரவிதி. நீங்கள் கடவுளை வணங்கலாம். ஆதாரவிதியை வணங்க முடியாது. தாவோவை வழிபட முடியாது. அது மடத்தனமாக, கேலிக்கூத்தாக, இருக்கும்.

நீங்கள் புவியீர்ப்பு விதியை வணங்குவீர்களா? இல்லை, விஞ்ஞானி ஐன்ஸ்டின் வரையறுத்த சார்பியல் கோட்பாட்டுக்கு கற்பூரம் காட்டுவீர்களா? அது அபத்தமாக இருக்கும்.

தாவோ என்பது ஒட்டுமொத்த பிரபஞ்ச இருப்பையும் இணைக்கும் ஆதாரவிதி. இந்த பிரபஞ்சம் என்பது தற்செயலாக நடந்த ஒரு விபத்தில்லை. அது தான்தோன்றித்தனமான குழப்பமும் இல்லை. அண்டங்களின் படைப்புக் கோட்பாட்டின் படி உருவான ஓர் ஒழுங்குமுறை தான் இந்த பிரபஞ்சம்.

விரிந்து கிடக்கும் பிரபஞ்சத்தைப் பாருங்கள். அதில் அதீத ஒழுங்கு தெரிகிறதல்லவா? பூமி சூரியனை ஒரு குறிப்பிட்ட பாதையில் ஒரு குறிப்பிட்ட வேகத்தில், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சுற்றுகிறது. மற்ற கிரகங்கள் சூரியனைச் சுற்றி வருகின்றன. நமது சூரிய மண்டலமே ஒட்டு மொத்தமாக சுழன்று கொண்டிருக்கிறது. எதைப் பார்த்தாலும் அதில் ஓர் அதீத ஒழுங்கு உள்ளூடாக மிளிர்ந்து கொண்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது அந்த ஒழுங்குதான் தாவோ. ஃமுழுமையின் இசைவுதான் தாவோ.

நல்ல வேளை, இதுவரை யாரும் தாவோவிற்காக கோயில்கள் கட்டவில்லை. சிலைகள் வைக்கவில்லை. பூஜை புனஸ்காரங்கள்

செய்யவில்லை. பூசாரிகள் இல்லை. வேறு எந்த இடைத்தரகர்களும் இல்லை. சடங்கு சம்பிரதாயங்களும் இல்லை. அதுதான் தாவோவின் அழகு.

அதனால்தான் தாவோவை ஒரு கொள்கை என்றோ கோட்பாடு என்றோ நான் சொல்லவில்லை. அதை மதம் என்று கூட நான் சொல்லவில்லை. அதைத் தர்மம் என்று அழைக்கலாம். தர்மம் என்றால் தாங்கி நிற்பது என்று பொருள். எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருப்பதுதான் தான் தர்மம். இந்தப் பொருளில்தான் நான் தாவோவை தர்மம் என்கிறேன். புத்தர் தாவோவை தர்மம் என்று தான் சொன்னார். நல்ல தமிழில் இயற்கை என்ற வார்த்தை தாவோவை ஒட்டி வருகிறது.

தாவோ மிக உன்னதமான உள்நோக்கு. எழுதப்பட்ட ஆன்மிக நூல்களிலேயே மிகச் சிறியது இதுதான். பல கோடி ரோஜா மலர்களில் இருந்து எடுக்கப் பட்ட சில துளி ரோஜாச் சாறுதான் இந்த நூல். அந்தக் காலத்தில் புத்தகங்கள் இல்லை. வாய்வழிச் செய்தியாகத்தான் இவை பரவின. அதனால் தான் நூலை எவ்வளவு சுருக்க முடியுமோ சுருக்கி அதன் சாரத்தை மட்டும் சொன்னார்கள். மக்கள் இதை நினைவில் கொள்ள வசதியாக சுருக்கமாக, நச்சென்று சொல்லி வைத்துவிட்டுப் போனார்கள்.

இது தான் முதன் முதலில் எழுதப்பட்ட ஞானப் புத்தகம் என்றும் சொல்வார்கள். இதைப் புத்தகம் என்றும் சொல்ல முடியாது. இதில் இருக்கும் விஷயம் மொத்தம் ஒன்றரைப் பக்கங்கள் தான். எழுதப்படுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே வாய்வழி வார்த்தையாக இருந்த ஆன்மிக சூத்திரங்கள் இவை. கண்டுணர்ந்த ஞானிகள் தங்களுக்குள் பரிமாறிக் கொண்ட ஞானத்தின் சாரம் தான் இந்த தாவோ பற்றிய நூல். மெய்ஞ்ஞானத்தை மற்றவருக்குக் கொடுக்க இப்படி தனிப்பட்ட முறையில் பரிமாறிக் கொள்வதுதான் சிறந்த வழி.

ஞானத்தின் சாரத்தை நூலாகப் பதிப்பித்தால் ஞானம் உரிய இடத்துக்குப் போய்ச் சேரும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. யார் அந்த நூலைப் படிப்பார்கள், அவர்கள் அதை எப்படி புரிந்து கொள்வார்கள் என்று சொல்ல முடியாது. நூலில் அச்சிடப் பட்ட வார்த்தைகள் மூலம் ஆச்சாரியன் அருளைக் கொடுக்க முடியாது. நெருங்கி வந்து நேரில் போதனை கேட்கும் போது தான் குருவருள் கிடைக்கும்.

எகிப்தில், இந்தியாவில், சீனாவில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ஞானம் இப்படித்தான் வழங்கப்பட்டது. ஒரு மனிதனில் இருந்து அடுத்தவனுக்கு. குருவிடமிருந்து அவரது சீடருக்கு. அந்தச் சீடனிடமிருந்து அவனுடைய சீடனுக்கு என்று குருபரம்பரையாகத்தான் மெய்ஞ்ஞானம் வழங்கப்பட்டது.

ஞான உபதேசத்திற்கு சீடன் தயாராக இருக்கிறான் என்று தெரிந்தால்தான் குரு அவனுக்கு உபதேசம் செய்வார்.

அதுவும் மாணவனால் எந்த அளவுக்கு ஞானத்தை உள்வாங்கிக் கொள்ள முடியுமோ அந்த அளவிற்குத்தான் குரு உபதேசம் செய்வார். சீடனால் ஜீரணிக்க முடியாத ஞானம் பேதியாகிவிடும். அவனைப் பேதையாக்கிவிடும். ஜீரணிக்கப்படாத ஞானத்தால் நாம் கடந்த சில நூற்றாண்டுகளாகத் தவித்துத் தத்தளித்துக் கொண்டிருக்கிறோம்.

இதற்காகத்தான் பல ஞானிகள் தங்கள் ஞானத்திற்கு எழுத்து வடிவம் கொடுக்கப் பயந்தார்கள்.

தாவோ தான் ஏறக்குறைய முதலில் எழுதப்பட்ட ஞானப் புத்தகம். அந்த வகையில் இது வரலாற்று முக்கியத்துவம் வாயந்தது. மனிதனின் உணர்வுநிலையில் ஏற்பட்ட மகத்தான முன்னேற்றத்துக்கு இந்தப் புத்தகம் தான் முன்னோடி.

குருமுகமாக, நேருக்கு நேர் கற்பதற்கு ஈடு இணை இல்லை என்றாலும் அந்த வழியில் ஞானத்தை நாம் வெகு சில பேருக்கு மட்டுமே பங்கிட்டுக் கொடுக்க முடியும். பலருக்கு ஞானம் சென்றடையாது. பலர் ஞானம் பெறும் வாய்ப்பைத் தவற விட்டிருப்பார்கள். நேருக்கு நேர் உபதேசம் செய்யும் முறையில் ஒரு தவறான சீடனுக்கு என்றும் ஞானம் கிடைக்காது என்பது உண்மைதான். ஆனால் பல சரியான சீடர்களுக்கும் அது கிடைக்காமல் போய்விடும் வாய்ப்பு இருக்கிறது.

இது போன்ற நேரங்களில் நாம் சரியான, உகந்த சீடர்களின் நிலையைத்தான் அதிகம் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

தவறான சீடர்கள், தவறான நபர்கள் தவறானவர்களாகவேதான் இருப்பார்கள். அவர்களுக்கு ஞான உபதேசம் கிடைத்தாலும் சரி, கிடைக்காவிட்டாலும் சரி, அவர்களின் போக்கில் பெரிய மாறுதல் ஏற்படப்போவதில்லை. ஆனால் நல்ல மாணவர்கள் நல்ல குருவை நேரில் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்காத ஒரே காரணத்திற்காக

ஞானம் பெறாமல் போய்விடலாம். அவர்களை அடியோடு மாற்றும் மெய்ஞ்ஞானம் அவர்களுக்குக் கிடைக்காமலேயே போய் விட்டால்......

இந்த கவலையில் விளைந்ததுதான் இந்த தாவோ நூல். இதற்கு எழுத்து வடிவம் கொடுத்த கோ ஹ்சுவான் மனித ஞான வளர்ச்சியின் வரலாற்றில் ஒரு முக்கியமான மைல்கல். எழுத்து வடிவத்தின் சக்தியைப் பற்றி அவருக்குத் தெரியும். அதில் பொதிந்து இருக்கும் அபாயங்களையும் அவர் அறிந்திருந்தார். தாவோ நூலின் முன்னுரையில் அவர் சொல்கிறார்,

"இந்த வார்த்தைகளை எழுதுவதா, வேண்டாமா என்று நான் பத்தாயிரம் முறை யோசித்தேன். நான் செய்வது அபாயகரமான காரியம் என்று தெரிந்தேதான் இதைச் செய்கிறேன்."

கோ ஹ்சுவான் அளவிற்கு அந்தக் காலத்தில் யாருக்கும் துணிவு இருந்திருக்கவில்லை.

கோ ஹ்சுவானுக்கு முன்னால் லா டசூ, ஷுவாங் ட்சு, லைஹ் ட்சூ போன்ற மகாஞானிகள் இருந்தார்கள். அவர்கள் தாவோ பற்றி முற்றும் உணர்ந்திருந்த போதிலும் அதற்கு எழுத்து வடிவம் கொடுக்க முன்வரவில்லை. அவர்களுடைய சீடர்கள் அவர்களுடைய வார்த்தைகளை நன்றாக நினைவில் வைத்திருந் தார்கள். கோ ஹ்சுவான் தான் முதலில் அதை எழுத வேண்டும் என்ற ஆபத்து நிறைந்த வழியைத் தேர்ந்தெடுத்தார்.

"பத்தாயிரம் முறை யோசித்தேன்."என்று அவர் சொல்வதைக் கவனியுங்கள். அது சாதாரண விஷயமில்லை. வரலாற்றில் அந்தக் கணம் வரை வேறு எந்த ஞானியும் தான் பெற்றுணர்ந்த ஞானத்தை எழுத்து வடிவில் விட்டுச் செல்ல வேண்டும் என்று நினைக்கவில்லை. அப்படிச் செய்தால் ஞானம் தவறான ஆசாமிகளிடம் போய்விடும் என்று அவர்கள் பயந்தார்கள்.

புத்த பெருமான் ஒரு வார்த்தையைச் சொல்வதற்கு முன்னால் ஒரு வாரம் யோசிப்பார். அது சாதாரண யோசனை இல்லை. ஆழ்நிலை சிந்தனை. போதி மரத்தடியில் புத்தனுக்கு ஞானம் கிடைத்தபின் அதே இடத்தில் ஒரு வாரம் அமர்ந்திருந்தார். தான் பெற்ற ஞானத்தைப் பகிர்ந்து கொள்வதா வேண்டாமா என்று அவரது மனதில் ஒரு பெரிய போராட்டமே நிகழ்ந்து கொண்டிருந்தது.

'இந்த ஞானத்தை உணரமுடியாத மக்களிடம் இதைச் சொல்லி என்ன பயன்?' என்று புத்தபெருமான் யோசித்தார்.

'மக்கள் நான் சொல்வதைப் புரிந்து கொள்ள மாட்டார்கள். இல்லை, தவறாகப் புரிந்து கொள்வார்கள். நான் சொன்னதைத் தங்களுக்குச் சாதகமாகத் திரித்துவிடுவார்கள். அதில் இருந்து லாபம் சம்பாதிப்பது எப்படி என்று யோசிக்கத் தொடங்குவார்கள்.'

மக்களிடம் உள்ள நோயை நான் சொல்லும் வார்த்தைகள் தீர்க்கும் என்ற நம்பிக்கையில் நான் அதை அவர்களிடம் சொல்வேன். ஆனால் அவர்கள் என் செய்தியையே நோய்வாய்ப்படுத்தி விடுவார்கள். தங்களின் எண்ணங்களுக்கு ஏற்ப, தங்களுடைய முற்சாய்வுகளுக்கு ஏறப என் செய்தியைத் திருத்தித் திரிசமன் செய்து விடுவார்கள்.

மந்தப் புத்திக்காரர்கள், முட்டாள்கள், கோமாளிகள் எனது செய்தியை மாசுபடுத்த நான் அனுமதிக்கலாமா?' என்று சிந்தித்துக் கொண்டேயிருந்தார் புத்தர்.

புத்தர் தயங்கினார். சொல்வதா வேண்டாமா என்று மனதுக்குள் போராடிக் கொண்டிருந்தார். அப்போது அவரது செய்தியை புரிந்து கொள்ளக்கூடிய சிலரைப் பற்றி யோசித்தார். 'என் செய்தியைப் புரிந்து கொள்ளக்கூடியவர்கள், உண்மையைத் தாங்களாகவே புரிந்து கொள்ளும் வல்லமை படைத்தவர்கள். அவர்கள் சாமானியர்கள் அல்லர். அதிபுத்திசாலிகள். அப்போதுதான் அவர்களால் நான் சொல்வதைப் புரிந்து கொள்ளமுடியும்.

அவர்கள் என் வார்த்தைகளைப் புரிந்து கொண்டால் அவர்களுடைய பாதையை அவர்களே கண்டு கொள்வார்கள். அந்தப் பாதையில் நடந்து சென்று அவர்களே உண்மை நிலையை உணர்ந்து கொள்வார்கள். அவர்களைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? என்ன, அவர்களுக்கு இதைப் புரிந்து கொண்டு நடக்க, கொஞ்சம் நேரம் ஆகும். ஆனால் என்ன? ஞானம் பெறுவதில் என்ன அவசரம் இருக்கிறது? எத்தனை நூற்றாண்டுகள் ஆனால் தான் என்ன? எத்தனை பிறவிகள் எடுத்தால் என்ன? ஞானம் ஞானம்தானே!

ஆனால், இந்த ஞானம் தப்பான ஆசாமிகளிடம் மாட்டிக் கொண்டால் அவர்கள் அதைக் கெடுத்துவிடுவார்களே! அதன் பின் அதன் உண்மை வடிவம் திரிந்து விடுமே?'

இப்படி இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தார் புத்த பெருமான்.

கோ ஹ்சுவான் ஏன் பத்தாயிரம் முறை யோசித்தார் என்று எனக்குத் தெரிகிறது. முட்டாள்களுக்கு ஏதாவது சொன்னால் அவர்கள் அதை உடனே மறந்துவிடுவார்கள். மந்தப்புத்திக்காரர்கள் சொல்வது என்ன என்பதைக்கூட சரியாகக் கவனிக்க மாட்டார்கள். அதில் அவர்களுக்கு அக்கறை இருக்காது.

ஆனால் சொல்லவேண்டியதை எழுத்தில் வைத்தால், அவர்கள் அதை வாசிப்பார்கள். படிப்பார்கள். அதன் பின் அது பள்ளிகளில், கல்லூரிகளில் பாடப்புத்தகமாகிவிடும். தங்களை மேதாவிகள் என நினைத்துக் கொண்டிருக்கும் முட்டாள்கள் அதற்கு உரை நூல்கள், விளக்க நூல்கள் எழுதுவார்கள்.

அதைப் பற்றி அனா ஆவன்னா தெரியாதவர்கள் ஆண்டுக்கணக்கில் அதன் அர்த்தத்தை விவாதிப்பார்கள். அதற்கு எதிராக, ஆதரவாக வாதாடுவார்கள். அந்த மேதாவிகள் போடும் காட்டுக்கூச்சலில் அந்த வார்த்தைகளில் பொதிந்திருக்கும் உண்மை ஓடி ஒளிந்து கொண்டுவிடும்.

சாத்தானிடம் வேலை பார்க்கும் ஒரு குட்டிப் பிசாசு சாத்தானைப் பார்க்க அரக்க பரக்க ஓடி வந்தது.

பயத்தால் நடுங்கியபடி சாத்தானைப் பார்த்துப் பேச ஆரம்பித்தது.

“ஆபத்து, ஆபத்து! உடனே நாம் எதாவது செய்தேயாக வேண்டும்! இல்லாவிட்டால் இந்த உலகத்தில் தீமையே அழிந்து விடும். பின் நாமும் அழிந்துவிடுவோம்.”

“குட்டிப் பிசாசே! முதலில் விஷயத்தைச் சொல்.”

“பூலோகத்தில் ஒரு மனிதன் அடிப்படை உண்மையைக் கண்டுபிடித்துவிட்டானாம். அதனை அவன் எல்லாரிடமும் சொல்லி விடுவான். எல்லாருக்கும் உண்மை தெரிந்துவிட்டால் அன்பு பெருகும். தீமை அழிந்துவிடும். அதன் பின் நமக்கென்ன வேலை?”

சாத்தான் கடகடவென்று சிரித்தது.

“முட்டாள் பிசாசே! முதலில் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொள். முட்டாள்தனமாக பேத்தாதே. நீ சொல்லும் விஷயம் எனக்குத் தெரியும். நமது ஆட்களை நான் ஏற்கனவே அந்த இடத்துக்கு

அனுப்பிவிட்டேன். இனிமேல் அவர்கள் பார்த்துக் கொள்வார்கள். கவலைப்படாதே! தீமை என்றும் அழியாது.''

''ஆனால்... ஆனால்... நான் அங்கிருந்துதானே நேரே இங்கே ஓடிவருகிறேன். அங்கே நமது ஆட்களைப் பார்க்க வில்லையே''

''அந்த உண்மையைக் கண்டுபிடித்தவனைச் சுற்றி அறிஞர்கள், தத்துவ ஞானிகள், பண்டிதர்கள் பூசாரிகள், பாதிரியர்கள், மதகுரு மார்கள் நின்று கொண்டிருப்பார்களே நீ அதைப் பார்க்க வில்லையா? அவர்கள் எல்லாம் நமது ஆட்கள். அதனால் நீ எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். இந்த மேதாவிகள் போடும் வாய்ச் சண்டையில், இவர்களுடைய வாதங்கள்-பிரதிவாதங்களில், இவர்கள் அடிக்கும் கூத்தில் உண்மை துண்டைக் காணோம், துணியைக் காணோம் என்று ஓடிவிடும்.

இந்த பேராசிரியர்கள், பண்டிதர்கள் மேதாவிகள் எல்லாம் என்னுடைய ஆட்கள். அவர்கள் மூலமாகத்தான் நான் என் வேலையைச் செய்கிறேன். அவர்கள் என்னுடைய ரகசிய பிரதிநிதிகள். என்னுடைய உளவாளிகள்.

என்னுடைய நேரடியான ஆட்களை நீ அங்கே பார்த்திருக்க முடியாது ஏனென்றால் நான் இந்த மாதிரி இடங்களுக்கு அவர்களை அனுப்ப மாட்டேன். நான் போ‹ :ாலும் மாறுவேடத்தில் தான் போவேன்.

இந்த தத்துவவாதிகளும் பண்டிதர்களும் மாறு வேடத்தில் இருக்கும் எனது ஆட்கள். அவர்கள் இப்போது அந்த ஞானியைச் சூழ்ந்து கொண்டுவிட்டார்கள். இனிமேல் பாவம், அந்த ஞானியால் ஒன்றும் செய்ய முடியாது. அவனுக்கு வயதாகிவிட்டது. சீக்கிரமே அவன் காலம் முடிந்துவிடும்.

அதன்பின் எனது ஆட்கள் அந்த ஞானியின் சீடர்களாக, அவனது பிரதிநிதிகளாக, அவனது தூதர்களாக தங்களை அறிவித்துக் கொண்டு அவன் பெயரால் ஒரு மதத்தைத் தொடங்கி அவன் கண்டுபிடித்த மெய்ஞ்ஞானத்தை பூண்டோடு அழித்துவிடுவார்கள்.''

பூசாரிகளும், பாதிரிமார்களும் சாத்தான்களின் வேலையாட்கள். அவர்கள் கடவுளுக்கு என்றும் சேவகம் செய்வதில்லை. தர்க்க சாஸ்திரத்தில் மூழ்கி, சின்னச் சின்ன விஷயங்களுக்கு

எல்லாம் பெரிதாக வாதிடும் இந்த விற்பன்னர்கள் எப்படி கடவுளுக்கும், அன்புக்கும் சேவை செய்ய முடியும்?

தாவோ போன்ற உன்னதமான உண்மைகளை நீங்கள் காகிதத்தில் எழுதிவிட்டால் போதும்; இந்த அதிமேதாவிகள் உடனே அதன் மேல் பாய்ந்து அதை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் போட்டு ஆராய்ந்து பெருங்குழப்பத்தை உண்டுபண்ணி எழுத்துகளில் இருந்து உண்மையைத் துரத்திவிடுவார்கள். இது இவர்களின் பிரத்தியேக சாமர்த்தியம். இந்த வாய்ச்சொல் வீரர்கள் கிடைத்த வாய்ப்பை எப்போதும் நழுவ விடுவதில்லை.

கோ ஹ்சுவான் எழுதுவதா வேண்டாமா என்று பத்தாயிரம் முறை யோசித்தார் என்றால் இப்போது ஏன் என்று புரிகிறது அல்லவா?

அவ்வளவு தூரம் யோசித்தபின் அவர் சரியான முடிவைத் தான் எடுத்தார் என்று எனக்குத் தோன்றுகிறது.

இருட்டைப் பார்த்து எப்போதும் நாம் பயப்படக்கூடாது. விளக்கின் ஒளி எவ்வளவு சிறிதாக இருந்தாலும் அது இருட்டை விரட்டிவிடும். இருட்டு எவ்வளவு பெரிதாக இருந்தாலும் சரி, எத்தனை பழையதாக இருந்தாலும் சரி, விளக்கின் ஒளி அதனை அழித்துவிடும். காரணம் இருட்டுக்கு சக்தியில்லை. ஒளிக்குத்தான் சக்தி இருக்கிறது.

தாவோவின் வார்த்தைகள் சக்திவாய்ந்த வார்த்தைகள். அதுவும் ஞானிகள் இத்தகைய வார்த்தைகளைப் பேசும் போது அதனை இந்த அதிமேதாவிகள் சிதைக்க முடியாது. அந்த வார்த்தைகளின் அழகை அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது.

உள்ளதைச் சொல்லப் போனால் இந்த தர்க்க வீரர்களால், இந்த சவடால் பேர்வழிகளால் அந்த வார்த்தைகளில் பொதிந்து இருக்கும் உண்மையைத் தொடக்கூட முடியாது. தாவோ பற்றிப் பேசிய ஞானிகள் தங்கள் வார்த்தைகளைப் புரியாத புதிர்களாக, முரண்படு மெய்ம்மைகளாக் (paradox) கொடுத்தார்கள். அதனால் இந்த படித்த முட்டாள்களால் அந்த வார்த்தைகளைத் தொடக்கூட முடியவில்லை. நூல் அறிஞர்களின், தர்க்கவாதிகளின் அறிவுக்கு அப்பாற்பட்டு நிற்கின்றன அந்த வார்த்தைகள்.

அவற்றில் உள்ள முரண்பாடுகளை மட்டும் தான் அந்த தர்க்கவாதிகளால் பார்க்க முடிந்தது. அந்த முரண்பாடுகளுக்குள்

ஒளிந்து கொண்டிருந்த மெய்ம்மை அவர்களின் அறிவுக்கு எட்டவில்லை. வாதங்களில் மாட்டிக்கொண்டு குருடாகிப்போன அவர்கள் அறிவுக் கண்களுக்கு அந்த உண்மை புலப்படவில்லை.

அறிஞர்கள் வாத-பிரதிவாதங்களின் மூலமாகத்தான் ஒன்றைப் புரிந்து கொள்கிறார்கள். ஆனால் ஞானிகளின் சொற்கள் முரண்படு மெய்ம்மையாக மிளிர்கின்றன. அதனால் அவை தர்க்கத்துக்குப் புறம்பானவையாக, காரண-காரிய அறிவுக்கு எட்டாதவையாக, அவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டு நிற்கின்றன.

அவற்றிலும் குறிப்பாக இந்த தாவோ நூல்கள் இந்த வகையில் மிகப் பிரமாதமாக எழுதப்பட்டிருக்கின்றன. இதுவரை எந்த மேதாவியாலும் அதில் உள்ள முரண்பாடுகளைக் களைய முடியவில்லை. அந்த புதிரை விளக்க முடியவில்லை. இந்த ஒன்றரைப் பக்கப் புத்தகத்தில் தான் எத்தனை முரண்பாடுகள், முரண்படு மெய்ம்மைகள்! ஒவ்வொரு வரியிலும், ஒவ்வொரு சொல்லிலும் அவை ஒளிர்கின்றன.

இங்கே ஒரு விஷயத்தை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். ஞானிகள் உண்மையை ஏன் இப்படி முரண்பாடுகள் மூலமாக விளக்குகிறார்கள்? வெறும் புத்தகப்படிப்பு மட்டும் உள்ள அறிஞர்களுக்கு அவை புரிந்து விடக்கூடாது என்பதற்காகத்தான்.

ஆழ்நிலை சிந்தனை வசப்பட்டவன்தான் அந்த முரண் பாடுகளை புரிந்து கொள்ள முடியும். அவற்றில் ஒளிந்து கொண்டிருக்கும் உண்மையை அறிந்து கொள்ள முடியும். வெறும் மூளையால் மட்டும் எல்லாவற்றையும் அறியத் துடிக்கும் ஒருவனால் இதன் பக்கத்திலேயே வரமுடியாது.

நீங்கள் மனமின்மையைச் சுவைத்திருந்தால்தான் இந்த முரண்பாடுகளைப் புரிந்து கொள்ள முடியும். ஞானிகளின் வார்த்தைகளில் ஒளிந்து கொண்டிருக்கும் உண்மைக்கு இந்த முரண் பாடுதான் பாதுகாப்பு அரண். அதனைத் தாண்டி தர்க்கவாதிகள் உள்ளே வந்து உண்மையைக் குலைக்க முடியாது. அதனால் ஞானிகள் பித்துப் பிடித்தவர்களைப் போலப் பேசுகிறார்கள். பித்தனும், சித்தனும் ஒன்றாகத் தோன்றுவார்கள் என்பது நமது பக்கச் சொலவடை.

இப்படித்தான் ஒரு நாள் காலை மிகப் பெரிய ஞானியான குர்ஜிஃப்பைப் பார்க்க ஒரு பத்திரிகை நிருபர் வந்திருந்தார்.

அப்போது குர்ஜிஃப் தேநீர் பருகிக் கொண்டிருந்தார். அவருக்கு நிருபர்களைக் கண்டாலே பிடிக்காது. இருப்பதிலேயே அவர்கள்தான் வடிகட்டின முட்டாள்கள் என்பது அவரது தீர்வு. பத்திரிகை நிருபர்களை விரட்டுவதை ஒரு கலையாகவே செய்துவந்தார் அந்த ஞானி.

அன்றும் அப்படித்தான் நடந்தது. தேநீர் கொண்டு வந்து கொடுத்த தனது பெண் சிஷ்யையைப் பார்த்து,

“இன்று என்ன கிழமை?” என்று கேட்டார் அவர்.

நிருபர் அவசர அவசமாகக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்.

“சனிக்கிழமை.” அமைதியாகச் சொன்னாள் அந்தப் பெண்.

குர்ஜிஃப்புக்கு பயங்கரமாகக் கோபம் வந்துவிட்டது. ஆத்திரத்தில் தனது கையில் இருந்த தேநீர் கோப்பையைத் தரையில் தூக்கி எறிந்தார். அது நூறு துண்டாகிச் சிதறியது.

நிருபர் இப்போது பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தார். அவர் எழுதுவதை நிறுத்திவிட்டு ஞானியைப் பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். ‘ஓ இன்று சனிக்கிழமை என்பதால் தான் இவர் இப்படிச் செய்கிறாரோ’ என்று நினைத்தார் அந்த நிருபர்.

குர்ஜிஃப் கோபம் தணியாமல் சொன்னார்.

“உனக்கு அறிவே கிடையாது, பெண்ணே! இப்படித்தான் முட்டாள்தனமாக எதையாவது சொல்லிக்கொண்டிருக்கிறாய். நேற்று நான் உன்னை இதே கேள்வியைக் கேட்டேன். நீயும் வெள்ளிக் கிழமை என்று சொன்னாய். இன்று திடீரென்று சனிக்கிழமை என்று சொல்கிறாயே? உனக்கு என்ன பைத்தியமா பிடித் திருக்கிறது? எங்காவது வெள்ளிக்கிழமைக்குப் பின் சனிக்கிழமை வருமா?”

நிருபர் ‘இது மறை கழண்ட கேஸ்’ என்று நினைத்தார். குர்ஜிஃப்பை பேட்டி எடுக்காமல், அவரிடம் விடைகூட பெற்றுக் கொள்ளாமல் தலை தப்பித்தது தம்பிரான் புண்ணியம் என்று நிருபர் கம்பி நீட்டிவிட்டார். நிருபர் ஓடுவதைப் பார்த்து குர்ஜிஃப் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தார்.

அந்தப் பெண் பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தாள். அவள் பாவம் அன்றுதான் புதிதாகச் சேர்ந்திருந்தாள். அவளுக்கு

குர்ஜிஃப்பைப் பற்றி அவ்வளவாகத் தெரியாது. நிருபர்களைத் துரத்தத்தான் அவர் இப்படிச் செய்தார் என்று அவளால் புரிந்து கொள்ளமுடியவில்லை.

“நீங்கள் ஏன் அவ்வளவு கோபப்பட்டீர்கள்?” என்று ஞானியைக் கேட்டாள் சிஷ்யை.

சிரிப்பை நிறுத்திவிட்டு அமைதியாகச் சொன்னார் குர்ஜிஃப்.

“நீ இப்போதுதான் இங்கே வந்திருக்கிறாய். இன்னும் கொஞ்சம் நாள் இங்கே இருந்தால் உனக்கு இது புரியும். இந்த நிருபன் இனிமேல் நமது ஆசிரமம் பக்கம் தலைவைத்துக்கூட படுக்க மாட்டான்.

“அவன் உயிருள்ளவரை என்னைத் தொந்தரவு செய்ய மாட்டான். அது மட்டுமில்லை. அவன் வெளியே போய் தனது சக நிருபர்களிடம் என்னைப் பற்றி வதந்திகளைக் கிளப்பிவிடுவான். இப்போது பார், நான் அவனை மட்டும் தூக்கியெறியவில்லை. அவனது சக நிருபர்களையும் தூக்கியெறிந்துவிட்டேன். இனிமேல் அவர்கள் தொந்தரவு இல்லாமல் நான் நிம்மதியாக இருக்கலாம்.”

அவ்வளவு பெரிய ஞானியைப் பைத்தியக்காரன் என்று மக்கள் நினைத்தார்கள்.

ஞானிகளின் முரண்பாடுகளுக்கு ஒரு காரணம் இருக்கிறது. அறிஞர்கள் கையில் அவர்கள் வார்த்தைகள் சிக்கிக் கொண்டு விடக்கூடாது என்பதில் ஞானிகள் கவனமாக இருந்தார்கள். அறிஞர்கள் கையில் சிக்கும் ஞானிகளின் சொற்கள் குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலையாகச் சின்னாபின்னமாகி விடும் என்பதற்காகதான் இந்த முன்னேற்பாடு.

அறிஞர்களின் கண்களுக்கு ஞானிகள் பித்துப் பிடித்த வர்களாகத் தெரிவார்கள். அதனாலேயே அறிஞர்கள் ஞானிகள் பக்கம் வராமல் ஓடிவிடுவார்கள். ஞானிகள் முரண்பாடுகளைப் பயன்படுத்தியதற்கு இது மட்டும் காரணம் இல்லை. எல்லாம் கடந்த உண்மை நிலையை முரண்பாடுகள் மூலமாகத்தான் விளக்க முடியும்.

அந்த உண்மையை காரண-காரியம் மூலமாக, தர்க்கம் மூலமாக விளக்க முடியாது. தர்க்கம் ஒரு பாதியை மட்டும்தான் விளக்கும். அதனால் முழுமையை விளக்க முடியாது.

முழுமையின் வேகத்தைத் தர்க்கத்தால் தாங்கிக் கொள்ள முடியாது.

வாழ்க்கை எதிரெதிர் துருவங்களால் ஆனது. மின்சாரத்தில் நேர்மறை, எதிர்மறை (positive and negative) என்று இருப்பது போல் தான் வாழ்க்கையிலும் இருக்கிறது. இந்த துருவங்கள் அசப்பில் பார்க்க ஒன்றுக்கு ஒன்று எதிராகத் தோன்றும். ஆனால் உண்மையில் அவை ஒன்றை ஒன்று எதிர்ப்பதில்லை. உண்மையின் ஆழத்தில் அவை ஒன்றாகவே மிளிர்கின்றன.

உண்மையின் ஆழத்தைப் பார்க்க முடிந்த ஞானிகள் இந்த இரண்டு நேர் எதிர் துருவங்களும் ஒன்றுதான் என்ற உண்மையைப் புரிந்து கொண்டார்கள்.

அந்த நிலையை நீங்கள் அடைய வேண்டுமென்றால் ஆழ்நிலை சிந்தனையில் லயித்திருக்கப் பழக வேண்டும். உங்களுடைய மனதைக் கொண்டு துருவங்களுக்கிடையே உள்ள ஒற்றுமையைப் புரிந்து கொள்ள முடியாது.

உங்கள் மனம் என்ன சொல்லும் தெரியுமா? “ இவை எல்லாம் முன்னுக்குப் பின் முரணானவை. இந்த மனிதன் ஒரு வாக்கியத்தின் முதலில் ஒரு மாதிரி சொல்கிறான். ஆனால் அந்த வாக்கியத்தை முடிக்கும் போது, அதற்கு நேர் எதிராகச் சொல்கிறான்.” என்று மனம் கூச்சல் போடும். நீங்கள் செயலிழந்து நின்று கொண்டிருப் பீர்கள்.

ஆனால் ஞானிக்கு தான் என்ன செய்கிறோம் என்று நிச்சயமாகத் தெரியும். அவன் முழு உண்மையை, உண்மையின் பரிபூரணத்துவத்தை அந்த முரண்பாடுகளுக்கு இடையே ஒளித்து வைத்து உங்களிடம் கொடுக்க முயல்கிறான்.

ஆனால் முழு உண்மையை எல்லாராலும் புரிந்து கொள்ள முடியாது. முழுமையை ஏற்கனவே சுவைத்திருக்கும் ஒருவனால் மட்டும் தான் முழுமையைப் புரிந்துகொள்ள முடியும்.

மனம் எப்போதும் பொருள்களைப் பாகுபடுத்துவதிலேயே முனைப்பாக இருக்கிறது. அது பிரிக்கிறது. வகுக்கிறது. எப்படி ஒரு பட்டகை (prism) தன் மேல் விழும் வெள்ளை நிறத்ததான ஒளியை வானவில்லின் ஏழு வண்ணங்களாகப் பிரிக்கிறதோ அதே போல் மனம் தன் மேல் படும் எல்லாவற்றையும் பிரித்துப் பொருள் கொள்கிறது.

வானவில் இதே முறையில் தான் உருவாகிறது. ம்ழை பெய்யத் தொடங்கும் போது, இல்லை மழை பெய்து முடிந்தவுடன், சிறிய நீர்த் துளிகள் அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருக்கும். அவை ஒரு பட்டகையைப் போல்ச் செயல்பட்டு சூரிய ஒளியை ஏழு வண்ணங்களாகப் பிரித்து அதை வானவில்லாக்கி நமக்கு வேடிக்கை காட்டுகின்றன.

மனம் ஒரு பட்டகைதான். அது அனைத்தையும் பிரித்துப் பார்ப்பதிலேயே குறியாக இருக்கிறது.

உண்மை ஒன்றுதான். ஆனால் அதை நீங்கள் மனம் என்னும் பட்டகை வழியாகப் பார்க்கும் போது பல பகுதிகளாகப் பிரிகிறது. இந்த இடத்தில்தான் மெய்ஞ்ஞானி உள்ளே நுழைகிறான்.

வானவில்லின் வண்ணங்களாகப் பிரிந்து கிடக்கும் உண்மையை மீண்டும் ஒருங்கிணைத்து அதை ஒற்றை ஒளிக்கீற்றாய் மாற்றுகிறான் ஞானி. பிரிந்த வண்ணங்கள் மீண்டும் தூய்மையில், வெண்மையில் சங்கமிக்கின்றன. பட்டகைக்குள் நுழைவதற்கு முன்னால் ஒளி எப்படி இருந்ததோ அந்த நிலைக்கு ஒளியைக் கொண்டுவருகிறான் ஞானி.

இந்த முரண்பாடுகளால் அறிஞர்கள் ஞானிகளின் வார்த்தைகளை ஒதுக்கிவைக்கிறார்கள். தங்கள் மனம் ஒன்று தான் உண்மை என்று வாழும் மனிதர்களால் ஞானிகளின் வார்த்தை களைப் புரிந்து கொள்ள முடியாது.

அந்த புரிந்து கொள்ளாமைதான் உண்மைக்கு இருக்கும் பாதுகாப்பு அரண். அந்த அரண் இருந்ததால் தான் தாவோ போன்ற அற்புதமான நூல்கள் சேதமடையாமல், திரிக்கப்படாமல், பல நூற்றாண்டுகளாக நம்மிடையே புழங்கி வந்திருக்கின்றன.

கோ ஹ்சுவான் அதற்கு எழுத்து வடிவம் கொடுக்கிறார். அவ்வளவுதான். இது அவரது எண்ணத்தில் உதித்த நூல் இல்லை. இதனை அவர் உருவாக்கவில்லை. பல ஞானிகள் கண்டுணர்ந்த உண்மையை கோ ஹ்சுவானும் கண்டுணர்ந்தார். கண்டுணர்ந்த உண்மையில் எந்த வேறுபாடும் இருக்க முடியாது. உண்மை ஒன்றுதான். அதை யார் கண்டுணர்ந்தாலும் அவர்களின் அனுபவம் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். காலம், இடம் போன்ற காரணிகள் உண்மையைக் கண்டுணர்வதில் எந்த மாற்றங்களையும் செய்வதில்லை. செய்யவும் முடியாது.

அவர் தானாக எதையும் சொல்லவில்லை. வாய் வார்த்தை யாக பல நூற்றாண்டுகளாக புழக்கத்தில் இருக்கும் ஞானத்துக்கு எழுத்து வடிவம் கொடுக்கிறார் அவர். அவ்வளவுதான். அதனால் தான் நமக்கு அந்த வார்த்தைகளை யார் சொன்னார் என்று தெரியவில்லை.

கோ ஹ்சுவான் எப்படித் தொடங்குகிறார் பாருங்கள்.

*வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:*

யார் இந்த ஆச்சாரியன்? அவரைப் பற்றி ஒரு செய்தியும் இல்லை. கடந்த காலத்தில் இருந்த எல்லா ஆச்சாரியர்களின் பிரதிநிதியா இவர்? இப்போது இருக்கும், இனி வரப்போகும் காலங்களில் இருக்கும் ஆச்சாரியர்களின் பிரதிநிதியா இவர்? அப்படித்தான் இருக்க வேண்டும். இல்லை ஒரு வேளை ஆச்சாரியன் என்ற சொல் ஓர் ஆளைக் குறிக்காமல் ஞானத்தின் சாரத்தைக் குறிக்கலாம்.

கோ ஹ்சுவானைப் பற்றி எந்த குறிப்பும் இல்லை. அதனால் பல நூற்றாண்டுகளாக இந்த வார்த்தைகள் லா ட்சூவினுடையது என்று கருதப்பட்டது. ஆனால் லா ட்சுவின் பேச்சும் எழுத்தும் வேறு விதமாக இருக்கும். இதில் இருந்து முற்றிலும் மாறுபட்டிருக் கும். அதனால் இந்த வார்த்தைகள் லா ட்சூவினுடையதாக இருக்க முடியாது.

நாம் லா ட்சுவின் வார்த்தைகளை முன்பே பார்த்திருக்கிறோம். அவர் கோ ஹ்சுவானை விட அதிகம் கிறுக்குப் பிடித்தவர் போலப் பேசுவார். அது இன்னும் புதிராக இருக்கும்.

தாவோ தே சிங் (Tao Te Ching) என்ற நூலைத் தவிர லாட்சூ வேறு எதுவும் எழுதவில்லை. அந்த நூலையும் அவர் தனது கடைசிக் காலத்தில், வற்புறுத்தலின் பேரில் தான் எழுதினார். இமய மலையில்தான் சாக வேண்டும் என்று நினைத்த லா ட்சூ சீனாவில் இருந்து இமயமலைக்குக் கிளம்பும் போது அந்த அவசரத்தில், அந்த நூலை எழுதிவிட்டுப் போனார்.

மலையின் மேல் சாக வேண்டும் என்று அவர் விரும்பினார். அதற்கு இமயமலையை விட ஒரு சிறந்த இடம் இருக்க முடியுமா என்ன? அந்த அழகு, அந்த கம்பீரமான கன்னி கழியாத மௌனம், இயற்கையின் ஆரவாரமான சீர்மை, அதன் மென்மை... அப்பப்பா!

லா ட்சூவிற்கு வயதானவுடன் தனது சீடர்களிடம் சொன்னார்.

"நான் இமயம் நோக்கிப் போகிறேன். என் காலம் முடிந்தவுடன் இயற்கையில் மறைந்துவிடப் போகிறேன். அங்கேதான் என்னைப் பற்றி யாருக்கும் தெரியாது. அங்கேதான் எனக்காக யாரும் நினைவுச்சின்னம் வைக்கமாட்டார்கள். எனக்காக கோயில், சமாதி, ஏன் ஒரு கல்லறை கூட அங்கே இருக்காது. அப்படிப்பட்ட இடத்தில் போன இடம் தெரியாமல் சாக விரும்புகிறேன். நான் வாழ்ந்த சுவடே தெரியாமல் மறைந்து போக விரும்புகிறேன்."

அவர் சீன நாட்டு எல்லையைக் கடக்க முயன்ற போது வீரர்கள் அவரை வழி மறித்தனர்.

சீன நாட்டு மன்னன் எல்லையில் இருந்த எல்லா வீரர்களுக்கும் ஆணையிட்டிருந்தான்.

"லா ட்சூ நாட்டு எல்லையைக் கடக்க முயன்றால் அவரைத் தடுத்து நிறுத்துங்கள். இதுவரை அவர் அனுபவித்து உணர்ந்த உண்மைகளை எழுத்து வடிவில் அவர் தர வேண்டும். அதுவரை அவரை எல்லை தாண்ட அனுமதிக்காதீர்கள்."

லா ட்சூ தன் வாழ்நாள் முழுவதும் எழுதி வைப்பதைத் தவிர்த்து வந்தார்.

எல்லையில் இருந்த வீரர்கள் அவரை மறித்ததால், மன்னனின் ஆணையை நிறைவேற்றியே தீர வேண்டும் என்று அவர் நிர்ப்பந்திக்கப் பட்டதால், அங்கு இருந்த ஒரு வீரனின் குடிசையில் மூன்று நாட்கள் உட்கார்ந்து தாவோ தே சிங் (Tao Te Ching) என்ற சிறிய நூலை எழுதினார்.

அதனால் இந்த தாவோ நூலை லா ட்சூ எழுதவில்லை என்று நாம் நிச்சயமாகச் சொல்லலாம். நமக்கு கோ ஹ்சுவானைப் பற்றி ஒன்றும் தெரியாது.

கோ ஹசுவான் லா ட்சூவின் சீடராக இருந்திருக்கலாம். குரு சொல்லச் சொல்ல சீடர் எழுதியிருக்கலாம் என்று சிலர் கூறுகின்றார்கள். அது உண்மையில்லை. கோ ஹ்சுவானே ஒரு சிறந்த குரு. இந்த நூல் முழுக்க முழுக்க அவர் எழுதியதுதான்.

இந்த மகத்தான புத்தகத்தின் முன்னுரையில் கோ ஹ்சுவான் சொல்கிறார்: "நான் தாவோவுடன் முழுமையாக இணைந்தவுடன், அந்த இணைப்பை, அதில் விளைந்த உள் பார்வையை எழுத்து வடிவாக்குவதற்கு முன் பத்தாயிரம் முறை சிந்தித்தேன்."

"நான் தாவோவுடன் முழுமையாக இணைந்தவுடன்" வார்த்தைகளைக் கவனியுங்கள். கோ ஹ்சுவான் சீடர் இல்லை. முற்றும் உணர்ந்த ஞானி. அவர் முக்திநிலை அடைந்தவர். அடுத்தவரின் அனுபவத்திற்கு அவர் குறிப்பெடுக்கவில்லை. தானே பெற்ற அனுபவத்தை நமக்குப் பகிர்ந்தளிக்கிறார். அவர் தாவோவுடன் இரண்டற கலந்துவிட்டார். இயற்கையுடன் ஐக்கியமாகிவிட்டார்.

முன்னுரையில் கோ ஹ்சுவான் சொல்கிறார். "இது மறுமையைத் தேடுபவர்களுக்கு மட்டும்தான். இக உலக வாழ்க்கையில் மூழ்கிக்கிடப்பவர்கள் இதனைப் புரிந்து கொள்ள முடியாது."

இந்த உலக வாழ்க்கையே மெய் என்று இருப்பவர்கள் இந்த நூலின் பக்கமே வர வேண்டாம் என்று முன்னுரையிலேயே எச்சரித்து விடுகிறார் கோ ஹ்சுவான். 'தேவையில்லாமல் இங்கே வந்து உங்கள் நேரத்தை வீணடிக்காதீர்கள்.

இது உங்களுக்காக எழுதப்படவில்லை. இது உங்களுக்குப் பயன்படாது. இந்த நூல் உங்களைக் குழப்பக்கூடும். உங்கள் உலகப் பிரச்சினைகளிலிருந்து உங்களைத் திசைதிருப்பக்கூடும். உங்களுக்கு உண்மையிலேயே விருப்பமில்லாத விஷயத்தில் மூக்கை நுழைக்காதீர்கள்.'என்று திட்டவட்டமாகச் சொல்லிவிடுகிறார் கோ ஹ்சுவான்.

போகிற போக்கில் வாழும் ஆசாமிகளாக இருக்காதீர்கள் என்று வலியுறுத்துகிறார்.

இன்று பலர் இழுத்த இழுப்புக்கெல்லாம் இசைந்து கொடுக்கும் ஆசாமிகளாகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். யாரையாவது வழியில் சந்திப்பார்கள். உடனே வந்த வேலையை மறந்து அவருடன் சென்றுவிடுவார்கள்.

நான் சென்ற முறை புத்தரின் தம்ம பதத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது மைக்கேல் டொமேட்டோ (Michael Tomato) என்பவரைப் பற்றிக் குறிப்பிட்டேன். அவர் ஜிம்பாப்வே நாட்டைச் சேர்ந்தவர். இந்த ஆசாமி எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

அவர் பெங்களூரில் ஒரு ஹோட்டலில் தங்கியிருந்த போது அங்கே எனது சந்நியாசி ஒருவரைப் பார்த்தாராம். இங்கே நமது ஆசிரமத்தில் சூஃபி நடனம் ஆடும் போது நாம் எல்லாரும் அவருடைய நாட்டு அதிபரைக் கேலி செய்வதாகக் குறிப்பிட்டிருந்தார்.

அப்போது ஜிம்பாப்வே நாட்டுத் தலைவராக இருந்தவர் Canon Banana என்ற மனிதர். இதில் வேடிக்கை என்னவென்றால் Banana என்ற ஆங்கில வார்த்தைக்கு வாழைப்பழம் என்று அர்த்தம். கோமாளித்தனம் செய்பவரைக் கொச்சையாக Banana என்று சொல்வார்கள்.

சூஃபி நடனத்தில் கோமாளித்தனத்தைக் குறிக்கும் வகையில் banana என்ற சொல் பல முறை பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இதை அந்த மனிதர் தப்பாகப் புரிந்து கொண்டுவிட்டார்.

"இந்த மாதிரி விஷயங்களை உங்கள் ஆசிரமத்தில் நடக்க அனுமதிப்பது உங்களுக்கு நல்லதில்லை. இது எங்கள் மகத்தான ஜிம்பாப்வே நாட்டை அவமதிப்பதாக உள்ளது."

இந்த ஜிம்பாப்வே நாடு பிறந்து அப்போது ஏழு நாட்கள் தான் ஆகியிருந்தன. இந்த மனிதன் Canon Banana தலைவரானது, Michael Tomato என் சந்நியாசியைச் சந்தித்ததற்கு இரண்டு நாட்கள் முன்னால்தான்.

ஆனால் நாம் சூஃபி நடனத்தில் banana என்ற வார்த்தையை பல வருடங்களாகப் பயன்படுத்தி வருகிறோம். ஒரு வேளை நாம் அப்படி தொடர்ந்து பயன்படுத்தி வருவதால் தான் Canon Banana ஜிம்பாப்வே நாட்டின் தலைவரானாரோ என்னவோ! நமது ஜெபங்கள் மூலம் அதிசயங்கள் நடக்க வாய்ப்பிருக்கிறது அல்லவா!

இப்படி Michael Tomato என்ற ஆசாமி எனக்குக் கோபமாகக் கடிதம் எழுதியிருந்ததைப் பற்றி நான் சென்ற முறை உங்களிடம் சொன்னேன். அப்போது வேடிக்கையாக, இதே போல் Michael Potato என்று ஆசாமி எங்கிருந்தாவது முளைத்து எதையாவது எழுதப்போகிறான் என்று சொன்னது எனக்கு நினைவு இருக்கிறது.

நான் வேடிக்கையாகச் சொன்னது இப்போது பலித்துவிட்டது. அமிர்தசரசில் இருக்கும் இன்டர்நேஷனல் ஹோட்டலில் இருந்து ஒருவர் எனக்கு எழுதியிருக்கிறார்.

அந்த மனிதர் மேலை நாட்டைச் சேர்ந்தவர் என்றாலும் இங்கே பஞ்சாபிற்கு வந்து சீக்கிய மதத்திற்கு மாறிவிட்டார்.

அதே ஹோட்டலில் தங்கியிருக்கும் எனது சந்நியாசிகள் இருவரை அந்த மனிதர் பார்த்தாராம். காவியுடை தாங்கிய அந்த

சந்நியாசிகளைப் பார்த்ததும் அவருக்கு இந்த இயக்கத்தில் ஆர்வம் வந்துவிட்டது. அந்த சந்நியாசிகளிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். சீக்கிய மதத்திற்கு மாறிவிட்டதால் இப்போது அவர் பெயர் Michael Potato Singh.

இந்தப் பெயரைக் கேட்டு ஆச்சரியப்பட்ட சந்நியாசிகள் அன்று நான் Michael Potato என்று ஓர் ஆசாமி வருவார் என்று சொன்ன நிகழ்ச்சியின் ஒலிப்பதிவை அவருக்குப் போட்டுக் காட்டியிருக் கிறார்கள்.

"இது மிகப்பெரிய அதிசயம். ஓஷோவுக்கு நான் வரப் போகிறேன் என்று எப்படி முன்னாலேயே தெரிந்தது?"

இந்த ஆசாமி இப்போது சீக்கிய மதத்தை விட்டுவிட்டு நமது இயக்கத்தில் சேரப் போகிறாராம். இங்கே வந்து என்னைப் பார்க்கப் போகிறாராம்.

காற்றடித்த பக்கம் எல்லாம் போகும் குப்பையைப் போல போகிற போக்கில் போகும் ஆசாமி இவர். இப்படி இருப்பதால் எந்தப் பயனும் இல்லை.

நான் தற்செயலாகச் சொன்னேன். நகைச்சுவையாக இருக்கட்டுமே என்று Michael Potato என்று ஒருவர் எழுதக்கூடும் என்று சொன்னேன். அந்த பெயரில் உலகில் எந்த மூலையிலாவது யாராவது ஒருவர் இருப்பார் என்று தெரியும். ஆனால் இவ்வளவு சீக்கிரத்தில், ஒரே மாதத்தில் அப்படிப்பட்ட நபர் எனக்குக் கடிதம் எழுதுவார் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை.

அவரை நினைத்தால் பரிதாபமாக இருக்கிறது. ஏதோ காரணத்தால் சீக்கிய மதத்துக்கு மாறியவர், இப்போது அதைத் துறந்துவிட்டு இங்கே வருகிறாராம். அவர் எனக்கு எழுதுகிறார்.

"சீக்கிய மத வழக்கத்தின் படி நீளமாக வளர்த்திருந்த எனது முடியை வெட்டிவிட்டேன். உங்களிடம் சந்நியாசம் வாங்க வேண்டும் என்பது தான் இப்போது என்னுடைய ஒரே ஆசை. நான் தேடிக் கொண்டிருக்கும் குரு நீங்கள் தான்."

இவர்கள் போகிற போக்கில் போகும் விந்தை மனிதர்கள். இது வளர்வதற்கான வழியில்லை. இவர்கள் கடலில் மிதந்து கொண்டிருக்கும் மரக்கட்டையைப் போன்றவர்கள். அந்த மரக்கட்டைக்கு என்று தனியாக ஒரு பாதை கிடையாது.

அலைகள் இழுத்த திசைகளுக்கெல்லாம் அது போகும். தனக்கென்று ஒரு பாதையில்லாமல், திக்கு திசை தெரியாமல் காற்றடித்த பக்கமெல்லாம் போகும் வெறும் குப்பை போன்றவர்கள் இந்த ஆசாமிகள்.

கோ ஹ்சுவான் சொல்கிறார். “இது மறுமையைத் தேடுபவர் களுக்கு மட்டும்தான்.” மறுமையைத் தேடிச் செல்வதில் பல அபாயங்கள் இருக்கின்றன. அந்த அபாயங்களை எதிர் கொள்ளத் தயாராக இருப்பவர்களுக்குத்தான் இந்த நூல் எழுதப்பட்டது.

மறுமையைத் தேடிச் செல்லும் பயணம் ஒரு வீரச் செயல். அந்த பயணம் ஒரு பரவசமூட்டும் அனுபவம் தான். மறுப்பதற் கில்லை. ஆனால் அது எளிதானதல்ல. அதில் பரவசம் இருக்கிறது, துயரமும் இருக்கிறது.

நாம் சுமக்க வேண்டிய சிலுவையும் அந்த பாதையில் இருக்கிறது. சிலுவையில் அறையப்பட்டபின்தான் உயிர்த்தெழுதல் நடக்கும். உயிர்த்தெழ வேண்டுமென்றால், நீங்கள் புதுப்பிறவி எடுக்க வேண்டுமென்றால் முதலில் நீங்கள் சிலுவையைச் சுமக்க வேண்டும்.

அதனால் தான் கோ ஹ்சுவான் சொல்கிறார், “இது மறுமையைத் தேடிச் செல்லும் உண்மையான சாதகர்களுக்கு மட்டும்தான் எழுதப்பட்டது.”

சாதகன் என்பவனுக்கு ஒரு தேடல் இருக்க வேண்டும். ஒரு வேட்கை இருக்க வேண்டும். அந்த பாதையில் பயணிப்பதற்கு முன்னால் நாம் உண்மையிலேயே சாதகன் தானா என்பதை நன்றாக உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

உண்மையை உணர்ந்து கொள்வதில் உங்களுக்கு உண்மையிலேயே நாட்டம் இருக்கிறதா?

இந்தக் கேள்வியை பல முறை கேட்டுக் கொள்ள வேண்டும். காரணம் உண்மையை அறிய விழையும் ஒவ்வொரு குழந்தையும் அந்த பாதையில் இருந்து திசை திருப்பப்படுகிறது.

எந்த குழந்தைக்கும் கடவுளைப் பற்றி அறிவதில் அவ்வளவாக ஆர்வம் இல்லை. ஆனால் பெற்றோர்கள் கடவுள் பற்றிய எண்ணங்களை அந்த குழந்தையின் மேல் வலுக்கட்டாயமாகத் திணிக்கிறார்கள். நாத்திகர்களின் குடும்பத்தில் அந்த குழந்தை பிறந்தால் அதன் மேல் நாத்திகம் வலுக்கட்டாயமாகத் திணிக்கப் படுகிறது.

கம்யூனிஸ்ட் நாட்டில் அந்த குழந்தை பிறந்தால் கம்யூனிசம் திணிக்கப்படுகிறது. குழந்தையின் கையில் பைபிளைக் கொடுப்பதற்குப் பதிலாக கார்ல் மார்க்சின் புத்தகத்தைத் தருவார்கள். பிதா, தேவசுதன், பரிசுத்த ஆவி என்ற மும்மூர்த்திகளுக்குப் பதிலாக, கார்ல் மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின் என்ற மும்மூர்த்திகளைப் பற்றி சொல்லித் தருவார்கள். அந்த குழந்தை எந்த நாட்டில் எப்படிப்பட்ட குடும்பத்தில் பிறந்தாலும் சரி அதன் மேல் ஏதோ ஒன்று நிச்சயமாகத் திணிக்கப்படும்.

குழந்தை தானாகவே வளர்ந்து தானாகவே தனது உண்மைகளைக் கண்டுபிடித்துக் கொள்ளட்டும், கண்டுபிடித்த உண்மைகளின் படி சுதந்திரமாக வாழட்டும் என்று எந்த பெற்றோரும் விடுவதில்லை. அந்த அளவுக்கு எந்த பெற்றோருக்கும் தங்கள் குழந்தையின் மேல் அன்பு இல்லை.

அதனால் தான் இன்று பலர் நாங்கள் கடவுளைத் தேடுகிறோம் என்று சொல்லிக் கொண்டு திரிகிறார்கள். அவர்களிடத்தில் உண்மையான தேடல் இல்லை. அவர்களுடைய கடவுள் தேடல், ஒரு திணிப்பு. ஒரு மனக்கட்டுத்திட்டம். அவ்வளவுதான்.

கடவுள், கடவுள் என்று உங்கள் மனதில் உருவேற்றப்பட்டதால் நீங்கள் கடவுளைத் தேடுகிறீர்கள் என்றால், அது உண்மையான தேடல் இல்லை. கடவுள் என்ற வார்த்தை மட்டும் உங்களுக்கு உண்மையாகத் தோன்றுகிறது. ஆனால் கடவுள் உங்களின் ஒரு பகுதியாக இல்லாமல், உள்ளீடாக இல்லாமல், உங்களுக்கு வெளியே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். கடவுள் என்ற வார்த்தையை வெளியில் இருந்துதானே திணித்தார்கள், அதனால்தான் கடவுளும் உங்களுக்கு வெளியிலேயே இருக்கிறார்.

நீங்கள் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையைப் போல், 'கடவுள்' 'கடவுள்' என்று சொல்லிக் கொண்டு திரிகிறீர்கள். சில சமயம் கிளிகள் கூட உங்களை விட புத்திசாலிகளாக இருக்கும்.

இப்படித்தான் இத்தாலியில் ஒரு கம்யூனிஸ்ட் வெறியன் ஒரு கிளியை வாங்கினான். அந்தக் கிளி புகழ் பெற்ற ஒரு கம்யூனிசப் பாடலை தொடர்ந்து பாடிக் கொண்டேயிருந்தது. அதனால் மனங்கவரப்பட்டு அந்த கம்யூனிஸ்டு அந்த கிளியை அதிக விலை கொடுத்து வாங்கி வீட்டுக்குக் கொண்டுவந்தான்.

அந்த கிளி இடைவிடாமல் அந்த கம்யூனிசப் பாடலையே பாடிக் கொண்டிருந்தது. இதில் எரிச்சலடைந்த அந்த கம்யூனிஸ்டின்

மனைவி அந்தக் கிளியை ஒரு போடு போட்டாள். மயங்கி விழுந்த கிளியின் மேல் ஒரு துண்டைப் போட்டு மூடினாள்.

மாலை கணவன் வீட்டுக்கு வந்ததும் நடந்ததைச் சொன்னாள். கிளி இறந்திருக்குமோ என்று அஞ்சிய கணவன் மெதுவாகத் துண்டை விலக்கிப் பார்த்தான்.

ஒரு கண்ணை மட்டும் திறந்து பார்த்த அந்த கிளி கிசுகிசுப்பாகக் கேட்டது

"தோழரே, அந்த அசிங்கம் பிடித்த பாசிசவாதிகள் போய்விட்டார்களா?"

கிளிகள் கூட சமயத்தில் மனிதனை விட புத்திசாலித்தனமாக இருக்கின்றன. மனிதர்கள் தான் முட்டாள்தனமாக தங்கள் பெற்றோர்கள், ஆசிரியர்கள், பூசாரிகள் சொன்னதை அர்த்தம் புரியாமல் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

தங்கள் பள்ளியில், கல்லூரியில், பல்கலைக்கழகத்தில் கற்றதை உள்வாங்கிக் கொள்ளாமல் அங்கு தெரிந்து கொண்ட வார்த்தை களைப் பிதற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

உங்களுக்கு மனக்கட்டுத் திட்டம் போடுவதில் இந்த சமூகமே முனைப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. சுமார் இருபத்து ஐந்து வருடங்களாக தொடர்ந்து மனக்கட்டுத்திட்டம் போட்டபின் உண்மையிலேயே நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள், என்னவாக விரும்புகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாமலேயே போய்விடுகிறது.

அதனால் முதலில் நாம் தெரிந்து கொள்ளவேண்டியது, உண்மையைத் தேடிச் செல்லும் நாட்டம், வேட்கை நம்மிடம் இருக்கிறதா என்பதுதான். உண்மையின் பாதை அபாயங்கள் நிறைந்தது. அந்த பயணத்தின் போது நம்மிடம் உள்ள அனைத்தையும் இழக்க நேரிடலாம். உயிரையே பணயம் வைத்து செல்ல வேண்டிய பயணம் அது. அப்படி பணயம் வைக்கத் தயாராக இருக்கிறீர்களா? அப்படி இருந்தீர்கள் என்றால் இந்த வார்த்தைகள் உங்களுக்காகவே எழுதப்பட்டவை.

ஆனால் நீங்கள் பணம், அந்தஸ்து, அதிகாரம் என்று அலைந்து கொண்டிருக்கும் லோகாயதமான மனிதர் என்றால், இவை உங்களுக்கான வார்த்தைகள் இல்லை. தள்ளி நிற்பதுதான் உங்களுக்கு நல்லது.

உண்மையின் பாதையில் பயணிப்பதற்கு முதல் கட்டமாக நீங்கள் இந்த உலக ஆசைகளை விட வேண்டும். இந்த உலக ஆசைகள் உங்களுக்கு தெவிட்டிவிட வேண்டும்.

இந்த ஆசைகளை ஆராய்ந்து பாருங்கள். எந்த ஆசையும் வீண்தான். அதை நிறைவேற்றிக் கொள்வதால் எந்த லாபமும் இல்லை என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

நீங்கள் வாழ்க்கையில் வெற்றி பெற்றாலும், தோல்வி பெற்றாலும், நீங்கள் தோற்றவர்கள்தான் என்பதை நீங்கள் உணர வேண்டும். உங்களிடம் நிறைய பணம் இருந்தாலும் சரி, நீங்கள் ஏழையாக இருந்தாலும் சரி, நீங்கள் உண்மையிலேயே ஏழைதான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நீங்கள் சக்கரவர்த்தியாக இருந்தாலும் சரி, பிச்சைக்காரனாக இருந்தாலும் சரி, உள்ளபடியே நீங்கள் பிச்சைக்காரர்தான் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த உள்பார்வை உங்களுக்குக் கிடைத்தால்தான் இந்த உலகிற்கு அப்பால் இருக்கும் இறைவனை உங்களால் தேடமுடியும். இல்லை என்றால் நீங்கள் சாதகனாக, தேடுபவராக நடிப்பீர்கள். பாசாங்கு செய்வீர்கள். பாவலா செய்வீர்கள். உங்கள் உலகம் மொத்தத்தையும், உங்கள் ஆசைகள் அனைத்தையும் உங்களுடன் கொண்டுவருவீர்கள்.

மக்கள் ஏன் கடவுளைப்பற்றியும், சொர்க்கத்தைப் பற்றியும் நினைக்கிறார்கள்? எல்லாம் பயம் காரணமாகத்தான். அவர்களுக்கு கடவுளை, சொர்க்கத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையில்லை. அவர்களுக்கு வேண்டியது எல்லாம் அதிகாரம், அந்தஸ்து, செல்வம், சுகம் இவ்வளவுதான். அவர்கள் மரணத்தைக் கண்டு அஞ்சி நடுங்குகிறார்கள். அந்த பயம் காரணமாக, பேராசை காரணமாகத்தான் கடவுளை வழிபடுகிறார்கள். ஆனால் ஆசையின் அடிப்படையில், அச்சத்தின் அடிப்படையில் செய்யப்படும் இறை வழிபாடு, வழிபாடேயில்லை.

உண்மையான வழிபாடு மனதில் பொங்கிப் பீறிட்டு எழும் நன்றி உணர்வால் ஏற்படுகிறது. பயத்தாலும், பேராசையாலும் அது எப்போதும் ஏற்படுவதில்லை. உண்மையான வழிபாடு உண்மை மேல் உள்ள காதலால் ஏற்படுகிறது. அப்படிக் காதலிக்கப்படும் உண்மை எதுவாக இருந்தாலும் சரி, அதுதான் உண்மையான

வழிபாட்டுக்கு வித்து. அப்படியில்லாவிட்டால் உங்களுடைய இந்த உலக ஆசைகளை நீங்கள் சொர்க்கத்தின் மேல் திணிப்பீர்கள். கடவுளின் மேல் திணிப்பீர்கள்.

பல நாடுகளில் உள்ள பல்வேறு மதங்கள் எப்படி சொர்க்கத்தை வர்ணிக்கின்றன என்பதை அறிந்தால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அவர்கள் தங்கள் ஆசைகளை சொர்க்கத்தில் புறநிலைப் படுத்துகிறார்கள்.

உதாரணமாக திபெத் நாட்டில் உள்ள மதத்தில் சொர்க்கம் ஒரு கதகதப்பான பிரதேசமாக வர்ணிக்கப்படுகிறது. காரணம், திபெத் ஒரு குளிர்பிரதேசம். ஆகையால் அவர்கள் தங்கள் சொர்க்கத்தில் வெயில் கொளுத்த வேண்டும் என்று ஆசைப்படு கிறார்கள். அப்போதுதான் அவர்களால் தினம் ஒரு முறை குளிக்க முடியும். திபெத்தில் உள்ள மதநூல்களும் சாத்திரங்களும், வருடத்திற்கு ஒருமுறை குளித்தால் போதும் என்று சொல்கின்றன.

இந்தியர்கள் வர்ணிக்கும் சொர்க்கம் குளிர்ச்சியானது. அது குளிர்சாதன வசதி செய்யப்பட்டது. ஏசி என்று ஒன்று வரும் என்று அவர்களுக்கு அப்போது தெரியாது.

அதனால் அங்கு எப்போதும் குளிர் காற்று வீசிக் கொண் டிருக்கும் என்று சொன்னார்கள். ஏனென்றால் இந்தியா ஓர் உஷ்ணப் பிரதேசம். வருடம் முழுவதும் வெயில் கடுமையாக இருப்பதால் இந்திய மனம் எப்போதும் நிழலையும், குளிர்ச்சியையும் தேடி அலைகிறது.

அதனால் அவர்கள் சொர்க்கத்தில் எப்போதும் தென்றல் காற்று வீசிக் கொண்டேயிருக்கும். பெரிய பெரிய மரங்கள் இருக்கும். இந்தியர்கள் காணும் சொர்க்கத்தில் உள்ள மரங்கள் மிகப் பெரியவை. அவற்றின் நிழலில் ஓராயிரம் மாட்டு வண்டிகள் வெயில் படாமல் நிற்கலாமாம்.

திபெத்தியர்களின் நரகம் பனிக்கட்டிகளால் ஆனது. இந்தியர்களின் நரகத்தில் எப்போதும் தகிக்கும் அக்னி எரிந்து கொண்டேயிருக்கும்.

எப்படி இவ்வளவு வகையான நரகங்களும், சொர்க்கங்களும் இருக்க முடியும்? இவை எல்லாம் நமது ஆசைகளின் வெளிப்பாடு. நாம் இந்த உலகத்தில் எதற்காக ஏங்குகிறோமோ அதை சொர்க்கத் தில் புறநிலைப்படுத்துகிறோம். அதை அங்கே அனுபவிக்க

விழைகிறோம். நாம் எதற்கெல்லாம் இந்த உலகத்தில் பயப்படுகிறோமோ அதை வைத்துத்தான் நாம் நரகங்களைப் படைக்கிறோம்.

நரகம் நமக்கில்லை. மற்றவர்களுக்கு. அதாவது நமது மதத்தை, நமது கடவுள் கொள்கையை ஏற்க மறுக்கும் மற்றவர்களுக்குத்தான் நரகம். நமது கொள்கையை ஏற்றுக் கொள்பவர்களுக்கு சொர்க்கத்தை - இந்த உலகத்தில் நாம் ருசிக்கத் துடிக்கும் இன்பங்கள் நிறைந்த சொர்க்கத்தைப் பரிசளிக்கிறோம்.

இதெல்லாம் மதத்தோடு சேர்த்தியில்லை.

இஸ்லாமியர்கள் காணும் சொர்க்கத்தில் மது ஆறு போல் ஓடுகிறதாம். இதில் ஆச்சரியம் என்னவென்றால், அவர்கள் இந்த உலகத்தில் மது அருந்துவதைக் கண்டிக்கிறார்கள். அதைப் பாவம் என்று சொல்கிறார்கள். மது அருந்தும் பாவத்தை இங்கே செய்யாமல் இருந்தால், அந்த புனிதர்களுக்கு சொர்க்கத்தில் ஆறுபோல் ஓடும் மது கிடைக்குமாம்! கேலிக்கூத்தாக இல்லை?

உலகத்தில் உள்ள அனைத்து நாடுகளும் காணும் சொர்க்கங்களில் ஓர் அடிப்படை ஒற்றுமை தெரிகிறது. சொர்க்கத்தில் அப்சரஸ்கள், மிக அழகிய பெண்கள் மிக அதிகமாக இருப்பார்களாம். எந்த நாடும், எந்த மதமும் தனது சொர்க்கத்தில் அழகான ஆண்களை வைப்பதில்லை. இது ஏன்?

இந்த நம்பிக்கைகள உருவாக்குபவர்கள் ஆண்கள்தான். அதனால் அவர்கள் தங்களுக்குச் சாதகமாக 'அழகிய அப்சரஸ்களை' 'தேவகன்னிகைகளை' ரம்பா, ஊர்வசி மேனகாவை உருவாக்கி விட்டார்கள். பெண்கள் விடுதலை இயக்கங்கள் இன்னும் வலுப் பெற்றால் அவர்கள் பெண்களுக்குரிய சொர்க்கத்தை வர்ணிப்பார்கள்.

அப்போது அவர்கள் அழகான பெண்களைப் பற்றிப் பேச மாட்டார்கள். அழகான ஆண்களைப் பற்றிப் பேசுவாகக்ள். மனைவி சொல்லுக்கு அடங்கி நடக்கும் பயந்தாங்கொள்ளி கணவன்மார்கள், பெண்களின் புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு அவர்கள் பின்னால் அடிமைகள் போல், வேலைக்காரர்கள் போல் நடந்து செல்லும் ஆண்களைத்தான் அவர்கள் சொர்க்கத்தில் வைப்பார்கள். பெண்களை அப்படித்தானே ஆண்கள் கேவலப்படுத்தியிருக்கிறார்கள்?

சொர்க்க்த்தில் இருக்கும் பெண்கள் என்றும் இளமையாக இருப்பார்களாம். அவர்களுக்கு முதுமையே வராதாம்.

சரி, அதை விடுங்கள். இந்த மதங்கள் எல்லாம் கடவுளை எப்படி சித்திரிக்கன்றன தெரியுமா? வெண்தாடியுடன் கூடிய ஒரு வயதான மனிதனாக. கடவுளை எப்போதாவது நீங்கள் ஒரு துடிப்புள்ள இளைஞனாகக் கற்பனை செய்து பார்த்திருக்கிறீர்களா? இல்லை, ஏனென்றால் இளைஞர்களை நம்பமுடியாது என்று பலர் நினைக்கிறார்கள். இளைஞர்களுக்கு அவ்வளவாக அறிவு இருக்காது. பக்குவம் இருக்காது. முதிர்ச்சியிருக்காது. சில சமயங்களில் இளைஞர்கள் அசட்டுத்தனமாக நடந்து கொள்வார்கள் என்று இந்த சமுதாயம் நினைக்கிறது.

அதனால் தான் உலக மதங்கள். இறைவனை முழுக் கிழவனாகச் சித்திரிக்கின்றன. ஒரு புத்திசாலி மனிதன் கண்டிப்பாக வயதானவனாகத் தான் இருக்க வேண்டும். அப்போதுதான் அறிவும் அனுபவமும் ஒன்றாக இணைந்து செயல்பட முடியும் என்று உலகம் நினைக்கிறது. அதனால் கடவுள் தாடிக்காரக் கிழவனாகக் காட்சி தருகிறார்.

ஆனால் கடவுளைச் சுற்றி நிற்கும் தேவலோகப் பெண்கள் எல்லாம் இளங்குமரிகள். பதினெட்டு வயதுக்கு மேல் ஒரு நாள் கூட வயது ஏறாத நிரந்தரக் கன்னிகள். அந்த வயதில் அப்படியே தேங்கிவிட்ட அதிசயப் பிறவிகள். பாவம், எத்தனை கோடி ஆண்டுகளுக்குத்தான் அவர்கள் பதினெட்டு வயதுப் பெண் களாகவே இருப்பார்கள்!

ஆனால் இது உண்மையில்லை. மனிதனின் கற்பனை. நமது புனிதர்கள் பெண்களை வெறுக்கிறார்கள். உடலுறவை வெறுக் கிறார்கள். பிரம்மச்சரியத்தைப் புகழ்கிறார்கள். அப்படிச் செய்தால் அவர்களுக்கு மறுவுலக வாழ்க்கையில் இன்பம் கிடைக்கும் என்று நம்புகிறார்கள். இது நம்முடைய உலக ஆசைகள். நமது ஆழ்மனத்தில் இருந்து வரும் ஆசைகள். அவற்றை ஒதுக்கித் தள்ள முடியாது. அந்த ஆசைகளை நேருக்கு நேர் சந்தித்து, அவற்றின் போக்கைக் கவனித்து எதிர் கொண்டால் ஒழிய அவற்றை வெல்ல முடியாது. ஆசைகளை உள்ளே அடக்கிவைத்து ஞானியானவர் யாரும் இல்லை.

இதனால் தான் கோ ஹ்சுவான் சொல்கிறார். ''இக உலக வாழ்க்கையில் மூழ்கிக்கிடப்பவர்கள் இதனைப் புரிந்து கொள்ள முடியாது.'' அவர்கள் இதைத் தவறாகவே புரிந்து கொள்வார்கள்.

ஒரு நோயாளி மனநல மருத்துவரைப் பார்க்க வந்தார். அவர் பெரிய அறிஞர். இறைமையியல் வல்லுநர். தத்துவவாதி.

''டாக்டர் எனக்கு கர்வம் அதிகமாகிவிட்டதாக மக்கள் பேசிக்கொள்கிறார்கள். நான் என்னை பெரிய கடவுள் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறேனாம்.''

''எதுவாக இருந்தாலும் குணப்படுத்திவிடலாம். அதற்கு முதலில் நான் உங்கள் கதையைத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த பிரச்சினை ஆரம்பித்த

காலத்தில் இருந்து சொல்லுங்கள்.''

''முதலில் இருந்தே சொல்லிவிடுகிறேனே. நான் படைப்புத் தொழிலைத் தொடங்குவதற்கு முன் வெறும் இருட்டுதான் இருந்தது.....''

வேடிக்கையைப் பார்த்தீர்களா? இவர் தன்னைப் பற்றி அதிகமாக நினைத்துக் கொண்டிருப்பதாக மக்கள் நினைக்கிறார் களாம். அதைக் குணமாக்க முடியுமா என்று கேட்க வந்த மகானுபாவர், உங்கள் கதையைச் சொல்லுங்கள் என்றவுடன் தான் தான் இந்த பிரபஞ்சத்தையே படைத்த கடவுள் என்ற அளவுக்குச் சொல்ல ஆரம்பிக்கிறார். இவர் மனம் எப்போதும் இப்படியே தான் இருக்கும். அவர் என்ன செய்தாலும் சரி, சொன்னாலும் சரி, அது அவருடைய பழுதுபட்ட மனதிலிருந்துதான் வரும்.

இத்தாலியக் கணவன் ஒருவன் அன்று வழக்கத்துக்கு மாறாக சீக்கிரமே வீடு திரும்பிவிடுகிறான். அவனுக்குத் தன் மனைவி மேல் சந்தேகம். அவன் மனைவி அரைகுறை ஆடையுடன் படுக்கையில் இருக்கிறாள். படுக்கையறையில் யாரோ புகைபிடித்த அடையாளம் இருக்கிறது.

கோபக்கனல் தெறிக்க தனது மனைவியைப் பார்க்கிறான் கணவன். கோபத்தில் தன்னைக் கொன்றுவிடுவானோ என்ற பயத்தில் மனைவி நடுங்கிக் கொண்டே பேச ஆரம்பிக்கிறாள்.

''நான் சத்தியமாகச் சொல்கிறேன், நான் தனியாகத்தான் இருக்கிறேன்.'' அழத் தொடங்குகிறாள், மனைவி.

''என்னை அடிக்காதீர்கள். என்னைக் கொன்றுவிடாதீர்கள். மேலே இருப்பவனுக்கு எல்லாம் தெரியும் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.''

அவளுடைய உறுதியைப் பார்த்துக் கொஞ்சம் பின்வாங்கு கிறான் கணவன். அப்போது மேலே பரணிலிருந்து ஒரு குரல் கேட்கிறது.

"மேலே இருப்பவனுக்கு எல்லாம் தெரியும் என்பது உண்மை தான். ஆனால் கீழே இருப்பவனுக்கு அதைவிட அதிகம் தெரியும்."

எத்தனை காலத்துக்குத்தான் ஆசையை அடக்கிவைக்க முடியும்? எத்தனை நாளைக்குத்தான் அதை ஒளித்து வைக்க முடியும்? அது எப்படியும் வெளியே வரத்தான் போகிறது. நீங்கள் வாசற்கதவை அடைத்துவிட்டால் அது புழக்கடைக் கதவு வழியாக வெளியே வரத்தான் போகிறது.

இரண்டு பைத்தியங்கள் ஒரு கடிகாரத்தை முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தன. கடிகாரம் அப்போது பனிரெண்டு மணி காட்டியது.

"இது நண்பகல்." என்றது முதல் பைத்தியம்.

"இல்லை, நள்ளிரவு" என்றது இரண்டாவது பைத்தியம்.

இப்படியே சண்டை போட்டுக் கொண்டவர்கள் அந்த பைத்தியக் கார ஆஸ்பத்திரியின் தலைவரிடம் மத்தியஸ்தம் போனார்கள்.

"டாக்டர், நீங்கள் சொல்லுங்கள், இப்போது நண்பகலா, நள்ளிரவா?"

அவர் தனது கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டுச் சொன்னார்.

"அதை என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஏனென்றால் என் கடிகாரம் நின்றுவிட்டது."

ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியின் தலைவர் அங்குள்ள நோயாளிகள் அளவுக்குக் கிறுக்குப்பிடித்தவராகத்தான் இருப்பார். நோயாளிகளை விட அவருக்கு அதிகம் கிறுக்குப் பிடித்திருந்த தால்தான் அவரைத் தலைவர் ஆக்கினார்களோ என்னவோ!

இப்படித்தான் ஒரு தந்தை தனது மகனைக் கூப்பிட்டுக் கண்டிப்பான குரலில் கேட்டார்.

"நீ இந்த வீட்டை விட்டுப் போகப்போகிறாயாமே? அம்மா சொன்னாள். அது உண்மையா?"

"ஆமாம், உண்மைதான்." உறுதியாகச் சொன்னான் மகன்.

''அப்படியானால் ஒன்று செய். நீ போகும் போது என்னையும் கூட்டிக் கொண்டு போய்விடு. உன் அம்மாவின் தொந்தரவைத் தாங்கமுடியவில்லை.''

கோ ஹ்சுவான் முன்னுரையில் மேலும் சொல்கிறார். ''தங்கக் கதவை ஆண்டு கொண்டிருக்கும் அந்த தெய்விகமான அரசனிடம் இருந்து இதை நான் பெற்றேன்.''

உண்மை ஒரு பரிசு. உண்மை ஒரு சாதனையில்லை. சாதனை என்பது 'நான் செய்தேன்' என்ற அகங்காரத்தில் விளைவது. அகங்காரம் இருக்கும் இடத்தில் உண்மை இருக்காது. அகங்காரம் அகன்றால் தான் உண்மை அங்கு வர முடியும்.

''நான் சாதித்துவிட்டேன். உண்மையைக் கண்டுபிடித்து விட்டேன்'' என்று யாரும் சொல்ல முடியாது. 'எனக்கு உண்மை தரப்பட்டது' என்று தான் சொல்ல முடியும். அது ஒரு பரிசு.

கோ ஹ்சுவான் 'இதை நான் பெற்றேன்' என்று சொல்கிறார். இதை நான் கண்டுபிடித்தேன் என்று சொல்லவில்லை. உங்களுக்கு உண்மை வேண்டுமென்றால் நீங்கள் எப்போதும் அதை பெறும் நிலையில் இருக்க வேண்டும். உண்மை வன்முறையின் பாற்பட்டதல்ல.

உண்மையைத் தாக்கி அதனை அடைய முடியாது. உண்மை யான சாதகன் சாதனையாளன் அல்லன். அவன் வன்முறையாளன் அல்லன். அவன் ஆணாக இல்லை, ஒரு பெண்ணாக நடந்து கொள்கிறான்.

அவன் மனம் பெண்ணின் கருப்பையைப் போல் இருக்கிறது. அது உண்மை என்னும் கருவை வாங்கிக் கொள்கிறது. அந்தக் கருப்பையில் ஏற்கனவே இருக்கும் அசுத்தங்களை அகற்றி விட்டு உண்மையை அதில் வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறான் சாதகன்.

அதுதான் தியானம். அதுதான் ஆழ்நிலை சிந்தனை. அதைத் தான் நாம் இங்கு செய்து கொண்டிருக்கிறோம். அதைத்தான் ஞானிகள் பல நூற்றாண்டுகளாகச் செய்து வந்திருக்கிறார்கள். அதைத்தான் பல தலைமுறைகளாக ஆச்சாரியர்கள் தங்கள் சீடர்களுக்குக் கற்றுத் தந்து கொண்டிருக்கிறார்கள்.

உங்களை நீங்கள் காலி செய்து கொள்ளுங்கள். நீங்கள் வெற்றிடமாக மாறுங்கள். எப்போது நீங்கள் முழுமையான

வெற்றிடமாக மாறிவிட்டீர்களோ அப்போது உண்மை உங்களுக்குள் இறங்க ஆரம்பிக்கும்.

நீங்கள் அதனால் நிறைந்து வழிவீர்கள். முதலில் உங்களை, உங்கள் மனத்தை நீங்கள் காலி செய்து வெற்றிடமாக ஆக்கிக் கொள்ள வேண்டும். அதன் பின் அந்த வெற்றிடம் கடவுளால், தாவோவால், தர்மத்தால், அதற்கு என்ன பெயர் சூட்ட வேண்டும் என்று நினைக்கிறீர்களோ, அதனால் நிரப்பப்படும்.

கோ ஹ்சுவான் சொல்கிறார் ‘‘தங்கக் கதவை ஆண்டு கொண்டிருக்கும் அந்த தெய்விகமான அரசனிடம் இருந்து இதை நான் பெற்றேன்.’’

இந்த கூற்றிலே ‘‘தங்கக் கதவு’’ என்ற வார்த்தைகள் புதிராகத் தோன்றுகின்றன. தாவோ ஞானிகள் கடவுளை ஒரு மனிதனாகக் காட்டுவதில்லை. அவர்கள் கடவுளை ஒரு கதவாகத்தான் சித்திரிக்கிறார்கள்.

அது பிரபஞ்ச இருப்புநிலைக்குள் திறக்கும் தங்கக் கதவு. நீங்கள் உங்களுக்குள் முழுமையான வெற்றிடத்தை உருவாக்கினால், அந்த தங்கக் கதவு உங்களுக்குள் திறந்து கொள்ளும்.

இப்போது உங்கள் அகந்தைதான் அந்தக் கதவை திறக்கவிடாமல் தடுத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் தான் அந்தக் கதவைத் தடுத்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களைத் தவிர வேறு எந்தத் தடையும் இல்லை. உங்களை நீங்களே விலக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் இடையில் வராமல் இருந்தால் இந்த தங்கக்கதவு தானாகவே திறந்து கொள்ளும்.

அதை தங்கக் கதவு என்று ஏன் சொல்கிறார்கள்? அதைக் கடந்து செல்லும் அந்த நொடியில் நீங்கள் சுத்தமான தங்கமாக மாறுகிறீர்கள். அழுக்கு, மறைந்துவிடுகிறது. இல்லை, அந்த அழுக்கெல்லாம் சேர்ந்து, அந்தக் கதவின் ரசவாத வித்தையால், சுத்தமான தங்கமாக மாறிவிடுகிறது.

இதுதான் உண்மையான ரசவாதம். அழுக்கைத் தெய்விகமாக மாற்றுவது, இரும்பைத் தங்கமாக மாற்றுவது. நீங்கள் ஒன்றும் செய்யாமல், அதைப் பெறுபவராக மட்டும் இருந்தால் போதுமானது அந்த ரசவாதம் உங்களுக்குள் ஏற்படும்.

கோ ஹ்சுவான் மேலும் சொல்கிறார். ‘‘முற்காலத்தில் இது வாய் வார்த்தையாகத்தான் சொல்லப்பட்டது. இதன் பொருளை

உணர்ந்தவர்கள் இறைவனின் தூதுவர்களாக மாறி இந்த தங்கக் கதவுக்குள் நுழைகிறார்கள்.''

அவர்கள் இறைத் தூதுவர்களாக வேண்டும் என்ற அவசியமோ, கட்டாயமோ இல்லை. ஆனால் இயற்கையாக, எந்த முயற்சியும் இல்லாமல், இயல்பாகவே அவர்கள் அப்படி ஆகிறார்கள்.

அவர்கள் தெய்விக ஒளியைப் பிரதிபலிப்பவர்கள். அவர்களிடம் இயற்கையாகவே ஓர் ஒளி வீசும். அவர்கள் எந்த முயற்சியும் செய்யாமலேயே அவர்கள் இருக்கும் இடத்தில் அதிசயங்கள் நடந்தேறும்.

கோ ஹ்சுவானின் வாழ்க்கையிலேயே பல அதிசயங்கள் நடந்ததாகச் சொல்கிறார்கள். பல ஞானிகளின் வாழ்க்கையில் அதிசயங்கள் நடந்திருக்கின்றன.

உதாரணமாக கோ ஹ்சுவான் நீர் மேல் நடக்கும வல்லமை பெற்றிருந்தார் என்று சொல்கிறார்கள். ஏசுநாதருக்கும் அந்த சக்தி இருந்தது என்று சொல்வார்கள். ஆனால் அது உண்மையில்லை. தண்ணீரில் நடக்கும் அளவுக்கு ஏசுநாதரும் முட்டாள் இல்லை, கோ ஹ்சுவானும் முட்டாள் இல்லை. பின் அவர்கள் நீர் மேல் நடந்தார்கள் என்று சொன்னது பொய்யா?

இல்லை, அது ஒரு கவிநயமான வார்த்தை. அவ்வளவுதான். அது ஓர் உருவகம். மற்றவர்களால் செய்ய முடியாததை அவர்கள் செய்தார்கள் என்பதை ஒரு கவித்துவத்துடன் சொன்னார்கள். அவ்வளவுதான்.

உலகத்திலேயே யாராலும் செய்ய முடியாத காரியம் எது? இந்த உலக வாழ்க்கையைக் கடந்து மேல் செல்வதுதான். தன்னைத் தானே முழுமையாக அறிந்து கொள்வதுதான். உலகத்திலேயே செய்யமுடியாத காரியம், தன்னைத்தானே முழுமையான வெற்றிடமாக ஆக்கிக்கொள்வதுதான்.

இதை எல்லாம் செய்தவர்கள் நம் ஞானிகள். அதைக் கவிநயமாகச் சொல்ல வந்தவர்கள், அவர்கள் நீர் மேல் நடந்தார்கள், தீயின் மேல் நடந்தார்கள் என்று சொன்னார்கள். அதை நடந்த நிகழ்வு என்று நினைத்து உங்களை நீங்களே குழப்பிக் கொள்ளாதீர்கள்.

அடுத்து கோ ஹகுவானைப் பற்றி இன்னொரு கதை சொல்வார்கள். அவருக்கு ரச வாதம் தெரியும். அதாவது இரும்பைப் பொன்னாக மாற்றும் கலை தெரியும் என்று சொல்வார்கள். அவருக்கு சாகா வரம் கொடுக்கும் அமிர்தத்தை உருவாக்கத் தெரியும் என்று சொல்வார்கள்.

எவனொருவனுக்கு தனது உணர்வுநிலையைப் பற்றித் தெரிகிறதோ, தனது எண்ணங்கள் செயல்கள் எல்லாவற்றிற்கும் சாட்சியாக நிற்கும் அந்த உணர்வுநிலையை எவன் அறிகிறானோ, எவன் மனமின்மை என்ற நிலையை அடைந்துவிட்டானோ, அவனுக்கு ஜனனமும் கிடையாது, மரணமும் கிடையாது. அவன் பிறக்கவேயில்லை. இறக்கவும் மாட்டான். இதுதான் உண்மையான ரசவாதம். இந்த ஞானம்தான் சாகாவரம் கொடுக்கும் அமிர்தம்.

அடுத்து, கோ ஹ்கவான் நல்ல பகல் வேளையில் சமாதி அடைந்தார் என்று சொல்வார்கள். நபிகள் நாயகமும் அப்படித்தான் சமாதியடைந்தார். பல ஞானிகள் அப்படித்தான் சமாதி நிலையடைந்தார்கள்.

வார்த்தைகளால் விளக்க முடியாததை விளக்க இவையெல்லாம் கவித்துவமான, அழகான வழிகள். இவர்கள் எல்லாம் உச்சநிலையை அடைந்தது புழக்கடைக் கதவு வழியாக அல்ல. இவர்கள் பட்டப் பகலில் ஊரின் நடுவில் மக்களின் பார்வையில் அந்த நிலையை அடைந்தார்கள்.

கண்ணிருந்தவர்கள் அவர்கள் அந்நிலை அடைவதைப் பார்த்தார்கள். செவியுள்ளவர்கள் அந்த சமயத்தில் இசைத்த தெய்விக இசையைக் கேட்டார்கள். இதயம் உள்ளவர்கள் தங்களிடம் நிகழ்ந்த மாற்றத்தை உணர்ந்தார்கள். இந்த மகான்கள் பூமியில் வாழ்ந்தார்களே ஒழிய, இவர்கள் பூமிக்குச் சொந்தமானவர்கள் அல்லர். அவர்கள் இவ்வுலக மனிதர்கள் அல்லர்.

சில மதவெறியர்கள் உருவகங்களை உண்மைகளாக நினைக்கிறார்கள். கவிநயமான வர்ணனைகளை வரலாறு என்று நினைக்கிறார்கள். ஞானத்தின் வழியே செல்லவேண்டுமென்றால் உங்கள் நடை உடை பாவனைகளில் கொஞ்சம் அதிகமாகவே கவிதை மிளிர வேண்டும்.

சொர்க்கத்தில் இருந்தவர்களுக்கு சலிப்பாகிவிட்டது. எல்லாரும் சேர்ந்து உட்கார்ந்திருந்த போது பீட்டர் (இறந்த மக்களை

சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் அனுப்பும் அதிகாரி) கடவுளைப் பார்த்துச் சொன்னார்.

"எனக்கு போர் அடிக்கிறது. நேரம் கிடைக்கும் போதெல்லாம் பூமிக்கு ஒரு நடை போய்விட்டு வரலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் வருகிறீர்களா?"

"என்னால் முடியாதப்பா. எனக்கு வயதாகிவிட்டது." என்று சொன்னார் கடவுள்.

"ஒரு முறை போய்விட்டு வந்ததே போதும் போதும் என்று ஆகிவிட்டது." என்று ஏசுநாதர் அலுத்துக் கொண்டார்.

அப்போது பரிசுத்த ஆவி பயத்துடன் சொன்னது.

(கிறிஸ்துவர்கள் வணங்கும் பரிசுத்த ஆவி ஒரு புறாவின் வடிவெடுத்து வந்ததாக அவர்கள் புராணக்கதைகள் கூறுகின்றன.)

"பூமியில் இருப்பவர்கள் புறாக்களைச் சுடுவதை நிறுத்தும் வரை, நான் பூமியின் பக்கம் தலைவைத்துப் படுக்க மாட்டேன்."

ஒரு நாள் கடவுள் ஏசுநாதரை அழைத்து, "நீ இன்னொரு முறை பூமிக்குச் சென்று அதிசயங்கள் நிகழ்த்திவிட்டுத் திரும்பவேண்டும்." என்று சொன்னார்.

ஏசுநாதரும் அரைமனதுடன் கிளம்பினார். சொர்க்கத்தில் உள்ள தனது நண்பர்கள் தெரிந்தவர்களிடமெல்லாம் விடைபெற்றுக் கொண்டார் அவர். முதலில் நடந்ததைப் போல் 33 வருடங்களில் திரும்பிவிடுவதாகச் சொல்லிவிட்டு பூமிக்குக் கிளம்பினார்.

33 வருடங்கள் ஓடிவிட்டன. ஏசுநாதர் திரும்பி வரவில்லை. சொர்க்கத்தில் உள்ளவர்கள் காத்திருந்து பார்த்துக் களைத்து விட்டார்கள். எண்பது வருடங்கள் கழித்து ஓர் ஒல்லியான, கிழவர் சொர்க்கத்துக்கு வந்தார். தன்னை ஏசுநாதர் என்று சொல்லிக் கொண்ட அவரை நம்பாமல் கடவுளின் முன்னால் கொண்டு போய் நிறுத்தினார்கள். கடவுள் அவரை ஏசுநாதர் என்று கண்டுபிடித்துவிட்டார்.

"மகனே, ஏன் இவ்வளவு தாமதம்? என்ன ஆயிற்று உனக்கு?"
"அந்த கூத்தை ஏன் கேட்கிறீர்கள்? இப்போது பூமியில் சிலுவையில் அறைவதை எல்லாம் ஒழித்துவிட்டார்கள். மரண தண்டனையே கிடையாதாம். ஆயுள் தண்டனையைக் கொடுத்து என்னைச் சாகடித்துவிட்டார்கள் பாவிகள்."

ஏசுநாதர் மக்களிடைய நடந்து சென்று அதிசயங்கள் செய்து கொண்டிருந்தார். அப்போது திடீரென்று ஒரு மனிதன் அவர் காலில் விழுந்து,

"ஐயா கடவுளே, எனக்குத் தீராத வியாதி. நீங்கள் தான் என்னைக் குணப்படுத்த வேண்டும்." என்று கதறினான்.

"அமைதியாயிரு மகனே! என் மேல் நமபிக்கை வை. நீ நிச்சயம் குணமடைவாய்."

சொல்லியபடியே ஏசுநாதர் அந்த ஆசாமியின் பக்கத்தில் போனார். அவனது கண்களைப் பார்த்தார். பின் சட்டென்று பின் வாங்கினார். தனது தூதுவர் பீட்டரைப் பக்கத்தில் அழைத்தார்.

"நாம் அவசரமாக அடுத்த இடத்துக்குப் போக வேண்டும் என்று சொல். இவனை என்னால் ஒன்றும் செய்ய முடியாது. இவனுக்கு இருப்பது கேன்சர். புற்று நோய்."

ஞானிகளின் வாழ்க்கையில் நடந்த அதிசயங்கள் எல்லாம் ஒன்று, அழகான உருவகங்கள் இல்லை தற்செயலான நிகழ்வுகள். உதாரணமாக ஏசுநாதரின் வரலாற்றில் அவர் லாசரஸ் என்ற இறந்து போன மனிதனை உயிர்ப்பித்தார் என்று சொல்லப்படுகிறது. ஒன்று லாசரஸ் கோமா நிலையில் இருந்திருக்க வேண்டும.

அவன் இறந்து விட்டதாக ஊரார் நினைத்து அவனைப் புதைத்திருக்க வேண்டும். அப்போது ஏசுநாதரின் கரம் பட்டவுடன் அவன் தற்செயலாக கோமா நிலையில் இருந்து விழித்திருக்க வேண்டும்.

இல்லை இந்த உயிர்த்தெழுதல் நிகழ்வே ஓர் அழகான உருவகமாக இருக்க வேண்டும். ஏனென்றால் ஒவ்வொரு குருவும் தனது சீடனை கல்லறையில் இருந்து ஒரு வகையில் உயிர்த்தெழ வைக்கிறார். சாதாரணமாக நீங்கள் எல்லாரும் இறந்த நிலையிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் வாழ்க்கையைச் சுவைத்துப் பார்க்கவேயில்லை. ஒரு வகையில் நீங்கள் எல்லாருமே அந்த லாசரசைப் போன்றவர்கள்தான்.

லாசரஸ் நான்கு நாட்கள் பிணமாகக் கிடந்தான். நீங்களோ பல லட்சம் பிறவிகளாக பிணங்களாகவே வாழ்ந்து வந்திருக் கிறீர்கள். உங்களை உங்கள் சாவிலிருந்து மீட்பது ஓர் அதிசயம் தானே?

அதைத்தான் உங்கள் குரு செய்கிறார். உங்கள் குருவின் வார்த்தைகளைக் கேட்டு நீங்கள் உயிர்த்தெழுந்தால் நீங்களும் ஓர் அதிசயத்தைச் செய்தவராகிவிடுவீர்கள். உங்கள் குரு மட்டும் அதிசயங்களை நிகழ்த்தவில்லை. நீங்களும்தான் அப்படிச் செய்கிறீர்கள். உள்ளதைச் சொன்னால் நீங்கள் நிகழ்த்தும் அதிசயம் உங்கள் குரு நிகழ்த்தும் அதிசயத்தைவிட மகத்தானது.

எல்லா ஞானிகளின் வாழ்க்கையிலும் ஒரே மாதிரி அதிசயங்கள் தான் நடந்திருக்கின்றன. அந்த அதிசயங்களில் அவ்வளவு வேறுபாடு இல்லை. காரணம் ஒவ்வொரு ஞானியும் இந்த உலகத்தில் வாழ்ந்தாலும், உலகத்தோடு ஒட்டாமல், உலகத்தின் மேல் பற்று வைக்காமல் வாழ்கிறான். அவனுடைய வாழ்க்கையே ஓர் அதிசய நிகழ்வுதான். அதை எப்படி வெளிப்படுத்துவது?

அந்த ஞானி பெற்ற மகத்தான ஞானத்தை மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் எப்படி விளக்குவது? அதற்காகத்தான் அந்த ஞானி சில அதிசயங்களைச் செய்தார் என்று சொன்னார்கள். அந்த ஞானியின் தன்மையைப் பற்றி வார்த்தைகளால் சொல்ல முடியாது என்பதற்காக, தங்கள் பிரமிப்பை சில அதிசய நிகழ்வு களின் மேல் ஏற்றிச் சொன்னார்கள். வார்த்தைகளுக்கு அப்பாற் பட்டதை கோடிட்டுக் காட்ட அவர்கள் கையாண்ட உத்தி அது.

ஆனால் அதைக் கேட்ட சில முட்டாள்க்ள் அது அப்படியே உண்மை என்று நினைத்துக் கொண்டு அதை வரலாறாக, கதையாக எழுத ஆரம்பித்துவிட்டார்கள். அப்படிச் செய்வதால் அந்த ஞானியின் புகழ் இன்னும் வேகமாகப் பரவும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் இந்த அதிசய நிகழ்வுகள் இடைஞ்சல்களாகிவிடுகின்றன.

உண்மையைச் சொன்னால் ஏசுநாதரின் வாழ்க்கையில் நடந்ததாகச் சொல்லப்படும் அதிசயங்களை அவருடைய வரலாற்றிலிருந்து நீக்கிவிட்டால் இன்னும் அதிக அறிவாளிகள் ஏசு நாதரைப் பின்பற்றியிருப்பார்கள். ஆனால் அந்த அதிசயங்கள் இல்லை என்றால் முட்டாள்கள் ஏசுநாதரை விட்டுப் போயிருப் பார்கள். ஆனால் அதற்குப் பதிலாக அறிவாளிகள் அதிகம் பேர் அவரைப் பின் தொடர்ந்து வந்திருப்பார்கள்.

இங்கே என்னுடைய முயற்சியே அதுதான். நீங்கள் அறிவுள்ளவர்களாக, விழிப்புணர்வு உள்ளவர்களாக, உணர்வுநிலை

கூர்மையாக உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

மூன்று, நான்கு நாட்களுக்கு முன்னால் ஆஸ்திரேலியாவில் இருக்கும் ஒரு புது சந்நியாசியிடமிருந்து எனக்குக் கடிதம் வந்திருந்தது. அந்த சந்நியாசி ஓர் இளம் பெண். அவள் என்னுடைய ஒரே ஒரு புத்தகத்தைத்தான் படித்திருந்தாள். அதுவும் அந்தப் புத்தகத்தலைப்பில் ஈர்க்கப்பட்டுதான் அதைப் படித்திருக்கிறாள். புத்தகத்தின் தலைப்பு: *யதார்த்தமாக இரு, அதிசய நிகழ்வுக்குத் திட்டமிடு.* *(Be Realistic; Plan For A Miracle)*

இந்தப் புத்தகத்தைப் படித்துவிட்டு அவள் ஓர் அதிசய நிகழ்வுக்குத் திட்டமிட ஆரம்பித்தாள். என்னுடைய ஆசிரமத்தில் சந்நியாசி ஆனாள். அதன் பின் இந்தியாவுக்கு வர திட்டமிட்டாள். அவளுடைய நண்பர்கள் கேலி செய்தார்கள். அவளுடைய குடும்பம், 'உனக்குக் கிறுக்குப் பிடித்துவிட்டது' என்று சாடியது. அவள் யார் சொன்னதையும் கேட்காமல் இந்தியாவுக்கு வருவது எப்படி என்று திட்டமிட ஆரம்பித்தாள்.

பல நாட்கள் அவள் வேலையில்லாமல் இருந்ததால் அவளிடம் பணம் இல்லை. வேலையில்லாத காரணத்தால் அவள் பலரிடமும் கடன் வாங்கியிருந்தாள். அதனால் மேலும் கடன் வாங்கவும் வழியில்லை. கையில் காசில்லாத காரணத்தால் அவள் இந்தியா வருவதற்கு சாத்தியமேயில்லை என்ற நிலையிலும், அவள் தன் பயணத்தைத் திட்டமிட ஆரம்பித்தாள்.

ஒரு நாள் தனது தோழியின் வீட்டில் '90 நாளில் இந்தியா சுற்றுப் பயணம்'' என்ற விளம்பரத்தைப் பார்த்தாள். 'ஆஹா, ஓஷோதான் எனக்காக இந்த அதிசயத்தை நிகழ்த்துகிறார்' என்று நினைத்திருக்கிறாள்.

90 நாட்கள் இந்தியப் பயணத்திற்காக அவள் செய்ய வேண்டியதெல்லாம் இது தான். ஒரு புத்தகத்தை வாங்க வேண்டும் பின் அதை நன்றாகப் படிக்க வேண்டும். அதன் பின் இருபது வரிகளில் சில கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும். அவளிட்ம ஆறே ஆறு டாலர் தான் மிச்சம் இருந்தது. நல்ல வேளை அந்த புத்தகத்தின் விலை அதற்குள் இருந்தபடியால் அந்தப் பணத்தை வைத்து அந்தப் புத்தகத்தை வாங்கிவிட்டாள்.

அந்த போட்டிக்கான கடைசி நாள் நெருங்கிவிட்டதால் அந்த ஆயிரம் பக்கம் புத்தகத்தை இரவு பகலாக ஒரே மூச்சில் படித்து முடித்தாள் அவள். அதன் பின் அதில் இருந்த கேள்விகளுக்கு விடை எழுதினாள்.

அவள் எனக்கு எழுதிய கடிதத்தில் சொல்கிறாள். " யார் பதில் எழுதுகிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. என் கைகள் பேனாவைப் பிடித்திருந்தன. ஆனால் யாருடைய ஆணைக்கோ கட்டுப்பட்டது போல் பேனா பேப்பர் மேல் நகர்ந்து கொண்டிருந்தது."

இந்த இடத்தில் ஒன்றை தெளிவாகச் சொல்ல விரும்புகிறேன். எனக்கும் அந்த கேள்விகளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அவள் என்ன பேசுகிறாள் என்று எனக்குத் தெரியாது. சத்தியமாக அந்த பதில்களை நான் எழுதவில்லை.

ஆனால் அவள் சொல்கிறாள். "நீங்கள் தான் அந்த பதிலை எழுதியிருக்க வேண்டும். நான் என்ன எழுதினேன் என்று எனக்கு ஞாபகம் இல்லை. நான் என்ன கிறுக்கினேன் என்பதே எனக்குத் தெரியாது. "

மூன்று நாட்கள் இரவு பகல் பார்க்காமல் அவள் அந்த நூலைப் படித்திருக்கிறாள். அவள் என்ன எழுதினாள் என்று அவளுக்கு எப்படித் தெரியும்? அதுவும் ஆயிரம் பக்கங்கள் கொண்ட ஒரு புத்தகத்தை எப்படி நினைவில் வைத்துக் கொண்டு எழுத முடியும்? அந்தப் புத்தகம் ஒரு முட்டாள்தனமான புத்தகமாகத்தான் இருக்க வேண்டும். நல்ல, பயனுள்ள புத்தகத்தை யாரும் இப்படி விற்க மாட்டார்கள். முட்டாள்தனமான புத்தகங் களைத்தான் இப்படி விற்பார்கள்.

ஆனால் அவள் நிச்சயம் வெற்றி பெற்றுவிடுவோம் என்று நம்பினாள். ஆனால் இவை எல்லாம் தொடர்ந்து நிகழ்ந்த தற்செய லான நிகழ்வுகள். தான் எழுதிய பதிலைக் கொண்டு போய் உரிய இடத்தில் கொடுத்தாள். அன்றுதான் பதில்களைக் கொடுக்க கடைசி நாள்.

அடுத்த நாள் அவள் தனது தோழியின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்த போது உடனே தனது வீட்டுக்குப் போக வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது. ஏதோ தந்தி வந்திருக்கும் என்று அவளுக்குத் தோன்றியது. உடனே தனது வீட்டுக்கு ஓடினாள். உண்மையிலேயே ஒரு தந்தி அவளுக்காகக் காத்திருந்தது.

இந்த நிகழ்வுகளுக்கும் எனக்கும் எந்த தொடர்பும் இல்லை என்று நான் துண்டைப் போட்டுத் தாண்டி சத்தியம் செய்தாலும் அவள் நம்பப் போவதில்லை. நான் ஒன்றும் செய்யவில்லை என்று சொன்னால் அவள் அதை நம்பமாட்டாள். மாறாக அவள் தனது அனுபவத்தைத்தான் நம்புவாள்.

அந்த தந்தியில், ''உடனே வந்து எங்களைப் பார்க்கவும்'' என்ற வாசகம் இருந்தது. அவள் அங்கே ஓடினாள். அவளுக்கு முதல் பரிசு கிடைத்திருந்தது. இலவசமாக 90 நாள் இந்தியப் பயணம்தான் பரிசு. அவள் இப்போது இந்தியாவுக்கு வரப் போகிறாள். அவள் சொல்கிறாள். ''ஓஷோ, நீங்கள் வாக்களித்தீர்கள். செய்து முடித்தீர்கள்.'' அப்படிப் பார்க்காதீர்கள். இந்த விஷயத்தில் சத்தியமாக நான் நிரபராதி. எனக்கும் அந்த நிகழ்வுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

சில சமயம் தொடர்ச்சியான இப்படி தற்செயலான நிகழ்வுகள் நடக்கும். அவை நம்மை நம்பவைத்துவிடும்.

உங்களை அறிவுள்ளவர்களாக்கத்தான் நான் பாடுபடுகிறேன். உங்களை நம்பவைக்க வேண்டும் என்பது என்னுடைய குறிக்கோள் இல்லை. உலகத்தில் அதிசய நிகழ்வுகளே இல்லை.

ஒரே ஓர் அதிசயம் தான் இருக்கிறது. அது நீங்கள் உங்களை வெற்றிடமாக்கிக் கொள்வதுதான். அகந்தையின் சாவுதான் உண்மையான அதிசய நிகழ்வு. அது நடந்துவிட்டால் உங்களுக்குத் தங்கக் கதவு கிடைத்துவிட்டது என்று பொருள். பேரூழியை, வரையறையற்ற காலத்தை நீங்கள் தெரிந்து கொண்டுவிட்டீர்கள் என்று பொருள். காலத்தைக் கடந்து சென்று விட்டீர்கள் என்று பொருள்.

இப்போது இந்தச் சின்ன சூத்திரங்களைப் பார்ப்போம்.

*வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:*

*மேன்மையான தாவோ உருவமற்றது.*

தாவோவுக்கு உருவமில்லை என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று கோ ஷ்சுவான் அதை முதல் சூத்திரத்திலேயே சொல்லிவிடுகிறார். நீங்கள் தாவோவுக்கு சிலை எடுக்க முடியாது. கோயில் கட்ட முடியாது. சடங்குகள் செய்ய முடியாது. பூசாரிகள். பாதிரியார்களை உருவாக்க முடியாது.

*மேன்மையான தாவோ உருவமற்றது.*

தாவோ பிரபஞ்ச இருப்புநிலையின் அடிப்படைச் சட்டம். உங்களால் அதை வழி பட முடியாது. உங்களுடைய வழிபாடு முட்டாள்தனமானது. உங்களுடைய பிரார்த்தனைகளைத் தாவோ கேட்கப் போவதில்லை. உங்கள் பிரார்த்தனைகளைக் கேட்க, அதை நிறைவேற்ற யாரும் இருக்க மாட்டார்கள்.

உங்கள் ஆசைகளின் புதிய பதிப்புதான் உங்கள் பிரார்த்தனைகள். உங்கள் ஆசைகளின் மற்றொரு வடிவம் தான் உங்களுடைய பிரார்த்தனைகள்.

உங்கள் பிரார்த்தனைகளை உன்னிப்பாகக் கவனியுங்கள். அதில் உள்ள வார்த்தைகளில் மதத்தின் வாசனை வீசும். ஆனாலும் உள்ளபடியே எதுவும் மாறவில்லை. ஆசைகள் அப்படியேதான் இருக்கின்றன. அவற்றின் மதப்பூர்வமான வெளிப் பாடுதான் பிரார்த்தனை. மக்கள் பணம் வேண்டும் என்று கேட் கிறார்கள். அதிகாரம் வேண்டும் அந்தஸ்து வேண்டும் என்று கேட்கிறார்கள்.

நீங்கள் கேட்பது எதுவாக இருந்தாலும் அது தவறுதான். ஏனென்றால் நீங்கள் கேட்டதைக் கொடுக்க அங்கே யாரும் இல்லை. கேட்டுப் பெறுவது என்பதே அபத்தமானது. மௌனமாக இருங்கள்.

தாவோ பிரார்த்தனையின் வழியில்லை. ஆழ்நிலை சிந்தனையின் வழி.

*மேன்மையான தாவோ உருவமற்றது. எனினும் இந்த பூமியையும், சொர்க்கத்தையும் அதுதான் அளித்துக் காக்கிறது.*

தாவோ உங்களை அலட்சியப்படுத்துகிறது என்பது பொருளல்ல. தாவோவை நீங்கள் வழிபட முடியாது. அதனிடம் பிரார்த்தனை செய்யமுடியாது என்பது தான் இதன் உள்ளர்த்தம். ஆனால் அது உங்களைப் போற்றிப் பாதுகாக்கிறது.

உங்களை வளர்க்கிறது. உங்களுக்கு போஷாக்கு அளிக்கிறது. எங்கும் பரவி நிற்கும் முழுமை அதைத்தான் மூச்சாக விடுகிறது. அது தான் அண்ட சராசரங்களின் இதயத்துடிப்பு. ஆனால் அது ஒரு மனிதனோ, உருவமா இல்லை.

*மேன்மையான தாவோ ஆசையற்றது.*

அதனால் தாவோவுடன் நீங்கள் இணைய விரும்பினால் உங்கள் ஆசைகளை முற்றிலுமாகத் துறக்க வேண்டும்.

இன்று பலரும் ஆசைகளைத் துறக்கிறேன் பேர்வழி என்று தங்கள் ஆசைகளை மாற்றிக் கொண்டு திரிகிறார்கள். அடிப்படையில் யாரும் மாறுவதேயில்லை. வெளியில் உள்ள தங்கள் வாழ்க்கையமைப்பை மட்டும் மாற்றிக் கொள்கிறார்கள். கேட்டால் அதுதான் தங்கள் பண்பு என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

சிலர் புகைப்பிடிக்கும் பழக்கத்துக்கு அடிமையாக இருக்கிறார்கள். உங்களுக்கு அந்த பழக்கம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் பதிலுக்கு நீங்கள் சூயிங்கம்மை எப்போதும் மென்று கொண்டிருப்பவராக இருக்கலாம். ஆனால் இரண்டுமே முட்டாள்தனம்தான்.

இதைக்கேட்டு நீங்கள் சூயிங்கம் மெல்லும் பழக்கத்தைக் கைவிட்டு விடலாம். பதிலுக்கு வேறு ஏதாவது பழக்கத்தை மேற்கொள்ளலாம்.

ஆனால் அடிப்படையில் நீங்கள் மாறவேயில்லை. அதனால் வேறு எதுவும் மாறப் போவதில்லை.

நீங்கள் சந்திர மண்டலத்துக்கே போனாலும், இதையேதான் செய்து கொண்டிருக்கப் போகிறீர்கள். அங்கே எல்லாம் வித்தியாசமாக இருக்கும். ஆனால் உண்மையில் எந்த வித்தியாசமும் இருக்காது.

செவ்வாய்க் கிரகத்தில் இருந்து ஒரு பறக்கும் தட்டு பூமிக்கு வந்திறங்கியது. அந்த இடத்தில் வசித்து வந்த ஓர் இளம் தம்பதியைச் சிறைப்பிடித்து பறக்கும் தட்டுக்கு அழைத்துச் சென்றார்கள் அவர்கள்.

பறக்கும் தட்டின் வரவேற்பறை விசாலமாக இருந்தது. செவ்வாய்க்கிரகத்தைச் சேர்ந்த ஒரு தம்பதி அவர்களை வரவேற்று அமர வைத்தார்கள். பின் அவர்கள் குடிப்பதற்கு என்று பச்சை நிறத்தில் ஒரு திரவத்தைத் தந்தார்கள். அது சுவையாக இருந்தது. சில கோப்பைகள் அருந்தியவுடன் அவர்கள் நட்புறவுடன் பேச ஆரம்பித்தார்கள்.

பூமியைச் சேர்ந்த ஆண் அவர்களிடம் கேட்டான்,

"செவ்வாய்க் கிரகத்தில் எப்படி குழந்தை பெற்றுக் கொள்கிறீர்கள்?"

“இதோ இப்போதே செய்து காட்டுகிறோம். பாருங்கள்.” என்று செவ்வாய்க் கிரகத்தைச் சேர்ந்த ஆண் சொன்னான்.

பக்கத்தில் குளிர்பதனப் பெட்டியைப் போலிருந்த அமைப்புக்குப் போனார்கள். செவ்வாய்க்கிரகப் பெண் காபி நிற திரவம் இருந்த ஒரு பாட்டிலை எடுத்தாள். அந்த ஆண் வெள்ளை நிற திரவம் இருந்த பாட்டிலை எடுத்தான்.

இருவரும் பக்கத்தில் இருந்த மேஜையருகே போனார்கள். அங்கே ஒரு காலி பாட்டில் இருந்தது. அதில் அவரவர் கையில் வைத்திருந்த திரவத்தை கொஞ்சம் ஊற்றினார்கள்.

“இப்போது இந்த பாட்டிலை இந்த அமைப்புக்குள் வைத்து விடுவோம். சரியாக ஒன்பது மாதம் கழித்துத் திறந்து பார்த்தால், உள்ளே ஒரு குழந்தை உருவாகியிருக்கும். அது சரி, பூமியில் எப்படி குழந்தை பெற்றுக் கொள்கிறீர்கள்?”

பூமியைச் சேர்ந்த தம்பதி உடலுறவு கொள்வது எப்படி என்பதைச் செய்து காண்பித்தார்கள். தங்கள் ஆடைகளைக் களைந்தார்கள். பெண் கீழே படுத்துக் கொள்ள, ஆண் அவள் மேல் படர்ந்து உடலுறவு கொண்டான். எல்லாம் முடிந்து பார்த்தால் செவ்வாய்க்கிரகக்காரர்கள் அடக்க முடியாமல் சிரித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

“இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?”பூமியைச் சேர்ந்த பெண் கோபத்துடன் கேட்டாள்.

“எங்களை மன்னித்துக் கொள்ளுங்கள். நீங்கள் செய்தது எங்களுக்கு வேடிக்கையாக இருந்தது. ஏனென்றால் செவ்வாய்க் கிரகத்தில் இப்படித்தான் நாங்கள் காபி தயாரிப்போம்.”

நீங்கள் இங்கு இருக்கலாம், சந்திர மண்டலத்தில் இருக்கலாம், செவ்வாய்க் கிரகத்தில் இருக்கலாம். வெளியில் உள்ளவற்றை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். உடலுறவு கொள்வது போல் காபி போடலாம். காபி போடுவது போல் உடலுறவு கொள்ளலாம். அதனால் எந்த வித்தியாசமும் இல்லை.

ஒன்று முட்டாள்தனமாக உடலுறவு கொள்வீர்கள். இல்லை, முட்டாள்தனமாக காபி போடுவீர்கள். ஏதாவது ஒரு முட்டாள் தனத்தைச் செய்து கொண்டு இருப்பீர்கள்.

உங்களுக்குள் ஞானம் எழுந்தால் ஒழிய, உங்கள் உணர்வற்ற நிலை உணர்வு நிலையாகப் பரிமளித்தால் ஒழிய, உங்களுக்குள் இருக்கும் இருள் ஒளியாக மாறினால் ஒழிய, எந்த முக்கியமான மாற்றமும் நடக்காது.

*மேன்மையான தாவோ ஆசையற்றது. எனினும் அதன் சக்தியால் தான் சூரியனும் வெண்ணிலவும் அதனதன் பாதையி லிருந்து தவறாமல் சுழன்று கொண்டிருக்கின்றன.*

*மேன்மையான தாவோ பெயரற்றது. எனினும் அதுதான் அனைத்தையும் தாங்கி நிற்கிறது.*

*எனக்கு அதன் பெயர் தெரியாது.*

இந்த வார்த்தைகள் விலை மதிக்க முடியாத பொக்கிஷங்கள். 'எனக்குத் தெரியாது' இப்படித்தான் எல்லாம் தெரிந்தவர்கள் பேசுவார்கள். எல்லாம் எனக்குத் தெரியும் என்று பீற்றிக் கொண் டிருப்பவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. உண்மையான ஞானி அறியாமை நிலையில் இருந்துதான் செயல்படுகிறான்.

கோ ஹ்சுவான் சொல்கிறார்

*எனக்கு அதன் பெயர் தெரியாது. என்றாலும், இப்போது நமது பேச்சுக்காக அதனை நாம் தாவோ என்று அழைப்போம்.*

ஆனால் அதை ஏதாவது ஒரு பெயரிட்டு அழைக்க வேண்டுமே? பாருங்கள் இங்கே எந்த மதவெறியும் இல்லை. நீங்கள் அதை எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். x y z, இப்படி எந்த பெயர் வேண்டுமானாலும் கொடுத்துக் கொள்ளலாம். தாவோ என்பது x y z, என்பதைப் போல் ஒரு பெயர்தான். அதற்குப் பதிலாக வேறு பெயர் கொடுத்தாலும் பிரச்சினை இல்லை.

புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள் சீனாவுக்குப் போனபோது, அங்கே தங்கள் தத்துவங்களைச் சொன்ன போது, தாவோ ஞானிகள் அதை உடனடியாக ஏற்றுக் கொண்டார்கள்.

“பெயரில் என்ன இருக்கிறது? நீங்கள் அதைத் தர்மம் என்கிறீர்கள். நாங்கள் அதை தாவோ என்கிறோம். இரண்டும் ஒன்றுதான். ஏனென்றால் தாவோவும் பெயரற்றது. உங்கள் 'தர்மமும்' பெயரற்றது. தாவோவும் உருவமற்றது, தர்மமும் உருவமற்றது. அதனால் எந்த பிரச்சினையும் இல்லை. நாம் வேறு வேறு

மொழிகள் பேசுகிறோமே தவிர, ஒரே உண்மையைத்தான் சுட்டிக் காட்டிக்கொண்டிருக்கிறோம்.''

வரலாற்றில் நடந்த மிக அழகான நிகழ்வுகளில் இதுவும் ஒன்று. புத்த மதம் சீனாவுக்குப் போன போது அங்கு அதற்கு எதிர்ப்பு இல்லை, வாதப்பிரதிவாதங்கள் இல்லை, மதமாற்றங்கள் இல்லை முரண்பாடுகளும் இல்லை. புத்த மதமும் தாவோவும் இணைந்து ஒரு மதமாகிவிட்டன.

இப்படி ஒரு நிகழ்வு கிறிஸ்துவ மதத்தின் வரலாற்றிலோ, யூத மதத்தின் வரலாற்றிலோ, இஸ்லாமிய மதத்தின் வரலாற்றிலோ இதுவரை நடந்ததில்லை. இந்த மதங்களின் வரலாற்றின் அசிங்க மான சண்டைகள் தான் மிகுந்திருக்கின்றன. புத்தர் வழியிலும், லா ட்சூ வழியிலும் இது போன்ற மதங்களின் இணைப்பு நடந் திருக்கிறது. புத்த மதத்தினரும், லா ட்சூ மதத்தினரும் ஒருவரை ஒருவர் சந்தித்தார்கள். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளத் தொடங்கினார்கள். இருவரும் ஒரே கருத்தைத்தான் சொல்கிறார்கள் என்பது தெளிவாயிற்று. பெரிதாகச் சிரித்தார்கள். பின் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டு, 'ஆஹா எவ்வளவு உண்மை' என்று மெய் சிலிர்த்தார்கள்.

ஒரு கிறிஸ்துவ பாதிரியார் ஒரு ஜென் துறவியைக் காணச் சென்றார். பைபிளில் இருக்கும் அழகான வாசகங்களை அவர் ஜென் துறவிக்குப் படித்துக் காண்பித்தார். அப்போது இந்த வாக்கியம் வந்தது.

''பலவீனமாக இருப்பவர்கள் பாக்கியவான்கள். இறைவனின் சாம்ராஜ்ஜியம் என்றும் அவர்களுக்குத்தான்.''

அதைக் கேட்ட ஜென் துறவி சொன்னார். ''நிறுத்துங்கள். இது போதும். இந்த வாக்கியத்தைச் சொன்னவர் நிச்சயம் ஒரு புத்தராகத்தான் இருக்க வேண்டும்.''

பாதிரியாருக்கு வாயடைத்துப் போய்விட்டது. அவர் ஜென் துறவியோடு வாதாடி அவரை தனது மதத்திற்கு மாற்றலாம் என்று நினைத்து வந்திருந்தார். ஏசு நாதர் சொன்னதுதான் சரி, புத்தர் சொன்னது தவறு என்பதை வலியுறுத்தத்தான் அவர் வந்திருந்தார்.

ஆனால் ஜென் துறவியோ,

“இந்த வாக்கியத்தை யார் சொன்னார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் இதைச் சொன்னவர் நிச்சயம் ஒரு புத்தனின் அளவு ஞானம் பெற்றவராகத்தான் இருக்க வேண்டும்.

“பைபிளை மேலும் படிக்கத் தேவையில்லை. இந்த ஒரு வாக்கியம் போதும். கடலை எந்த ஓரத்தில் இருந்து சுவைத்துப் பார்த்தாலும் சரி, அது கரிக்கத்தான் செய்யும். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம். இந்த ஒரு வாக்கியம் போதும் எனக்கு.”

சீனாவில் இதே மாதிரிதான் நிகழ்ந்தது. பௌத்தர்கள் அந்த நாட்டுக்குப் போனார்கள். மொத்த சீன நாடும் புத்த மதத்துக்கு மாறியது. யாரும் யாரையும் மதம் மாற்றவில்லை. தாவோவின் மதம் பெருந்தன்மையுடையதாக இருந்தது. பௌத்தம் அந்த பெருந்தன்மையைப் புரிந்து கொள்ளும் மதமாக இருந்தது. மதமாற்றம் என்ற பேச்சுக்கே அங்கே இடமில்லை.

ஒருவரை மதம் மாறச் சொல்லி வற்புறுத்துவது அசிங்கம். அது ஒரு மோசமான வன்முறை.

பௌத்தர்களும், தாவோ ஞானிகளும் வாதங்கள் செய்ய வில்லை. அவர்கள் ஒன்று கூடினார்கள். ஒவ்வொருவரும் அடுத்த வரின் புரிந்து கொள்ளுதலைப் பாராட்டித் தலையாட்டினார்கள்.

“ஆமாம். அது உண்மைதான். லா ட்சூ சொல்வதைத்தான் புத்தர் தனது வார்த்தைகளில் கூறுகிறார்.” என்று ஒரே குரலில் சொன்னார்கள்.

மதங்களின் வரலாற்றிலேயே மகத்துவம் வாயந்த இந்த சந்திப்பின் விளைவாகத்தான் ஜென் பிறந்தது. புத்தரும், லா ட்சூவும் சந்தித்ததால், புத்தரின் உள் நோக்கும் லா ட்சுவின் உள்நோக்கும் இரண்டறக் கலந்ததால், புத்தரின் தர்மமும் தாவோவும் ஒருங்கிணைந்ததால், ஜென் பிறந்தது.

ஜென் காணக்கிடைக்காத அற்புத மலர். இரண்டு பெரிய மதங்களின் சங்கமத்தில் பிறந்தது. உலகத்தில் வேறு எந்த இடத்திலும் இப்படி இரண்டு பெரிய மதங்கள் சந்தித்துக் கொண்ட தில்லை. அமைதியாக, இரத்தம் சிந்தாமல், வாதம் என்று ஒரு வார்த்தைகூட பேசாமல் இரண்டு மதங்கள் சந்தித்துக் கொண்டது இங்கு மட்டும் தான் நடந்தது.

வேறுபாடு மொழியில்தானே தவிர, தத்துவத்தில் இல்லை என்பதை இந்த இரண்டு மதத்துக்காரர்களும் உடனேயே உணர்ந்து கொண்டார்கள்.

உண்மையான மதத்தைச் சார்ந்திருப்பவன் அப்படித்தான் இருப்பான். அவன் எப்போதும் வெறியனாக இருக்க மாட்டான்.

கோ ஹ்சுவான் சொல்கிறார்

*எனக்கு அதன் பெயர் தெரியாது. என்றாலும், இப்போது நமது பேச்சுக்காக அதனை நாம் தாவோ என்று அழைப்போம்.*

அது பெயரில்லாத, பெயர்களை எல்லாம் தாண்டிய ஓர் அனுபவம். ஆனால் அதை எப்படியாவது அழைக்க வேண்டுமே, அதனால் நாம் அதனை தாவோ என்று அழைப்போம். தாவோ என்பது தற்செயலான ஒரு பெயர்தான். பெயரளவில் அதற்கு எந்த முக்கியத்துவமும் இல்லை. அதையே நீங்கள் கடவுள், இறைவன், தர்மம், நிர்வாணம், சத்தியம், பிரம்மம் என்று எப்படி வேண்டுமானாலும் பெயரிட்டு அழைக்கலாம். எலலாப் பெயர்களும் அழகானவையே. அதனால் எந்த பெயரிட்டு அழைத்தாலும் தப்பில்லை.

எனது சந்நியாசிகளுக்கும் இதே மனநிலைதான் இருக்க வேண்டும். இந்த அணுகுமுறையைத்தான் நாமும் பின்பற்ற வேண்டும். கிறிஸ்துவம், இஸ்லாம், இந்து மதம் போன்ற எந்த கோட்பாடுகளுக்குள்ளும் நாம் சிக்கிக் கொண்டுவிடக்கூடாது.

'நான் இந்த தேவாலயத்தைச் சேர்ந்தவன்' என்று யாரும் சொல்லக்கூடாது. இவை எல்லாம் அரசியல் தந்திரங்கள். குழந்தைத்தனமானவை. இவற்றால் யாருக்கும் பயனில்லை. உண்மையான சமய உணர்வு உள்ளவன் மதக் கோட்பாடுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டவன். முழுமையான சுதந்திரத்தில்தான் நாம் உண்மையை உணர்ந்து கொள்ள முடியும்.

எனது சந்நியாசிகள் தங்கள் வாழ்க்கையில் இந்த அணுகு முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். இது மிகவும் அடிப்படை யானது. இந்த அணுகுமுறையில் நீங்கள் வேரூன்றத் தொடங்கி னால் பின் நீங்கள் வேகமாக வளர ஆரம்பிப்பீர்கள். முழுமை பெற்ற ஞான மலராக மலர்வீர்கள்.

○

## 2. பிரபஞ்ச இருப்பே ஆக்க சக்தி

*கேள்வி-1: ஓஷோ, ஒழுங்கைப் பற்றியும், ஆசைகளை பலவந்தமாக அடக்குவது பற்றியும் ஏதாவது சொல்ல முடியுமா?*

**இ**ந்த இரண்டிற்கும் இடையே வானத்துக்கும் பூமிக்கும் உள்ள வேறுபாடு இருக்கிறது. இரண்டும் இரு துருவங்கள். இவற்றை பாலம் போட்டு இணைக்கவே முடியாது.

பலவந்தமாக அடக்குவது என்பது ஒழுங்கிற்கு நேர் எதிரானது. ஆனால் பல ஆயிரம் வருடங்களாக ஆசைகளைப் பலவந்தமாக அடக்கி வைப்பதுதான் ஒழுங்கு என்று தவறாக நினைத்து வந்திருக்கிறோம். அது ஒழுங்கைப் போல் தோற்றமளிக்கலாம். ஆனால் அது ஒழுங்கு இல்லை.

ஒன்றை மட்டும் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். நிஜத்திற்கு என்றுமே நிஜமில்லாதவற்றால் ஆபத்து இல்லை. நிஜத்தைப் போல் தோற்றம் அளிக்கும் போலிகளால்தான் நிஜத்துக்கு ஆபத்து. நிஜமில்லாதது நிஜத்திற்கு ஊறு விளைவிக்க முடியாது. ஆனால் நிஜத்தைப் போல் இருக்கும் போலி நிஜத்தைக் கெடுத்துவிடும். அது நிஜம் இல்லை. ஆனால் நிஜத்தைப் போல் முகமூடி அணிந்து நம்மை ஏமாற்றிவிடும்.

பலவந்தமாக ஆசைகளை அடக்கிவைப்பது என்பது மிகவும் எளிதானது. எந்த முட்டாளாலும் அதைச் செய்ய முடியும். அடக்கி வைக்க அறிவு தேவையில்லை. ஆனால் ஒழுங்காக இருப்பதற்கு அதீத அறிவு வேண்டும். ஒழுங்கிற்கு மற்றொரு பெயர் விழிப்புணர்வு. ஒழுங்கு என்பது உங்களின் அடி ஆழத்தில் இருந்து வருகிறது. அது வெளியில் இருந்து திணிக்கப்படுவது இல்லை.

நீங்கள் ஒழுங்காக இல்லையென்றால் உங்களை யாராலும் ஒழுங்கு படுத்த முடியாது.

ஆங்கிலத்தில் ஒழுங்கை discipline என்று சொல்கிறோம். ஆங்கிலத்தில் அது மிக அழகான வார்த்தை. அதற்கு உண்மை யான பொருள் கற்றுக் கொள்ளுதல். அந்த வார்த்தையில் இருந்து தான் ஆங்கிலத்தில் disciple என்ற வார்த்தை வந்தது. அது ஆங்கிலத்தில் சீடனைக் குறிக்கும் சொல். சீடன் என்பவன் யார்? கற்றுக் கொள்ளத் தயாராக இருப்பவன்.

கற்றுக் கொள்ளுதல் நமக்கு உள்ளே நடக்கும் ஒரு நிகழ்வு. அதீத விழிப்புணர்வுடன் இருந்தால் தான் கற்றுக் கொள்ள முடியும். அதீத சுறுசுறுப்புடன் இருந்தால் தான் கற்றுக் கொள்ள முடியும். நம்மைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளை கூர்ந்து கவனித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

நாளடைவில் இந்த கூர்மை நமக்குள்ளே - நமது உடலில், நமது மனதில் நமது இதயத்தில் - நடக்கும் நிகழ்வுகளைப் பார்ப்ப திலும் இருக்க வேண்டும்.

நீங்கள் ஒரு கண்ணாடியாக இருக்க வேண்டும்.

உங்களுக்குள் நடக்கும் நிகழ்வுகளை ஒரு சாட்சியின் மனோபாவத்துடன் பார்க்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் உங்களால் அவற்றின் மூலம் பாடம் கற்க முடியும். அப்படி நீங்கள் கற்கும் போதுதான் ஒழுங்கு வருகிறது. அப்போது உங்களுக் குள்ளே ஓர் ஆழமான இசைவு ஏற்படுகிறது.

தவறானவை எல்லாம் தாமாகவே உங்களை விட்டு விலகிப் போய்விடும். தவறானவற்றை நீங்கள் தூக்கியெறியக் கூடாது. உங்கள் முயற்சியால் நீங்கள் அவற்றைத் தூக்கி எறிந்தால் அது பலவந்தமான அடக்குமுறையாகிவிடும். ஆனால் அவை தாமாகவே காய்ந்த இலை மரத்திலிருந்து விழுவது போல் விழுந்தால் அது ஒழுங்காகிவிடும்.

ஒழுங்கு முயற்சியால், செயலால், அடக்குமுறையால், வன்முறையால் வராது. வரக்கூடாது. ஒழுங்கு அறிவால், புரிந்து கொள்ளுதலால்தான் வர வேண்டும். அடக்குமுறைக்கும் புரிந்து கொள்ளுதலுக்கும் சம்பந்தமேயில்லை.

அடக்குமுறையால் நீங்கள் எதையும் கற்க முடியாது. மற்றவர்கள் நீங்கள் எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக்கூடாது என்று சதா சொல்லிக்கொண்டேயிருப்பார்கள்.

நீங்கள் மீறக்கூடாத பத்து கட்டளைகளை மற்றவர்கள் உங்களுக்குத் தருவார்கள். அவற்றைக் கேள்வி கேட்காமல் பின்பற்ற வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். யார் இந்த மற்றவர்கள்? அதிகாரபலம் மிக்கவர்கள். அரசியல் ரீதியாக, மத ரீதியாக அதிகார பலம் பெற்றவர்கள்.

அவர்கள் பணக்காரர்களாக இருக்கலாம். அவர்களுடைய ஆளுமையின் கீழ் ஒரு தேவாலயம் இருக்கலாம், ஒரு மதம் இருக்கலாம், ஒரு நாடே இருக்கலாம். அவர்களுக்குச் சில சுயநல நோக்கங்கள் இருக்கின்றன.

அந்த சுயநலத்துக்காக அவர்கள் உங்களை மன ரீதியாக அடிமைப்படுத்தத் திட்டமிடுகிறார்கள். அவர்கள் கீழ்ப்படிதலைத்தான் விரும்புகிறார்கள். கலகத்தை விரும்புவதில்லை. அதனால் உங்கள் அறிவு வளர்வது அவர்களுக்குப் பிடிக்காது.

அறிவு அடிப்படையில் கலகம் விளைவிக்கக்கூடியது. நல்ல அறிவு தீவிரமான புரட்சிக்கு அடிகோலும். நீங்கள் அறிவுடன் இருப்பது பதவியில், அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு ஆபத்து. அதனால் ஒவ்வொரு மனிதனையும் அவன் குழந்தையாக இருக்கும்போதே அவனை முடமாக்கிச் செயலிழக்கச் செய்வதற்கு அவர்கள் திட்டமிடுகிறார்கள்.

எந்த குழந்தையும் அதன் போக்கில் வளரவிடாமல், வாழவிடாமல் தடுக்கிறார்கள். ஒவ்வொரு குழந்தையும் பிறக்கும் போது தூய்மையான அறிவுடன்தான் பிறக்கிறது. ஆனால் தொடர்ந்து 25 வருடங்கள் அதற்கு உருவேற்றப்பட்ட மனக் கட்டுத்திட்டத்தினால், ஆரம்பப்பள்ளியில் தொடங்கி பல்கலைக் கழகம் வரை நடந்த உருவேற்றலால், அந்தக் குழந்தை முட்டாளாகி விடுகிறது.

இருபத்து ஐந்து வயது ஆகும் போது அதன் அறிவு முற்றிலுமாக அதனிடமிருந்து மறைந்து விடுகிறது. அதன் பின் அந்தக் குழந்தை 'இல்லை' என்று மறுத்துப் பேசவே பயப்படுகிறது.

கூட்டத்தின் பலத்தைப் பார்த்துப் பயந்து போய் ஆட்டு மந்தையில் ஓர் ஆடாய் கூட்டத்துடன் செல்கிறது. அது இப்போது மனிதனாக இல்லை. இப்படி ஒரு மனிதனை உருவாக்க சமுதாயத்தில் உள்ள அதிகார சக்திகள் பாடுபடுகின்றன.

அறிவு செறிந்த மனிதனை மந்தையில் ஓர் ஆடாக மாற்ற சில உத்திகளை இந்த சமூகம் கையாள்கிறது. அதில் ஒன்று, அவனது எண்ணங்களை, ஆசைகளை, பலவந்தமாக அடக்கி வைக்கக் கற்றுத் தருவது.

எல்லா நாடுகளும், எல்லாச் சமுதாயங்களும் சமாதானத்தைப் பற்றி வாய்கிழியப் பேசுகின்றன. ஆனால் போர் புரிவதில் தான் ஆர்வத்தைக் காட்டுகின்றன. போர் புரிய வீராவேசத்துடன் கூடிய வீரர்கள் வேண்டுமே!

அதனால் மனிதனின் செக்ஸ் ஆசைகளை அடக்கி வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. செக்ஸ் ஆசைகளை அடக்கிய ஒருவன் தான் முரட்டுத்தனமான, மூர்க்கத்தனமான போர் வீரனாக வளர்வான். செக்ஸ் ஆசைகளை அடக்கிய ஒருவன் எப்போதும் சண்டையிடத் தயாராக இருப்பான். வன்முறையில் ஈடுபட துடித்துக் கொண்டிருப்பான்.

அடக்கி வைக்கப்பட்ட அவனது செக்ஸ் ஆசைகள் தான் வன்முறையாக வெடிக்கிறது. அவனிடம் உள்ள மென்மையான உணர்வுகளை அவன் இழந்து விடுகிறான். அன்பைத் தொலைத்து விடுகிறான். இல்லை, அந்த அன்பு தான் வக்கிர உணர்வாக, கொலை வெறியாக வெளிப்படுகிறது.

இதுவரை இந்த உலகில் இருந்த சமுதாயங்கள் எல்லாம் போரிடும் சமுதாயங்களாகவே இருந்து வந்திருக்கின்றன. எந்த நிலையிலும் போருக்குச் செல்லும் தயார்நிலையில் தான் இருந் திருக்கின்றன. அதனால்தான் இந்த சமுதாயங்கள் தங்கள் மனிதர்களுக்கு செக்சைப் பொறுத்த மட்டிலும் எந்த சுதந்திரத்தையும் கொடுக்கவில்லை.

எந்த ஒரு சமுதாயத்தில் செக்ஸ் ஆசைகள் ஒடுக்கப்பட வில்லையோ எந்த ஒரு சமுதாயத்தில் ஒரு மனிதன் தனது செக்ஸ் வாழ்க்கையைச் சுதந்திரமாக வாழமுடியுமோ, அந்த சமுதாயத்தில் கொஞ்சம் கூட வன்முறை இருக்காது.

எந்த காரணமும் இல்லாமல் மனிதனை மனிதன் கொல்லும் முட்டாள்தனம் அங்கே இருக்காது. வன்முறையையும், கொலையையும் அங்கே வாழும் மனிதர்களால் அவனால் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது.

அவன் கேட்பான்: “ஏன்? ஏன் கொல்ல வேண்டும்? அவனைக் கொல்ல ஏதாவது ஒரு காரணம் சொல்லுங்கள். சில அதிகார வெறியர்கள் இந்த உலகத்தில் ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்பதற்காக நாம் ஏன் பலிகடாக்களாக்கப்பட வேண்டும்? நாம் ஏன் இந்த பூமியில் இருக்கும் ஒழுங்கைக் குலைக்க வேண்டும்?”

செக்ஸ் விஷயத்தில் சுதந்திரமாக இருப்பவன் மனதளவில் மிகவும் மென்மையாக இருப்பான். அன்பு மிகுந்தவனாக இருப்பான். அவனால் போரிட முடியாது. செக்ஸ் விஷயத்தில் பரிபூரண சுதந்திரம் இருந்தாலொழிய இந்தப் பூமியில் சண்டைகள் மறையாது.

போர் ஆயுதங்களைக் குறித்து நடந்த மனவியல் ஆராய்ச்சிகள் ஒரு சுவாரசியமான உண்மையைச் சொல்கின்றன. போர் ஆயுதங்கள் எல்லாம் ஆண் குறி வடிவில், செக்சின் அடையாளமாகத்தான் இருக்கின்றன. எப்போதும் போருக்குத் தயாராக இருக்கும் சமுதாயத்தில் செக்ஸ் ஆசைகள் பலவந்தமாக அடக்கப்பட்டிருக்கும். உங்களை சுதந்திரமான தனிமனிதனாக ஆக்குவதற்கான காரணிகளை எல்லாம் அந்த சமுதாயம் மூலையில் கடாசிவிடும்.

நீங்கள் ஒரு கிறிஸ்துவனாகவோ, இந்துவாகவோ, முகமதியனாகவோ, சமணனாகவோ, பௌத்தனாகவோ மாறுவதற்கு வற்புறுத்தப்படுவீர்கள். ஏனென்றால் நீங்கள் ஒரு கூட்டத்தின் பகுதியாக இருக்கும் போதுதான் உங்கள் தனித்தன்மையை இழக்க முடியும்.

அதன் பின் அந்த கூட்ட மனப்பான்மையை அனுசரித்துத்தான் நடந்து கொள்வீர்கள். கூட்ட மனப்பான்மைதான் இருப்பதிலேயே மட்டமான மனப்பான்மை. அறிவின்மையின் சிகரம். அந்தக் கூட்டத்திலேயே அதிகப்படியான முட்டாளாக யார் இருக்கிறார்களோ அவர்கள் அளவுக்குத்தான் அந்த கூட்டமே செயல்படும்.

நமது ஆசிரியர்கள் எப்படி பாடம் நடத்த வேண்டும் என்று நமது கல்வியாளர்கள் சொல்கிறார்கள்? வகுப்பிலேயே உச்சகட்ட மக்காக இருக்கும் மாணவனுக்குப் புரியும் வகையில் ஆசிரியர் பாடம் நடத்த வேண்டும். ஆரம்பப் பள்ளியிலிருந்து பல்கலைக் கழகம் வரை இந்த ஆதாரவிதி கடைப்பிடிக்கப்படுகிறது.

வகுப்பில் இருக்கும் முதல்தரமான மாணவர்கள் மட்டும் அவர் நடத்துவதைப் புரிந்து கொண்டால் அவர் அவ்வளவு திறமையான ஆசிரியர் இல்லை என்று சொல்வார்கள். வகுப்பில் இருக்கும் மூன்றாம் தர, நான்காம் தர மாணவர்கள் அந்த ஆசிரியர் பாடம் நடத்துவதைப் புரிந்து கொள்ளவேண்டும். அப்போது தான் அவர் சிறந்த ஆசிரியர்.

ஆனால் மூன்றாந்தர மாணவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அந்த ஆசிரியர் அந்த அளவுக்கு தரம் தாழ்ந்து வரவேண்டும். அவர் கூட்டத்தின் மனோபாவத்தைத்தான் கற்றுத் தர முடியும். கூட்டத்தில் இருப்பவர்கள் எல்லாருமே மூன்றாந்தர மானவர்கள்தான்.

இது பல நூற்றாண்டுகளாக நமக்கு உருவேற்றப்பட்ட மனக்கட்டுத் திட்டத்தின் விளைவு. இது மனிதன் தனக்குத் தானே உருவாக்கிக் கொண்ட அபாயம். இப்படி பலர் முட்டாள்களாக, மூன்றாந்தரமானவர்களாக, மந்த புத்திக்காரர்களாக இருக்கத் தேவையில்லை. அவர்கள் அப்படி பிறக்கவில்லை.

அப்படி உருவாக்கப்படுகிறார்கள். தனிமனித்தன்மையை சுவடு இல்லாமல் முற்றிலுமாக அழித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்படுகிறது இந்த சமுதாயம். காரணம், உண்மையான தனிமனிதர்களால் அதிகார வர்க்கத்துக்கு ஆபத்து உண்டாக வாய்ப்பு இருக்கிறது.

தனிமனிதன் எதனையும் சிந்தித்துப் பார்ப்பான். தனக்குச் சரியென்று தோன்றியதைத்தான் அவன் ஒத்துக் கொள்வான். இல்லையென்றால் அவன் தயக்கமில்லாமல் மறுத்துவிடுவான்.

இது இரண்டாம் உலகப்போரின் போது நிகழ்ந்தது. போரிட நிறைய ஆட்கள் தேவைப்பட்டார்கள். அதனால் எல்லா வகையான ஆட்களும் இராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள். தாய் நாட்டுக்காகத் தியாகம் செய்யவேண்டும், தந்தை நாட்டுக்காகத் தியாகம் செய்ய வேண்டும் என்று பல முட்டாள்தனங்களை தலைவர்களும், தளபதிகளும் அள்ளிவிட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த அமளி துமளியில் ஒரு தத்துவப் பேராசிரியரும் இராணுவத்தில் சேர்க்கப்பட்டார்.

முதல் நாள் வீரர்கள் கவாத்து மைதானத்தில் கூடினார்கள். ஓர் இள வயது சிப்பாய் முன்னால் நின்று கட்டளைகளை வாரி வழங்கிக் கொண்டிருந்தான்.

''நேராக நில்.'' (Attention)

''முன்னோக்கிச் செல். லெஃப்ட், ரைட், லெஃப்ட், ரைட்....''

''நில்.''

''வலது பக்கம் திரும்பு''(Right Turn)

''அபௌட் டர்ன்'' (About Turn)

''மார்ச்... லெஃப்ட், ரைட், லெஃப்ட், ரைட்....''

அணிவகுப்பில் இருந்து தனியாகப் பிரிந்து வெளியே நடக்கத் தொடங்கினார் தத்துவப் பேராசிரியர்.

''ஏய், நீ எங்கே போகிறாய்?''

''வீரனே, நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை உன் மனதில் நன்றாகத் தீர்மானம் செய்து கொள். இப்படிப் போ என்கிறாய், அப்படிப் போ என்கிறாய். நில் என்கிறாய். போ என்கிறாய். வலது பக்கம் போ என்கிறாய், இடது பக்கம் போ என்கிறாய். என்ன கூத்து இது?

''நாங்கள் எங்கே எப்படிச் செல்ல வேண்டும் என்று தீர்மானம் செய்துவை. அதற்குள் நான் போய் காபி அருந்திவிட்டு வருகிறேன். வந்தவுடன் நீ சொன்னதைச் செய்கிறேன்.''

பொதுவாக சிந்திக்கும் திறனுடைய யாரும் இந்த சமுதாயத்தில் நடக்கும் முட்டாள்தனங்களைப் புரிந்து கொள்வார்கள். போர், கொலை, வன்முறை, ஆதிக்கம் - இதனால் யாருக்கு என்ன லாபம்? ஏன் இதையெல்லாம் செய்ய வேண்டும்?

ஆனால் ஆள்பவர்கள் இதற்கெல்லாம் ஏதாவது ஒரு காரணத்தைக் கற்பிப்பார்கள். கொஞ்சம் கொஞ்சமாக சிந்திக்கும் திறனுடையனின் அறிவு கொல்லப்படுகிறது. படிப்படியாக அவன் இயந்திரமாக, இயந்திரத்தின் ஒரு பகுதியாக மாறிவிடுகிறான். அவனுள் இருக்கும் மனிதன் இறந்து போகிறான். இயந்திரம் உயிர் பெறுகிறது.

''ரைட் டர்ன்.'' என்று இராணுவத்தில் ஆணையைக் கேட்கும் போது கண்ணை மூடிக் கொண்டு வலது பக்கம் திரும்புகிறான். ''ஃபையர்'' என்று ஆணை காதில் விழுந்தவுடன் முன்னால் நிற்பது அப்பாவிப் பெண் என்றாலும், பச்சிளம் குழந்தை என்றாலும் ஈவு இரக்கமில்லாமல் சுட்டுவிடுகிறான்.

ஏன் வலது பக்கம் திரும்ப வேண்டும், ஏன் ஒரு பாவமும் அறியாத குழந்தையைக் கொல்ல வேண்டும் என்று அவன் கேட்பதில்லை. உள்ளதைச் சொல்லப் போனால் உங்கள் கையில் உள்ள துப்பாக்கியைப் போலத்தான் உங்கள் உடலும் இயந்திரத்தனமாக, கண்மூடித்தனமாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

எப்படி ஒரு விசையை அழுத்தியவுடன் இயந்திரம் இயங்கத் தொடங்குகிறதோ, அதே போல் "ரைட் டர்ன்" என்று சொன்னவுடன், "ஃபையர்" என்று சொன்னவுடன், உங்கள் உடல் என்ன செய்கிறோம் என்பதையே உணராமல் இயங்கத் தொடங்குகிறது.

நான் வில்லியம் ஜேம்ஸ் (William James) என்ற மனவியல் வல்லுநரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அமெரிக்கா இந்த உலகிற்குத் தந்த மாபெரும் மனவியல் மேதைகளில் அவர் ஒருவர். அவர் தனது நண்பருடன் ஓர் உணவகத்தில் அமர்ந்து மனக்கட்டுத் திட்டத்தைப் (conditioning) பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

அந்த சமயத்தில் உலகம் முழுவதும் மனக்கட்டுத் திட்டத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். ரஷிய மனவியல் நிபுணர் பாவ்லோவ் (Pavlov) கட்டுப்படுத்தப்பட்ட தன்னியல் நிகழ்வைப் (conditioned reflex) பற்றிய தனது ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டிருந்தார். எந்த மனிதனையும் கட்டுப்படுத்தி அவனை ஓர் இயந்திரமாக்கிவிடலாம் என்பது தான் அவர் கண்டுபிடித்த உண்மை.

அதன் மூலம் பாவ்லோவ் ரஷிய மனவியல் சாத்திரத்தின் தந்தை என்று புகழப்பட்டார். ரஷியாவில் உள்ள கம்யூனிஸ்டுகள் அவரது கருத்துகளை கடந்த அறுபது வருடங்களாகப் பின்பற்றி வந்திருக்கிறார்கள்.

இதைத்தான் அமெரிக்க மனவியல் மேதை வில்லியம் ஜேம்ஸ் தன் நண்பரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அந்த நண்பர் மேதையின் கூற்றை ஒப்புக் கொள்ளவில்லை. அது அப்போது மிகவும் புதுமையாக இருந்த கருத்து. அதனால் அதனை அப்படியே ஏற்றுக் கொள்ள அந்த நண்பர் தயங்கினார்.

அந்த சமயத்தில் இராணுவத்தில் இருந்து ஓய்வு பெற்ற ஒரு வீரன் கையில் முட்டைகள் நிரம்பிய வாளியுடன் நடந்து போய்க் கொண்டிருந்தான். தான் சொல்லியதை நிரூபிப்பதற்காக வில்லியம் ஜேம்ஸ் "அட்டென்ஷன்" என்று பெரிதாகக் கத்தினார்.

பாவம் அந்த வீரன், உடனே இருந்த இடத்திலேயே விரைப்பாக நின்றான். கையில் இருந்த வாளி கீழே விழுந்து, அதில் இருந்த முட்டைகள் எல்லாம் நொறுங்கிப் போயின. அந்த வீரனுக்கு மூக்கிற்கு மேல் கோபம் வந்தது.

"யார் இதைச் செய்தது?"

"ஏன், நான் தான் செய்தேன்." என்று சொன்னார் வில்லியம் ஜேம்ஸ். "ஆனால் நான் சொன்னதை நீ கேட்க வேண்டும் என்று கட்டாயம் இல்லையே? நான் சொன்னதை உதாசீனப் படுத்திவிட்டு நீ உன் வழியில் போயிருக்கலாமே?"

"இதில் நீங்கள் சொல்லி நான் கேட்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. இது என்னுடைய இயற்கையாகிவிட்டது. நான் 25 வருடம் இராணுவத்தில் இருந்தேன். அங்கே 'அட்டென்ஷன்' என்றால் 'அட்டென்ஷன்' தான். அதற்கு வேறு ஓர் அர்த்தமும் கிடையாது.

"அந்த வார்த்தையைக் கேட்டவுடன் கையில் உள்ளதைக் கீழே போட்டுவிட்டு, இருக்கும் இடத்திலேயே விரைப்பாக நிற்க வேண்டியதுதான். என்னைப் பொறுத்த மட்டில் அது தன்னிச்சை யாக நடக்கும் செயல். சிந்தித்துப் பார்த்து நான் செயல்படுவ தில்லை."

இதைத்தான் எல்லாச் சமுதாயங்களும் செய்து வந்திருக் கின்றன. எல்லா மதங்களும் காலம் காலமாகச் செய்து வந்திருக் கின்றன. அவை உங்களை இயந்திரங்களாக்க முயற்சி செய்து கொண்டிருக்கின்றன.

உங்கள் நியாயமான உணர்வுகளை பலவந்தமாக அடக்கி வைப்பதன் மூலம்தான் மதங்களும், சமுதாயங்களும் இந்தச் சாதனையைச் செய்துகொண்டிருக்கின்றன. அதிகார அமைப்புக்கு ஆபத்தாக இருக்கும் எதையும் பலவந்தமாகக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கொள்கையிலேயே இவர்கள் இயங்கி வந்திருக் கிறார்கள்.

அதனால் தான் ஏசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்கள். சாக்ரடீசை விஷம் கொடுத்துக் கொன்றார்கள். அல் ஹில்லாஜ் மன்சூரை இரக்கமில்லாமல் கொன்றார்கள். இவர்கள் எல்லாம் கலகக்காரர்கள். இவர்களால் சமூகத்தில் பெரிய கலகமே வெடிக்கும்

என்று ஆட்சியாளர்கள் பயந்தார்கள். இந்தக் கலகக்காரர்கள் செய்த குற்றம்தான் என்ன?

அடிமைப்பட்டுக் கிடந்த மக்களைத் தட்டி எழுப்பினார்கள். மனதளவில் அடிமையாகிக் கிடந்த மனித சமுதாயத்தை வீறு கொண்டு எழச் செய்தார்கள். "நீங்கள் எல்லாரும் புத்திச்சாலித் தனத்துடன் செயல்பட வேண்டும் தனி மனிதர்களாகச் செயல்பட வேண்டும். உங்களுக்கு நீங்களே விளக்காக இருக்க வேண்டும்." என்பதுதான் இந்த கலகக்காரர்களுடைய போதனையின் சாராம்சம்.

"உங்கள் மனதுக்குச் சரியென்று தோன்றியதைச் செய்யுங்கள். உங்கள் அறிவு என்ன சொல்கிறதோ அதைச் செய்யுங்கள். அடுத்தவர்கள் பேச்சைக் கவனிக்காதீர்கள். எல்லாரும் சுயநலத்துடன் செயல்படுகிறார்கள்

அவர்களுக்கு உங்கள் நலத்தில் அக்கறையில்லை. நீங்கள் உயிருடன் இருக்கிறீர்களா, செத்தீர்களா என்பது பற்றி அவர்களுக்குக் கவலையில்லை." என்றுதான் புத்த பெருமானும் சொன்னார்.

உங்கள் உணர்வுகளைப் பலவந்தமாக அடக்க முயன்றால் அந்த உணர்வு உள்ளுக்குள்ளேயே திரிந்து விடுகிறது. வக்கிரமாகிவிடுகிறது. மலராக மலர்ந்து மணம் பரப்ப வேண்டிய உணர்வுகள் முள்ளாக மாறி உங்களைக் குத்தத் தொடங்குகிறது.

உங்கள் வளர்ச்சிக்கு அடிகோல வேண்டிய உணர்வுகள் அடக்கி வைக்கப்பட்டபின் உங்கள் தேக்கத்துக்குத்தான் வழி வகுக்கிறது. அடக்கிவைக்கப்பட்ட உணர்வுகள் நாற்றமெடுக்கத் தொடங்குகின்றன. சக்தி ஆற்றின் நீரோட்டத்தைப் போல் எப்போதும் ஓடிக் கொண்டேயிருக்க வேண்டும். ஆற்று நீர் ஓர் இடத்தில் தேங்கினால் அது சாக்கடையாகிவிடும். அடக்கி வைக்கப்பட்ட உணர்வுகள் சாக்கடையாக மாறுகின்றன.

மக்களின் மனவியல் வயது பன்னிரெண்டைக்கூட தாண்டவில்லை. அப்படியென்றால் பன்னிரெண்டு வயதுக்குப் பிறகு மனிதன் மனவியல்ரீதியாக வளரவில்லை என்றுதான் பொருள். உண்மை வயது எண்பது கூட ஆகலாம். ஆனால் அவர்கள் மனதளவில் இன்னும் குழந்தைகளாகவே இருக்கிறார்கள்.

இதில் ஒரு நுட்பமான வித்தியாசத்தைக் கவனிக்க வேண்டும். அவர்கள் குழந்தைகளைப் போல் வெகுளியாக, அப்பாவியாக

இல்லை. குழந்தைகளின் பக்குவமின்மையும், முதிர்ச்சியின்மையுமே அவர்களிடம் மிகுந்து இருக்கின்றன.

ஒரு குழந்தையைப் போன்று வெகுளியாக இருப்பது அழகான நிலை. ஆனால் வயதான பின்பும் சிறுபிள்ளைத் தனமாக, முதிர்ச்சியில்லாமல் இருப்பது அசிங்கமானது. அருவருப்பானது.

ஏன் 12 வயதுக்கு மேல் மனவியல் ரீதியாக வளராமல் நின்று விட்டார்கள்? என்ன காரணம்? ஏன் அப்படி நடந்தது? இது உலகெங்கிலும் உள்ள சராசரி மனவியல் வயது. கீழை நாடுகளிலும் சரி, மேலை நாடுகளிலும் சரி இதே சராசரி மனவியல் வயதுதான் அதிகப்படியான மன வளர்ச்சி இருக்கிறது.

இந்து மதமானாலும் சரி, கிறிஸ்துவ மதமானாலும் சரி மனவியல் வளர்ச்சி 12 வயதைத் தாண்டவில்லை. ஏன்? ஏனென்றால் 13 என்பது மிக ஆபத்தான வயது. அந்த வயதில் தான் ஒரு மனிதனுக்கு செக்ஸ் ஆசைகள் தோன்றுகின்றன.

அந்த ஆசைகள் தோன்றுவதற்கு முன்பே அவனுடைய வளர்ச்சியைக் கட்டுப்படுத்திவிட வேண்டும் என்று சமுதாயமும், மதமும் போட்டி போட்டுக் கொண்டு செயல்படுகின்றன. ஒரு மனிதன் செக்ஸ் ரீதியாகப் பக்குவப்பட்டுவிட்டால் அதன் பின் அவனைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினம்.

அந்த சமயத்தில் அவனிடத்தில் அபரிமிதமான சக்தியிருக்கும். அப்போது அவனைக் கட்டுப்படுத்தவே முடியாது. அதனால் தான் உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது என்பது 13 வயதுக்கு முன்பே நடந்துவிட வேண்டும்.

13 வயதுக்கு முன்பே எல்லா வகையான முட்டாள் தனங்களையும் அவனுடைய மனதில் போட்டுவிட வேண்டும் என்று இந்த சமுதாயம் துடிக்கிறது. 12 வயது முடிவதற்கு முன்னாலேயே அந்த வேலை தொடங்கிவிட வேண்டும். அப்படிச் செய்துவிட்டால் மனிதனுக்கு வயதாகுமேயொழிய அவன் வளரமாட்டான்.

ஒரு பள்ளி ஆசிரியர் உயிரியல் வகுப்பில் தனது மாணவியைப் பார்த்துக் கேட்டார்.

“மனிதனின் உறுப்புகளில் எது உணர்ச்சி வசப்படும் போது நூறு மடங்கு பெரிதாகிறது?”

இந்தக் கேள்வியைக் கேட்டு முகம் சிவந்து போன மாணவி, ''இது போன்ற அசிங்கமான கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் சொல்ல மாட்டேன்.'' என்று சொல்லிவிட்டு வகுப்பை விட்டுப் போய்விட்டாள்.

அப்போது ஆசிரியர் வகுப்பில் இருந்த இன்னொரு மாணவியைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டார்.

''கண்ணில் உள்ள கருவிழியின் பாப்பா.'' என்று சரியாகச் சொன்னாள் அந்த மாணவி.

''நல்லது. வெளியே போன உன் தோழியிடம், 'ஒரு காலத்தில் நீ பயங்கரமாக ஏமாற்றம் அடையப் போகிறாய் என்று சொல்.''

இதுதான் பலவந்தமாக உணர்வுகளை அடக்குவதால் ஏற்படும் விளைவு. நீங்கள் எதையாவது அடக்கினால் உங்கள் மனம் அதனால் பாதிக்கப்படுகிறது. உங்கள் பார்வை, உங்கள் கவனம் எல்லாமே பாதிக்கப்படுகிறது.

செக்ஸ் ஆசைகளை வலுக்கட்டாயமாக அடக்கியவன் சதா செக்சைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறான். அவன் பிரம்மச்சரியத்தைப் பற்றிப் பேசலாம். பிரம்மச்சாரியாக நடந்து கொள்ளலாம். ஆனால் அவன் மனம் முழுவதும் செக்ஸ் தான் நிரம்பியிருக்கும். அவன் செக்ஸ் கனவுகளைத்தான் காணுகிறான். இது வயதான பின்பும் தொடர்கிறது.

மகாத்மா காந்தி தனது சுயசரிதையில் தன்னுடைய எழுபதாவது வயதில் கூட செக்ஸ் கனவுகளைக் கண்டதாக எழுதுகிறார். அடக்கிவைக்கப்பட்ட ஆசைகள் அப்படித்தான் வெளியே வரும். எழுபது வருட அடக்குமுறை. அப்படி ஓர் அடக்குமுறை இல்லாவிட்டால் எழுபது வயதாகும் போது செக்ஸ் ஆசைகள் தானாகவே அற்றுப் போயிருந்திருக்கும்.

இளம் வயதில் ஆசைகளை அடக்கி வைப்பதால்தான் முதுமை வந்தபின்பும் அந்த ஆசைகள் அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக் கின்றன. அப்படி ஆசைகளை அடக்கியவன் சாகும் போது கூட தான் அடக்கிவைத்த ஆசைகளை நினைத்து ஏங்கியபடிதான் சாவான்.

உணர்வுகளைப் பலவந்தமாக அடக்கிவைப்பதை நான் பலமாக எதிர்க்கிறேன். அவற்றை அழகாக வெளிப்படுத்துவதைத்தான் ஆதரிக்கிறேன்.

உங்களை, உங்களுக்குள் இருக்கும் உணர்வுகளை வெளிப் படுத்துங்கள். பிரபஞ்ச இருப்புநிலை கடவுளுடைய உணர்வுகளின் வெளிப்பாடு. அது தான் ஆக்கசக்தியின் கோட்பாடு. எதையும் பழிக்காமல், உங்கள் உணர்வுகளை வெளிப்படுத்துங்கள். உங்களிடம் எந்தத் தவறும் இல்லை.

இருப்பவை எல்லாம் அழகானவையே. அவற்றிற்கு உருமாற்றம், தோற்றமாற்றம் தேவைப்படலாம். ஆனால் எதுவும் தவறில்லை. எதையும் நீங்கள் விட வேண்டிய அவசியம் இல்லை. அவை உருமாற வேண்டியிருக்கலாம். ஆனால் அவற்றை விட்டுவிடத் தேவையில்லை.

அந்த உருமாற்றம் ஒழுங்கின் மூலமாகத்தான் நடைபெற வேண்டும். ஒழுங்கு ஆழ்நிலை சிந்தனை மூலமாகத்தான் கைகூடும். இன்னும் அதிகமான கவனத்துடன், அதிகமான விழிப்புணர்வுடன் இருங்கள். ஆனால் எந்த முடிவையும் முதலிலேயே தீர்மானம் செய்துவிடாதீர்கள்.

செக்ஸ் தவறு என்று முதலிலேயே நீங்கள் முடிவு செய்துவிட்டால், அதன் பின் நீங்கள் உங்கள் மனதைக் கவனிக்க முடியாது. அப்படி ஒரு முடிவு செய்தபின் உங்கள் கவனம் எப்படி முழுமையாக இருக்க முடியும் சொல்லுங்கள்.

செக்ஸ் எண்ணம் மனதில் தோன்றியவுடன் நீங்கள் உள்ளுக்குள்ளேயே சுருங்கிப் போவீர்கள். அந்த எண்ணத்தை உங்கள் மனதை விட்டுத் தூக்கியெறிய முயற்சிப்பீர்கள். அந்த எண்ணத்துடன் சண்டைபோட ஆரம்பிப்பீர்கள். அதன் பின் அந்த எண்ணத்தின் மேல் உங்களால் கவனம் செலுத்த முடியாது. உங்கள் கவனத்தில், உங்கள் பார்வையில் மதிப்பீடு கலந்துவிடும். அதன் பின் உங்கள் கவனம் தூய்மையானதாக இருக்காது.

தியானிப்பவனுக்கு எந்த விஷயத்திலும் முற்சாய்வுகளே இருக்கக்கூடாது. தனக்குள்ளே நடப்பவற்றை அவன் ஒரு விஞ்ஞானியின் கண்ணுடன் பார்க்க வேண்டும். அவன் நடப்பதைப் கவனிக்க மட்டுமே வேண்டும். அவன் கவனத்திலிருந்து எதுவும் தப்பாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படி கவனமாக இருக்கும் போது சில அழகான விஷயங்கள் தானாகவே நடக்கின்றன.

ஒன்று, அவனுக்குள்ளே நடக்கும் அர்த்தமில்லாத நிகழ்வுகள் தாமாகவே மறைந்து விடுகின்றன. அர்த்தமுள்ளவை எல்லாம்

வேரூன்றி நன்றாக வளரத் தொடங்குகின்றன. உங்களிடம் உள்ள சக்தி அர்த்தமுள்ளவற்றைச் சூழ்ந்து கொண்டு அவற்றுக்கு போஷாக்கு அளிக்கிறது. அர்த்தமில்லாதவற்றை உங்கள் சக்தி விலக்கிவிடுகிறது. அப்போது தான் உங்களிடத்தில் ஓர் ஒழுங்கு பிறக்கிறது. இந்த ஒழுங்கு வெளியில் இருந்து திணிக்கப் படுவதில்லை.

எனக்குப் பலர், குறிப்பாக இந்தியர்கள், கடிதம் எழுதுகிறார்கள். 'நீங்கள் ஏன் உங்கள் சீடர்களுக்கு ஒழுங்கைக் கற்றுத் தருவ தில்லை?' என்று கேட்கிறார்கள். என்னால் அப்படிக் கற்றுத்தர முடியாது.

நான் அவர்களுடைய பகைவன் இல்லை. இதைச் செய், அதைச் செய்யாதே என்று யாரையும் கட்டளையிடுவதற்காக நான் இங்கு வரவில்லை. யார் மேலும் ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருந்ததில்லை. உண்மை எது என்று புரிந்து கொள்ள உங்களுக்கு நான் உதவமுடியும்.

அதன் பின் 'மகனே உன் சமர்த்து'. அந்த புரிந்து கொள்ளு தலின் காரணமாக உங்கள் வாழ்க்கையில் ஏதாவது நடந்தால் நல்லது. ஆனால் அப்படி நடக்காமல், நான் ஆணையிட்டேன் என்பதற்காக ஏதாவது நடந்தால், அது அசிங்கம். அப்படி நடந்தால் பின்னால் நீங்கள் வருத்தப்படுவீர்கள். என்னை எப்படிப் பழி வாங்குவது என்று யோசிப்பீர்கள்.

நான் உங்கள் நண்பன். நீங்கள் மேலும் விழிப்புணர்வுடன் இருக்க நான் உதவி செய்வேன். அதுதான் என் பணி. அதன்பின் நன்மை விளைவிக்கக்கூடியது எல்லாம் உங்களை நிழல் போல் பின் தொடரும். அதில் இரைச்சல் இருக்காது. அதில் உங்களுக்கு அகங்காரம் வளராது.

உங்கள் விழிப்புணர்வு அதிகமாக அதிகமாக உங்கள் அகங்காரம் மறைந்துவிடும். நீங்கள் மேலும் அதிகப் பணிவுடன், அதிக எளிமையுடன், சாதாரணமாக இருக்கத் தொடங்குவீர்கள். அந்த சாதாரணத்தன்மை தெய்விகமானது. அந்த எளிமை புனித மானது. ஒழுங்கு உங்களுக்குள் தானாக எழ வேண்டும். எனது புரிந்து கொள்ளுதலை நான் உங்களுடன் பகிர்ந்து கொள்ளலாம்.

எனது அனுபவத்தை நான் உங்களுக்குச் சொல்லலாம். அவ்வளவுதான் என்னால் முடியும். அதன் பின் என்ன செய்ய

வேண்டும் என்ன செய்யக் கூடாது என்பது உங்கள் கையில் இருக்கிறது.

என் சந்நியாசிகள் சுதந்திரமாக வாழப் பழகிக் கொள்ள வேண்டும். அப்படி வாழ்வது மிகவும் கடினம். என் சந்நியாசிகளே என்னிடம் கேட்கிறார்கள், ‘‘குருவே, இப்படி இல்லாமல், நீங்கள் இதைச் செய், இதைச் செய்யாதே என்று விதிமுறைகளை வகுத்துக் கொடுத்தால் எங்களுக்கு வசதியாக இருக்கும்’’ என்று சொல்கிறார்கள்.

அது சுலபமான வழி என்று எனக்கும் தெரியும். அதைத்தானே உங்கள் வாழ்க்கை முழுவதும் செய்து வந்திருக்கிறீர்கள். யாரோ உங்களுக்கு ஆணையிடுகிறார்கள். நீங்கள் அவர்களுக்குப் பணிந்து நடக்கிறீர்கள். அதுவே உங்கள் பழக்கமாகிவிட்டது.

இப்போது என்னையும் உங்கள் தந்தையைப் போல் பார்க்கிறீர்கள். ‘இதைச் செய்ய வேண்டும். இதைச் செய்யக் கூடாது’ என்று நான் கட்டளையிடுவேன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அது உங்கள் வாழ்க்கையை எளிதாக்கிவிடும். நீங்கள் எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். என்னைச் சார்ந்திருந்தால் போதும்.

ஆனால் இந்த சார்ந்திருத்தலைத்தான் நான் கடுமையாக எதிர்க்கிறேன். என்னைச் சார்ந்திருப்பது மூலம் நீங்கள் உங்களையே தொலைத்துவிடுகிறீர்கள். விலைமதிப்பில்லாத உங்கள் சுதந்திரத்தை, தனிமனிதத் தன்மையை இழந்துவிடுகிறீர்கள். அது என் நோக்கம் அல்ல.

சிறந்த தனி மனிதர்களை, தன்னிகரற்ற தனிமனிதர்களை, உண்மையான தனிமனிதர்களை உருவாக்குவதுதான் என் நோக்கம். உங்கள் வாழ்க்கைப் பொறுப்பை உங்கள் தோளில் சுமப்பதையே நான் விரும்புவேன். இதனால் உங்கள் தந்தையிடமிருந்து, தந்தைக்கு நிகரான அதிகாரம் செலுத்துபவர்களிடமிருந்து நீங்கள் முற்றிலுமாக விடுதலை பெற்று விடுவீர்கள். இது தான் உண்மையான அருள். இது தான் உண்மையான வரம்.

*இரண்டாவது கேள்வி:*

*நேற்று நிகழ்ந்த சுவாமி பிரேம் சின்மயாவின் மரணம் பற்றி....*

பிரேம் சின்மயாவின் மரணம் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டிய முதல் விஷயம், அது மரணமேயில்லை. அவன் முழுமையான தன்னுணர்வுடன் இறந்தான். அவனது இறப்பே அழகாக இருந்தது. அது அபூர்வமான வகையைச் சேர்ந்தது.

பத்து வருடங்களுக்கு முன்னால் பிரேம் சின்மயா என்னிடம் வந்தான். மரணமின்மையை ருசித்துப் பார்ப்பதற்கு முன் அவன் இறந்துவிடுவான் என்று நான் பயந்தேன். அவன் குணப்படுத்த முடியாத ஒரு நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஆனால் அவன் ஓர் அபூர்வமான மனிதன். தனது தனிமனித பலத்தால் மட்டும்தான் அவனால் இந்த பத்து வருடங்கள் சாகாமல் தாக்குப் பிடிக்க முடிந்தது. ஆனால் பாவம், அவன் உடலுக்கு அதற்கு மேல் வாழ சக்தியில்லை.

அவன் எப்படி பத்து வருடங்கள் உயிருடன் இருந்தான் என்று மருத்துவர்கள் ஆச்சரியப் பட்டார்கள். அவன் உயிருடன் இருப்பதை அவர்களால் நம்ப முடியவில்லை. ஆனால் எனக்கு அந்த ரகசியம் தெரியும். அவனிடம் மரணபயம் இல்லை. சாவு சம்பவிக்குமுன் சில தூரங்களைக் கடந்துவிட வேண்டும் என்ற தீர்மானத்துடன் வாழ்ந்தவன் பிரேம் சின்மயா. நினைத்ததைச் செய்துமுடித்த சாதனையாளன் அவன்.

இறப்பதற்குத் தயாரானவுடன் அவனை நான் போக அனுமதித்தேன். "இனிமேல் நீ உனது உடலை விட்டுவிடலாம்." என்று அவனிடம் சொன்னேன்.

எனக்கும் அவனுக்கும் ஓர் ஆழமான பரிமாறிக்கொள்ளுதல் நடந்தது. அவனுடைய நோயின் காரணமாக அவனால் என்னை வந்து பார்க்க முடியவில்லை. இப்படித்தான் வாழ்க்கையில் நமக்கு சில வரங்கள் மறைமுகமாகக் கிடைக்கும். என்னை அவன் நேரில் பார்க்காத காரணத்தால், எங்கள் மனங்களுக்குள் நடந்த பரிமாற்றம் இன்னும் ஆழமாக, அழகாக இருந்தது.

நேற்று முன் தினம் நான் ஷீலாவை என் அறைக்கு வருமாறு அழைத்தேன். அவளிடம் சொன்னேன். ''சின்மயா போக வேண்டிய நேரம் வந்துவிட்டது. அவன் போகலாம். இந்த பயணத்துக்கு அவன் தயாராக இருக்கிறான்.

''அவன் இனிமேல் இந்த உடலில் இருந்து அவதிப்பட வேண்டிய அவசியம் இல்லை. செய்ய வேண்டியது எல்லாம் அவன் செய்து முடித்துவிட்டான. அவனிடம் இப்போது ஓர் அபரிமிதமான நேர்மை இருக்கிறது. அவன் மறுபடியும் ஒரு முறை பிறப்பான் என்பது உண்மைதான். ஆனால் அவன் செய்தது பெரிய சாதனை என்றுதான் சொல்ல வேண்டும்.''

அவன் தன்னுடைய ஆறாவது நிலையில் இறந்து போனான். அவன் ஏழாவது நிலையை அடைந்து இறந்திருந்தால், இதன்பின் அவனுக்குப் பிறப்பே இருக்காது. ஆனால் அவன் இருந்த நிலையில் அவன் ஏழாவது நிலையை அடைவது அசாத்தியம். அவன் இந்த ஆறாவது நிலையை அடைந்ததே, இத்துணை உயரத்துக்குப் பறக்க முடிந்ததே ஒரு மாபெரும் அதிசயம்தான்.

ஷீலா சின்மயாவின் அறையை அடைந்ததும் அவன் கேட்டிருக்கிறான், ''ஓஷோ உன்னை தனது அறைக்கு அழைத்தாரா?'' ஷீலாவுக்கு ஆச்சரியம். ஏனென்றால் நான் அபூர்வமாகத்தான் ஷீலாவை எனது அறைக்கு அழைப்பேன்.

பொதுவாக நான் யாரையும் என் அறைக்குள் அழைப் பதில்லை. கடந்த ஆறு வருடங்களில் நான் ஷீலாவை மூன்று முறை அழைத்திருந்தால் அதிகம். ஷீலாவைத் தவிர விவேக், லட்சுமி ஆகியோர் மட்டும்தான் என் அறைக்கு வருவார்கள்.

அவர்களும் எப்போதாவது அபூர்வமாகத்தான் வருவார்கள். ஆனால் ஷீலாவைப் பார்த்தவுடன் சின்மயா, ''ஓஷோ உன்னை தனது அறைக்கு அழைத்தாரா? அவர் என்ன சொன்னார்? ''

கடந்த சில காலமாக எங்களுக்குள் ஓர் ஆழமான உறவு ஏற்பட்டிருந்தது.

ஷீலா சின்மயாவிடம் சொல்லியிருக்கிறாள். '' நீ இப்போது உன் உடலைத் தளர்வாக, ஓய்வாக வைத்திருக்க வேண்டும் என்று ஓஷோ சொன்னார். உனக்குள் ஆழமாகச் சென்று நீ உன் உடலை மறக்க வேண்டும் என்று ஓஷோ சொல்லியிருக்கிறார்.

சின்மயாவிற்கு தன் உடலை மறப்பது கடினமான செயல். ஏனென்றால் அவன் வலியால் துடித்துக் கொண்டிருந்தான். வலி நிவாரணிகளால் அவனுக்கு எந்தப் பயனும் இல்லை. அவனுக்கு வலியை மறக்கச் செய்யும் மாத்திரைகளை அதிக அளவில் கொடுத்தார்கள்.

ஆனால் அவை அவன் வலியைக் குறைக்கவில்லை. அவனைத் தூங்க வைப்பதே பெரும்பாடாக இருந்தது. வலி அதிக மாக இருந்ததால் அவன் முழித்திருப்பதுகூட கஷ்டமாகத்தான் இருந்தது.

ஆனால் சின்மயா பெரிதாகச் சிரித்தபடி சொன்னான். "ஆமாம். அவர் சொன்னதை நான் நிச்சயம் செய்வேன்."

அன்று இரவு மூன்று முறை அவன் ஷீலாவைக் கேட்டிருக் கிறான். "எனது குரு சொன்ன செய்தியை தயவு செய்து இன்னொரு முறை சொல்லேன். என்னுடைய கடைசி நிமிடங்களில் அதை நான் மறந்துவிடக்கூடாதல்லவா?"

ஒவ்வொரு முறையும் ஷீலா இப்படித்தான் பதில் சொன்னாள். "ஒஷோ சொன்னது மூன்றே மூன்றுதான். ஓய்வாக இரு. தளர்வாக வைத்துக் கொள். உனக்குள்ளேயே ஆழமாகப் போ."

அதைக் கேட்டவுடன் சின்மயா "இப்போது நன்றாக நினைவில் நிற்கிறது" என்று சொல்வான்.

என்னுடைய இந்த தொடர் உரைகளை முழுவதும் கேட்க வேண்டும் என்று சின்மயா ஷீலாவிடம் சொல்லியிருக்கிறான். குறைந்த பட்சம் முதல் நாள் உரையையாவது கேட்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறான். நல்ல வேளை, அதை அவனால் கேட்க முடிந்தது.

நேற்று என் உரை முழுவதையும் அவன் கேட்டான். முழு உணர்வோடு நல்ல மனநிலையில் இருக்கும் போது அவன் என் உரையைக் கேட்டான். அவனுக்கு இருந்த வலியைப் பொறுத்துக் கொண்டு என் உரையைக் கேட்டிருக்கிறான்.

பின் கடைசியாக ஒரு முறை எனது செய்தி என்ன என்று கேட்டுத் தெரிந்து கொண்டு, கண்களை மூடிக் கொண்டு, இந்த உலகத்தை விட்டு மறைந்துவிட்டான்.

இது சாதாரண மரணம் இல்லை. அதைவிட அழகான, ஆழமான ஒரு நிகழ்வு. இது சரணாகதி. எல்லாவற்றையும் விட்டுவிடுதல். இது தான் அன்பு. அவன் என்னைப் பரிபூரணமாக நம்பினான். அவன் அமைதியாக, அழகாக, நல்ல ஓய்வு நிலையில் இருக்கும் போது இறந்து போனான். அவனைப் பற்றி நினைக்கும் போது எனக்கு சந்தோஷமாக இருக்கிறது.

சின்மயா இவ்வளவு வருடங்கள் உயிருடன் இருப்பான் என்று நான் நினைக்கவேயில்லை. அவனுடைய மன உறுதியால் தான் அவன் தனது சாவைத் தள்ளிப் போட்டான். அவனது உடல் ஆறு வருடங்களுக்கு முன்னாலேயே இறந்திருக்க வேண்டும். கடந்த ஆறு வருடங்களாக அவன் ஏறக்குறைய இறப்பு நிலையில் தான் இருந்திருக்கிறான்.

அவன் இன்னும் கொஞ்ச நாள் - மூன்று மாதங்களாவது - உயிருடன் இருந்திருக்கலாம். ஆனால் அப்படி அவன் மரணத்தைத் தள்ளிப்போடுவதால் எந்தப் பயனும் இல்லை. அவன் ஏற்கனவே அடைந்ததைவிட அந்த உடலில் அதிகமாக ஒன்றும் அடைய முடியாது. அவன் உடல் முழுவதும் கெட்டுவிட்டது. ஆனால் அவன் உயிர் நல்ல நிலையில் இருந்தது. அதனை மேலும் வருத்த நான் விரும்பவில்லை. அதனால் தான் அவனைப் போகுமாறு சொன்னேன்.

போவதற்கான நேரம் வந்துவிட்டபின்பு பயணத்தைத் தள்ளிப் போடக்கூடாது. நோயால் வருந்திக்கொண்டிருந்த எதிர்மறையான அவனது உடலின் உள்ளே, நேர்மறையான அவன் மனம் இருந்தது. ஆரோக்கியமில்லாத அவனது உடலுக்குள்ளே ஆரோக்கியமான அவனது மனோபாவம் இருந்தது.

அன்று ஒரு நாள் நான் உங்களுக்கு ஏசு நாதர் பற்றியும், புற்று நோய்க்காரனையும் பற்றிய நகைச்சுவைத் துணுக்கைச் சொன்னபோது பிரேம் சினமயாவை நினைத்துக் கொண்டேன். அவன் கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்தான். அவனுக்கு நகைச்சுவை மிகவும் பிடிக்கும். அவனை மறு உலகத்துக்கு அழைத்துச் சென்ற தேவதைகள் 'இவன் கிளம்பி வர ஏன் ஆறு வருடங்கள் தாமதமாயிற்று' என்று ஆச்சரியப்பட்டிருப்பார்கள்.

மூன்று இத்தாலி நாட்டுக்காரர்கள் இறந்ததும் சொர்க்கத்தின் கதவுகளை அடைந்தார்கள். அந்த வாசலைக் காத்து நின்ற புனித பீட்டர் "யார் நீ?" என்று கேட்டார்.

"என் பெயர் கார்லட்டோ. நான் இத்தாலி நாட்டின் மிலன் நகரத்திலிருந்து வருகிறேன்."

"நீ சரியான நேரத்தில் வந்திருக்கிறாய். உள்ளே போ." என்றார் புனிதர்.

அடுத்து வந்தவனைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டார்.

"நான் ஜெனாரோ. ரோம் நகரத்திலிருந்து வருகிறேன்."

"நீ ஆறு மணி நேரம் தாமதமாக வந்திருக்கிறாய். ஏன் அப்படி?"

"புனிதரே, ரோம் நகரத்தில் இருந்து சொர்க்கம் எவ்வளவு தூரம்? நடுவே கொஞ்ச நேரம் நின்று இளைப்பாறிவிட்டு வந்தேன்."

அவனையும் உள்ளே அனுமதித்தார் புனிதர்.

மூன்றாவதாக ஓர் இத்தாலியன் வந்தான்.

"நீ?"

"நான் பாஸ்கல். நேப்பிள்ஸ் நகரத்தில் இருந்து வருகிறேன்."

"நீ செய்தது அக்கிரமம். நீ இறந்து இரண்டு மாதங்கள் கழித்துதான் இங்கே வந்து சேர்ந்திருக்கிறாய். என்ன ஆயிற்று உனக்கு?"

"கோபம் வேண்டாம் புனிதரே. நான் இறப்பதற்கு முன் நோய்வாய்ப்பட்டிருந்தேன் அல்லவா? அதனால் என்னால் வேகமாக வரமுடியவில்லை."

இப்படிக் கேள்வி கேட்டால் சின்மயா என்ன சொல்லப் போகிறான் என்று எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால் ஆறு வருடங்கள் என்பது கொஞ்சம் அதிகம்தான். சொர்க்கத்தில் இருப்பவர்கள் அவர்கள் ஏடுகளைப் புரட்டிப் பார்க்க வேண்டும். இந்த ஆள் யார் என்று கண்டுபிடிக்கவே நேரமாகிவிடும்.

இப்போது சொர்க்கத்தின் அதிகாரிகளுக்கு நமது சந்நியாசிகளைப் பற்றித் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். நமது சந்நியாசிகளை நம்ப முடியாது என்று அவர்கள் தீர்மானம் செய்திருப்பார்கள். நமது சந்நியாசிகள் கண்ட கண்ட நேரத்தில் போய் சொர்க்கத்தின் கதவுகளைத் தட்டுவார்கள். அவர்கள் காலத்தைப் பற்றிக் கவலைப் பட மாட்டார்கள். அவர்களுக்கு

சட்ட திட்டங்கள் இல்லை. ஒழுங்கு முறை பற்றியும் கவலை யில்லை.

சின்மயாவிற்கு நகைச்சுவை என்றால் மிகவும் பிடிக்கும். அவன் நல்ல நகைச்சுவைத் துணுக்குகளை எனக்கு எழுதிக் காண பிப்பான். அவன் நினைவாகச் சில துணுக்குகளைச் சொல்கிறேன்.

ஒரு மனிதன் அரக்க பரக்க காவல் நிலையத்துக்கு ஓடி வந்தான்.

"என் மனைவியைக் காணவில்லை." என்று புகார் செய்தான்.

"எப்போதிலிருந்து?" என்று கேட்டார் காவல் துறை அதிகாரி.

"ஐந்து ஆறு வருடங்களுக்கு முன்னால்."

"என்ன உளறுகிறாய்? நீ ஏன் முதலிலேயே வரவில்லை?"

"என்னால் இப்படி நடக்கும் என்று நம்பவே முடியவில்லை."

ரஷியத் தலை நகர் மாஸ்கோவில் ஒரு வயதானவன் ஒரு சிலைக்கு முன்னால் மண்டியிட்டு வழிபட்டுக் கொண்டிருந்தான். அப்போது அந்த வழியே ஒரு கம்யூனிஸ்ட் கட்சியின் இளம் அதிகாரி போய்க் கொண்டிருந்தான். வணங்கிக் கொண்டிருந்த கிழவனைப் பார்த்து அவன் கேட்டான்.

"பெரியவரே, ஜெபம் செய்கிறீர்களா?"

"ஆமாம்."

"எங்களுக்காகத் தானே ஜெபம் செய்கிறீர்கள்?"

"நிச்சயமாக."

"இப்போது எங்களுக்காக ஜெபம் செய்தது போல் அந்தக் காலத்தில் ஜார் மன்னர்களுக்காகவும் ஜெபம் செய்திருப்பீர்கள் இல்லையா?"

"ஆமாம். அது உண்மைதான்."

"இப்போது சொல்லுங்கள். உங்கள் ஜெபத்தினால் ஏதாவது பலன் கிடைத்ததா?"

"ஏன் கிடைக்கவில்லை? ஜார் மன்னர்களை எல்லாம் கொன்றுவிட்டார்கள். இல்லையா?"

நான் சொல்லப் போகும் இந்த நகைச்சுவைத் துணுக்கு சின்மயாவிற்கு மிகவும் பிடிக்கும்.

ஒரு வங்கியில் உயர்மட்ட அதிகாரிகளின் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. வங்கியின் தலைவர் சூடாக விவாதித்துக் கொண்டிருந்தார். நடுவில் எழுந்து குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தார்.

அவரைக் கவனித்துக் கொண்டிருந்த அவரது பெண் உதவி யாளர், அவருடைய கால் சட்டையின் ஜிப் அவிழ்ந்திருப்பதைக் கவனித்துவிட்டாள். அதை எப்படி அவரிடம் சூசகமாகத் தெரிவிப்பது என்று ஒரு நிமிடம் யோசித்தாள். பின் அவருடைய காதருகில் போய் கிசுகிசுத்தாள்.

“தலைவரே, உங்கள் கார் ஷெட் திறந்திருக்கிறது. உள்ளே என்ன இருக்கிறது என்பதை எல்லாராலும் பார்க்க முடிகிறது.”

“அப்படியா, உள்ளே என்ன இருக்கிறது? என்னுடைய புது பென்ஸ் கார் இருக்கும். அப்படித்தானே?”

உதவியாளருக்குக் கோபம் வந்துவிட்டது.

“இல்லை தலைவரே, உள்ளே பென்ஸ் கார் நிற்கவில்லை. நாலு டயரும் பஞ்சரான அரதப் பழசான ஒரு ஃபியட் காரும் நின்று கொண்டிருக்கிறது.”

கேட்ட மாத்திரத்தில் ஜிப்பைப் போட்டுக் கொண்டார் தலைவர்.

நேற்று நீங்கள் எல்லாரும் சின்மயா நம்மை விட்டுக் கிளம்பிச் சென்றதைக் கொண்டாடினீர்கள். அவனை எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

அவன் உங்களுக்கு எல்லாம் ஒரு விளக்காக இருந்து உங்கள் பாதையைக் காட்டுவான். அவன் ஆழமாகக் காதலித்தான். அவன் சிரிப்பில் கூட ஆழம் இருந்தது. வாழ்க்கையை எப்படி கொண்டாட வேண்டும் என்று அவனுக்குத் தெரியும். ஆனால் அவன் உடல் அவனோடு ஒத்துழைக்கவில்லை. அதைப்பற்றி அவன் கவலைப்பட்டதே கிடையாது.

நேற்று அவன் எனது உரையைக் கேட்கவேண்டும் என்று ஆசைப் பட்டான். அவன் உடல் நிலை கருதி அவனை தான் தடுக்க வேண்டியிருந்தது. என்றாலும் அவன் என் உரையை முழுவதும் கேட்டான்.

பின் ஷீலாவிடம் அவன் சொன்னான்.

“ஓஷோவின் இந்தத் தொடர் உரைகள் முழுவதையும் கேட்க வேண்டும் என்று மனதார விரும்பினேன். ஆனால் ஓஷோ நான் போக வேண்டிய நேரம் வந்து விட்டது என்று சொன்னபின் எனது பயணத்தைத் தாமதப்படுத்த விரும்பவில்லை. இதுதான் நான் போகச் சரியான நேரம் என்று ஓஷோ சொல்கிறார் என்றால், அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். நல்ல நேரத்தில் பயணிக்கும் இந்த வாய்ப்பைத் தவறவிட விரும்பவில்லை. “

அவன் என்னை மீறி எதுவும் செய்ததில்லை. என்மேல் அவனுக்கு இருந்த அன்பு மகத்தானது.

அவன் பெயரின் அர்த்தம் தெரியுமா உங்களுக்கு? பிரேம் சின்மயா என்றால் அன்பு, தன்னுணர்வு என்று பொருள். அவனிடம் இரண்டுமே அபரிமிதமாக இருந்தன. அவன் அன்பின் வடிவமாக இருந்தான். பின் தன்னுணர்வின் வடிவமாகிப் போனான். அந்த முழுமையான அன்புடன், பரிபூரணமான தன்னுணர்வுடன்தான் அவன் இறந்து போனான்.

அது மரணம் இல்லை. சமாதி. மரணத்தைக் கடந்த நிலை.

அவன் நிச்சயம் திரும்பி வருவான். அவன் வருவது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். எனது பெண் சந்நியாசிகளில் ஒருத்தியின் கருப்பையில் அவன் வந்திருந்து குழந்தையாகப் பிறந்தவுடன் நான் அவனுக்கு கோ ஹ்சுவான் என்று பெயர் சூட்டுவேன்.

அவன் கோ ஹ்சுவான் பற்றிய இந்த தொடர் உரை முழுவதையும் கேட்க விரும்பினான். அதன் நினைவாக அந்த குழந்தைக்கு கோ ஹ்சுவான் என்று பெயர் சூட்டுவேன். நான் ஏதாவது ஒரு குழந்தையை கோ ஹ்சுவான் என்று பெயரிட்டு அழைத்தால் பிரேம் சின்மயா தனது குறும்புகளைத் தொடர மீண்டும் நம்மிடம் வந்துவிட்டான் என்று தெரிந்து கொள்ளுங்கள்.

*கேள்வி 3*

*ஓஷோ, என் கணவன் என் மேல் மிகுந்த அன்பு வைத்திருக்கிறார். நாங்கள் 25 வருடங்களாகச் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்த 25 வருட காலத்தில் அவர் ஒரு முறைகூட மற்ற பெண்களை நினைத்ததில்லை. என்னாலேயே இதை நம்ப முடியவில்லை. ஆனால் இது முச்சூடும் உண்மை. இதைப பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?*

என்னாலும்தான் இதை நம்பமுடியவில்லை. சரி, அதை விடுங்கள். இந்த ஜோக்கைக் கேளுங்கள்.

ஒரு காலத்தில் 'நம்பமுடியவில்லை' என்ற பெயருள்ள ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி மிகவும் நல்லவள். அவன் மேல் உயிரையே வைத்திருந்தாள். அவர்கள் இருவரும் வெகுகாலம் நிறைவாக வாழ்ந்து வந்தார்கள்.

'நம்பமுடியவில்லை'க்கு வயதாகி, அவன் இறக்கும் காலம் வந்தது. சாகும் முன் தன் மனைவியை அழைத்துச் சொன்னான், "எனக்கு என்னுடைய முட்டாள்தனமான பேரைக் கேட்டுக் கேட்டு அலுத்துவிட்டது. மற்றவர்கள் என்னை 'ஏய் நம்பமுடியவில்லை' என்று கூப்பிடும் போதெல்லாம் நான் கூனிக் குறுகிப் போகிறேன்.

"இதோ இப்போது நான் சாகப்போகிறேன். எனக்கு நீ ஒரே ஓர் உதவி செய்ய வேண்டும். எனது கல்லறையில் என் பெயரை - நம்ப முடியவில்லை ' என்ற வார்த்தைகளை மட்டும் எழுதி விடாதே. வேறு எதை எழுதினாலும் அதைப் பற்றிக் கவலை யில்லை. வேறு எந்த எழுத்து, படம் எதைப் போட்டாலும் கவலை யில்லை. என் பெயரை மட்டும் எழுத மாட்டேன் என்று சத்தியம் செய்."

மனைவியும் ஒத்துக் கொண்டாள். 'நம்பமுடியவில்லை' இறந்து போனான். அவன் மேல் அன்பு கொண்டிருந்த அவனது மனைவி அவனது கல்லறையில் இப்படி எழுதி வைத்தாள்.

"தன் மனைவிக்கு எப்போதும் துரோகம் செய்யாத உத்தமக்கணவன் ஒருவன் இங்கே உறங்கிக் கொண்டிருக்கிறான்."

அன்று முதல் அந்த வழியே செல்பவர்கள் அந்த கல்லறையில் இருக்கும் வாசகத்தை வாய் விட்டுப் படிப்பார்கள். பின், " நம்பமுடியவில்லையே!" என்று அலுத்துக் கொள்வார்கள்.

ஒன்று உங்கள் கணவர் இறந்திருக்க வேண்டும். இல்லை மனநலம் குன்றியவராக இருக்க வேண்டும். இல்லை, ஒரு ஞானம் பெற்ற புத்தனாக இருக்க வேண்டும். ஆனால் புத்தனுக்கு உங்களிடத்தில் என்ன வேலை?

கடற்கரையில் இருந்த ஒர உல்லாச நகரில் இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். கடற்கரையில் குறுக்கும் நெடுக்குமாக நீச்சல் உடை அணிந்த அழகான பெண்கள் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து ஒருத்தி சொன்னாள்.

"இப்படி அழகான பெண்களைப் பார்த்து நமது கணவன் மார்கள் புத்தி பேதலித்து ஏதாவது தப்பு செய்துவிடப் போகிறார்கள் எனக்குப் பயமாக இருக்கிறது."

"என்னைப் பொறுத்த மட்டில் அந்த பயம் கொஞ்சம் கூட இல்லை. என் கணவர் என் மேல் பைத்தியமாக இருக்கிறார்."

"அது இருக்கட்டும் ஒரு நாளில் கொஞ்ச நேரமாவது புத்தி சுவாதீனத்துடன் இருக்க மாட்டாரா என்ன?"

ஓர் ஆண் ஒரு பெண்ணை நேசித்தால் அவன் பலரையும் சேர்ந்தே நேசிப்பான். அதே போல் ஒரு பெண் ஓர் ஆணை நேசித்தால், பலரையும் சேர்ந்தே நேசிப்பாள். நேசத்தையும் காதலையும் ஒரே ஓர் ஆளுக்கு மட்டும் கொடுப்பது இயலாத காரியம். காதல் இருந்தால் அதனை ஒருவருக்கு இல்லை ஒருத்திக்கு என்று கட்டுப்படுத்தவே முடியாது. காதல் என்பதே இல்லாவிட்டால் கட்டுப்பாடு என்ற பேச்சுக்கே இடமில்லை.

அன்பும், நேசமும் சுவாசிப்பதைப் போன்றது. "உன்னோடு இருக்கும் போது மட்டும் தான் நான் சுவாசிக்கிறேன். மற்றவர்களோடு இருக்கும் போது நான் சுவாசிப்பதில்லை"என்று சொல்பவரை நீங்கள் நம்புவீர்களா? அந்த ஆளை எப்படி நம்ப முடியும், சொல்லுங்கள். சுவாசிக்காமல் இருந்தால் அவன் இறந்துவிடுவான். அன்பும் காதலும் உங்கள் ஆன்மாவின் சுவாசம்.

ஆனால் இந்த அன்பையும், காதலையும் எப்படிக் குட்டிசுவராக்கி வைத்திருக்கிறோம் என்பதைச் சற்றுப் பாருங்கள்.

காலம் காலமாக பல முட்டாள்தனமான கருத்துகளை மக்கள் மனதில் உருவேற்றி, அவர்களைக் குழப்பி, அதனால் இந்த உலகத்தில் பெரும் துன்பத்தை விளைவித்திருக்கிறோம்.

பொறாமை, வெறுப்பு, ஒருவரை ஒருவர் உடைமைப்படுத்தும் மடத்தனம் என்று காரணமில்லாமல் நமது வாழ்க்கையைக் குழப்பிக் கொண்டிருக்கிறோம். ஒரு நபரை ஒரு நபர் தான் ஒன்றுக்கு ஒன்று என்ற அடிப்படையில் நேசிக்க முடியும் என்ற முட்டாள் தனமான கருத்தை மக்கள் மனதில் உருவேற்றிவிட்டோம்.

உண்மையான அன்பு இருவருக்கிடையில் ஒன்றுக்கு ஒன்று என்ற அடிப்படையில்தான் இருக்க முடியும். ஒன்றுக்கு ஒன்று என்ற அளவில் இருந்தால் மட்டுமே அந்த அன்பு உண்மையானது. இல்லையென்றால் அந்த அன்பு போலி என்று நமது மக்களை நம்பவைத்துவிட்டோம்.

ஆனால் உண்மை இதற்கு நேர்மாறாக இருக்கிறது. ஒன்றுக்கு ஒன்று என்ற அளவில் இருக்கும் அன்பு போலியானது. அது பொய்யானது. அது வெறும் பாசாங்கு மட்டுமே. அதை நம்புபவர் அடுத்தவரை ஏமாற்றுவதோடு மட்டுமல்லாமல் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறார்.

ஓர் ஆணுக்கு பெண்ணின் அழகில் இயல்பாகவே ஓர் ஈர்ப்பு இருக்கத்தான் செய்யும். பின் எப்படி அவன் மனைவியைத் தவிர வேறு அழகான பெண்களைப் பார்க்காமல் இருக்க முடியும்?

அவர்களால் எப்படி கவரப்படாமல் இருக்க முடியும்? வேறு பெண்கள் அவனைக் கவரக்கூடாது என்றால், அழகினால் அவனுக்கு ஏற்படும் ஈர்ப்பு முற்றிலுமாக அழிக்கப்பட வேண்டும். அப்படி அழிக்கப்பட்டபின் அவனுக்கு தன் மனைவியிடம் கூட ஈர்ப்பு இருக்காது.

இப்போது உலகத்தில் இதுதான் நடந்திருக்கிறது. இந்த முட்டாள்தனமான எண்ணத்தினால், நேசம் என்பது இருவருக்கு இடையில் மட்டும்தான் ஒன்றுக்கு ஒன்று என்ற அடிப்படையில் மட்டும்தான் இருக்க முடியும் என்ற எண்ணத்தினால் இந்த உலகத்தில் இருந்தே அன்பும் காதலும் மறைந்துவிட்டன.

இந்த முட்டாள்தனமான விதிக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமென்றால் கணவன் மனைவியைக் காதலிக்காமல் இருக்க

வேண்டும் என்ற நிலைக்கு நாம் வந்துவிட்டோம். கணவன் மனதில் இருக்கும் அன்பை முளையிலேயே கிள்ளி எறிந்து விட வேண்டும். அழகு என்ற செடியின் வேரைப் பிடுங்கிப் போட்டு அதனை அழிக்க வேண்டும். அழகு என்ற ஒன்று இந்த உலகத்தில் இருக்கிறது என்பதையே கணவன் மறந்துவிட வேண்டும்.

அப்படி ஒரு நிலை வந்துவிட்டால் அந்தக் கணவனால் தனது மனைவியைக்கூட நேசிக்க முடியாது என்பதை மனதில் கொள்ளுங்கள்.

ஆனால் தன் மனைவியை நேசிப்பது போல் அவன் பாசாங்கு செய்வான். நாடகமாடுவான். தம்பதியருக்கு இடையே இருக்கும் அன்பில் சம்பிரதாயங்கள் இருக்கும், மரபுகள் இருக்கும், செயல் பாடுகள் இருக்கும். ஆனால் எல்லாம் காலியாக அர்த்தமில்லாமல் அபத்தமானதாக இருக்கும்.

ஒரு பெண்ணிடம், " நீ உன் கணவனை மட்டும்தான் நேசிக்க வேண்டும். அடுத்தவர்களை ஏறெடுத்தும் பார்க்கக்கூடாது" என்று சொன்னால் அதன் பின் அவளுக்கு தன் கணவன் மேல் இருக்கும் சுவாரசியம் போய்விடும்.

அதனால் கணவனுக்கு மனைவி மேலும், மனைவிக்கு கணவன் மேலும் ஒரு பிடிப்பு இல்லாமல் போய்விட்டது. அவர்கள் சதா சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இல்லை, சண்டை போடக் கா;ரணங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுடைய அன்பு கொள்ளும் சக்தி மலரா:மல் நசுக்கப் படுவதால்தான் அவர்கள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். பல நூற்றாண்டுகளாக நடந்த இந்த மனக்கட்டுத் திட்டத்தினால் எது உண்மை என்பதையே அவர்கள் மறந்து விட்டார்கள்.

அவர்களுடைய பெற்றோர்கள், அவர்களைப் பெற்றவர்கள் என்று தலைதலைமுறையாக ஆதாம்-ஏவாள் காலத்திலிருந்து இதே அவலம் தான் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. இப்போது இந்த மனப்பாங்கு நம்மில் ஒரு பகுதியாக, நமது இரத்தத்தோடு இரத்தமாகக் கலந்துவிட்டது. இதைப்பற்றிய மெல்லிய விழிப்புணர்வு கூட இல்லாமல் போய்விட்டது. நமது ஆழ் மனதிற்குள் ஆழமாகச் சென்றுவிட்டது இந்த கசப்புணர்வு.

அதனால் தான் கணவன்-மனைவியிடையே எப்போதும் ஓர் இனம் புரியாத கோபம் இருக்கிறது. அந்த கோபம் சில சமயம் அதிகமாக இருக்கிறது, சில சமயம் குறைவாக இருக்கிறது.

சில சமயங்களில் தம்பதியர் கோபப்பட காரணங்களைத் தேடிக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் வருத்தத் துடன் இருக்கிறார்கள். அனைத்துக்கும் மூலகாரணம் ஒன்றுதான். மற்ற காரணங்கள் எல்லாம் மேலோட்டமானவை. அவர்கள் வேண்டுமென்றே பொய்யான காரணங்களுக்காக கோபப்படு கிறார்கள் என்று சொல்லவில்லை. பாவம் அவர்களுக்குள் என்ன நடக்கிறது என்று அவர்களுக்குத் தெரியாது.

அழகை ரசிக்கும் ஒரு மனிதன் பல பெண்களிடம் இருக்கும் அழகை ரசிக்கத் தலைப்படுவான் என்பது அடிப்படை உண்மை. அதே போல் ஆண்மையை, அழகை ரசிக்கும் ஒரு பெண் பல ஆண்களிடம் இருக்கும் அழகை ரசிப்பாள் எனபதும் அதே அளவிற்கு அடிப்படை உண்மை.

அந்த பல ஆண்களில் ஓர் ஆணிடம் அவளது லயிப்பு அதிகமாக இருக்கலாம். அந்த ஓர் ஆணைத் தனது கணவனாகத் தேர்ந்தெடுத்து அவனுடன் தன் வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ள அவள் தீர்மானிக்கலாம்.

இதனால் எல்லாம் மற்ற அழகான ஆண்களை அவள் ஏறெடுத்தும் பார்க்கமாட்டாள் என்று சொல்ல முடியாது. மற்ற ஆண்கள் அவளைக் கவரவில்லை என்று சொல்லமுடியாது.

உங்கள் கணவனுடனோ, அல்லது மனைவியுடனோ காலையில் நடைப்பயிற்சி செய்கிறீர்கள் என்று வைத்துக் கொள் ளுங்கள். அப்போது உங்கள் கணவன் உங்களிடம், “அந்த பெண்ணைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கிறாள்?” என்று சொன்னால், உடனே பூகம்பம் வெடித்துவிடும். அவனால் அப்படிச் சொல்லவே முடியாது.

ஆனால் அப்படிச் சொல்வதில் எந்தத் தவறும் இல்லை. உள்ளதைச் சொன்னால் அப்படிச் சொல்லும் கணவனைக் குறித்து நீங்கள் சந்தோஷப்பட வேண்டும். பெருமைப்பட வேண்டும். இன்னும் உங்கள் கணவன் நல்ல ஆரோக்கியமான மனநிலையுடன், உயிர்த்துடிப்புடன் இருக்கிறான் என்று சந்தோஷப்பட வேண்டும்.

அவன் கண்களுக்கு இன்னும் நல்ல அழகைக் கண்டு கொள்ளும் சக்தி இருக்கிறது என்பதற்காக நீங்கள் பெருமைப் பட வேண்டும். அழகான எதுவும் அவனிடத்தில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்று நீங்கள் திருப்தியடைய வேண்டும். இதில் பொறாமை என்ற பேச்சுக்கே இடமில்லை.

ஆனால் எந்த புத்திசாலிக் கணவனும் அப்படி சொல்ல மாட்டான். அந்த அழகான பெண்ணை அவன் பார்க்கவே பார்க் காதது போல் பாசாங்கு செய்வான். உண்மையில் அந்த அழகியைப் பார்த்துவிட்டான். இன்னும் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

அவன் பார்ப்பது உங்களுக்குத் தெரியக்கூடாது என்பதற் காகத்தான் அந்தக் காலை வேளையில் கூட அவன் கறுப்புக் கண்ணாடி அணிந்து வந்திருக்கிறான். அந்தப் பெண்ணைப் பார்க்க ஏதாவது சாக்குகளைத் தேடிக்கொண்டிருப்பான்.

இல்லை சம்பந்தா சம்பந்தமில்லாமல் அழகான ஒரு மரத்தைப் பற்றிப் பேச ஆரம்பிப்பான். அவனுக்கு மரத்தைப் பற்றிக் கவலையில்லை. மரத்துக்கு அடியில் அமர்ந்திருக்கும் பெண்ணைப் பற்றித்தான் அவன் யோசித்துக் கொண்டிருக்கிறான்.

அவனுக்கு ஏன் திடீரென்று சாலை ஓரத்தில் இருக்கும் மரத்தின் மேல் இப்படி ஓர் அலாதி பிரியம் உண்டாயிற்று என்று அவன் மனைவிக்கும் தெரியும். இதுவரை அவன் மரங்களைப் பற்றிப் பேசியதேயில்லையே!

அதே போல், ஒரு மனைவி தன் கணவனிடம், "இந்த ஆண் அழகாக இருக்கிறான்." என்று சொல்ல முடியாது. கண வனுக்குக் கண் மண் தெரியாமல் கோபம் வந்துவிடும். அவனுடைய அகந்தையுணர்வு காயப்பட்டுவிடும். "என்னைவிட அழகானவர்கள் யாரும் கிடையாது" என்ற எண்ணம் ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. இது வடிகட்டிய முட்டாள்தனம் என்று ஒவ்வொரு வருக்கும் தெரியும்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் அபூர்வமானவர்கள் தான். மற்றவர்களிடம் இல்லாத ஏதோ ஒன்று ஒவ்வொருவரிடமும் இருக்கிறது என்பது உண்மைதான். இந்த ஆணின் கண்கள் உங்களுடையதை விட அழகானதாக இருக்கலாம். ஆனால் உங்கள் மூக்கு அழகாக இருக்கலாம். அவனுடையது அசிங்கமாக இருக்கலாம். உங்கள் முகம் மிக அழகாக இருக்கலாம். ஆனால் அவனுக்கு இருக்கும் கட்டுமஸ்தான உடல் உங்களுக்கு இல்லாமல் இருக்கலாம்.

மக்கள் இன்னும் கொஞ்சம் அதிக அறிவுடன் செயல்பட வேண்டும். அவர்கள் அழகை ரசிக்க வேண்டும். அடுத்தவர்கள் அழகை ரசிப்பதையும் ரசிக்க வேண்டும். கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் எப்படி பேசிக் கொள்ள வேண்டும் தெரியுமா?

“ஆமாம், நீங்கள் சொல்வது சரிதான். அந்த பெண் மிகவும் அழகாக இருக்கிறாள்.” என்று மனைவி சொல்ல வேண்டும்.

“உன் ரசனையே தனிதான். அந்த ஆள் பார்க்க சும்மா ‘கும்’ மென்று இருக்கிறான்.” என்று கணவன் சொல்ல வேண்டும்.

அதனால் எந்தத் தவறும் இல்லை. அது உங்கள் காதலை அழித்துவிடாது. மாறாக அந்த வார்த்தைகள் காதலை இன்னும் வலுப்படுத்தும், ஆழப்படுத்தும், அதிகப்படுத்தும். ஒருவருக்கொருவர் உண்மையாக உரையாடுவது, மனதில் உள்ளதை உள்ளபடியே சொல்வது காதலுக்குப் போஷாக்கு அளிக்கும்.

ஆனால் நீங்கள் பாசாங்கு செய்ய ஆரம்பித்தால், பாசாங்கு செய்ய வற்புறுத்தப்பட்டால், நீங்கள் சொல்ல விரும்பாத வார்த்தை களைச் சொல்ல வற்புறுத்தப்பட்டால், நீங்கள் சொல்ல விரும்பும் வார்த்தைகளைச் சொல்லும் சுதந்திரம் உங்களுக்கு இல்லை என்றால், உங்களிடம் இருக்கும் காதல் கொஞ்சம் கொஞ்சமாக மறைய ஆரம்பிக்கும். அதன் பின் கணவன-மனைவியிடையே இடைவெளி அதிகமாகிக் கொண்டே போகும்.

உங்கள் கணவர் மீண்டும் உயிர்த்துடிப்புடன், மெல்லுணர்வுடன , நல்ல மனநிலையுடன் இருக்க நீங்கள்தான் அவருக்கு உதவி செய்ய வேண்டும்.

அவருடைய இப்போதைய மந்தநிலைக்கு உங்கள் மனப்பாங்கு தான் முக்கியமான காரணமாக இருக்க வேண்டும். இது நல்லதற் கில்லை. இது ஆரோக்கியமான மனநிலையில்லை. இது நல்ல மனநலத்துக்கு அறிகுறியில்லை.

வேறு பெண்ணை நான் மனதால் கூட தொட்டதில்லை என்று உங்கள் கணவன் சொன்னால் முதலில் நீங்களும் ஒரு பெண்தான் என்பதை மனதில் கொள்ளுங்கள். அவருடைய மனைவியாக இருப்பதனால் மட்டும் நீங்கள் விசேஷமான பெண்மணியாகி விடவில்லை. இந்த உலகில் அழகான பெண்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள்.

உங்கள் கணவருக்கு வேறு பெண்கள் மேல் சுவாரசியமே ஏற்படவில்லையென்றால் அவருக்கு உங்கள் மேலும் சுவாரசியம் குறைந்துவிட்டது என்றுதான் அர்த்தம். அவரைப் பொறுத்த மட்டில் உங்களோடு அவர் வாழ்ந்து முடித்துவிட்டார் என்றுதான் அர்த்தம.

இல்லை அப்படி முடிக்கும் படி நீங்கள் அவரைக் கட்டாயப் படுத்தியிருக்கிறீர்கள் என்றுதான் அர்த்தம்.

அதனால் தான் நீங்கள் சொல்கிறீர்கள். "என்னால் அதை நம்பமுடியவில்லை. ஆனால் அதுதான் உண்மை."

உங்களால் ஏன் அதை நம்ப முடியவில்லை? சற்று யோசித்துப் பாருங்களேன். நீங்கள் மற்ற அழகான ஆண்களைப் பார்க்கிறீர்கள். அவர்களைப் பற்றி நினைக்கிறீர்கள். உங்கள் கணவனால் மட்டும் எப்படி வேறு அழகான பெண்களைப் பற்றி நினைக்காமல் இருக்க முடிகிறது என்று நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள்.

உண்மையில் ஓர் ஆணும் பெண்ணும், அதிலும் குறிப்பாக ஒரு கணவனும் மனைவியும் தாம்பத்திய உறவில் ஈடுபட்டால் படுக்கையில் இரண்டு நபர்கள் மட்டும் இருக்கமாட்டார்கள். மனதளவில் அங்கு குறைந்த பட்சம் நான்கு மனிதர்கள் இருப்பார்கள். அவன் வேறு யாரோ ஒரு பெண்ணை நினைத்துக் கொண்டு மனைவியோடு உறவு கொள்கிறான். அவள் வேறு யாரோ ஓர் ஆணை நினைத்துக் கொண்டு கணவனோடு உறவு கொள்கிறாள்.

அவள் நடிகர் சூர்யாவை நினைத்துக் கொணடு கணவனோடு உறவு கொள்கிறாள். அவனோ நடிகை நமீதாவை நினைத்து ஜொள்ளுவிட்டபடியே மனைவியை அணைத்துக் கொண்டிருக் கிறான்.

அதனால்தான் பல தம்பதியர் பகலில் உறவு கொள்வதில்லை. இரவில், எல்லா விளக்குகளையும் அணைத்துவிட்டு நல்ல இருட்டி லேயே உறவு கொள்கின்றனர். அப்போதுதான் அவர்களுடைய கற்பனைக் குதிரைகள் அவை விரும்பும் இடத்தில் சென்று மேய்ந்துவிட்டுத் திரும்பமுடியும். உங்களுக்கு யார் மேல் விருப்பமோ அவர்களை நினைத்துக் கொள்ள முடியும்.

உள்ளபடி மனிதர்களுள், அவர்கள் உடல்களுக்குள் அடிப்படையில் பெரிய வேறுபாடு எதுவும் இல்லை. படிவங்களில் வித்தியாசங்கள் இருக்கலாம். சில கார்களில் முன்பக்கம் பெரிதாக இருக்கும். சில கார்களில் பின் பக்கம் வித்தியாசமாக இருக்கும். இது போன்ற வேறுபாடுகள் இருக்கலாமே தவிர அடிப்படையில் எல்லாம் ஒன்றுதான்.

ஓர் ஆணோடு, ஒரு பெண்ணோடு நீங்கள் உடலுறவு கொள்ளும் போது நீங்கள் இந்த அடிப்படைகளில் தான் இருக்கிறீர்கள். அதற்கும் கீழே போக முடியாது. இயற்கை இந்த விஷயத்தில் ஒரு முழுமையான கம்யூனிஸ்ட்டாகத்தான் இருக்கிறது. அடிப்படை விஷயங்களில் எல்லாரையும் ஒரே மாதிரிதான் உருவாக்கியிருக்கிறது. கூடவோ குறையவோ யாருக்கும் கொடுக்கவில்லை. சில வித்தியாசங்கள் இருக்கலாம். ஆனால் அவை மேலோட்டமானவையே.

உங்கள் கணவருக்கு உதவுங்கள். அவருக்கு உங்கள் உதவி தேவை. நான் ஆயிரக்கணக்கான தம்பதிகளைப் பற்றி அறிவேன். நான் அறிந்த வரையில் பெண்தான் கணவனை வருத்துகிறாள். பல நேரங்களில் அழித்தே விடுகிறாள். தான் தான் எஜமானன் என்று கணவன் நினைத்துக் கொண்டிருக்கிறான்.

ஆனால் உண்மையில் அவன் எஜமானன் இல்லை. தாங்கள் தான் எஜமானர்கள் என்பதில் பெண்களுக்கு எந்த சந்தேகமும் இல்லை. அவர்கள் ஆண்களைப் பேசவிட்டு வேடிக்கை பார்க்கிறார்கள். ஆண்களின் பேச்சை அவர்கள் ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை.

பெண்கள் என்ன நினைக்கிறார்கள் தெரியுமா? "ஆண்களே, நீங்கள் உங்களை எஜமானர்கள் என்று சொல்லிக் கொள்ளுங்கள். பேச்சளவில் மட்டுமே நீங்கள் எஜமானர்கள். ஆனால் உண்மையில் நாங்கள்தான் எல்லாம்."

இப்படித்தான் ஒரு நாள் நான் முல்லா நசுருதீனைப் பார்க்கப் போயிருந்தேன். அவர் கட்டிலுக்கு அடியில் ஒளிந்து கொண்டிருந்தார். அவரைக் கேட்டேன், "என்ன முல்லா, என்ன ஆயிற்று? ஏன் இப்படி கட்டிலுக்கு அடியில்...."

அவர் சொன்னார். "நான் தான் இந்த வீட்டின் தலைவன். எனக்கு எங்கு இருக்க விருப்பமோ அங்குதான் இருப்பேன். என்னை யாரும் தட்டிக் கேட்க முடியாது."

முல்லாவின் சத்தத்தைக் கேட்டு அவரது மனைவி ஓடிவந்தாள்.

"ஏய் பயந்தாங்கொள்ளி, மீசையும் தாடியும் வச்சிருக்கிற உண்மையான ஆம்பளையா இருந்தா வெளிய வா. இந்த வூட்ல யாரு தலைவருன்னு நா காமிக்கறேன்."

முல்லாவும் அசரவில்லை. "இங்க பாரு, என்ன வெளிய வரச்சொல்லி யாரும் கட்டாயப்படுத்த முடியாது. நான் தான் தலைவன். நான் இங்கதான் இருப்பேன்."

முல்லாவின் மனைவி மிகவும் பருமனாக இருந்ததால் அவளால் கட்டிலுக்கு அடியில் போக முடியவில்லை. அவளிடம் கேட்டேன், "இப்போது நீ என்ன செய்யப் போகிறாய்?"

"இதுல செய்ய என்ன இருக்கு? கொஞ்ச நேரம் நீங்க இங்கேயே இருந்து வேடிக்கையப் பாருங்க. சாப்பாட்டு நேரம் வந்துருச்சின்னா வெளிய வந்துதானே ஆகணும். கட்டிலுக்குக் கீழ அந்தாளு தலைவனா இருந்துட்டு போகட்டும். கட்டிலுக்கு மேல, படுக்கைக்கு மேல நான் தான் தலைவி."

நீங்கள் உங்கள் கணவருக்கு உதவி செய்யுங்கள். உங்களை அறியாமலேயே நீங்கள் அவரை அழித்திருக்கலாம். நீங்கள் தெரிந்து செய்தீர்கள் என்று நான் சொல்லவில்லை. என்ன நடக்கிறது என்பதை அறியாமலேயே கூட நீங்கள் அதைச் செய்திருக்கலாம். பெண்ணின் அணுகுமுறையும், செயல்முறையும் எப்போதுமே நுட்பமானது.

உங்கள் கணவருக்கு மறுவாழ்வு கொடுங்கள். அவரைக் கல்லறையில் இருந்து உயிர்ப்பியுங்கள். அப்போதுதான் அவருக்கு உங்கள் மேல் உண்மையான அன்பு, காதல் ஏற்படும். நீங்கள் அப்படிச் செய்தால் அவர் உங்களுக்கு என்றும் நன்றி உடையவராக இருப்பார்.

எல்லாத் தம்பதியினரும் ஒரு விஷயத்தை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். திருமணம் செய்து கொண்டதால் மட்டுமே நீங்கள் ஒருவருக்கு ஒருவர் தலைவராகவோ, எஜமானராகவோ ஆகிவிடவில்லை.

நீங்கள் சேர்ந்து வாழும் கூட்டாளிகள், நண்பர்கள். அவ்வளவுதான். உங்கள் உறவு அப்படியே இருக்கும் என்று அலட்சியமாக இருந்துவிடாதீர்கள். அதற்காக நீங்கள் அடுத்தவரை உங்கள் உடைமையாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைப்பதும் தவறு. ஆணோ, பெண்ணோ உடைமையாக்கிக் கொள்ள வேண்டிய ஜடப் பொருள்கள் அல்லர். அவர்கள் மனிதர்கள். அவர்களை மதிக்க வேண்டும். அவர்களை உங்கள் சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது. இப்போது உலகெங்கிலும் என்ன நடக்கிறது தெரியுமா?

கணவன்மார்கள் மனைவிகளை தங்களுடைய சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அதே போல் மனைவிமார்கள் கணவர்களைத் தங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அதனால் தான் மொத்த உலகமும் அசிங்கமாகப் போய்விட்டது. எல்லாரும் கிறுக்குத்தனமாக நடந்து கொள்கிறார்கள். எல்லாரும் துயரத்துடன் இருக்கிறார்கள்.

மனிதர்கள் ஏன் இவ்வளவு துன்பப்பட வேண்டும்? நமது துன்பங்களில் 99 சதவிகிதம் நாமே நமக்கு உருவாக்கிக் கொண்டவைதான். உடலுக்கென்று சில வரையறைகள் இருப்பதால் மீதமிருக்கும் ஒரு சதவிகித துன்பம் ஏற்படுகிறது. உடலுக்கு முதுமை வரும். நோய் வரும். ஒரு நாள் மரணமும் வரும். ஆனால் அந்த துன்பம் ஒரு சதவிகிதம் தான். நமது மனப்போக்கால் ஏற்படும் 99 சதவிகித துன்பங்களை நாம் அழித்துவிட்டால், மீதமிருக்கும் ஒரு சதவிகித துன்பத்தை நாம் மகிழ்ச்சியாக ஏற்றுக் கொண்டு வாழலாம். அதில் எந்த பிரச்சினையும் இருக்காது.

*கடைசிக் கேள்வி*

*ஓஷோ,*

*நமது சந்நியாசிகள் பலரிடம் நான் இதைக் கேட்டிருக்கிறேன். "நாம் ஒன்றுமே செய்யத் தேவையில்லை. எல்லாவற்றையும் ஓஷோவே செய்வார்." ஆனால் குர்ஜிஃப் என்ற ஞானி நமது முயற்சியின் மூலமாகத்தான், மனதின் ஆழத்தில் இருக்கும் வலுவான எண்ணங்களிலிருந்து உருவாகும் முயற்சியின் மூலமாகத்தான் நமக்கு விழிப்புணர்வு வளரும் என்று சொல்கிறார்.*

*ஆன்மிக வளர்ச்சி கொடுக்கும் வலிகளால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு சந்நியாசிக்காக இதைக கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்.*

அனுபூதி,

உனக்கு வளர்ச்சியால் ஏற்படும் வலிகள் எதுவும் இல்லை என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஏனென்றால் நீ தான் இன்னும் வளர ஆரம்பிக்கவேயில்லையே!

குர்ஜிஃபோடு கூடவே இருந்த ஒருவருடன் அனுபூதி பல ஆண்டுகள் இருந்திருக்கிறார். அதனால் இந்த கேள்வி வருகிறது. நன்றாகக் கவனியுங்கள். அனுபூதி குர்ஜிஃபோடு இருந்ததில்லை. அவரைப் பார்த்ததேயில்லை. குர்ஜிஃபோடு இருந்தவரோடுதான் இருந்திருக்கிறார்.

அனுபூதி, நீ குர்ஜிஃபோடு இருந்திருந்தால் உன் புரிந்து கொள்ளுதலே முற்றிலும் வேறுபட்டு இருந்திருக்கும்.

ஆனால் நீ குர்ஜிஃபோடு இருந்தவருடன் தான் இருந்திருக் கிறாய். அந்த நபர் பாவம் இன்னும் ஞானம் பெறவில்லை. அவரும் ஏறக்குறைய உன் நிலையில்தான் இருக்கிறார்.

அந்த நபர் - அவர் ஒரு பெண் - அனுபூதிக்கு குர்ஜிஃப் குறித்து சில மனக்கட்டுத்திட்டங்ககளை உருவேற்றியிருக்கிறார்.

'என்னைப் புரிந்து கொண்டவர்கள் கூட சரியாக என்னைப் புரிந்து கொள்ளவில்லை' என்று குர்ஜிஃப் அடிக்கடி சொல்வார். குர்ஜிஃபுடன் கூடவே இருந்து அவரைப் பற்றி பல நூல்களை எழுதிய பி.டி. உஸ்பென்ஸ்கியைக் கூட குர்ஜிஃப் ஒரு கட்டத்தில் நிராகரித்து விட்டார்.

உள்ளதைச் சொன்னால் குர்ஜிஃப் உலகப் புகழ் பெற்றதற்கு அந்த பி.டி.உஸ்பென்ஸ்கிதான் முழுக் காரணம். அவருடைய எழுத்துகளில்லாமல் குர்ஜிஃபை யாருக்குமே தெரிந்திருக்காது. உஸ்பென்ஸ்கியின் வாதத்திறமை, எழுத்துத்திறமை, தத்துவங்களைப் பகுத்தறியும் வல்லமை - இவைதான் குர்ஜிஃபை உலகத்தின் மிகப்பெரிய ஞானிகளில் ஒருவராக வெளிச்சம் போட்டுக் காட்டின.

அப்படிப்பட்ட உஸ்பென்ஸ்கியே தன்னை இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்ற வருத்தம் குர்ஜிஃபுக்குக் கடைசிவரையில் இருந்தது. ஒரு கட்டத்தில் உஸ்பென்ஸ்கி என்னைத் தப்பாகப் புரிந்து கொண்டுவிட்டார் என்று வெளிப்படையாகவே சொல்ல ஆரம்பித்தார் குர்ஜிஃப்.

அதனால் மனம் வெறுத்துப் போன உஸ்பென்ஸ்கி குர்ஜிஃபை விட்டுப் பிரிந்தார். பின் அவர் குர்ஜிஃபைக் கடுமையாக எதிர்க்கத் தொடங்கினார். உஸ்பென்ஸ்கியின் காதுபட குர்ஜிஃபின் பெயரைச் சொன்னாலேயே அவருக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்துவிடும்.

உஸ்பென்ஸ்கிக்கென்று பல சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் யாரும் குர்ஜிஃபின் பெயரைக் கூட சொல்லக்கூடாது என்று

உஸ்பென்ஸ்கி அவர்களுக்குக் கட்டுப்பாடு விதித்திருந்தார். இத்தனைக்கும் உஸ்பென்ஸ்கி தனது சீடர்களுக்குச் சொல்லிக் கொடுத்ததெல்லாம் குர்ஜிஃபின் தத்துவங்களைத்தான். எதையெல் லாம் அவர் குர்ஜிஃபின் தத்துவங்கள் என்று அவர் புரிந்து கொண்டாரோ, அதைத்தான்.

நீங்கள் உஸ்பென்ஸ்கியின் நூலையும், குர்ஜிஃபின் நூலையும் படித்தால் உங்கள் மனம் உஸ்பென்ஸ்கியைத்தான் அதிகம் விரும்பும். காரணம், உஸ்பென்ஸ்கி ஒரு தத்துவவாதி. ஆனால் குர்ஜிஃப் ஆன்ம ஞானி. உஸ்பென்ஸ்கியிடம் இருந்த அளவுக்கு குர்ஜிஃபுக்கு எழுத்துத்திறமைகூட கிடையாது.

குர்ஜிஃபின் எழுத்து படிக்கவே கடினமாக இருக்கும். சலிப் படையச் செய்யும். ஒரு புத்தகத்தை படித்து முடிப்பதற்குள் போதும், போதுமென்றாகிவிடும். உங்களுக்கு அபார மனவலிமை இருந்தால்தான் குர்ஜிஃபின் எழுத்துகளை அப்படியே படிக்க முடியும்.

குர்ஜிஃபின் மேல் மதிப்பும் அன்பும் கொண்ட பலரைச் சந்தித்திருக்கிறேன். அவர்கள் யாரும் குர்ஜிஃப் தன் கையால் எழுதிய எதையும் படித்தது கிடையாது. உஸ்பென்ஸ்கி, நிக்கோல் போன்றவர்கள் எழுதிய குர்ஜிஃபின் தத்துவங்களைத்தான் அவர்கள் படித்திருக்கிறார்கள்.

அதனால் தான் நான் அடித்துச் சொல்கிறேன். அனுபூதி, உனக்கு குர்ஜிஃபைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவருடன் பல வருடங்கள் ஒன்றாக வாழ்ந்தவர்களால் கூட அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. குர்ஜிஃப் ஒரு புரியாத புதிர். அவர் தன்னுடைய அனைத்துச் சீடர்களுக்கும் ஒரே மாதிரியான உபதேசத்தைச் செய்யமாட்டார். அவரைப் பொறுத்த மட்டில், ஒவ்வொரு சீடனும் ஒவ்வொரு ரகம். அதனால் அவர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருமாதிரி உபதேசங்கள் செய்வார்.

அவர் உஸ்பென்ஸ்கியிடம் ஒரு கருத்தைச் சொல்வார். சிறிது நேரத்தில் அதற்கு நேர் எதிரான கருத்தை நிக்கோல் என்ற இன்னொரு சீடரிடம் சொல்வார். ஏனென்றால் அவர்கள் தேவைகள் நேர் எதிரானவை என்று குர்ஜிஃபுக்கு நன்றாகத் தெரியும். அப்படி வேறுபட்ட இரு நபர்களுக்கு ஒரே மாதிரியான உபதேசத்தைச் சொல்வதால் எந்தப் பயனும் இல்லை என்றும் அவருக்குத் தெரியும்.

சில மனிதர்களிடம், "என்னிடம் முழுமையாகச் சரணடையுங் கள்" என்று கூடச் சொல்லியிருக்கிறார் குர்ஜிஃப்.

அப்படித்தான் ஒரு முறை.......

ஒரு பணக்கார ரஷியப் பெண்மணி குர்ஜிஃப்பைத் தேடி வந்தாள். தன்னை அவருடைய சிஷ்யையாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொண்டாள்.

குர்ஜிஃப் அவளிடம் என்ன சொன்னார் தெரியுமா?

"நீ அணிந்திருக்கும் விலை உயர்ந்த தங்க வைர நகைகளை உடனே என்னிடம் தர வேண்டும். நீ என் சிஷ்யையாக வேண்டு மென்றால் உன் நகைகளை எனக்கு உடனே தந்தாக வேண்டும். வேறு வழியேயில்லை."

அவளோ மிகப் பெரிய பணக்காரி. அவளிடம் ஏராளமான நகைகள் இருந்தன. நகைகளைக் கொடுப்பதற்கு அவளுக்குப் பயமாக இருந்தது. ஒரு வேளை குர்ஜிஃப் போலிச் சாமியாராக இருந்துவிட்டால்.....

அவள் தனது அறைக்குப் போய் சிந்திக்க ஆரம்பித்தாள்.

அப்போது அவளது அறையில் இன்னொரு பணக்காரப் பெண் இருந்தாள். அவள் குர்ஜிஃபின் சிஷ்யை. பல மாதங்களாக குர்ஜிஃபின் ஆசிரமத்தில்தான் அவள் இருந்து வந்தாள்.

இந்த புதுப் பெண் அவளிடம் யோசனை கேட்டாள்.

"குர்ஜிஃப் கேட்டுவிட்டார் என்பதற்காக எல்லா நகைகளையும் தந்துவிடலாமா? எனக்குப் பயமாக இருக்கிறது. உன்னிடமும் அவர் அப்படித்தான் கேட்டாரா? அதற்கு நீ என்ன செய்தாய்?"

அடுத்தவள் வாய் விட்டுச் சிரித்தாள்.

"இதில் ஒன்றும் பிரச்சினை இல்லை. குர்ஜிஃப் என்னிடமும் இப்படித்தான் கேட்டார். 'உன்னிடம் உள்ள விலைமதிப்பான பொருள்களை எல்லாம் என்னிடம் கொடுத்துவிட வேண்டும். அந்த அளவுக்குக்கூட உன்னால் தியாகம் செய்ய முடியவில்லை என்றால், என்னை மறந்துவிடு. உன்னுடைய தேடல் உண்மையானது என்றால் நீ எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்தேயாக வேண்டும்."

"நான் ஒன்றும் பேசாமல் கையில் இருந்ததை எல்லாம் அவர் காலடியில் வைத்து வணங்கினேன்.

"அதன் பின என்ன நடந்தது தெரியுமா? கேட்டால் ஆச்சரியப் படுவாய்! மறுநாள் காலை அவரே என் அறைக்கு வந்து என்னிடமிருந்து வாங்கிய பொருள்களை எல்லாம் திருப்பிக் கொடுத்துவிட்டார்."

இதைக் கேட்ட புதிய பெண்ணுக்கு ஒரே சந்தோஷம். உடனே தனது நகைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு போய் குர்ஜிஃப்பின் காலடியில் வைத்து வணங்கினாள்.

அன்று இரவு அவள் தூங்கவேயில்லை. மறுநாள் அதிகாலையிலிருந்து குர்ஜிஃப்புக்காக வழி மேல் விழி வைத்துக் காத்திருந்தாள். நண்பகல் ஆகியும் குர்ஜிஃப் வரவில்லை.

அதற்கு மேல் பொறுக்க முடியாமல் அடுத்த பெண்ணிடம் தனது நிலைமையைச் சொன்னாள்.

"அவர் ஏன் இப்படிச் செய்கிறார் என்று எனக்குத் தெரிய வில்லை. ஆனால் சத்தியமாக எனது பொருள்களை அப்படியே என்னிடம் ஒப்படைத்துவிட்டார். ஏன் உன் விஷயத்தில் இப்படி நடந்து கொள்கிறார் என்று எனக்குத் தெரியவில்லை."

அன்று இரவு வரை குர்ஜிஃப்புக்காகக் காத்துக் கொண்டிருந்த அந்த புதுப் பெண், மனம் வெறுத்துப் போய் அந்த ஆசிரமத்தை விட்டு வெளியேறினாள். அதோடு மட்டுமல்லாமல் குர்ஜிஃப் ஒரு போலிச் சாமியார் என்று ஊர் முழுவதும் வதந்திகளைப் பரப்பத் தொடங்கினாள்.

இப்போது ஏறகனவே குர்ஜிஃபின் சிஷ்யையான பெண் அந்த ஞானியைப் பார்த்து, தன் ஆதங்கத்தைச் சொன்னாள். "எனது நகைகளைக் கொடுத்தது போல் அவள் நகைகளை ஏன் அவளிடம் கொடுக்கவில்லை? இதனால் அவள் உங்களைப் பற்றிப் பல பொய்யான வதந்திகளைப் பரப்பிக் கொண்டிருக்கிறாள்."

குர்ஜிஃப் அமைதியாகச் சொன்னார். "நகைகளைக் கொடு என்று நான் கேட்டவுடன் யோசிக்காமல் நீ கொடுத்துவிட்டாய். அதனால் அவற்றை வைத்திருக்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை.

"ஆனால் அதைப் பற்றித் தீவிரமாக யோசித்திருக்கிறாள். உன்னிடமும் விசாரித்திருக்கிறாள். மொத்த நகைகளும் மறுநாள் காலை பத்திரமாக வந்து சேரும் என்று தெரிந்தபின் தான் அவள் நகைகளைக் கொடுக்க முன் வந்தாள்.

"அவள் என்னிடம் சரணடையவில்லை. கணக்குப் போட்டுக் கச்சிதமாகச் செயல்பட்டிருக்கிறாள். அப்படிப் பட்ட ஆட்கள் என்னைச் சுற்றி இருப்பதை நான் விரும்பவில்லை. அவளது நகைகளை அவளிடம் திருப்பிக் கொடுத்திருந்தால் அவள் இங்கேயே தங்கியிருப்பாள்.

“இப்போது பார், ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை அடித்துவிட்டேன். நமக்கு நல்ல காரியங்கள் செய்ய கையில் பொருள் கிடைத்துவிட்டது. ஓர் அடிமுட்டாளை ஆசிரமத்திலிருந்து துரத்தியாகிவிட்டது. இப்போது அவள் என்னைப் பற்றி வதந்திகளைப் பரப்பிக் கொண்டிருக்கிறாள். இதனால் அவளைப் போன்ற முட்டாள் பெண்கள் என்னை அண்ட மாட்டார்கள்.”

அனுபூதி, உனக்கிருப்பது வளர்ச்சியின் வலிகள் இல்லை. வெறும் மனக்குழப்பம்தான். எனது வேலை குர்ஜிஃபின் வேலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அடுத்து என்ன செய்வது என்பதுதான் உனது பிரச்சினை.

அனுபூதி இதே போல் பல கூட்டங்களில் நுழைந்திருக்கிறாள். எதிலும் தங்கியதில்லை. ஏனென்றால் எந்தக் கூட்டமும் தனது தகுதிக்கு உரியதாக இல்லை என்பதுதான் அவளுடைய எண்ணம். இந்தக் கூட்டங்களில் இருப்பவர்களைவிட அனுபூதிக்கு அறிவு அதிகம். அவள் இதிலேயே பல வருடங்கள் உழன்றிருக்கிறாள். ஆனால் எனது பணி முற்றிலும் மாறுபட்டது என்பதை அனுபூதி புரிந்து கொள்ள வேண்டும்.

குர்ஜிஃபின் பணி படிகத்தை மேலும் கெட்டியாக்கும் தன்மையானது. ஆனால் எனது பணியோ படிகத்தை முற்றிலுமாக கரைத்துவிடும் தன்மையானது. இரண்டுமே சரியான வழிகள் தான். இந்த இரண்டு வழிகளும் ஒரே இலக்கை நோக்கித்தான் செல்கின்றன. ஒன்று குர்ஜிஃபின் வழியில் உன் மனவலிமை மூலமாக உள்ளே நுழைய வேண்டும். இல்லை என் வழியில் சரணாகதியின் மூலமாக உள்ளே நுழைய வேண்டும்.

அனுபூதி, நீ கேட்கிறாய், *ஆன்மிக வளர்ச்சி கொடுக்கும் வலிகளால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு சந்நியாசிக்காக இதைக கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்.*

நீ குர்ஜிஃபின் தத்துவங்கள் மூலமாக என்னை உணர முயற்சி செய்து கொண்டிருக்கிறாய். அது சரிப்படாது. நீ என்னைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் குர்ஜிஃபை மூலையில் கடாசிவிட வேண்டும். எனக்கு அந்த மனிதரை மிகவும் பிடிக்கும். நான் குர்ஜிஃபின் மேல் மிகுந்த நேசமும் மரியாதையும் வைத்திருக்கிறேன் என்றாலும், எங்கள் வழிகள் ஒன்றுக்கு ஒன்று எதிரானவை.

ஆனால் உன்னைச் சொல்லியும் குற்றமில்லை, அனுபூதி. பழைய பழக்கங்களை அவ்வளவு எளிதாக மாற்றிவிட முடியாது.

இப்படித்தான் அந்தக்கால அமெரிக்காவில்....

அப்போது கறுப்பர்கள்-வெள்ளையர்கள் பாகுபாடு பயங்கரமாக இருந்தது. அப்போது இனவெறி தாண்டவமாடிய தென் மாகாணம் ஒன்றில் இருந்த பள்ளியில் இருந்த ஆசிரியைக்கு ஒரு தலைவலி. அப்போது அந்த பள்ளிக்கூடத்தில் இருந்த விதிகளின் படி வெள்ளைக்கார குழந்தைகள் தான் பள்ளிப் பேருந்தில் செல்ல வேண்டும்.

கருப்பினக் குழந்தைகள் கால் நடையாகத்தான் போக வேண்டும். இதனால் வெள்ளைக் குழந்தைகளும், கருப்புக் குழந்தை களும் சதா சண்டை போட்டுக் கொண்டேயிருந்தன.

ஒரு நாள் அந்த ஆசிரியை குழந்தைகளை எல்லாம் அழைத்துச் சொன்னாள்,

"ஏன் இந்த நிற வெறி உங்களுக்கு? இனிமேல் உடல் நிறத்தை வைத்துச் சண்டை போடும் மோசமான பழக்கங்களை விட்டொழி யுங்கள். நாம் எல்லாருமே சமம்தான். தெரிகிறதா?

"கருப்போ, வெள்ளையோ, எல்லாரும் ஒன்றுதான். கருப்பு, வெள்ளை என்று நிற வேறுபாடு இருப்பதால்தானே இவ்வளவு குழப்பம் வருகிறது? இன்றிலிருந்து நாமெல்லாம் நீல நிறத்தவர்கள் என்று எண்ணிக் கொள்ளுங்கள். புரிகிறதா? நாம் எல்லாருமே நீல நிறத்தவர்கள்தான்.

"இப்போது வெளிர் நீல நிறத்தவர்கள் எல்லாம் பேருந்தில் ஏறுங்கள். கருநீல நிறத்தவர்கள் கால்நடையாகவே உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். "

பழைய பழக்கங்கள் எளிதில் போய்விடாது.

அப்படித்தான் ஒரு முறை மேலுலகத்தில் ஒரே கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. மேலுலகத்தின் காவலரான புனித பீட்டரிடம் கடவுள் அதற்கான காரணத்தைக் கேட்டார்.

"எல்லாம் அந்த மனிதன் ஹிட்லரால் வந்த வினை. எப்போது பார்த்தாலும் யூதர்கள், யூதர்கள் என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருக்கிறான். ஆனால் இறைவா, கவலைப்படாதீர்கள். கொஞ்ச நேரத்தில் நான் அவனைச் சமாளித்துவிடுவேன்."

அதேபோல் சிறிது நேரத்தில் சத்தம் அடங்கி அமைதியானது.

கடவுளுக்கு ஒரே ஆச்சரியம்.

"என்ன மாயம் செய்தாய் பீட்டர்?"

"அது ஒன்றும் பெரிய விஷயமில்லை. ஹிட்லர் முதலில் பெயிண்ட் அடிப்பவனாகத்தானே இருந்தான். அதனால் அவன் கையில் ஒரு வர்ணமடிக்கும் தூரிகையைக் கொடுத்துவிட்டேன். இப்போது மேகக்கூட்டங்களில் எல்லாம் அவன் "யூதர்கள், யூதர்கள்" என்று எழுதித் தள்ளிக் கொண்டிருக்கிறான்."

பழைய பழக்கங்கள்....

அனுபூதி, இப்போது நீ இங்கே வந்திருக்கிறாய். இங்கே வருவதற்காக நீ மாதக்கணக்கில் காத்துக் கொண்டிருந்தது எனக்குத் தெரியும். இங்கே என்னிடம் வர வேண்டும் என்று நீ ஏங்கியிருக்கிறாய்.

நீ யாரை குரு என்று நம்பிக் கொண்டிருந்தாயோ அந்தப் பெண்ணை ஏமாற்றிவிட்டு, உன்னுடன் இருந்த மற்ற சீடர்களையும் ஏமாற்றிவிட்டு இங்கே வந்திருக்கிறாய். ஆனால் நீ இன்னும் முழுமையாக இங்கு வரவில்லை. இப்போது நீ அங்கும் இல்லை. இங்கும் இல்லை. திரிசங்கு சொர்க்கத்தில் தொங்கிக் கொண்டிருக் கிறாய்.

நீ குர்ஜிஃப் வழியில் நடக்க வேண்டும் என்று விரும்பினால் இங்கிருந்து சீக்கிரமே ஓடிப்போய்விடு. என் வழியில் வர விரும்பினால் நீ உன்னை மாற்றிக் கொள்ள வேண்டும்.

நீ சொல்கிறாய்

*நமது சந்நியாசிகள் பலரிடம் நான் இதைக் கேட்டிருக்கிறேன். "நாம் ஒன்றுமே செய்யத் தேவையில்லை. எல்லாவற்றையும் ஓஷோவே செய்வார்."*

ஒன்றும் செய்யாமல் சும்மா இருப்பது மிகவும் எளிதான காரியம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். தவறு, அனுபூதி, தவறு. அதைப் போன்ற ஒரு கடினமான காரியம் இந்த உலகத்தி லேயே கிடையாது. ஒன்றும் செய்யாமல் சும்மா இருத்தல் என்பதே ஒரு தவம். அதை எல்லாராலும் செய்ய முடியாது என்பதை நீ முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

நீ எந்த செயலை வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் செயலற்று இருப்பது என்பது மிகவும் கடினமானது.

*ஒன்றுமே செய்யாமல்*
*அமைதியாக அமர்ந்திருக்க,*
*வசந்தம் வருகிறது*
*புல் தானாகவே முளைக்கிறது.*

இந்த ஜென் ஹைக்கூ கவிதையின் உள்ளர்த்தத்தை நீ அறிவாயா?

குர்ஜிஃப் செயல் மூலமாக விளக்குகிறார. நான் செயலற்றநிலை மூலம் விளக்குகிறேன். எங்களிடையே பல வேறுபாடுகள் இருக்கின்றன. குர்ஜிஃப் தன்னுடைய சீடர்களிடமிருந்து அதிகபட்சம் வேலை வாங்குவதில் வல்லவர். அவர் விடுதலைக்குக் காட்டிய வழி அதிகப்பட்ச செயல்பாடு. ஆனால் என்னுடைய வழி அத்தனை தீவிரமானது இல்லை. எனக்குத் தீவிரவாதம் பிடிக்காது. அதனால் நான் நடுவில் இருக்கும் மிதமான வழியைத்தான் காட்டுகிறேன்.

அனுபூதி, நீ மிகச்சரியாக நடுவில் நிற்பதையே நான் விரும்புகிறேன். அங்கேதான் நீ சமநிலையில் இருக்க முடியும். அங்கேதான் நீ சமன்பட்ட நிலையில் வாழ முடியும். நீ இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும் என்று நான் ஒரு போதும் சொன்னதில்லை.

நீ சொல்கிறாய் *நமது சந்நியாசிகள் பலரிடம் நான் இதைக் கேட்டிருக்கிறேன். "நாம் ஒன்றுமே செய்யத் தேவையில்லை. எல்லாவற்றையும் ஓஷோவே செய்வார்."*

நான் எதையும் செய்யமாட்டேன். ஒரு பேச்சு வழக்கிற்காக அப்படிச் சொல்லலாமே தவிர நான் உண்மையிலேயே எதையும் செய்ய மாட்டேன் என்பதை நீ நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். என் சந்நியாசிகளை எதையாவது செய்யச்சொல்லி வற்புறுத்தவும் மாட்டேன்.

ஆனால் பாவம் அவர்களுடைய பழைய பழக்கங்களிலிருந்து, மனக்கட்டுத் திட்டங்களிலிருந்து அவர்களால் மீண்டு வரமுடிய வில்லை. அதனால் அவர்கள் புரிந்து கொள்ளும் வகையில்,

"என்னிடம் விட்டுவிடுங்கள். நான் செய்து கொள்கிறேன்." என்று சொல்கிறேன்.

ஆனால் நான் எதையும் செய்ய மாட்டேன். உலகத்திலேயே மிகச் சோம்பேறியான மனிதன் நான் தான். நான் இதுவரை வாழ்க்கையில் எதையுமே செய்ததில்லை. நீ தான் பார்க்கிறாயே, அனுபூதி- நான் நூறு அடி கூட நடப்பதில்லை.

என் உதவியாளர் லட்சுமியிடம் சொல்லியிருக்கிறேன். " நமது புது ஆசிரமத்தில் கார் மேடை வரை வரவேண்டும். என்னால்

அதிக தூரம் நடக்க முடியாது.'' நான் தான் முழுச் சோம்பேறியா யிற்றே! எதற்காக நடக்க வேண்டும்? நான் செயலற்றவன்.

ஆனால் என் சந்நியாசிகள் எல்லாவற்றையும் செய்தே பழக்கப் பட்டவர்கள். அதனால் தான் அவர்களுக்கு ஆறுதலாக நான் சொல்கிறேன். ''கவலைப்படாதீர்கள். நான் செய்து கொள்கிறேன். நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம். விட்டுவிடுங்கள்.''

செயல்நிலையை விட்டு அடுத்த நிலைக்கு அவர்களை முன்னேற வைக்க வேண்டும் என்பதற்காக நான் கையாளும் உத்தி அது. நீ இயல்பாக இருப்பதையே நான் விரும்புகிறேன்.

ஆன்மிகத்தில் குர்ஜிஃப் ஒரு தீவிரவாதி. அவரது வழி உனக்குள் ஓர் அழுத்தத்தை உண்டாக்கும். உனக்குள் அது ஓர் உராய்வை ஏற்படுத்தும். அந்த உராய்வுதான் குர்ஜிஃபின் வழியின் மூலம்.

நான் சொல்லும் வேலை, வேலையேயில்லை. வேலை யில்லாமல் தளர்வான நிலையில் சும்மா இருத்தலே எனது வழி. என் வழி ஓய்வு. தளர்வாக இருத்தல். மோனநிலையில் லயித்திருத்தல். கொஞ்சம் கொஞ்சமாக மௌனமாகிக்கொண்டே போவது. ஒரு கட்டத்தில் பரிபூரண மௌனத்தில் திளைத்திருப்பதே எனது வழி.

அப்படியே நீ எதையாவது செய்தாலும் அதை நீ பெரிதாக எடுத்துக் கொள்ளக்கூடாது. உன்னை அந்தச் செயலின் கர்த்தாவாக நினைத்துக் கொள்ளக்கூடாது.

ஆனால் குர்ஜிஃபின் வழி தீவிரமானது. என்னுடைய வழி விளையாட்டுத்தனமானது. என்னுடைய வழி சிரிப்பு, பாட்டு, நடனம் இவைதான். நான் அதனை வேலை என்று சொல்வதில்லை. என்னைப் பொறுத்தமட்டில் வேலை என்பது ஒரு கெட்ட வார்த்தை.

அனுபூதி, நீ ஏன் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருக் கிறாய் தெரியுமா? நீ உன்னுடைய பழைய எண்ணங்களில் இருந்து இன்னும் மாறவில்லை அதனால் தான். ஒன்று, உன்னுடைய பழைய எண்ணங்களை விட்டுவிட்டு என்னுடன் முழுமையாக வர வேண்டும்.

இல்லையென்றால் என்னை விட்டுவிட்டு உன்னுடைய பழைய எண்ணங்கள் காட்டும் பாதையில் செல்ல வேண்டும். ஒரே நேரத்தில் இரண்டு குதிரைகள் மேல் சவாரி செய்யலாம் என்று நினைக்காதே. அது பயனற்றது. ஆபத்தானது.

ஓர் அழகான ஆண் பூனை சாலையில் நடந்து போய்க் கொண்டிருந்தது. பூங்காவிற்குப் போகும் வழியில் ஒரு சிறிய ஆண் பூனையைச் சந்தித்தது. பாவம், அந்த சிறிய பூனைக்கு 'உலக விஷயங்கள்' அவ்வளவாகத் தெரியாது.

"அண்ணா, எங்கே போகிறீர்கள்?" என்று மரியாதையாகக் கேட்டது அப்பாவிப் பூனை.

"ம்... பூங்காவிற்குப் போய் நல்ல அழகான பெண் பூனை யுடன் உடலுறவு கொள்ளப்போகிறேன்." என்று பெருமையாகச் சொன்னது முதல் பூனை.

"உடலுறவு என்றால் என்ன அண்ணா? அது நாம் சாப்பிடும் மீன், பால் போன்ற ஒரு தின்பண்டமா?"

"முட்டாளே, என்னுடன் வா. நீயே தெரிந்து கொள்வாய்." குட்டிப் பூனையும் அதனைப் பின்தொடர்ந்து போனது.

பூங்காவின் நடுவே இருந்த பெரிய நீரூற்றிற்கு அருகில் அந்த நகரிலேயே மிக அழகான பெண் பூனை ஒன்று அமர்ந் திருந்தது. அதன் தங்க நிற முடி சூரிய ஒளியில் தகதகத்துக் கொண்டிருந்தது.

முகத்தின் குறும்புத்தனமான புன்னகையுடன் தன்னை நோக்கி வரும் பெரிய ஆண் பூனையைப் பார்த்ததும் விஷயத்தைப் புரிந்து கொண்டது பெண் பூனை. 'ஐயோ, மாட்டிக் கொண்டேனே!' என்று கதறியபடி நீரூற்றைச் சுற்றி ஓடத் தொடங்கியது.

"முட்டாளே, வா, என்னுடன்." என்று சிறிய ஆண் பூனைக்குக் கட்டளையிட்டுவிட்டு பெண் பூனையைத் துரத்தத் தொடங்கியது பெரிய ஆண் பூனை. அந்த நீரூற்றைச் சுற்றி மூன்று முறை ஓடிவிட்டன பூனைகள். 'இன்னும் வேகமாக.' என்று அலறியபடி ஓடிக் கொண்டிருந்தது ஆண் பூனை.

சிறிது நேரத்திலேயே அந்த சின்ன ஆண் பூனைக்கு வாயில் நுரை தள்ளிவிட்டது. களைத்துப்போய் இனிமேல் ஓடமுடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டது அது. அதற்கு மூச்சு வாங்கியது. அப்போது அது பெரிய பூனையைப் பார்த்துச் சொன்னது.

"அண்ணா, உங்களுக்காக வேண்டுமானால் இன்னும் ஒரு சுற்று உடலுறவு கொள்கிறேன். ஆனால் அதற்கு மேல் சத்தியமாக எனக்கு முடியாது."

பாவம் அந்த பூனை, நீரூற்றைச் சுற்றி ஓடுவதுதான் உடலுறவு என்று நினைத்துக் கொண்டுவிட்டது.

அனுபூதி, நீ சொல்கிறாய், "ஆனால் குர்ஜிஃப் நமது முயற்சியின் மூலமாகத்தான், மனதின் ஆழத்தில் இருக்கும் வலுவான எண்ணங்களிலிருந்து உருவாகும் முயற்சியின் மூலமாகத்தான் நமக்கு விழிப்புணர்வு வளரும் என்று சொல்கிறார்.

அது உண்மைதான். ஆனால் அதற்கு முதற்படியாக குர்ஜிஃபின் முறையை நீ முழுவதுமாகப் பின்பற்ற வேண்டும். அதற்கு உனக்கு முதலில் குர்ஜிஃப் வேண்டும். குர்ஜிஃப் இல்லாமல் அவரது முறைகளை உன்னால் பின்பற்றவே முடியாது. ஆச்சாரியன் இல்லாமல் எந்த முறையும் - அது எவ்வளவு அழகாக, வலுவாக இருந்தாலும் சரி - வேலைக்கு ஆகாது.

உண்மையைச் சொல்லப்போனால் இந்த இடத்தில் ஆச்சாரியனின் முன்னிலைதான் முக்கியமே தவிர அவர் கற்றுத் தரும் முறைகள் முக்கியமல்ல. உயிருடன் இருக்கும் ஆச்சாரியனிடம் கற்கும் போது, எந்த முறையைக் கடைப்பிடித்தாலும் பாதகமில்லை. இறந்துவிட்ட ஆச்சாரியனின் எந்த முறையும் பயன்படாது. இந்த உண்மையை உன் மனதில் ஆழமாகப் பதியவைத்துக் கொள்.

அதனால் தான் ஆச்சாரியன் வாழும் காலத்தில் அழகான வழிகள் என்று மக்கள் சிலாகித்துச் சொன்னவையெல்லாம் அவர் காலத்துக்குப் பின்னால் வெறும் போலிகளாகிவிட்டன.

ஆன்மிகத்தில் வழிகளும் முறைகளும் முக்கியமல்ல, குருதான் முக்கியம். அந்த வழிகளுக்கும், முறைகளுக்கும் காரணகர்த்தாவாக இருக்கும் ஆச்சாரியனின் அருள்தான் முக்கியம். ஆச்சாரியனின் முன்னிலைதான் அந்த வழிகளுக்கு சாந்நித்தியத்தைக் கொடுக்கிறது. ஆச்சாரியனுடைய அருள்தான் எல்லாவற்றிற்கும் மூல காரணம்.

நான் ஒரு நாள் இறந்துவிடுவேன். அதன் பின்னும் நான் வகுத்துக் கொடுத்த சூஃபி நடனம், குண்டலினிப் பயிற்சி, குழப்பநிலை தியானம் போன்ற வழிமுறைகள் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்.

நான் சொல்லிக்கொடுத்த மாதிரியே இம்மி பிசகாமல் நடக்கும். என்றாலும் அதில் ஏதோ ஒன்று குறைவதை நீங்கள் உணர்வீர்கள். அந்த வழிமுறைகளுக்குள் ஆன்மா இல்லை என்பதை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். அவை எல்லாம் வெறும் சடங்குகளாக மட்டுமே இருக்கும்.

இதே பாணியில் தான் கிறிஸ்துவ தேவாலயங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இப்படித்தான் இந்துக்களும், இஸ்லாமியர் களும், பௌத்தர்களும் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஏசுநாதர் உயிருடன் இருந்த போது அந்த வழிமுறைகள் பலன் தந்தன. புத்த பெருமானும், கிருஷ்ண பரமாத்மாவும் இருந்தபோது அவை வெற்றியைக் கொடுத்தன.

இதில் நாம் அறிந்து கொள்ள வேண்டிய சாரம் என்னவென் றால் வழிமுறைகள் என்று ஒன்றுமே கிடையாது. குருவின் அருள் தான் நம்மைக் காப்பாற்றுமே தவிர, குரு உருவாக்கித் தந்த வழிமுறைகள் அல்ல.

இதுதான் விஞ்ஞானத்திற்கும் மெய்ஞ்ஞானத்திற்கும் உள்ள அடிப்படை வேறுபாடு. மெய்ஞ்ஞானம் என்பது மந்திரவேலையைப் போன்றது. ஆச்சாரியன் என்ற மந்திரவாதி இருக்கும் வரைதான் அந்த மந்திர வேலை பலன் தரும். விஞ்ஞானத்திற்கு வழிமுறைகள் தான் முக்கியம். குறிப்பிட்ட வழிமுறையை யார் கையாண்டாலும் அதே விளைவுகள் தான் ஏற்படும்.

விஞ்ஞானம் வழிமுறைகளைச் சார்ந்திருக்கிறது. மெய்ஞ்ஞானம் நல்ல குருவைச் சார்ந்திருக்கிறது. யாருடைய முன்னிலையில் நாம் விழிப்பு நிலை எய்துகிறோமோ அவரே குரு.

ஆகையால் அனுபூதி, நீ என்னோடு இயைந்து செயல்பட்டால் ஏதாவது நடக்க வாய்ப்பு இருக்கிறது. நடக்க முடியாதது கூட நடக்கலாம். ஆனால் அதற்கு நீ என்னுடன் இயைந்து நடக்க வேண்டும். அதற்கு குர்ஜிஃப் ஒரு தடையாகத்தான் இருப்பார்.

குர்ஜிஃபை நீ தேர்ந்தெடுத்தால் அவரது வழியில் முழுமை யாகச் செல். அதில் உள்ள ஒரே சிக்கல், இப்போது குர்ஜிஃப் உயிருடன் இல்லை. அவர் சொல்லிக் கொடுத்த வழிமுறைகளை உன் வாழ்நாள் முழுவதும் நீ கடைப்பிடித்துக் கொண்டே யிருக்கலாம். ஆனால் அதனால் ஒன்றும் ஏற்படப் போவதில்லை. நீ இருந்த இடத்திலேயே தான் இருப்பாய்.

○

## 3. நிஜ ரோஜாக்களை வளருங்கள்

*முதல் கேள்வி:*

*திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ்வது எப்படி?*

அது சாத்தியமில்லை. இதுவரை அப்படி நடந்ததேயில்லை. இனிமேல் அப்படி நடக்கவும் வாய்ப்பில்லை. திருமணம் என்பது இயற்கைக்கு எதிரானது. திருமணம் என்பது மனிதன் மேல் திணிக்கப்பட்ட ஓர் அமைப்பு.

அன்றைய சூழ்நிலையில் இருந்த ஏதோ ஒரு தேவைக்காக, மனிதன் தன்னைத் தானே அடைத்துக் கொள்ள கண்டுபிடித்த சிறைதான் திருமணம். இன்று அந்தத் தேவையும் காலாவதியாகி விட்டது. கடந்த காலத்தில் திருமணம் என்பது தவிர்க்க முடியாத தீமையாக இருந்தது. இன்று அது தேவையில்லாத ஒன்றாகிவிட்டது. இப்போது அதனை விட்டுவிடுவதுதான் புத்திசாலித்தனம்.

திருமண பந்தத்தால் மனிதன் அல்லல் பட்டது போதும். அதனால் மனிதன் தேவைக்கு அதிகமாகவே துயர்பட்டுவிட்டான். திருமண பந்தம் என்பதே ஓர் அசிங்கமான சமூக அமைப்பு - காரணம், ஒருநாளும் அன்பையும் காதலையும் நாம் சட்டத்துக்குள் அடக்கிவைக்க முடியாது. காதலும், சட்டமும் ஒன்றுக்கு ஒன்று முரணானவை.

திருமணம் என்பது காதலைச் சட்டபூர்வமாக்கும் ஒரு முயற்சி. அது பயத்தின் அடிப்படையில் விளைந்தது. வருங்காலத்தைப் பற்றி, நாளைய நிலைபற்றி மனிதன் அதிகமாகக் கவலைப்பட்டதன் விளைவாகத்தான் திருமணம் என்ற அமைப்பைக் கண்டுபிடிக்க நேர்ந்தது.

மனிதன் எப்போதும் கடந்த காலத்தைப்பற்றியும் வருங் காலத்தைப் பற்றியும் யோசித்துக் கொண்டிருக்கிறான். இதன் காரணமாக நிகழ்காலத்தை அழித்துக் கொண்டிருக்கிறான். நிகழ்காலம் மட்டும் தான் நிஜம். நிகழ்காலத்தில் மட்டும் தான் நாம் வாழ முடியும். வாழ வேண்டும். இறந்த காலம் ஏற்கனவே இறந்துவிட்ட காலம். அதை குழி தோண்டி புதைத்தால் தான் நிகழ்காலத்தில் நிம்மதியாக வாழமுடியும்.

உண்மையான அறிவுள்ளவன் கடந்த காலத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அதை நினைத்துக் கூட பார்ப்பதில்லை. எது நடந்ததோ அது நடந்துவிட்டது. அதைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? அவன் வருங்காலத்தைப் பற்றியும் கவலைப்படுவதில்லை.

அதுதான் இன்னும் வரவேயில்லையே! வருங்காலம் வரும் போது அதை எப்படி சமாளிப்பது என்று அறிவாளிக்குத் தெரியும். அதைப் பற்றி இப்போது நினைப்பதால் என்ன லாபம்? இதுவரை எழாத கேள்விகளுக்கு எதற்கு ஏற்கனவே தயாராக இருக்கும் பதில்களைச் சொல்வது அபத்தம் அல்லவா?

ஏற்கனவே நீங்கள் தயாராக வைத்திருக்கும் பதில்கள் அபத்தமாகத்தான் இருக்கும். ஏனென்றால் வாழ்க்கை ஒவ்வொரு நொடியும் மாறிக் கொண்டேயிருக்கிறது. வாழ்க்கை எப்போதும் ஒரு புதிராகவே, ஒரு வியப்பான விஷயமாகவே இருக்கிறது. அதைக் கணிக்கவே முடியாது.

ஆனால் வருங்காலத்துக்குத் தயாராக இருப்பதுதான் சாமர்த்தியம் என்று மனிதன் நினைத்துக் கொண்டிருக்கிறான். நீங்கள் இன்று ஓர் ஆணைக் காதலிக்கலாம். ஒரு பெண்ணின் மேல் மோகம் கொள்ளலாம். ஆனால் வருங்காலத்தில் அந்த காதல் என்ன ஆகும் என்று உங்களால் கணிக்க முடியாது.

நீங்கள் இன்று காதலிக்கும் ஒரு பெண் நாளை வேறு ஒருவரை விரும்பலாம். உங்களையே அவள் காதலித்து விட்டாள். மற்றொருவரை அவள் காதலிக்க மாட்டாள் என்று என்ன நிச்சயம்? இது உங்களுக்கே தெரியும்.

'அவள் என்னையே விரும்பினாள். அதனால் அவள் நிச்சயம் வேறு ஒருவரை விரும்புவதற்கு வாய்ப்பு இருக்கிறது.' இந்த எண்ணம் எப்படியும் உங்கள் மனதில் ஓடிக் கொண்டுதான் இருக்கும்.

எப்படியாவது அவளை வேறு ஒருவரைக் காதலிக்கவிடாமல் தடுக்க வேண்டும் என்று நினைக்கத் தொடங்குகிறீர்கள். அப்போது தான் உங்களுடைய வருங்காலம் பத்திரமாக, பாதுகாப்பாக இருக்கும். அது மட்டுமில்லை, அவளுடைய வருங்காலமும் உங்களுடையதாகிவிடும்.

காதல் இருக்கிறதோ இல்லையோ அந்த பெண்ணின் உடல் என்றென்றும் உங்களுக்குச் சொந்தமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். அவளுடைய இதயத்தைப் பற்றி, ஆன்மாவைப் பற்றி, காதலைப்பற்றி உங்களுக்குக் கவலையில்லை.

ஏனென்றால் சட்டத்தால் அவளது இதயத்துக்குத் தடை போட முடியாது. அவளது ஆன்மாவைக் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் சட்டத்தால் அவளது உடலைக் கட்டுப்படுத்த முடியும். சட்டத்தால் அவளது உடலைத் தண்டிக்க முடியும்.

அது மட்டுமில்லை. உங்களுக்கு அந்தப் பெண்ணிடம் மட்டும் பயமில்லை. உங்களுக்கு உங்களிடமே பயமாக இருக்கிறது. இந்தப் பெண்ணிடம் காதல் கொண்டது போல் நீங்கள் வேறு பெண்ணிடம் காதல் கொள்ளலாம் இல்லையா?

உங்கள் மனம் சதா வேறு பெண்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியும். நாளை இந்த பெண்ணிடம் உங்களுக்கு நாட்டமில்லாமல் போய்விடலாம்.

அது வெறும் சாத்தியக்கூறு அல்ல. நிச்சயம் அப்படி நடக்கும். அப்படி நினைக்கும் போதுதான் உங்களுக்கு உங்கள் மீதே பயமாக இருக்கிறது. இதில் இருந்து நீங்கள் தப்பி ஓட நினைக்கிறீர்கள்.

இந்த பெண் உங்களை நன்றாகப் பார்த்துக் கொள்வதால் நீங்கள் அவளையே பற்றிக் கொண்டு வாழ்க்கை முழுவதும் இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். அவள் உங்களுக்கு வாழ்க்கையில் ஓர் ஆறுதலாக இருந்திருக்கிறாள்.

பல சமயங்களில் உங்களுக்குத் தாயாக இருந்திருக்கிறாள். உங்களுக்கு ஆதரவாக இருந்து உங்கள் வாழ்க்கையைச் சுகமாக்கி யிருக்கிறாள். அதனால் அவளைவிட்டுவிட்டு வேறு ஒரு பெண்ணைத் தேட நீங்கள் அஞ்சுகிறீர்கள்.

அவளுக்குத் துரோகம் செய்ய உங்கள் மனம் இடம் கொடுக்கவில்லை. உங்களுக்கு உங்கள் ஆழ்மனதைப் பார்த்தாலே

பயமாக இருக்கிறது. அது உங்களை எங்கு வேண்டுமானாலும் இழுத்துக் கொண்டு போகலாம்.

'நான் என்றும் உன்னை விட்டுப் போகமாட்டேன்.' என்று அந்தப் பெண்ணிற்கு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறீர்கள். காலம் முழுவதும் உன்னைக் காதலிப்பேன் என்று அவளுக்கு வாக்கு கொடுத்திருக்கிறீர்கள். நீங்கள் செய்து கொடுத்த சத்தியத்தை மீற உங்களுக்குப் பயமாக இருக்கிறது. 'இந்த சத்தியத்தை மீறினால் உனக்கு மன்னிப்பே கிடையாது.' என்று உங்கள் மனச்சாட்சி உங்களை அச்சுறுத்திக் கொண்டேயிருக்கிறது. ஒரு வேளை அந்த சத்தியத்தை மீற நேர்ந்தால் அந்த பாரம் நீங்கள் சாகும் வரை உங்களை அழுத்திக் கொண்டேயிருக்கும். அந்த குற்ற உணர்விலிருந்து உங்களால் தப்பிக்கவே முடியாது.

பெண்ணின் நிலையும் உங்களுடையதைப் போலத்தான் இருக்கிறது. அதனால் தான் ஆணும் பெண்ணும் தங்கள் வருங் காலத்தைப் பற்றி பயமில்லாமல் இருக்க திருமண பந்தம் என்ற சமூக அமைப்பு கண்டுபிடிக்கப்பட்டது. தங்கள் மேல் நம்பிக்கை யில்லாத அந்த பயந்தாங்கொள்ளிகள் சட்டம், சமுதாயம், சம்பிர தாயம் ஆகியவற்றின் துணையை நாடுகிறார்கள். தங்களைச் சுற்றி ஆயிரக்கணக்கான சுவர்களை எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள் - அந்த சுவர்களுக்குள் அவர்கள் என்றும் சேர்ந்தேயிருக்க வேண்டும் என்பதற்காக.

ஆனால் - இது சிறிய ஆனால் இல்லை, மிகப் பெரிய ஆனால் - நாளை ஏதாவது நடந்துவிட்டால் உங்கள் வாழ்க்கையே துன்பமாகிவிடும். நாளை நிச்சயம் ஏதாவது நடக்கும். இன்றிருப் பதைப் போல் நாளை இருக்காது. ஏதாவது ஒரு மாற்றம் நிகழ்ந்தே தீரும். வாழ்க்கை எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லை.

அடுத்தடுத்த நொடிகளில் கூட மாற்றங்கள் நிகழலாம். உலகமே தலைகீழாக மாறிவிடலாம். வருங்காலத்தைப் பற்றி யாராலும் எதுவும் சொல்ல முடியாது. வருங்காலம் என்பது நமது கணிப்பிற்கும், அறிவிற்கும் அப்பாற்பட்டது.

ஜாதகம், கைரேகை, எண்கணிதம், சீனர்களின் தாரோட் கார்டுகள், ஐ-ச்சிங் என்ற ஜோதிடமுறை எதுவுமே நமக்கு உதவாது. வருங்காலத்தைக் கணிப்பதற்காக மனிதன் தலையால் தண்ணீர் குடித்துப் பார்த்தான். எதுவுமே பலிக்கவில்லை. வருங்காலம் என்ன என்பது நமக்கு தெரியாது. நாம் தெரிந்து கொள்ளவும் முடியாது.

அப்படி இருக்கும் போது நீங்கள் ஏன் உங்கள் இருவரையும் சுற்றி தடுப்புச்சுவர்கள் எழுப்பிக் கொள்ள வேண்டும்? வெளியே போகும் வழிகளை எல்லாம் ஏன் அடைத்து வைக்க வேண்டும்?

அப்படி அடைபட்டுக்கிடந்தால் உங்களுக்குச் சுவாசிக்கக்கூட காற்று இருக்காது. நீங்கள் மூச்சுத் திணறுவீர்கள். உங்களுக்கு காரணமில்லாமல் கோபம் வரும். ஆத்திரம் வரும். இப்போது நீங்களே உருவாக்கிய சிறையில் இருந்து உங்களாலேயே தப்பிக்க முடியாது. அதனாலேயே உங்களுக்குக் கோபம் வரும்.

உங்களை நீங்களே சிறைப்படுத்திக் கொண்டீர்கள். இப்போது அந்த சிறையில் வாழ்வதற்கான ஒரே வழி - உங்களை உணர்ச்சியற்றவராக ஆக்கிக் கொள்வதுதான். உங்களிடம் இருக்கும் அன்பு என்ற உணர்ச்சியை உருத்தெரியாமல் அழித்துவிடுவதுதான். எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் போலியாக வாழ்வது தான். சுருங்கச் சொன்னால் செத்ததைப் போல் வாழ்வதுதான் ஒரே வழி. அப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை தேவைதானா?

அதனால் தான் மனிதர்கள் வெகு சீக்கிரம் இறந்து விடுகிறார்கள். அவர்கள் இறந்து முப்பது, நாற்பது வருடங்களுக்குப் பிறகு தான் அவர்கள் புதைக்கப்படுகிறார்கள் அல்லது எரிக்கப்படுகிறார்கள்.

ஆமாம், அவர்கள் பிணங்களாகத்தான் வாழ்கிறார்கள். இன்று பலரும் தங்களுடைய முப்பதாவது வயதிலேயே இறந்து விடுகிறார்கள். பின் தங்களுடைய 70ஆவது, 80ஆவது வயது வரை பிணம் போன்ற நிலையில் தான் தங்கள் சிறை வாழ்க்கையைத் தொடர்கிறார்கள்.

அவர்களிடம் உள்ள காதல் செத்தவுடன் அவர்களும் செத்துவிடுகிறார்கள். ஏனென்றால் அன்புதான் வாழ்க்கையே. ஆனால் காதல் சட்டம் இல்லை. காதல் காரண-காரியத்துக்குக கட்டுப்படும் தர்க்க சாஸ்திரம் இல்லை. வாழ்க்கை அடிப்படையில் ஆபத்தானது, பாதுகாப்பற்றது. அந்த பாதுகாப்பின்மைதான் வாழ்க்கைக்கு அழகைத் தருகிறது.

இனி வரும் காலங்களில், மனித இனத்துக்கு மன முதிர்ச்சியும், பக்குவமும் அதிகரித்து வரும் காலங்களில், திருமணம் என்ற அமைப்பு தொடர்ந்து இருக்குமா என்று எனக்கு சந்தேகமாக இருக்கிறது. எப்படியும், இதுவரை இருந்ததைப் போல் அது இனிமேல் இருக்க முடியாது.

திருமணம் என்ற அமைப்பு இவ்வளவு இறுக்கமாக இருக்கக்கூடாது. இன்னும் கொஞ்சம் நெகிழ்வாக இருக்க வேண்டும். வேறு வகையில் சொன்னால் அது ஒரு சமுதாய அமைப்பாகவே இருக்கக்கூடாது. ஆணும், பெண்ணும் சேர்ந்துதான் வாழ வேண்டும்.

இருவரும் சேர்ந்தால்தான் முழுமையான வாழ்க்கை வாழமுடியும். ஆண் வாழ்க்கையின் ஒரு பாதி என்றால், பெண் மறு பாதி. இரு பாதிகளும் சேராமல் முழுமை வராது. ஆணில்லாமல் பெண்ணும், பெண்ணில்லாமல் ஆணும் வாழவே முடியாது. ஒருவருக்கு ஒருவர் அவசியம் தேவை.

இருவரும் சேர்ந்தால் அங்கே முழுமை இருக்கும். ஆனால் அவர்கள் இருவரும் காதலின் சக்தியால்தான் சேர்ந்து வாழ வேண்டுமேயன்றி , சட்டத்தின் வலியுறுத்தலால் சேர்ந்து வாழக் கூடாது. அந்த சேர்க்கை இருவரின் முழுச் சுதந்திரத்தின் வெளிப் பாடாக இருக்க வேண்டுமே தவிர, இருவரையும் அடிமைப்படுத்தும் பந்தமாக இருக்கக்கூடாது.

திருமணம் என்ற அமைப்பு மறைந்துவிட்டால், சமூகத்தின் அமைப்பே மாறிவிடும். வேறு எந்த வகையிலும் சமுதாய அமைப்பை மாற்ற முடியாது. ஏனென்றால் திருமணம் மறைந்து விட்டால் வேறு பல சமுதாய அமைப்புகளும் தாமாகவே மறைந்துவிடும்.

குடும்பம் என்ற அமைப்பு கூட்டு வாழ்வு என்ற அமைப்பாக மாறிவிடும். குழந்தைகளின் மேல் தனிமனிதர்கள் உரிமை கொண்டாட முடியாது. குழந்தைகள் கூட்டு அமைப்புக்குத்தான் சொந்தம் என்ற நிலை வந்துவிடும்.

இதனால் குழந்தைகள் ஒரு பிரச்சினையாக இருக்க மாட்டார்கள். இன்று பாருங்கள், விவாகரத்துகள் மலிந்துவிட்டன. அமெரிக்காவில் சரி பாதி திருமணங்கள் விவாகரத்தில்தான் முடிகின்றன.

விவாகரத்து விவகாரங்களில் சிக்கிக் கொள்ளும் குழந்தை களின் நிலைமை பரிதாபமாக இருக்கிறது. யாரிடம் குழந்தைகள் வளரவேண்டும் என்பது பெரிய பிரச்சினையாகி விடுகிறது. குழந்தை களை அம்போ என்று விட்டுவிட்டு கணவனும், மனைவியும் தங்கள் வழியில் சென்று விடுகிறார்கள். இதனால் குழந்தைகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன.

திருமணம் என்ற அமைப்பு சில ஆயிரம் வருடங்களாகத் தொடர்ந்து இருப்பதற்குக் காரணமே, அது குழந்தைகளைப் பாதுகாக்கிறது என்பதால் தான். குழந்தைகளை பாதுகாக்க வேண்டியது உங்களுடைய தலையாய கடமை.

அனபு காட்டுவது கடமையாகிவிடுகிறது. காதலிப்பது என்பது சுமக்க வேண்டிய பொறுப்பாகிவிடுகிறது. அன்பையும் காதலையும் நாம் செய்ய வேண்டிய கடமையாக, சுமக்க வேண்டிய பொறுப்பாகப் பார்க்க ஆரம்பித்தால் அவற்றில் உள்ள அழகு, கவிதை நசிந்து போய்விடுகிறது.

அது சாதாரணக் கணக்காகிவிடுகிறது. சமரசம் செய்து கொண்டு கடனெழவே என்று வாழத் தொடங்குகிறீர்கள். அப்போது உங்களிடம் இருக்கும் உயிர்ப்பு போய்விடுகிறது. நீங்கள் செத்தவரைப் போல் வாழத் தொடங்குகிறீர்கள்.

சமுதாய அமைப்பில் ஒரு பெரிய புரட்சி நடக்கப் போகிறது. திருமணம் என்ற அமைப்பு மறைந்தால்தான் அந்த புரட்சி நடக்கும். என்று குழந்தைகள் தனிமனிதர்களுக்குச் சொந்தமில்லை என்ற நிலை வருகிறதோ, அன்றிலிருந்து குழந்தைகள் மிகுந்த அன்புடன், மனிதத்தன்மையுடன் நடந்து கொள்வார்கள்.

குழந்தைகளில் இந்துக்கள், இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள் என்று யாரும் இருக்க மாட்டார்கள். மனக்கட்டுத்திட்டங்களை உருவேற்ற அவர்கள் பெற்றோர்கள் என்று யாரும் இருக்க மாட்டார்களே!

அவர்கள் கூட்டு அமைப்புக்கு மட்டுமே கட்டுப்பட்டவர்களாக இருப்பார்கள். கூட்டு அமைப்புக்குள் வளரும் குழந்தைகளுக்கு பலதரப்பட்ட மக்களுடன் பழகும் அனுபவம் கிடைக்கும். கூட்டமைப்பில் வளரும் ஒரு குழந்தை அம்மாக்கள், சித்திகள், பெரியம்மாக்கள் என்று பல பெண்களைப் பார்க்கும். இவர்களிடம் இருந்து நல்ல அனுபவங்களைப் பெறும். அதே போல் அது அப்பாக்கள், பெரியப்பாக்கள், சித்தப்பாக்கள் என்று பல ஆண் களைப் பார்க்கும். தன் வயதொத்த பல சகோதர சகோதரிகளிடம் பழகி அதனால் அதன் மனம் மேலும் மேலும் விரிவடையும்.

இப்போது குழந்தைக்கு அவ்வளவாக பரந்த அனுபவம் கிடைப்பதில்லை. ஒவ்வொரு குழந்தையையும் ஒரு பெண் தான் தாய் என்ற நிலையில் இருந்து வளர்க்கிறாள். அவளுடைய தாக்கம்

அந்த குழந்தை உயிர் வாழும் வரை இருக்கிறது. அது அந்த குழந்தைக்கு ஓர் அகற்ற முடியாத பதிவாக மாறிவிடுகிறது.

அதன் பின் அந்தக் குழந்தை தான் பார்க்கும் பெண்களில் எல்லாம் தன் தாயையே தேடுகிறது. அந்தக் குழந்தை காதலிக்கும் ஒவ்வொரு பெண்ணிடமும் தனது தாயையே தேடுகிறது. தேடியது கிடைக்காததால் அது ஏமாந்துபோகிறது.

எப்படி அந்த குழந்தை தனது தாயை வேறு ஒரு பெண்ணிடம் காண முடியும்? உலகில் எந்த இரண்டு மனிதர்களும் ஒரே மாதிரி இருப்பதில்லை. அதனால் அந்தக் குழந்தையால் எந்த பெண்ணிடமும் தனது தாயைக் காணமுடியாது. என்றாலும் தனது மனைவியிடம், காதலியிடம், தோழியிடம் தனது தாயைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறது அந்தக் குழந்தை.

பெண்ணும் இதே நிலையில் தான் இருக்கிறாள். ஒவ்வோர் ஆணிடமும் தனது தந்தையைத்தான் தேடுகிறாள். தனது கணவனிடத்தில் தனது காதலனிடத்தில் தன் தந்தையைத் தேடி அது கிடைக்காமல் ஏமாந்து போகிறாள் பெண்.

ஒரு பெண்ணைப் பொறுத்த மட்டில் ஓர் ஆண் என்பவன் அவள் தந்தையையப் போல் இருக்க வேண்டும். அதே போல் ஓர் ஆணைப் பொறுத்தமட்டில், ஒரு பெண்ணானவள் அவன் தாயைப் போல் இருக்க வேண்டும்.

இப்படிப் பட்ட ஆணையோ, பெண்ணையோ இவர்கள் கண்டுபிடிக்கப்போவதேயில்லை. அதனால்தான் எப்போதும் அவர்களுக்கு ஒரு சலிப்பு, மனக்கசப்பு, கவலை, பயம், எல்லாமே இருக்கிறது.

ஒரு கூட்டமைப்பில் இருக்கும் பல பெண்களால் ஒரு குழந்தை வளர்க்கப்படும் போது அதன் மனம் விரிவடைகிறது. இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அது தனது தாயைப் பார்த்து வழிபடுவதில்லை. தான் பார்க்கும் மற்ற பெண்களிடம் அந்தக் குழந்தை தன் தாயைத் தேடுவதில்லை. இதுதான் மதம், இதுதான் கடவுள் என்று உறுதியான கருத்துகள் அதன் மேல் திணிக்கப் படுவதில்லை.

பலவகையான கருத்துகளை அது பொதுவாகப் பார்க்கத் தொடங்குகிறது. ஒரு பெண் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அது நினைப்பதில்லை. தான் பார்த்தறிந்த பல பெண்களில்

யாரைப் போல் வேண்டுமானாலும் ஒரு பெண் இருக்கலாம் என்ற பரந்த மனப்பான்மை அந்த குழந்தைக்கு சிறுவயதிலேயே வந்து விடுகிறது.

இப்படி வளரும் குழந்தை உரிய வயதில் தனக்கு ஏற்ற சரியான வாழ்க்கைத் துணையை அழகாகத் தேர்வு செய்யும். இந்த சூழ்நிலையில் வளரும் ஒரு பெண் தனக்கு நிறைவான வாழ்க்கையைத் தரும் கணவனை எளிதாகத் தேர்ந்தெடுப்பாள்.

இப்போது உள்ள சூழ்நிலையில் தனது தாயைப் போல் ஒரு பெண்ணைத் தேடும் ஆணும், தனது தந்தையைப் போன்ற ஒரு கணவனைத் தேடும் பெண்ணும் நிச்சயமாக ஏமாற்றம் அடைகிறார்கள. ஏனென்றால் அவர்கள் தேடுவது நிச்சயமாகக் கிடைக்காது.

கூட்டமைப்பில் வாழும் போது நீங்கள் ஒரு குடும்பத்துக்குள் சிறைப்படுத்தப்படுவதில்லை. அதனால் அந்தக் குடும்பத்தின் பாரம்பரிய அழுக்குகள், அவலங்கள் உங்களை அண்டாது. சாதாரண குடும்ப வளர்ப்பில் இந்து மதத்தைச் சேர்ந்த பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இந்துக்களாக வளர்ப்பார்கள். முகமதியர்களுக்கு எதிராக, கிறிஸ்தவர்களுக்கு எதிராக செயல்பட வேண்டும் என்று அந்த குழந்தைக்குப் போதிப்பார்கள். ஆனால் ஒரு கூட்டமைப்பில் பலவிதமான மத நம்பிக்கை உள்ளவர்களிடம் பழகும் போது அந்தக் குழந்தையின் மனதில் அப்படிப்பட்ட துவேஷங்களை விதைக்க முடியாது.

உதாரணமாக இங்கே நமது கூட்டமைப்பில் குழந்தையாக இருக்கும் சித்தார்த்தனைப் பாருங்கள். அவன் சுதந்திரமாக இருக்கிறான். அவனுக்குத் தன் தாயிடமோ, தந்தையிடமோ எந்த பற்றுதலும் இல்லை. வளர்ந்த மனிதர்களிடம் அவன் நட்பு கொள் கிறான். பின் அவர்களுடன் சிறிது காலம் சேர்ந்து வசிக்கிறான்.

இன்று சித்தார்த்தனுக்கு பலதரப்பட்ட நண்பர்கள் இருக் கிறார்கள் - வயது வந்தவர்கள், குழந்தைகள், ஆண்கள் பெண்கள் என்று பலர் அவனைக் கொண்டாடுகின்றனர். இவர்களுடைய எண்ணங்களையும் கருத்துகளையும் கேட்டு அறிகிறான் அவன். மனித இனத்தைப் பறறிய அவனது எண்ணம் விசாலமாக இருக்கிறது.

ஒரு முறை சித்தார்த்தன் மற்ற குழந்தைகளுடன் சேர்ந்து ஒரு வீட்டில் வசித்து வந்தான். அந்த வீட்டில் வயது வந்த

மனிதர்கள் யாரும் இல்லை. அப்போது அவன் என்னிடம் கேட்டான்,

"ஓஷோ, நான் பெரியவர்களுடன் சேர்ந்து வசிக்க விரும்புகிறேன். குழந்தைகளுடன் நான் வாழ்ந்தது போதும்."

அவனை கோவிந்தன் மற்றும் சில சந்நியாசிகளுடன் வாழுமாறு அனுப்பிவைத்தேன். அந்த பெரியவர்கள் புகார் செய்யத் தொடங்கிவிட்டார்கள்.

"சில சமயம் அவன் நள்ளிரவில்தான் வீடு திரும்புகிறான். சில இரவுகளில் இரவு 1 மணி, 2 மணி வாக்கில்தான் வீட்டுக்கு வருகிறான். எங்களால் தாங்க முடியவில்லை. பார்ட்டி, நாடகம், டிஸ்கோ என்று சதா சுற்றிக் கொண்டேயிருக்கிறான். எங்களுக்கு அவனால் எப்போதும் தொந்தரவுதான்.

"அவன் எங்களுடைய மொத்த அறையையும் ஆக்கிரமித்துக் கொள்கிறான். ஏதோ அவனது அறையில் நாங்கள் விருந்தினர்களாக இருப்பது போல் உணர்கிறோம். தன்னுடைய பொருள்களை அறை முழுவதும் பரப்பிவைத்துள்ளான். அவனுடைய விளையாட்டுப் பொம்மைகள் அறை முழுவதும் சிதறிக் கிடக்கின்றன. அதனால் தயவு செய்து அவனை வேறு யாரோடாவது போய் இருக்கச் சொல்லுங்கள்."

நான் சித்தார்த்தனிடம் அவனது தாய் நீரஜாவுடன் போய்ச் சேர்ந்து இருக்குமாறு கூறினேன்.

"குருவே, வேறு எங்கு வேண்டுமானாலும் நான் போய் இருக்கிறேன். என் தாயுடன் மட்டும் இருக்கச் சொல்லாதீர்கள். ஆனால் நீங்கள் வற்புறுத்தினால் நான் போகிறேன்."

கொஞ்ச நாட்களாவது உன் தாயுடன் நீ இருக்க வேண்டும். பின் வேறு இடம் பார்க்கலாம் என்று அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பிவைத்தேன். அவன் இதுவரை பல குடும்பங்களுடன், பல தம்பதிகளுடன் வாழ்ந்துவிட்டான். அவன் எங்கே போய் இருந்தாலும் அங்கே அவனுக்கென்று நண்பர்களைத் தேடிக் கொள்கிறான்.

அவனுக்கென்று ஒரு நண்பர் பட்டாளமேயிருப்பதால் அவனுக்கு எப்போதும் பணமுடை இருந்ததே கிடையாது. அவன் யாரிடம் வேண்டுமானாலும் பணம் கேட்டு வாங்கிக் கொள்வான்.

சித்தார்த்தனின் தாய் நீரஜாவின் காதலன்தான் சத்வன். ஆனால் இப்போது சத்வன்-நீரஜா காதல் முறிந்துவிட்டது. ஆனால் சத்வனுக்கும், சித்தார்த்தனுக்கும் இன்னும் நட்பு நீடிக்கிறது. சத்வனுக்கும் சித்தார்த்தனுக்கு இன்னும் வரவு செலவு நடந்து கொண்டிருக்கிறது.

தினமும் சித்தார்த்தன் சத்வனிடம் பணம் கேட்க வருவான். ஒரு நாள் சத்வன் சித்தார்த்தனிடம், "என்னிடம் பணம் இல்லை" என்று சொன்னான். உடனே சித்தார்த்தன் யாரிடமோ போய் ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டுவந்து சத்வனிடம் கொடுத்தான். "உனக்கு பணம் தேவை என்றால் என்னிடம் கேள். எனக்கு நிறைய நண்பர்கள் இருக்கிறார்கள். உனக்கு எவ்வளவு பணம் தேவையோ அனைத்தையும் என்னால் கொடுக்க முடியும்."

இந்த குழந்தை சித்தார்த்தன் முற்றிலும் மாறுபட்ட குழந்தை. இவன் யூதர்களுடன், கிறிஸ்துவர்களுடன், இந்துக்களுடன் வாழ்ந்திருக்கிறான். அவனுக்கு மனக்கட்டுத்திட்டங்கள் எதுவும் கிடையாது. பரந்து விரிந்துகிடக்கும் இந்த உலகமே அவனது வீடு.

குழந்தைகள் இப்படித்தான் வளர வேண்டும். இப்படி குழந்தைகள் வளர்ந்தால் இந்த உலகத்தில் அசிங்கமான மதவெறிச் சண்டைகள்,போராட்டங்கள், போர்கள், மதவெறிக் கொள்கைகள் எல்லாம் இருந்த சுவடு தெரியாமல் அழிந்துவிடும். இவை எல்லாமே குடும்பம் என்ற அமைப்பில் இருந்து தோன்றியவை. குடும்பம் என்ற அமைப்பு திருமணம் என்று அமைப்பைச் சார்ந்தேயிருக்கிறது.

குடும்பம் என்ற அமைப்பு இல்லாது போனால் நாட்டு எல்லைகள் அழிந்துவிடும், நாடு என்ற அமைப்பே இல்லாமல் போய்விடும். மதங்கள், கோயில்கள், தேவாலயங்கள், மசூதிகள் எல்லாமே மறைந்து மண்ணோடு மண்ணாகிவிடும்.

இதனால் தான் நாடுங்களும் மதங்களும் திருமணத்தை புனிதமான பந்தம் என்று கொண்டாடுகின்றன. ஆனால் அதுதான் இருப்பதிலேயே அசிங்கமான பந்தம்.

அவர்கள் என்ன சொல்கிறார்கள், "திருமணம் என்ற ஒன்று இல்லாமல் குழந்தைகளுக்கு எப்படி அன்பு கிடைக்கும்?"

உண்மையிலேயே திருமணங்களே இல்லாதிருந்தால் குழந்தைகளுக்கு இன்னும் அதிகமான அன்பு கிடைத்திருக்கும். அவர்களுடைய பெற்றோர்கள் அவர்கள் மேல் காட்டும் அன்பை

யாரும் தடுத்து நிறுத்தப் போவதில்லை. அதுதவிர மற்றவர்கள் அவர்கள் மேல் அன்பு காட்டவும் வாய்ப்பு இருக்கிறது.

தங்கள் மேல் இப்படி நாலாபக்கமும் அன்பு பொழியப் படுவதைக் கண்டு அந்த குழந்தைகள் யாரையும் சார்ந்திருக்காமல் சுதந்திரமாக வளர்வார்கள். முதலில் இருந்தே அவர்கள் மனதில் ஒரு புதுமையான சுதந்திரம் இருக்கும். அது தான் அவர்களின் முக்கிய தேவை.

மனித வரலாற்றில் மதங்களுக்காகப் பல சண்டைகள் நடந்திருக்கின்றன. இதற்கெல்லாம் மூல காரணம் நாம் எல்லாருமே ஒருவகையில் மனக்கட்டுத்திட்டங்களுக்கு ஆட்படுத்தப்பட்டதுதான். அதன்பின் அந்த மனக்கட்டுத்திட்டங்களை விட்டு மீண்டு வருவது மிகவும் கடினம்.

எனக்கு அந்த கஷ்டம் தெரியும். எனது பணியே உங்களை அந்த மனக்கட்டுத் திட்டங்களில் இருந்து மீட்பது தானே?அதற்கு பல மாதங்கள், ஏன் பல வருடங்கள் கூட ஆகலாம். அதற்கு நீங்கள் கடுமையாக உழைக்க வேண்டும். உங்கள் மனக் கட்டுத் திட்டமும் உங்கள் அகங்காரமும் வேறு வேறு அல்ல.

நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள், "*திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ்வது எப்படி?* "

எனக்குச் சத்தியமாகத் தெரியாது. இந்தக் கேள்விக்குப் பதில் யாருக்குமே தெரியாது. ஏசுநாதருக்கு மட்டும் இந்த கேள்வியின் விடை தெரிந்திருந்தால் அவர் திருமணம் செய்து கொண்டிருப்பார்.

ஏசுநாதருக்கு கடவுளின் சாம்ராஜ்ஜியத்துக்கு வழி தெரியும். ஆனால் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக இருப்பது எப்படி என்று தெரியாது. அதனால் தான் அவர் திருமணம் செய்து கொள்ளவில்லை. லா ட்சூ, மகாவீரர், சுவாங் சூ போன்ற ஞானிகளும் திருமணம் செய்து கொள்ளவில்லை.

காரணம், அவர்களுக்கு இந்த கேள்விக்கு விடை தெரிய வில்லை. கடவுளையே கண்டு கொண்டவர்கள், எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கும் உண்மையை உணர்ந்த இவர்களால் கூட இந்த கேள்விக்கு விடை கண்டுபிடிக்க முடியவில்லை. திருமணம் என்பது அவ்வளவு பெரிய விஷயமில்லைதான். அது ஆழமில்லாததுதான். என்றாலும் இவர்களால் இந்த கேள்விக்கு விடை கண்டுபிடிக்க முடியவில்லை.

கிரேக்க ஞானி சாக்ரடீஸ் திருமணம் செய்து கொண்டார். அந்த தவறுக்காக வாழ்க்கை முழுவதும் படாதபாடு பட்டார். அவர் திருமணம் செய்து கொண்டதன் மூலமாக மகிழ்ச்சியான வாழ்விற்கு வழியைக் கண்டுபிடிக்கவில்லை. திருமணம் செய்து கொள்ளாமல் இருந்திருந்தால் அவரது வாழ்க்கை இன்னும் சிறப்பாக இருந்திருக்கும் என்ற மாபெரும் உண்மையைத்தான் அவர் கண்டுபிடித்தார்.

ஆனால் சாக்ரடீஸ் காலத்தில் ஏசுநாதர் பிறக்கவில்லை. லா ட்சூ, மகாவீரர் ஆகியோர் சாக்ரடீசின் சமகாலத்தவர்தான். என்றாலும் அவர்கள் வேறு நாடுகளில் வாழ்ந்தார்கள். அந்தக் காலத்தில் நாடுகளுக்கு இடையே இன்றிருப்பது போல் தகவல் தொடர்பு இல்லை.

அதனால் லா ட்சூ, மகாவீரர் திருமணம் செய்து கொள்ளா மலேயே வாழ்ந்தார்கள் என்பது பாவம் சாக்ரடீசுக்குத் தெரியாது. அன்று கிரேக்க நாட்டில் இருந்த சம்பிரதாயத்திலிருந்து - இளம் வயதில் எல்லாரும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற சம்பிரதாயத்திலிருந்து - சாக்ரடீசால் தப்ப முடியவில்லை.

முகமது நபிகள் ஒன்பது பெண்களைத் திருமணம் செய்து கொண்டார். பலர் என்னிடம் "முகமது நபிகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்கிறார்கள். எனக்கு முகமது நபிகளின் ரகசியம் தெரியும். ஆனால் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக வாழும் ரகசியம் தெரியாது.

ஒன்பது மனைவிகள் இருந்தால் எப்போதும் அவர்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டேயிருப்பார்கள். அதனால் முகமது நபிகள் சந்தோஷமாக தனது கடமையைச் செய்து கொண்டிருந்தார்.

அதனால் தான் நபிகள் தனது தொண்டர்களிடம் "குறைந்த பட்சம் 4 பெண்களையாவது திருமணம் செய்து கொள்ளுங்கள்" என்று சொன்னார். அதனால்தான் இன்று வரை முகமதிய சட்டம் நான்கு பெண்களைத் திருமணம் செய்து கொள்ள அனுமதிக்கிறது. நான்கு பேர் இருந்தால் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டேயிருப்பார்கள். நீங்கள் நிம்மதியாக வாழலாம் என்பது தான் இதன் தாத்பரியம்.

இதில் எல்லாரையும் மிஞ்சியவர் நமது கிருஷ்ண பரமாத்மாதான். அவர் 16000 பெண்களைத் திருமணம் செய்து

கொண்டார். அந்தக் கூட்டத்தில் தொலைந்து போவது மிகவும் எளிது. கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

16000 பெண்கள் இருக்கும் போது, யாரால் கிருஷ்ணர் எங்கே போகிறார், எப்போது வருகிறார் என்று கவனிக்க முடியும்? அங்கு இருக்கும் சண்டை சச்சரவுகளுக்கு அளவே இருக்காது. அந்த குழப்பமான சூழ்நிலையில் கிருஷ்ணர் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்.

எல்லாருக்கும் நடுவில் அவர் அமைதியாக தியானநிலையில் அமர்ந்திருந்தாலும் யாரும் அவரைக் கவனித்திருக்க மாட்டார்கள். அந்த 16000 பேரும் அடுத்தவர்களின் புடவை, நகைகளைப் பற்றித்தான் கவலைப்பட்டுக் கொண்டிருந்திருப்பார்கள்.

புத்தரும் திருமணம் செய்து கொண்டார். ஆனால் அவர் தப்பித்துவிட்டார். அவருக்கு யசோதரா என்ற அழகான மனைவி இருந்தாள். ஆனால் அவர் அரண்மனையை, தனது மனைவியை, குழந்தையை விட்டுவிட்டுச் சென்றுவிட்டார்.

12 வருடங்கள் கழித்து ஞானம் பெற்றபின்தான் அவர் திரும்பினார். உங்களுக்கு ஞானம் வந்துவிட்டதென்றால் அதன் பின் கவலையில்லை. எந்த நிலையிலும் நீங்கள் சந்தோஷமாக இருக்க முடியும். ஆனால எனக்குத் தெரிந்து எந்த ஞானியும் ஞானம் பெற்ற பின் திருமணம் செய்து கொண்டதாக வரலாறு இல்லை.

இரண்டு தோழிகள் சந்தித்துக் கொண்டார்கள்.

"மாலதி, உன் தெய்விகக் காதல் எந்த நிலையில் இருக்கிறது?" - அக்கறையுடன் கேட்டாள் ஒருத்தி.

"அதெல்லாம் முடிந்துவிட்டது."

"ஐயோ! எப்படி? ஏன்? உன் அப்பா ஏதாவது செய்தாரா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நாங்கள் திருமணம் செய்து கொண்டுவிட்டோம்."

இரண்டு நண்பர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"மனைவி தேவை என்று நான் பேப்பரில் விளம்பரம் கொடுத்தேன்."

“நிறையப் பெண்கள் விவரம் கேட்டு எழுதியிருப்பார்களே?”

“சில பெண்கள்தான் எழுதினார்கள். ஆனால் நிறையக் கணவர்கள் தங்கள் மனைவிகளைக் கொடுக்கத் தயார் என்று எழுதியிருக்கிறார்கள்.”

மனைவி வீட்டை விட்டு ஓடிவிட்டாள். அதுவும் ஐந்தாவது முறையாக. கணவன் அவளுக்காக விளம்பரம் கொடுத்தான்.

“அன்பே, தயவு செய்து திரும்பி வந்துவிடாதே. நீ செய்ததை எல்லாம் மன்னித்து விட்டேன்.”

ஓர் அறிவுள்ள மூதாட்டி. கடைசி வரை திருமணமே செய்து கொள்ளவில்லை. ஏன் இப்படி என்று கேட்டபோது அவள் சொன்னாள்.

“நான் ஏன் திருமணம் செய்து கொள்ள வேண்டும்? சத்தமாகக் குறட்டை விட ஒரு நாய் இருக்கிறது. அசிங்கம் அசிங்கமாக கெட்ட வார்த்தைகள் பேச ஒரு கிளி இருக்கிறது. இரவு வந்து விட்டால் வீட்டில் தங்காத ஒரு பூனை இருக்கிறது. இவ்வளவும் இருக்கும் போது புருஷன் எதற்கு?”

தனது மனைவியின் நடத்தையில் சந்தேகம் கொண்ட ஒரு கணவன், அவளைக் கண்காணிக்கச் சொல்லி ஒரு துப்பறியும் நிபுணரை அமர்த்தினான்.

சில நாட்களுக்குப் பின் அந்த நிபுணர் நிறையப் படங்களுடன் வந்தார். அவனுடைய மனைவி அவனுடைய நண்பனிடம் உல்லாசமாக இருப்பதை சந்தேகமில்லாமல் அந்தப் படங்கள் நிரூபித்தன.

அந்தப் படங்களை எல்லாம் பார்த்த கணவன் கத்தினான். “என்னால் நம்பவே முடியவில்லை என்னால் நம்பவே முடியவில்லை”

“இவ்வளவு ஆதாரம் இருக்கும் போது எப்படி உன்னால் எப்படி நம்பாமல் இருக்க முடியும்?” என்று கேட்டார் துப்பறியும் நிபுணர்.

“அதைச் சொல்லவில்லை. என் மனைவியுடன் ஓர் ஆள் எப்படி இவ்வளவு சந்தோஷமாக இருக்க முடியும் என்பதைத்தான் என்னால் நம்ப முடியவில்லை.”

சொர்க்கம். எல்லாரும் நிறைவாக இருக்கிறார்கள். எங்கும் அமைதி நிலவுகிறது. திடீரென்று கோவிந்தன் கத்துகிறான். ''ஆஹா என்ன அமைதி. என்ன அமைதி. என்ன அமைதி.''

அவனை அமைதியாக இருக்கச் சொல்லி எல்லாரும் சொல்கிறார்கள். கோவிந்தன் கேட்கவில்லை. ''ஆஹா இங்கேதான் என்ன அமைதி'' என்று மீண்டும் மீண்டும் கத்திக் கொண்டே யிருக்கிறான்.

அவனது நடத்தையால் வெறுப்படைந்த இறைவன் அவனை நரகத்துக்குத் தள்ளிவிடுகிறார். அங்கே எரியும் நெருப்புக்கு நடுவில், கொதித்துக் கொண்டிருக்கும் எண்ணெய் கொப்பரைகளுக்கு நடுவில், வலியால் துடித்துக் கொண்டிருக்கும் ஆன்மாக்களுக்கு நடுவில் கோவிந்தன் ''ஆஹா என்ன அமைதி, என்ன அமைதி'' என்று தொடர்ந்து கத்திக் கொண்டிருக்கிறான்.

நரகத்தின் அதிபனான பீஜில்பப் அவனை அழைத்து கேட்கிறான். ''இந்த நரகத்துக்கு வந்து யாரும் ''ஆஹா என்ன அமைதி'' என்று கத்தி நான் இது வரை கேட்டதேயில்லை. ஏன் இப்படிச் செய்கிறாய்?''

''பீஜில்பப், என் மனைவியோடு 50 வருடங்கள் வாழ்ந்திருந்தால் இந்த இடம் உனக்கு சொர்க்கமாகத் தெரியும். நான் செய்வதைத்தான் நீயும் செய்வாய்.''

அன்பு மட்டுமே நமக்கு போதுமானது. அன்பில் மட்டும் வாழுங்கள். அன்பு பல ஆண்டுகள் நீடிக்கலாம். அல்லது சில நாட்களில் மறைந்து விடலாம். அதைப்பற்றி கவலைப் படாதீர்கள். ஒரே ஒரு நொடிப்பொழுதுக்கு உண்மையான அன்பில் வாழ்ந்தாலும் போதுமானது. இறவாவரம் பெற்று காலங்காலமாக வாழ்வதற்கு அது சமமானது.

'ஐயோ இந்த அன்பு அதிக நாள் நீடிக்காதோ?' என்று நீங்கள் பயப்படவில்லையென்றால் அன்பு அதிக நாள் இருக்கும். ஏனென்றால் பயம் தான் அன்பிற்கு எமன். நீங்கள் நாளைய தினத்தைப் பற்றிக் கவலைப்படவில்லையென்றால் இன்று நீங்கள் பரிபூர்ணமாக வாழலாம்.

அந்த பரிபூரணத்திலிருந்து ஓர் அழகான 'நாளை' உதயமாகும். ஆனால் நாளைய தினத்தை நினைத்து நீங்கள் அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்தால், நீங்கள் இன்றைய தினத்தையும் சேர்த்தே

அழித்துவிடுவீர்கள். இன்றைய தினம் அழிந்துவிட்டால் நாளை எங்கிருந்து வரும்?

அச்சமின்றி வாழுங்கள். இதைத்தான் நான் என் சந்நியாசிகளுக்கு எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஆபத்துகளுடன் வாழுங்கள். வாழ்க்கையின் வசதிகளுக்காக எந்த விஷயத்திலும் சமரசம் செய்து கொள்ளாதீர்கள். வசதிகளுடன் பிணத்தைப் போல் வாழ்வதைவிட, வசதிகள் எதுவும் இல்லாமல் உயிர்ப்புடன் வாழ்வது எவ்வளவோ மேல்.

உங்களுக்கு வசதிகள் வேண்டுமா? உங்கள் கல்லறை மிகவும் வசதியாக இருக்கும். அங்கே உங்களுக்கு எந்த ஆபத்தும் இருக்காது. அங்கே எதுவும் நடக்காது. நீங்கள் மீண்டும் சாக மாட்டீர்கள். அங்கே வியாதி இல்லை. நீங்கள் உங்கள் கல்லறையில் இருக்கும் போது திவாலாக முடியாது. உங்கள் பொருள்களை யாராலும் திருட முடியாது. நீங்கள் அமைதியாக வாழலாம்.

நீங்கள் பல கல்லறைகளில் இந்த வாசகத்தைப் படித்திருப்பீர்கள். "அமைதியாக ஓய்வெடுங்கள்." Rest in Peace. அங்கே வேறு என்ன செய்ய முடியும்? கல்லறைக்குள் இருந்து கொண்டு கவிதையா எழுத முடியும்?

ஒரு மனிதன் இறந்தான். அவன் உயிருடன் இருந்த போதே தனது கல்லறையில் வைக்க வேண்டிய கல்லையும், அதில் எழுத வேண்டிய வாசகத்தையும் தயார் செய்துவிட்டான். அவனது மனைவி கஞ்சத்தனம் மிக்கவள். இதற்கெல்லாம் அவள் பணம் செலவழிக்க மாட்டாள் என்று முன் கூட்டியே செய்து வைத்துவிட்டான்.

இருப்பதிலேயே விலை உயர்ந்த இத்தாலிய பளிங்குக் கல்லை வாங்கி, பிரபலமான ஒரு கல்வெட்டு கலைஞனுக்கு எக்கச்சக்கமாகப் பணம் கொடுத்து அந்த கல்லில் ரோஜா மலர்களைச் செதுக்கச் சொல்லி அவற்றுக்கு நடுவே, "அமைதியாக ஓய்வெடுங்கள்." Rest in Peace என்ற வாசகத்தையும் பொறிக்கச் செய்தான்.

ஒரு நாள் அவன் இறந்தான. தன் மனைவிக்கென்று அவன் அதிகமாக செல்வம் எதையும் விட்டுப் போகவில்லை. அவனது உயில் ரத்தினச்சுருக்கமாக இருந்தது.

"நான் புத்திசாலி. அதனால் நான் சம்பாதித்ததை எல்லாம் செலவழித்துவிட்டேன். யாருக்கும் எதையும் நான் விட்டுவிட்டுப் போகவில்லை."

மனைவிக்கு மகா கோபம். அவனது கல்லறையில் எழுத்துகளைச் செதுக்கிய அந்த கலைஞனை அழைத்துக் கொண்டு அவனது கல்லறைக்குப் போனாள். அங்கே செதுக்கப்பட்டிருந்த வாசகங்களில் சிறிய திருத்தம் ஒன்று செய்யச் சொன்னாள். திருத்தியபின் கல்லறை வாசகம் இப்படி இருந்தது.

அமைதியாக ஓய்வெடுங்கள் - நான் அங்கே வரும் வரை.'' Rest in Peace till I come there.

ஆனால் இதற்காகக் கவலைப்படாதீர்கள். என்னதான் மனைவியாகவே இருந்தாலும் கணவன் இருக்கும் கல்லறைக்குள் வர முடியாது. மனைவிக்கு என்று தனியாக கல்லறை கட்டித்தான் ஆக வேண்டும். அப்படியே உங்கள் கல்லறைக்குள் உங்கள் மனைவி நுழைந்தாலும் அவளால் உங்களை அடையாளம் கண்டுகொள்ள முடியாது. உங்களாலும் அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியாது.

கல்லறையில் நீங்கள் முழு பாதுகாப்புடன் அமைதியாக ஓய்வெடுக்கலாம். ஆனால் கல்லறைக்குப் போகும் வரை வாழ முயற்சி செய்யுங்கள். பாதுகாப்பின்மையை ஏற்றுக் கொள்ளுங்கள். அப்படி ஏற்றுக் கொண்டால் அது தானாகவே மறைந்துவிடும்.

அதற்காக நீங்கள் வேறு எதுவும் செய்ய வேண்டாம். அன்பு செய்யும் போது முழுமையாக அன்பு செய்யுங்கள். ஆனால் நிரந்தரத்தன்மையை அதில் எதிர்பார்க்காதீர்கள்.

முட்டாள்கள்தான சாசுவதத் தன்மையை எதிர்பார்ப்பார்கள். நிரந்தரத்தை நீங்கள் எதிர்பார்த்தால் உங்களுக்குப் போலிகள்தான் கிடைக்கும். ஏனென்றால் போலிகள் தான் எப்போதும் நிரந்தரமாக இருக்கும்.

போலி ரோஜாக்கள் தான் என்றும் வாடாமல் அப்படியே இருக்கும். உண்மையான ரோஜா மலர்கள் ஒரு நாளில் வாடி உதிர்ந்துவிடும். பிளாஸ்டிக் மலர்கள் வாடாது, உதிராது. ஆனால் அவற்றில் மணமும் இருக்காது.

ஏனென்றால் அவற்றில் உயிரில்லை. பிளாஸ்டிக் மலர்களில் ரோஜாவைப் போன்ற தோற்றத்தை மட்டுமே பார்க்க முடியும். ரோஜாவைப் பார்க்கமுடியாது.

திருமணம் என்பது ஒரு பிளாஸ்டிக் ரோஜா. அன்பு என்பது உண்மையான ரோஜா. உங்கள் வாழ்க்கையில் உண்மையான

ரோஜாக்களை வளருங்கள். அவை வாடத்தான் வாடும். அதனால் என்ன? நீங்கள் அவற்றை மீண்டும் வளர்க்கலாமே!

அவற்றை உங்கள் வாழ்க்கை முழுவதும் வளர்த்துக் கொண்டேயிருக்கலாமே! மேலும் மேலும் அன்பை உருவாக்கிக் கொண்டேயிருக்கலாமே! அந்த அன்பைத் தொடர்ந்து மற்றவர்களிடம் பகிர்ந்துகொண்டேயிருக்கலாமே!

இப்போது நான் என் அனுபவத்தில் கண்டதைச் சொல்கிறேன். இதை நான் எங்கும் படிக்கவில்லை. யார் சொல்லியும் கேட்க வில்லை. நானே அனுபவத்தில் அறிந்த உண்மை இது. நிரந்தரத் தன்மையை எதிர்பார்க்காமல் நீங்கள் அன்பு செய்தால், நடக்க முடியாதது கூட நடக்கும். உங்கள் அன்பு வாழ்நாள் முழுவதும் கூட இருக்கும்.

ஆனால் நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று மட்டும் கேட்காதீர்கள். அப்படிக் கேட்பதாலேயே நீங்கள் உங்களிடம் உள்ள அன்பின் சமச்சீர் நிலைக்கு பங்கம் விளைவிக்கிறீர்கள். அப்படிக் கேட்கும் போது நிஜத்தில் இருந்து போலிக்கு மாறி விடுகிறீர்கள்.

உங்கள் வாழ்க்கை முழுமையானதாக இருக்கட்டும்.

இது வரையில் இந்த கருத்தைச் சொன்னவர்கள் எல்லாம் 'நிரந்தரம்' என்ற வார்த்தையில்தான் அழுத்தம் கொடுத்தார்கள். நான் 'முழுமையாக' என்ற வார்த்தையில் அழுத்தம் கொடுக்கிறேன்.

இதுவரை உங்களிடம் காதலைப் பற்றிப் பேசியவர்கள் என்ன சொன்னார்கள்?

உண்மையான காதல் என்றால் அது சாகாவரம் பெற்றதாக இருக்க வேண்டும். அது நிரந்தரமாக இல்லை என்றால் அது உண்மையான காதல் இல்லை என்று ஒப்பாரி வைத்தார்கள். அது வடிகட்டிய முட்டாள்தனம்.

உண்மையான காதல் காலம் முழுவதும் நிலைத்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. காதலும், நிரந்தரத்தன்மைக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. உண்மையான அன்பு ஒரு மின்னலடிக்கும் நேரத்தில் வந்து போகலாம்.

அதனாலேயே அது பொய் ஆகிவிடாது. மின்னல் கூட ஒரு நொடியில் தோன்றி மறைந்துவிடுகிறது. அதனால் அதைப்

பொய் என்று சொல்லமுடியுமா? ரோஜா மலர் காலையில் மலர்கிறது. மாலையில் அதன் இதழ்கள் உதிர்ந்துவிடுகின்றன. உதிர்ந்த இதழ்கள் மீண்டும் மண்ணிற்குள் ஓய்வெடுக்க சென்றுவிடுகின்றன. அதனால் ரோஜா பொய்யாகிவிடுமா என்ன?

ஆனால் உங்கள் மதகுருமார்கள் உங்களை எப்படி குழப்புகிறார்கள் தெரியுமா? உண்மைக்கு உரைகல் நிரந்தரத்தன்மை என்று உங்களுக்கு உருவேற்றிவிட்டார்கள். அதனால் உங்கள் மனத்தை உண்மையிலிருந்து நிரந்தரத்தன்மைக்கு மாற்றிவிட்டார்கள்.

உண்மையை விட்டுவிட்டு நீங்கள் நிரந்தரத்தன்மையை நேசிக்கத் தொடங்கினால் நீங்கள் போலிகளிடம் மாட்டிக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது. உண்மையைத் தவறவிட அதைவிட அதிக மாக வாய்ப்பு இருக்கிறது. உண்மை என்பது மாறிக்கொண்டே யிருக்கிறது. ஆனால் போலி எப்போதும் அப்படியேதான் இருக்கிறது. தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கும் உண்மைக்குத் தான் நீங்கள் மதிப்புக் கொடுக்க வேண்டும்.

ஒரு நொடி, ஒரே ஒரு நொடி மட்டும் அன்பு நிகழ்ந்தாலும் அது முழுமையானதாக இருக்க வேண்டும். நீங்கள் அதில் முழுமையாக ஈடுபட வேண்டும். நீங்கள் அந்த ஒரு நொடியில் அதில் முழுமையாக ஈடுபட்டால்தான் அடுத்த நொடியில் அதை முழுமையாக விட்டுவிட்டு வெளியில் வரமுடியும். அடுத்த நொடி உங்கள் அன்பை மேலும் ஆழப்படுத்த வாய்ப்பு இருக்கிறது. அப்படித்தான் நடக்கும் என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் அப்படி நடக்க வாய்ப்பு இருக்கிறது என்பதை உறுதியாகச் சொல்ல முடியும்.

ஆனால் அடுத்த நொடி இந்த நொடியைப் போல இருக்காது. அடுத்த நொடியில் உங்கள் அன்பு இன்னும் மிளிரலாம், இன்னும் ஆழமாகலாம். இல்லை ஒட்டு மொத்தமாக மறைந்து போய் விடலாம். அடுத்தடுத்து வரும் இரண்டு நொடிகள் ஒன்று போல் இருக்காது. அவை ஒன்று போல் இருக்க முடியாது.

அதுதான் இந்த வாழ்க்கையின் அழகு. அதுதான் வாழ்க்கையின் கம்பீரம். அது நமது எதிர்பார்ப்புக்கு அப்பாற்பட்டது. நீங்கள் முழுமையாக வாழும் போது எல்லாவற்றிற்கும் ஆழம் அதிகமாகிறது. அப்படி ஆழம் அதிகமாகும் போது எல்லாமே வேறுபடுகின்றன. அந்த வேறுபாட்டில் எப்படி நீங்கள் நிரந்தரத் தன்மையைத் தேடமுடியும்? நீங்கள் நிரந்தரத் தன்மையைப் பற்றி

நினைத்துக் கொண்டிருந்தால் உங்கள் இலக்கைத் தவறவிட்டு விட்டீர்கள் என்றுதான் பொருள்.

*திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ்வது எப்படி?* என்று என்னைக் கேட்காதீர்கள். எனக்கு அது தெரியாது. ஆனால் எனக்கு இன்பத்தின் ரகசியம் தெரியும். அதற்குத் திருமணம் தேவையில்லை.

திருமணம் செய்து கொள்ளாமல் நீங்கள் யாருடனாவது சேர்ந்து வாழ்ந்தீர்கள் என்றால் நல்லது. அவர் மேல் உள்ள அன்பின் காரணமாக, நன்றியுணர்வின் காரணமாகச் சேர்ந்து வாழ்ந்தீர்கள் என்றால் நல்லது. அப்படி சேர்ந்து வாழ்வது உங்கள் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்தால் சந்தோஷம்.

ஆனால் அப்படித் தொடராமல் நடுவே அந்த அன்பு மறைந்துவிட்டால் ஆழமான நன்றியுணர்வுடன் அவரிடமிருந்து பிரிந்து செல்லுங்கள். ஏற்கனவே உங்களிடையே இருந்த அன்பை, உங்களை வளப்படுத்திய அன்பை நன்றியுடன் நினைத்தபடி பிரிந்து செல்லுங்கள்.

கோபமும் வெறுப்பும் மேலிட வன்முறையோடு அடுத்தவரைத் தொங்கிக் கொண்டிருப்பதை விட, அன்போடு பிரிந்து செல்வது எவ்வளவோ மேல். எப்படி காதலில் விழுவது என்றும் தெரிந்திருக்க வேண்டும். அன்பு குறையும் போது அதிலிருந்து எப்படி மீண்டு வருவது என்றும் தெரிந்திருக்க வேண்டும்.

*அடுத்த கேள்வி:*

*ஓஷோ, எனது பெற்றோர்கள் யூதர்கள். நான் உங்களிடம் சந்நியாசியாகிவிட்டதில் அவர்களுக்கு மிகவும் வருத்தம். இந்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும்?*

தனது தொண்டர்களிடம் ஏசுநாதர் என்ன சொன்னார் தெரியுமா? நீங்கள் உங்கள் பெற்றோர்களை வெறுக்காவிட்டால் என்னைப் பின்தொடர்ந்து வரமுடியாது.

இதைக் கேட்கும் போது ஆச்சரியமாக, ஏன், அதிர்ச்சியாகக்கூட இருக்கிறது இல்லையா? 'பகைவனையும் நேசி'

என்று சொன்ன அந்த அன்புத் தெய்வமா, பெற்றோர்களை வெறுக்க வேண்டும் என்று சொன்னது? என்று எல்லாரும் அதிர்ச்சியடைவார்கள்.

ஏசுநாதர் பகைவனை நேசி என்று மட்டும் சொல்லவில்லை. அண்டைவீட்டுக்காரனையும் நேசி என்று சொன்னார். அது பகைவனை நேசிப்பதைவிட கடினமான காரியம்.

அப்படிச் சொன்னவர், பெற்றோர் என்று வந்தவுடன் ஆணித்தரமாகச் சொல்கிறார். "*நீங்கள் உங்கள் பெற்றோர்களை வெறுக்காவிட்டால் என்னைப் பின் தொடரமுடியாது.*"

அவருக்கு பெற்றோர்கள் மேல் அப்படி என்ன கோபம்?

நமது புத்தர் இருக்கிறாரே, இவர் இன்னும் ஒருபடி அதிகம் போனார். தன்னுடைய சீடர்களிடம் புத்தர் என்ன கேட்பார் தெரியுமா? உங்கள் பெற்றோர்களைக் கொன்று விட்டீர்களா ? அகிம்சையைப் போதித்த மகானா இப்படிக் கேட்கிறார் என்று நீங்கள் அதிர்ச்சியடைவதை நான் உணர்கிறேன்.

புத்தர் சாந்த ஸ்வரூபி. எந்த உயிருக்கும் தீங்கு விளை விக்காதவர்.

ஏசுநாதராவது புலால் உண்டார். மீன்களை உண்டார். புத்தர் அதுகூட செய்ததில்லை. மரக்கறி உணவு தவிர வேறு எதையும் உண்ணாதவர் புத்தர். இந்த உலகின் மிகப்பெரிய அகிம்சாவாதி புத்தர். அப்படிப் பட்டவர் தனது சீடர்களிடம் கேட்கிறார், "நீங்கள் உங்கள் பெற்றோர்களைக் கொன்று விட்டீர்களா இல்லையா?"

இது போன்ற வார்த்தைகளை அப்படியே பொருள் கொள்ளக் கூடாது. ஏசுநாதரோ, புத்தரோ அந்த வார்த்தைகளை மக்கள் அப்படியே கேட்டு நடக்க வேண்டும் என்று வலியுறுத்தவில்லை. இந்த வார்த்தைகளில் ஒரு பெரிய செய்தி அடங்கியிருக்கிறது.

இது ஓர் உருவகம். இந்த உருவகத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஏசுநாதரும், புத்தரும் வெளியில் உங்கள் தாயின் உருவில், தந்தையின் உருவில் இருக்கும் பெற்றோர்களைப் பற்றிச் சொல்லவில்லை. உங்களுக்குள் உங்கள் தாயும் தந்தையும் உருவாக்கிய பதிவுகளைப் பற்றித்தான் அவர்கள் சொல்கிறார்கள்.

வெளியில் இருக்கும் உங்கள் பெற்றோர்கள் உங்களை ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் இங்கு அமெரிக்காவில் இருக்கலாம்.

உங்கள் பெற்றோர்கள் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இந்தியாவில் இருக்கலாம். அவர்கள் உங்களை என்ன செய்ய முடியும்?

அவர்களால் உங்கள் மேல் ஆதிக்கம் செலுத்த முடியாது. ஆனால் உங்களுக்குள்ளே அவர்கள் உண்டாக்கிய பதிவுகள், கருத்துகள், எண்ணங்கள் இருக்கின்றன. இந்த கருத்துகளும், பதிவுகளும் உங்கள் மேல் ஆதிக்கம் செலுத்திக் கொண்டேயிருக்கும். நீங்கள் இங்கே சந்நியாசியாக இருப்பது உங்கள் பெற்றோர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் உங்களைக் குற்ற உணர்வு வாட்டும்.

உங்கள் பெற்றோர்களைக் காயப்படுத்துவதாக நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பீர்கள். அது உங்கள் வளர்ச்சிக்கு நல்லதல்ல.

ஆனால் எல்லாப் பெற்றோர்களும் புதுமையாக இருக்கும் எதையும் எதிர்க்கத்தான் செய்வார்கள்.

புத்தர் துறவியானதில் அவரது தந்தைக்கு விருப்பமில்லை. அவருக்கு புத்தரின் மேல் கோபம். பயங்கர கோபம். அந்த நாட்டுக்கே இளவரசரான புத்தர் நாட்டை விட்டே ஓடவேண்டியிருந்தது. அவரது நாட்டில் இருந்தால் எப்படியும் அவரது தந்தை ஒற்றர்களை வைத்து அவரைப் பிடித்துவிடுவார் என்று அஞ்சினார் புத்தர்.

புத்தர் அவரது தந்தைக்கு ஒரே மகன். அவரது தந்தைக்கும் வயதாகிவிட்டது. புத்தர் அரண்மனையை விட்டு ஓடிய போது அவரது தந்தைக்கு வயது 70. தந்தைக்கும் பயம். தனக்குப் பின் தனது நாட்டை ஆளப்போவது யார் என்று அவர் கவலைப்பட ஆரம்பித்தார்.

இதற்கிடையில் புத்தரைப் பற்றி நாலா பக்கங்களிலிருந்தும் கதைகளும், வதந்திகளும் வர ஆரம்பித்தன. புத்தர் துறவியாகி விட்டார். அவர் பிச்சை எடுத்துத்தான் உண்கிறார். அவர் பிச்சைக்காரனைப் போலத்தான் வாழ்கிறார் போன்ற செய்திகளைக் கேட்டு தந்தை கோபத்தில் வெகுண்டார்.

"இது என்ன முட்டாள்தனம்? ஒரு சக்கரவர்த்தியின் மகன் பிச்சை எடுப்பதா? எதற்காக? அவனிடம் தான் எல்லாம் இருக்கிறதே, எதற்காக பிச்சை எடுக்க வேண்டும்? காலில் எதுவும் அணியாமல் வீடு வீடாகப் போய் பிச்சை எடுக்கிறானாமே?

அவனோடு ஒரு பிச்சைக்காரர்கள் கூட்டம் வேறு இருக்கிறதாமே? சே, எனக்குத் துரோகம் செய்துவிட்டான் என் மகன்.''

புத்தரின் தந்தைக்கு மகா கோபம். இங்கே கொஞ்சம் நின்று சிந்தித்துப் பார்த்தால் ஓர் உண்மை விளங்கும். தந்தைக்குக் கோபம் மகன் பிச்சை எடுக்கிறான் என்பதால் அல்ல. மகன் தங்கள் மதத்துக்கு எதிராகப் போய்விட்டானே என்பது தான் கோபத்துக்குக் காரணம்.

புத்தரின் தந்தை எப்படியெல்லாம் வாழ்ந்தாரோ அதை எல்லாம் அவரது மகன் எதிர்க்கிறான் என்பதுதான் அவரது கோபம். அவர் எதையெல்லாம் பிரதிபலித்தாரோ அதையெல்லாம் புத்தன் எதிர்க்கிறானே என்பது தான் அவரது கோபத்துக்குக் காரணம். தனது அகங்காரத்தை எதிர்க்கிறானே, என்பது தான் தந்தையின் கோபத்துக்கு உண்மையான காரணம்.

ஏசுநாதரின் பெற்றோருக்கும் அவர் மேல் கோபம் இருந்தது. ஏசுநாதரின் பெற்றோர்கள் சடங்காச்சாரமாக வாழ்ந்து வந்த யூதர்கள். ஏசுநாதரோ யூதர்களின் மதத்துக்கு எதிராகத் தொடர்ந்து பேசி வந்தார். அதனால் அவர்களுக்கு தங்கள் மகன் மேல் கோபம் இருந்தது.

யூதர்கள் மோசஸைத் தெய்வமாக வழிபட்டவர்கள். இந்த மோசஸ் தான் இறைவனிடமிருந்து பத்து கட்டளைகளை வாங்கி வந்த மகானுபாவர். அந்த மோசசை விட ஏசு பெரியவனா என்று தான் அவர்கள் கோபப்பட்டார்கள்.

ஏசுநாதர் அடிக்கடி சொல்வார்: ''கடந்த காலத்தில் உங்களிடம் அவர்கள் இப்படி எல்லாம் சொன்னார்கள். அவை எல்லாம் தவறு. உங்கள் மேல் ஒருவர் செங்கல்லை எறிந்தால் பதிலுக்கு அவர் மேல் கருங்கல்லை எறி என்று சொன்னார்கள். ஆனால் நான் சொல்கிறேன் கேளுங்கள். யாராவது உங்களை ஒரு கன்னத்தில் அறைந்தால் அவருக்கு மறு கன்னத்தைக் காட்டுங்கள்.''

இந்த உபதேசம் யூதர்களின் மதத்துக்கு நேர் எதிரானது. இது அவர்களின் நீதிமுறைக்குப் புறம்பானது. யூதர்களின் கடவுள் அவர்களின் புனித நூலான டால்மட்டில் (Talmud) சொல்கிறார்: ''நான் பொறாமை பிடித்தவன். எனக்கு எதிராக நீங்கள் செயல்படுவதை என்னால் தாங்கிக் கொள்ள முடியாது. நீங்கள் என்னை எதிர்த்தால் நான் உங்களை அழித்துவிடுவேன்.''

அந்த கடவுளுக்கு ஏற்பட்ட கோபத்தில் அந்தக் காலத்திலேயே இரண்டு நகரங்களை முற்றிலுமாக அழித்துவிட்டார் அவர். ஹிரோஷிமா, நாகசாகியில் நடந்த பேரழிவை, யூதர்களின் கடவுள் 3000 ஆண்டுகளுக்கு முன்பே செய்து காட்டிவிட்டார்.

அவர் அந்தக் காலத்தில் இரண்டு நகரங்களை அழித்ததற்கு ஒரே காரணம் - அந்த நகரங்களில் இருந்த மக்கள் அன்றிருந்த ஒழுக்க விதிகளின் படி நடந்து கொள்ளாததுதான்.

இதில் சிந்திக்க வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. எல்லா மக்களும் ஒழுக்கமில்லாமல் இருந்திருக்க மாட்டார்கள். அப்படியே இருந்தாலும் எல்லாருடைய ஒழுக்கமின்மையும் ஒரே மாதிரியாக இருந்திருக்காது.

அந்த நகரங்களில் சிறு குழந்தைகள் இருந்திருப்பார்கள். அவர்கள் நிச்சயம் குற்றமற்றவர்களாகத்தான் இருந்திருப்பார்கள். அவர்களுக்கு ஒழுக்கத்தைப் பற்றியும், ஒழுக்கமின்மையைப் பற்றியும் என்ன தெரியும்?

அந்த நகரங்களில் பல நோயாளிகள் இருந்திருக்கலாம். தனது படுக்கையை விட்டு அசைய முடியாத அந்த நோயாளிகள் எப்படி ஒழுக்கக்கேடாக நடந்து கொள்ள முடியும்?

ஆனால் யூதர்களின் கடவுளுக்கு வந்த பயங்கரமான கோபத்தில் மனித இனத்துக்கு பாடம் கற்பிக்க வேண்டும் என்பதற்காகவே இரண்டு நகரங்களையும் ஒட்டு மொத்தமாக அழித்துவிட்டார்.

ஆனால் இந்த இளைஞன் ஏசுவோ, 'மன்னியுங்கள்' என்று உபதேசம் செய்து கொண்டிருந்தார். யூதர்களின் மதத்தை முற்றிலும் எதிர்ப்பதாக இருந்தது அந்த உபதேசம். ஏசுநாதர் மக்களுக்கு புதிய கொள்கைகளை, புதிய த்த்துவங்களை, புதிய பார்வைகளைத் தந்தார். அதனால் தான் அவரது பெற்றோர்கள் அவர் மேல் கோபப் பட்டார்கள்.

ஒரு முறை ஏசுநாதர் உபதேசம் செய்து கொண்டிருந்தார். அவரைச் சுற்றி அவரது சீடர்கள் இருந்தார்கள். அது போக ஒரு பெரிய கூட்டமே இருந்தது. அப்போது அவரைத் தேடிக் கொண்டு அவரது தாயார் மேரி அங்கு வந்தார். கூட்டத்தில் இருந்த ஒருவர், ஏசுநாதரிடம், "உங்கள் அம்மா வந்திருக்கிறார்கள். வெளியே காத்திருக்கிறார்கள். உங்களை அவசரமாகப் பார்க்க வேண்டுமாம்." என்று சொன்னார்.

அதற்குப் பதிலாக ஏசுநாதர் என்ன சொன்னார் தெரியுமா?

“அந்தப் பெண்ணிடம் சொல்லுங்கள். (கவனியுங்கள், என் தாயிடம் சொல்லுங்கள் என்று சொல்லவில்லை) என்னுடைய தாய் என்று யாரும் இல்லை. தந்தை என்று யாரும் இல்லை. எனக்கு உறவினர்கள் யாரும் இல்லை. இங்கே என்னைச் சுற்றி இருப்பவர்கள்தான் என் உறவினர்கள். என்னுடன் இல்லாதவர்கள் என் உறவினர்கள் இல்லை. அவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. அவளை வந்த வழியே போகச் சொல்லுங்கள்.”

வார்த்தைகள் கடுமையாக இருக்கின்றன. ஏசுநாதர் கொடுங்கோலராகத் தெரிகிறார். ஆனால் அதற்கெல்லாம் ஒரு காரணம் இருக்கிறது. இப்படி உண்மையிலேயே நடந்திருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. இவையெல்லாம் ஒரு வகையில் குறியீட்டுக் கதைகள். “அந்தப் பெண்ணிடம் சொல்லுங்கள்...” என்று தனது தாயைக் குறித்துச் சொல்லுமளவிற்கு ஏசுநாதர் கல்நெஞ்சுக்காரர் கிடையாது.

ஆனால் இந்த குறியீட்டுக் கதையில் ஒரு முக்கியமான உண்மை பொதிந்து கிடக்கிறது. நீங்கள் முழுவதுமாக பக்குவம் அடைய வேண்டுமென்றால் உங்கள் தாய், தந்தை பற்றிய எண்ணங் களை நீங்கள் விட்டுவிட வேண்டும். அந்த எண்ணங்களைச் சுமந்து கொண்டிருக்கும் வரை நீங்கள் குழந்தையாகத்தான் இருப்பீர்கள்.

உங்கள் தாயோ தந்தையோ நீங்கள் பக்குவமடைவதை விரும்ப மாட்டார்கள். அதன் பின் நீங்கள் சுதந்திரப் பறவையாகி உங்கள் போக்கில் பறந்து போய்விடுவீர்களே? நீங்கள் எப்போதும் பக்குவமில்லாத குழந்தையாக இருக்க வேண்டும் என்றுதான் அவர்கள் விரும்புவார்கள்.

அனைத்து மதங்களும் ‘பெற்றோர்களை மதிக்க வேண்டும்’ என்று உபதேசம் செய்கின்றன. ஏன்? அப்போதுதான் நீங்கள் கடந்த காலத்தை, சாஸ்திர சம்பிரதாயங்களை, மரபுகளை, பழக்க வழக்கங்களை மதிப்பீர்கள். நீங்கள் உங்கள் தந்தையை மதித்தால் தான், தந்தையுருவில் இருக்கும் கடவுளை மதிப்பீர்கள். நீங்கள் உங்கள் பெற்றோர்களை மதிக்காவிட்டால் உங்கள் சாஸ்திர சம்பிரதாயங்களையும் மதிக்க மாட்டீர்கள். அப்படி நீங்கள் இருப்பது உங்கள் மதத்துக்கு ஆபத்து.

உங்கள் தாய்-தந்தையை மதிக்கக் கூடாது என்று நான் சொல்லவில்லை. உங்களுக்குள்ளே இருக்கும் உங்கள் தாய்-தந்தை பற்றிய பதிவுகளிலிருந்து நீங்கள் முற்றிலுமாக விடுதலையடைந்தால் தான் உங்கள் தாய்-தந்தையை உங்களால் உண்மையாக மதிக்க முடியும்.

அதுவரை உங்கள் மதிப்பும், மரியாதையும் போலியானவை யாகவே இருக்கும். அவர்களிடமிருந்து நீங்கள் முழுமையாக விடுதலை பெற்றால்தான் அவர்கள் மேல் உங்களால் அன்பு காட்ட முடியும். இல்லாவிட்டால் உங்கள் அன்பி ் போலித் தன்மையே மிஞ்சி நிற்கும். அவர்கள் மேல் உங்களுக்குக் கோபம் கூட இருக்கும்.

நீங்கள் ஒருவர் மேல் அன்பு காட்ட வேண்டுமென்றால் நீங்கள் எந்த வகையிலும் அவரைச் சார்ந்து இருக்கக்கூடாது. நீங்கள் உங்கள் முதலாளியைச் சார்ந்திருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர் மேல் நீங்கள் அன்பு காட்டுவது என்பது ஒரு போலி நாடகம்தான்.

உங்கள் மனதின் அடி ஆழத்தில் வெறுப்பு மண்டிக் கிடக்கிறது. ஆனால் வெளியே சில நன்மைகளுக்காக அன்பு காட்ட வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறீர்கள். அது அன்பே இல்லை. அதே சமயத்தில் உங்கள் முதலாளியை நீங்கள் சார்ந்து இல்லை என்றால், அவரை விட்டால் உங்களுக்கு வேறு இடத்தில் வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தால், அந்த சமயத்தில் நீங்கள் அவர் மேல் அன்பு வைத்தால் அதில் அர்த்தம் இருக்கிறது.

விதிவிலக்கில்லாமல் ஒவ்வொரு குழந்தையும் தனது பெற்றோரை வெறுக்கிறது. ஆனால் வெளியில் இருந்து மரியாதை செலுத்த வேண்டும் என்ற எண்ணம் அந்த குழந்தை மேல் திணிக்கப்படுகிறது.

உங்கள் ஆழ்மனதை உற்றுப் பாருங்கள். உங்கள் பெற்றோர் களைப் பழிவாங்க வேண்டும் என்ற நெருப்பு உங்களுக்குள் கனன்று கொண்டிருக்கும். நீங்கள் இப்படி இருப்பதற்கு அவர்கள்தான் காரணம் என்று அவர்கள் மேல் உங்களுக்கு எப்போதும் கோபம் இருக்கும்.

உங்கள் வாழ்க்கையின் துன்பங்களுக்கு எல்லாம் அவர்கள் தான் காரணம் என்று நீங்கள் நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்.

அவர்கள் உங்களுக்கு உருவேற்றிய மனக்கட்டுத் திட்டங்களால்தான் நீங்கள் இப்போது வாழ்க்கையில் ஊனமுற்று, செயலற்று இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனால் அவர்கள் மேல் உங்களுக்கு இருக்கும் வெறுப்பு இயல்பானதுதான்.

இந்த வெறுப்பைப் பற்றி முற்றிலும் அறிந்து கொள்ளுங்கள். அவர்கள் பாவம் தாங்கள் செய்வது இன்னது என்று அறியாமல் செய்துவிட்டார்கள். இந்த உண்மையை உணர்ந்து கொண்டு அந்த அந்த வெறுப்பை விட்டொழியுங்கள். அவர்களாக விரும்பி இதை எல்லாம் செய்யவில்லை. அவர்களுக்கு அவர்கள் பெற் றோர்கள் செய்ததைத்தான் அவர்கள் உங்களுக்குச் செய்திருக் கிறார்கள். அவர்கள் மன்னிக்கப்பட வேண்டியவர்கள். அதனால் மன்னித்துவிடுங்கள்.

ஏசுநாதர் சொல்கிறார்: உங்கள் தாய்-தந்தையர் மேல் வெறுப்பைக் காட்டுங்கள். புத்தர் ஒரு படி மேலே போய், "உங்கள் தாய்-தந்தையரைக் கொன்றுவிடுங்கள்" என்று சொல்கிறார். உங்கள் பெற்றோர்கள் பாவம், ஒன்றும் அறியாதவர்கள். அவர்களுடைய பெற்றோர்கள் அவர்களுக்கு உருவேற்றிய மனக்கட்டுத் திட்டங்களை உங்களுக்கு அவர்கள் உருவேற்றியிருக்கிறார்கள். அவ்வளவுதான்.

உலகின் முதல் மனிதர்களாகக் கருதப்படும் ஆதாம்-ஏவாள் கூட ஒரு வகையில் மனக்கட்டுத்திட்டத்துக்கு ஆட்படுத்தப்பட்ட வர்கள்தான். அவர்களின் தந்தையான கடவுள் ஒரு வகையில் அவர்களுக்கு மனக்கட்டுத்திட்டத்தை உருவேற்றினார் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆதாமின் மனக்கட்டுத்திட்டத்துக்குக் கடவுள் தான் நேரடி காரணம். "அறிவென்ற மரத்தின் பழங்களை மட்டும் உண்ணாதே." என்று கடவுள் சொன்னதுதான் அதன் பின் நடந்த அனைத்துக்கும் காரணம். அப்படிச் செய்யாதே என்று இறைவன் சொன்னது தான் ஆதாமுக்கு அந்தச் செயல் மேல் ஆசையை உண்டாக்கியது. அது எதிர்மறையான ம்னக்கட்டுத்திட்டம்.

யாரிடமாவது, இப்படிச் செய்யாதே என்று அழுத்தமாகச் சொன்னால், அதை எப்படிச் செய்வது என்றுதான் அவர்கள் யோசிக்க ஆரம்பிப்பார்கள். ஏன்? கடவுள் ஏன் அப்படிச் சொல்லி ஆதாமின் ஆவலைத் தூண்டினார்? ஏனென்றால் அறிவு-மரம் அப்படி ஒன்றும் தீங்கு விளைவிக்க முடியாது. அறிதல் என்றும்

தீமையாகாது. அறிவு அதிகமாகி இன்னும் புத்திசாலியாகிறீர்கள். அது நல்லது தானே? அறிவு, ஞானம் எல்லாமே நன்மைகள் தானே?

ஆதாம் என்ன நினைத்திருப்பான்?

"கடவுள் ஒரு திட்டம் போட்டிருக்கிறார். அவரளவு நான் அறிவாளியாகிவிடக்கூடாது என்று நினைக்கிறார். நான் அறிவில்லாமல் இருக்கும் வரைதான் அவரைச் சார்ந்து இருப்பேன். எனக்கென்று அறிவு வளராதவரைதான் நான் அவரிடம் போய் அறிவுரை கேட்டுக் கொண்டிருப்பேன்.

"அறிவில்லாத வரை என்னுடைய வாழ்க்கையை நான் வாழமுடியாது. கடவுளின் நிழலாக, அவரது அடிமையாக, ஒரு விலங்காகத்தான் நான் வாழமுடியும். ஒருவேளை நான் தனிமனிதனாக, சுதந்திரமாக இருப்பதை கடவுள் விரும்பாமல் இருக்கலாம். அதன் காரணமாகத்தான் அறிவு மரத்தில் இருந்து நான் பழங்கள் உண்ணக்கூடாது என்று தடைவிதித்திருக்கலாம்."

இது எளிமையான, சரியான விளக்கம். இதைத்தான் சாத்தான் செய்தது. சாத்தான் ஏவாளிடம் போய் இதே வாதங்களைத் தான் சொன்னது. அது ஏன் ஆதாமைவிட்டுவிட்டு ஏவாளிடம் போக வேண்டும்? ஏவாள் ஒத்துக் கொண்டால் அதன் பின் அவள் மூலம் ஆதாமை இழுப்பது எளிதாக இருக்கும் அல்லவா?

இது விளம்பரத்துறையில் இருக்கும் அனைவருக்கும் தெரியும். அதனால்தான் அவர்கள் பெண்களைக் குறிவைக்கிறார்கள். பெண்களை ஏற்றுக்கொள்ள வைத்துவிட்டால் அதன் பின் அவர்களை யாராலும் மாற்ற முடியாது. முக்கியமாக அவர்களுடைய கணவர்களால் அதைச் செய்யவே முடியாது. விளம்பரத்தில் உள்ள பொருள் தனக்கு வேண்டும் என்று பெண் நச்சரிக்கத் தொடங்கினால் கணவனால் அந்த சித்திரவதையைத் தாங்கிக் கொள்ளவே முடியாது.

சாத்தான் தான் உலகத்தின் முதல் விளம்பரத்துறை விற்பன்னன். விளம்பரத்துறையைக் கண்டுபிடித்ததே சாத்தான் தான். சாத்தான் ஆதாமைப் பற்றிக் கவலைப்படவில்லை. எல்லாக் கணவர்களும் பொண்டாட்டிதாசர்கள் என்பது சாத்தானுக்கு அன்றே தெரிந்திருக்க வேண்டும். அதனால் தான் சாத்தான் ஆதாமைக் கண்டுகொள்ளாமல் ஏவாளிடம் போய் வத்தி வைத்தது.

“கடவுள் ஞானப்பழத்தை ஏன் உண்ண வேண்டாம் என்று சொன்னார் என்று யோசித்துப் பார்த்தாயா? அதைச் சாப்பிட்டால் நீங்களும் கடவுளைப் போல் அறிவுடையவர்கள் ஆகிவிடுவீர்கள். அப்படியானால் அவரது பதவிக்கு ஆபத்து வந்துவிடும் அல்லவா? நீங்கள் இருவரும் கடவுளாக மாற இதுதான் கடைசி வாய்ப்பு. இதை முட்டாள்தனமாக நழுவவிட்டுவிடாதீர்கள். ஞானப் பழத்தை உண்ணுங்கள். கடவுளாக மாறிக் களியாட்டம் போடுங்கள்.”

கடவுளாக வேண்டும் என்று யாருக்குத்தான் ஆசை இருக் காது? அந்த கவர்ச்சிக்கு முன்னால் வேறு எதுவும் எடுபடவில்லை. ஆனால் ஞானப்பழம் அவ்வளவு கவர்ச்சியாகத் தெரியக் காரணம் என்ன? கடவுள் தான். அவர் உருவேற்றிய மனக்கட்டுத்திட்டம் தான்.

கடவுள் அந்தப் பழத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லாமல் இருந்திருந்தால் ஆதாம்-ஏவாளுக்கு அதை உண்ண வேண்டும் என்ற ஆசையே வந்திருக்காது. “அதை மட்டும் சாப்பிடாதீர்கள்.” என்று கடவுள் சொன்னதாலேயே அந்தப் பழத்துக்குக் கவர்ச்சி வந்தது. அந்த கவர்ச்சியை சாத்தான் தனக்குச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டது.

உங்கள் மனக்கட்டுத்திட்டத்துக்கு உங்கள் பெற்றோர்கள் பொறுப்பல்ல. பாவம், அவர்கள் தன்னுணர்வு இல்லாமல் செய்த காரியத்துக்கு அவர்கள் எப்படி பொறுப்பாக முடியும்? தன்னுணர்வு இல்லாமல் இருப்பவன் செய்யும் எந்தக் காரியமும் குற்றமாகாது.

நீங்கள் உங்களுக்குள்ளே ஆழமாகச் சென்று உங்கள் பெற்றோர்கள் உருவாக்கிய நேர்மறை, எதிர்மறைப் பதிவுகளை அழிக்க வேண்டும். அப்படி அழித்தபின் தான் உங்கள் பெற்றோர்கள் மேல் உங்களுக்குக் கருணை பிறக்கும். நன்றியுணர்வு அதிகமாகும். பாவம் அவர்கள். உங்களுக்கு நன்மை செய்வதாக நினைத்துக் கொண்டுதான் அதைச் செய்திருக்கிறார்கள். உங்க ளுக்குத் தீங்கிழைக்க வேண்டும் என்று திட்டமிட்டுச் செயல்பட வில்லை அவர்கள்.

இப்போது கூட அவர்கள் உங்கள் மேல் கோபமாக இருப் பதற்குக் காரணம் ‘இவன் இப்படி ஓஷோவிடம் போய் சந்நியாசி யாகிவிட்டானே’ என்ற வருத்தம்தான். நீங்கள் ஆகி வந்த

மரபுப் பாதையில் இருந்து விலகிப் போகிறீர்களே என்ற கவலை தான். நீங்கள் தேர்ந்தெடுத்த பாதை தவறாக இருந்துவிடப் போகிறதே என்ற ஆதங்கம்தான்.

தவறான பாதையில் போய் துன்பம் அனுபவிக்கப் போகிறீர் களே என்ற பயம்தான். அந்த துன்பம் தான் கோபமாக வருகிறது. அவர்களுக்கு இன்னும் உங்கள் மேல் அக்கறை இருக்கிறது. நீங்கள் நன்றாக, மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் உங்கள் மேல் காட்டும் பாசம் குருட்டுத் தனமானது. தன்னுணர்வு இல்லாதது. அதனால் நீங்கள் அவர்கள் சொல்வதைக் கவனிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அதற்காக அவர்கள் மேல் கோபம் கொள்ளாதீர்கள். அவர்களைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்.

*நீங்கள் சொல்கிறீர்கள். ஓஷோ, எனது பெற்றோர்கள் யூதர்கள். நான் உங்களிடம் சந்நியாசியாகிவிட்டதில் அவர்களுக்கு மிகவும் வருத்தம்.*

முதலில் உங்கள் பெற்றோர்கள் யூதர்கள். உலகத்தில் உள்ள மதங்களில் மிகவும் பழைமையானது யூதர்களின் மதம். உலகிலேயே இரண்டு மதங்கள் தான் மிகவும் பழைமையானவை. ஒன்று யூதர்களின் மதம். அடுத்தது இந்து மதம். ஒரு மதம் எவ்வளவு பழைமையானதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அதில் பாரம் அதிகம் இருக்கும். அந்த பாரம்தான் இப்போது மக்களை அமிழ்த்திக் கொண்டிருக்கிறது. புதிதாகத் தோன்றும் மதங்கள் லேசாக இருக்கும்.

எனது சந்தியாசிகள் லேசாக, ஏறக்குறைய நடனமாடுவது போல் நடந்து போவார்கள். ஆனால் 5000 ஆண்டுகள் பழைமை யான மதம் மிகவும் கனமாக இருக்கும். அதற்கு நீண்ட இறந்த காலம் இருக்கிறது. அவர்களால் ஏசுநாதரையே மன்னிக்க முடிய வில்லை. உங்களையா மன்னிக்கப் போகிறார்கள்? இத்தனைக்கும் ஏசுநாதர் ஏன் சந்தியாசியாக மாறவில்லை. சொல்லப் போனால் ஏசுநாதர் யூத சம்பிரதாயங்களுக்குக் கட்டுப்பட்டுத்தான் வாழ்ந்தார்.

ஒன்றை மட்டும் நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். ஏசு நாதர் கிறிஸ்தவராக வாழவில்லை. ஏனென்றால் ஏசு நாதர் வாழும் போது கிறிஸ்துவ மதமே தோன்றியிருக்கவில்லை. ஏசு நாதரின் சாவில்தான் கிறிஸ்துவ மதம் பிறந்தது.

அதுவும் அவர் கொடூரமாக சிலுவையில் அறையப்பட்டதால் தான் அந்த மதம் பிறந்தது. அதனால் நான் அந்த மதத்தை 'சிலுவை மதம்' என்று தான் சொல்வேன். அது ஏசு கிறிஸ்து சம்பந்தப்பட்ட மதம் இல்லை. அது சிலுவை சம்பந்தப்பட்ட மதம். அதனால் தான் அந்த மதத்துக்கு சிலுவையே சின்னமாயிற்று. ஏசு நாதரை விட சிலுவைக்குத்தான் அந்த மதத்தில் மதிப்பு அதிகம்.

தங்கள் மரபை விட்டு அதிகம் வெளியே போகாத ஏசுநாதரையே யூதர்களால் மன்னிக்க முடியவில்லை. என் சந்நியாசியாகிவிட்ட உங்களை உங்கள் பெற்றோர்கள் எப்படி மன்னிக்கப் போகிறார்கள், சொல்லுங்கள்.

ஏசு நாதர் சில விநோதமான விஷயங்களைச் சொன்னார் என்பது உண்மைதான். அவர் சில புதுமையான விஷயங்களைச் சொன்னார். ஒரு புதிய ஒளியைக் கொண்டு வந்தார். யூதர்கள் மனத்தில் ஆயிரம் ஆண்டுகளாகப் படிந்திருந்த அழுக்கை அவர் அகற்றினார். இந்த குற்றங்களைச் செய்த ஏசுநாதரையே அவர்களால் மன்னிக்க முடியவில்லை.

ஏசுநாதருக்குச் சாதகமாக இதுவரை ஒரு யூதர் கூட புத்தகம் எழுதவில்லை. ஏசு இறந்து 2000 ஆண்டுகளானபின்பும் அவரை மன்னித்து ஏற்றுக் கொள்ள யூதர்களுக்கு மனம் வரவில்லை. இன்னும் அவர்கள் ஏசு நாதர் குற்றவாளி என்று தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஏசு நாதரைச் சிலுவையில் அறைந்தது சரியான தண்டனைதான் என்று இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த பின்னணியில் நீங்கள் எனது சந்நியாசியானது அவர்களைப் பொறுத்த மட்டில் மன்னிக்க முடியாத குற்றம். ஏனென்றால் நீங்கள் எல்லா மரபுகளையும் உடைத்தெறிந்து விட்டீர்கள். இது ஒரு மரபில் இருந்து மற்றொன்றுக்கு மாறுவது அல்ல. மரபுகளே தேவையில்லை என்று உடைத்தெறிவது, மரபுகளுக்கு அப்பாற்பட்டு நிற்பது, சம்பிரதாயங்களை எல்லாம் கடந்து நிற்பது.

இது கலப்படமில்லாத புரட்சி. அதனால் தான் அவர்கள் இதைக் கண்டு பயப்படுகிறார்கள்.

எனக்கும் யூதர்களுக்கும் ஏதோ விட்ட குறை தொட்ட குறை இருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். பல யூதர்களை

என்னால் கவரப்பட்டு இங்கே வந்திருக்கிறார்கள். ஒரு வேளை நானே போன ஜென்மத்தில் யூதனாக இருந்தேனோ? தெரிய வில்லை.

ஏனென்றால் யூதர்களைக் கவர்வது என்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. யூதர்களுக்குப் பொதுவாக யாரையுமே பிடிக்காது. என்னிடம் மட்டும் ஏன் அவர்கள் வரவேண்டும்? அவர்கள் மனதில் ஆழத்தில் எங்கேயோ தொட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன்.

இந்த உலகத்திலேயே சம்பிரதாயங்களால், மரபுகளால் அதிகம் துன்பப்பட்ட இனம் ஒன்று உண்டென்றால் அது யூதர்களின் இனம்தான். அதனால் தான் அவர்களுக்கு என்னிடம் ஈடுபாடு இருக்கிறது. நான் எல்லா சம்பிரதாயங்களையும், எல்லா மரபு களையும் எதிர்க்கிறேன் என்பதால்தான் அவர்கள் என்பால் கவரப்படுகிறார்கள். தங்களை அழுத்திக் கொண்டிருக்கும் மரபுகளின் பாரத்தை இறக்கிவைக்க வழிதேடிக் கொண்டிருக்கிறார்கள் அவர்கள்.

ஒரு யூதனும், ஒரு கருப்பினத்தவனும் ரெயிலில் அருகருகே அமர்ந்திருந்தார்கள். கருப்பன் ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அது என்ன புத்தகம் என்று யூதன் எட்டிப் பார்த்தான். யூதர்கள் புனித மொழியாகக் கருதும் ஹீப்ரு மொழிப் புத்தகம் அது.

சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு யூதன் கருப்பனைப் பார்த்துச் சொன்னான். "

ஏம்ப்பா, கருப்பனாக இருப்பது போதாதா? இன்னும் இது வேறு தேவையா?"

எல்லா நாடுகளிலும் யூதர்கள் ஒதுக்கப்பட்ட இனத்தவர் களாகவே கருதப்படுகின்றனர். கருப்பினமும் ஒருவகையில் தாழ்த்தப் பட்ட இனம் தான். கருப்பாகவும் இருந்து, யூதர்கள் மதத்தையும் பின்பற்றினால் கேட்க வேண்டுமா? அந்த அக்கறையில்தான் யூதன் கருப்பனை எச்சரித்தான்.

உங்கள் யூதப் பெற்றோர்கள் இப்போது பயப்படுகிறார்கள். "மகனே, நீ யூதனாக இருப்பது போதாதா? இன்னும் இந்த ஓஷோ, சந்நியாசம் இதெல்லாம் வேறு தேவைதானா?" என்று நினைக் கிறார்கள். ஏனென்றால் என்னிடம் இருப்பது ஆபத்தானது.

உலகத்தில் உள்ள எல்லா விஷயங்களையும் விட சுதந்திரம் ஆபத்தானது. சுதந்திரம் நெருப்பைப் போன்றது. அது உங்கள் அகந்தையை எரித்து விடும். அப்படி எரிப்பதால் அந்த சூடு மற்றவர்களின் அகந்தைகளையும் எரிக்கத் தொடங்கும். அதனால் உங்களுக்கு அதிக அளவில் பகைவர்கள் இருப்பார்கள்.

யூதர்கள் உலக வாழ்வில் அதிகப் பற்றுடையவர்கள். இன்றிருக்கும் மதங்களிலேயே உலக வாழ்வை அதிகம் நேசிக்கும் மதம் யூதர்களின் மதம் தான். மதங்களில் இரண்டு வகை உண்டு. ஒரு வகை இவ்வுலக வாழ்வை உயர்த்திச் சொல்லும். மறு உலகம் என்று ஒன்றுமே இல்லை. இந்த உலகத்தில் நாம் அனுபவிப்பதுதான் நிஜம் என்று ஆணித்தரமாகச் சொல்லும்.

அடுத்த வகை, மறுவுலக வாழ்வைச் சேர்ந்தவை. இந்த உலகம் என்பதே வெறும் மாயைதான். மறு உலகில் சொர்க்கத்தை அடைய வேண்டும் என்பதே நோக்கம் என்று வாதிடும்.

அதில் யூத மதம் முதல்வகையைச் சேர்ந்தது. புத்த மதம் இரண்டாவது வகையைச் சேர்ந்தது. பௌத்தர்கள் என்னைத் தங்கள் எதிரிகளாக நினைக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் கண்ணோட்டத்தில் நான் இவ்வுலக வாழ்க்கையில் அதிகம் நாட்டம் செலுத்துகிறேன்.

யூதர்களும் என்னை எதிரியாகத்தான் பார்க்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் கண்ணோட்டத்தில் நான் இவ்வுலக வாழ்க்கையில் போதிய அளவு நாட்டம் செலுத்தவில்லை.

என் மதம் இரண்டு உலகங்களையும் இணைக்கும் பாலம் போன்றது. நான் சொல்லும் சந்நியாசம் இரு உலகங்களின் அழகான சேர்க்கை. உலகங்களை நான் 'இவ்வுலகம்' 'அவ்வுலகம்' என்று பாகுபடுத்திப் பார்ப்பதில்லை. இரண்டுமே அழகான உலகங்கள்தான். நாம் இரண்டு உலகங்களிலும் வாழ்ந்தாக வேண்டும். ஏனென்றால் அவை தனித்தனி உலகங்கள் இல்லை. அவற்றை இரண்டாகப் பிரிக்க முடியாது. இவ்வுலகம், அவ்வுலகம் என்று மதங்கள் பிரித்ததுதான் எல்லாக் குழப்பங்களுக்கும் வித்து.

யூதர்களுக்கு தியானம் செய்வதை விட பணம் சம்பாதிப்பதுதான் முக்கியம். இப்போது நீங்கள் இங்கே தியானம் செய்ய வந்துவிட்டதால் உங்கள் பெற்றோர்கள் பயப்படுகிறார்கள்.

"மகனே, என்ன செய்கிறாய் நீ? இது பணம் சம்பாதிக்க வேண்டிய வயது. உலகத்தில் காலூன்றி நிற்க வேண்டிய வயது. உன் நேரத்தை தியானம் செய்வதில், சந்நியாசத்தில் வீணாக்காதே."

அவர்களைப் பொறுத்த மட்டில் உங்கள் இளவயதில்தான் நீங்கள் சாதிக்க முடியும், சம்பாதிக்க முடியும். வயதாகிவிட்டால் உங்களால் எதுவும் செய்ய முடியாது. அப்போது உங்களால் பணம் சம்பாதிக்க முடியாது. அதிகாரம் செலுத்த முடியாது. கண்ணியத்தோடு வாழ முடியாது என்பதுதான் அவர்களின் எண்ணம். அதனால் நீங்கள் இப்போது பணம் சம்பாதிக்காமல் என்னோடு சுற்றிக் கொண்டிருப்பது தவறு என்று நினைக்கிறார்கள். உங்கள் இளமையை, நேரத்தை வீணாக்குகிறீர்கள் என்று நினைக்கிறார்கள்.

இங்கு வந்து சேர்ந்தபின்னும் யூதர்களால் தங்கள் பழைய பழக்கங்களை, பழைய மனப்பாங்கை எளிதில் விடமுடியவில்லை. இப்படித்தான் ஒரு நாள் ஒரு சந்நியாசிக்கு திடீரென்று உற்சாகம் பிறந்தது.

அவள் தியானம் செய்து கொண்டிருந்த போது ஏதோ அபூர்வமான அமைதி ஏற்பட்டிருக்க வேண்டும். இல்லை எனது உரையைக் கேட்டுக் கொண்டிருந்த போது ஏதாவது அரிய உண்மை புலப்பட்டிருக்க வேண்டும். ஏதோ ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்க வேண்டும். அப்படி நிகழும் போது நீங்கள் யூதராக இருந்தால், உங்கள் யூதக் குணம் மறைந்து போய்விடும்.

உற்சாகமடைந்த அந்த பெண் சந்நியாசி அலுவலகத்துக்குப் போனாள். ஏதோ ஒரு சக்தியால் உந்தப்பட்டு, " இந்த கூட்டமைப்புக்கு நான் நாற்பது லட்சம் ரூபாய் அளிக்க விரும்புகிறேன்." என்று சொன்னாள். அவர்கள் அவளுக்கு நன்றி தெரிவித்தார்கள்.

சரியாக ஐந்து நிமிடம் கழித்து அலுவலகத்துக்கு வந்த அந்தப் பெண் தான் தனது மனதை மாற்றிக் கொண்டதாகத் தெரிவித்தாள். தான் வாக்களித்தபடி பணம் தரப்போவதில்லை என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டாள்.

அலுவலகத்தில் உள்ளவர்களுக்கு ஆச்சரியம். "என்ன ஆயிற்று? எங்களுக்கு ஒன்றும் பிரச்சினை இல்லை. நீ பணம் தராவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் ஏன் உன் மனதை இப்படி மாற்றிக் கொண்டாய் என்று சொல்ல முடியுமா? நீயாகவே வந்து

பணம் தரப்போகிறேன் என்று சொன்னாய். நாங்கள் யாரும் உன்னிடம் எதுவும் கேட்கவில்லை. இப்போது நீயே வந்து பணம் இல்லை என்று சொல்கிறாய். இந்த ஐந்து நிமிடத்தில் என்ன நடந்தது?''

அவள் சொன்னாள், ''நான் இங்கிருக்கும் இன்னொரு சந்நியாசியான அமிதாப்பை பார்த்தேன். அமிதாப் என் நண்பன். அவனிடம் என் நன்கொடையைப் பற்றிச் சொன்னேன். அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''உனக்கு என்ன கிறுக்கா பிடித்திருக்கிறது? போ, போய் உடனே, உன் நன்கொடையை ரத்து செய். ''என்று காச் மூச் என்று கத்தினான். எனக்குப் பயமாக இருந்தது. அதனால் தான்....''

இதில் வேடிக்கையைப் பாருங்கள். அமிதாப் ஒரு போலந்து நாட்டு யூதன். யூதன்- போலந்துநாட்டுக்காரன் - இந்த இரண்டும் மிகவும் ஆபத்தான சேர்மானம். அமிதாப் என் மேல் மிகுந்த அன்பு வைத்திருக்கிறான். அவன் இங்கேதான் இருக்கிறான். இங்குள்ள நோய் நீக்கும் வல்லுனர்களில் அவன் தான் முக்கிய மானவன். அவன் என் வீட்டில் தான் வாழ்கிறான். என்றாலும், பழைய பழக்கங்களிலிருந்து விடுபடுவது கொஞ்சம் கஷ்டம்தான்.

இப்படித்தான் ஒரு யூதன் மற்றொரு யூதனை அழைத்தான். ''உடனே வா. இங்கே 300 காற்சட்டைகளை வெறும் 50 டாலருக்குக் கிடைக்கிறது.''

உடனே அடுத்த யூதன் அவனிடம் ஓடினான். முதலாமவன் முன்னால் குவிந்திருந்த 300 காற்சட்டைகளைச் சோதித்துப் பார்த்தான்.

''ஏய் முட்டாளே, இந்த காற்சட்டைகளில் ஒரு கால்தான் இருக்கிறது. யாரும் இதை அணிய முடியாது.''

''நீ தான் முட்டாள். ஒரு காலுடன் எத்தனை் பேர் இருக்கிறார்கள்? அது போக இதை நாம் அணியப் போவதில்லை. விற்கத்தான் போகிறோம். வெட்டிப் பேச்சு பேசாமல் ஆக வேண்டியதைப் பார்.''

ஒரு யூதன் இஸ்ரேல் நாட்டிலிருந்து அமெரிக்காவின் ஷிகாகோ நகரத்துக்கு வந்தான். அப்போதுதான் அவன் முதல் முறையாக அமெரிக்காவுக்கு வருகிறான். நல்ல மழை. காலணிகள் வாங்க அங்குள்ள ஒரு கடையில் நுழைந்தான்.

ஒரு ஜோடி காலணியைப் பார்த்து அதன் விலையைக் கேட்டான்.

"இருபது டாலர்."

"இல்லை, பத்து டாலர்தான் தருவேன்."

"அந்த விலைக்கு விற்க முடியாது."

"பத்து டாலர் என்றால் வாங்கிக் கொள்கிறேன். இல்லையென்றால் வேண்டாம்."

"ஒரு நிமிடம் அவகாசம் கொடுங்கள். மேனேஜரைக் கேட்டுச் சொல்கிறேன்." என்று சொன்னான் விற்பனையாளன்.

"பத்து டாலருக்கு சரி என்று சொல்லிவிட்டார் மேனேஜர்."

"வேண்டாம். நான் 5 டாலர்தான் தருவேன்." அடம்பிடிக்க ஆரம்பித்தான் யூதன்.

மீண்டும் மேனேஜரைக் கேட்டுவிட்டு வந்தான்.

"சரி, எடுத்துக் கொள்ளுங்கள். 5 டாலர்தான்."

"மாட்டேன். நான் 2 டாலர்தான் தருவேன்."

வெறுப்படைந்த அந்த விற்பனையாளன்,

"யோவ் சாவுகிராக்கி, நீ ஒண்ணுமே தர வேண்டாம்யா. பேசாம இத எடுத்துக்கிட்டு ஓடிப் போய்டு."

"மாட்டேன்."

"இலவசமாகவே தருகிறேன் என்று சொல்கிறேன். மாட்டேன் என்றால் என்ன அர்த்தம்?"

"எனக்கு இரண்டு ஜோடிகள் வேண்டும்." அசடு வழிந்தான் யூதன்.

நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்களோ என்று உங்கள் பெற்றோர்கள் கவலைப்படலாம். உங்களைப் போன்ற ஒரு புத்திசாலி தியானத்தில் நேரத்தை வீணாக்கலாமா என்று கவலைப்படலாம்.

'உனக்கு என்ன கிறுக்காப் பிடித்திருக்கிறது? ஓடியாடிச் சம்பாதிக்க வேண்டிய வயதில் இப்படி தியானம், சந்நியாசம் என்று உதவாக்கரை ஆசாமிகளைக் கட்டிக் கொண்டு அழு

கிறாயே! நேரம் பணத்தைவிட விலை மதிப்பானது. அதை வீணாக்கிக் கொண்டிருக்கிறாயே' என்று அவர்கள் உங்கள் மேல் ஆதங்கப்படலாம்.

அது மட்டுமில்லை. யூதர்களோ, இஸ்லாமியர்களோ பெற் றோர்கள் என்றும் பெற்றோர்கள்தான். அவர்கள் போகாத வழியில் நீங்கள் போகும் போது, இதுவரை யாருமே போகாத புதுவழியில் நீங்கள் போகும் போது அவர்களுக்குக் கோபம் வரத்தான் செய்யும்.

அவர்களைவிட உங்களுக்கு அதிகம தெரியும் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பதற்காக உங்கள் மேல் கோபப்படு கிறார்கள். அவர்களைவிட புத்திசாலியாக இருக்க நீங்கள் முயற்சி செய்வதால் உங்கள் மேல் அவர்களுக்குப் பழியாகக் கோபம் வருகிறது.

ஒரு யூதன் திடீரென்று மாரடைப்பில் இறந்துவிட்டான். அவனது ஆவி சொர்க்கத்துக்குப் போனது. கடவுள் அவனைப் பார்த்துக் கருணை பொங்கக் கேட்டார்.

"என்ன ஆயிற்று உனக்கு?"

"கடவுளே, என்னுடைய ஒரே மகன், எங்கள் குலக் கொழுந்து, சொல்லாமல் கொள்ளாமல் கிறிஸ்துவ மதத்துக்கு மாறி விட்டான். அந்த அதிர்ச்சியை என்னால் தாங்க முடியவில்லை. அதில் ஏற்பட்ட நெஞ்சுவலியில் தான் என் உயிர் போனது."

"இருந்தாலும் அதற்காக நீ இவ்வளவு கவலைப்படக் கூடாது. என் பையன் ஏசுவும் அப்படித்தான் நமது மதத்தைவிட்டுப் போய் விட்டான். "

"அப்படியா? நீங்கள் என்ன செய்தீர்கள் இறைவா?"

"வேறு என்ன செய்வது, என் உயிலை மாற்றி எழுதினேன்."

உங்கள் பெற்றோர்கள் வேறு என்ன செய்வார்கள்? வேறு உயில் எழுதுவார்கள். எழுதிவிட்டுப் போகட்டுமே! அவர்களை மன்னிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அவர்களை வெறுக்க வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். ஏனென்றால் வெறுப்பு இருக்கும் இடத்தில் சுதந்திரம் இருக்காது.

நீங்கள் யாரையாவது வெறுத்தால் நீங்கள் இன்னும் அவர் மேல் பற்று வைத்திருக்கிறீர்கள் என்றுதான் அர்த்தம். வெறுப்பு என்பது உறவு, பற்று. அன்புதான் உண்மையான சுதந்திரம். அன்பு உறவல்ல. அது பற்றல்ல. வெறுப்பதுதான் பற்றை வளர்க்கிறது.

அதனால் தான் உறவாடுபவர்கள் எப்போதும் வெறுப்புடன் இருக்கிறார்கள். அன்பு என்பது சுதந்திரம். அவர்கள் மேல் அன்பு காட்டுங்கள். அப்போது உங்களுக்கு முழுமையான சுதந்திரம் இருக்கிறது என்று அர்த்தம்.

உங்கள் பெற்றோர்கள் மேல் அன்பு காட்ட வேண்டுமென்றால் நீங்கள் உங்களைத் தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டும்.

புத்தர் சொன்னது போல் அவர்களைக் கொல்ல வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். அவர்களைப் புரிந்து கொள் ளுங்கள். அவர்கள் மேல் அன்பு காட்டுங்கள். கொல்வது என்பது அவசரத்திலும், ஆத்திரத்திலும் நடக்கும் ஒரு செயல். எந்த சூழ்நிலையிலும் அவசரச் செயல் உதவாது.

உங்கள் பெற்றோர்களின் தாக்கம் உங்களுக்குள் ஆழமாக இறங்கி இருக்கிறது. உங்கள் இரத்தத்தில், எலும்பில், எலும்பு மஜ்ஜைவரை அவர்கள் தாக்கம் இருக்கிறது. அவர்களை உங்களால் எளிதில் கொல்ல முடியாது. அது சாத்தியமில்லை.

அவர்களைக் கொல்ல வேண்டுமென்றால் நீங்கள் தற்கொலை செய்து கொள்ள வேண்டும். அப்போதுதான் அவர்களை நீங்கள் முழுமையாகக் கொல்ல முடியும். நீங்கள் அவர்களில் ஒரு பகுதியாக இருக்கிறீர்கள். அவர்கள் உங்களில் ஒரு பகுதியாக இருக்கிறார்கள். ஆனால் உங்கள் புரிந்து கொள்ளும் திறம் வலுவாக இருந்தால் அவர்களிடமிருந்து நீங்கள் விடுதலை பெறலாம்.

ஒரு யூதன் தனது தாயை, மனைவியை, தனது சகோதரியைக் கொன்றுவிட்டான். அவனுக்காகப் பிரமாதமாக வாதாடி விடுதலை வாங்கிக் கொடுத்துவிட்டார் அவனுடைய வக்கீல். அந்த யூதன் விடைபெற்றுப் போகும் போது சொன்னார்.

“உனக்கு இன்னும் ஓர் அப்பா இருக்கிறார். அதனால் விரைவில் சந்திப்போம்.”

நான் அப்படிச் சொல்ல மாட்டேன். எனது வழி இன்னும் நுட்பமானது. ஏசுநாதரும் புத்தரும் சொன்னது கரடு முரடான பழைய வழிகள். நான் சொல்வது இந்த நூற்றாண்டுக்கேற்ற வழி.

உங்கள் பெற்றோர்களை மன்னியுங்கள். அவர்களைப் புரிந்து கொள்ளுங்கள். கேள்வி உங்களைப் பற்றியதுதான். வெளியில் இருக்கும் உங்கள் பெற்றோர்களைப் பற்றியதல்ல.

உங்கள் அளவில் நீங்கள் இயல்பாக அழுத்தம் இல்லாமல் இருக்க முடிந்தால் போதும் உங்களுக்கு அவர்கள் மேல் கருணை இருந்தால் போதும். பாவம், அவர்களும் தங்கள் வழியில் பல இன்னல்களைச் சந்தித்திருக்கிறார்கள். தங்கள் மொத்த வாழ்க்கையையும் தொலைத்துவிட்டு நிற்கிறார்கள். இப்போது உங்கள் வாழ்க்கையை வீணாக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

அதுவும் அவர்களாக விரும்பி திட்டமிட்டுச் செய்யவில்லை. அவர்களுக்கு இப்படித்தான் வாழத் தெரியும். இதை நீங்கள் உணரும் போது உங்கள் மனதில் அவர்கள் மேல் கருணை பெருக்கெடுக்கும். அந்த கருணையின் காரணமாக உங்களால் அவர்களுக்கு உதவ முடியும். ஏனென்றால் கருணை நுட்பமான வழிகளில் செயலாற்றும் வல்லமையுள்ளது. இந்த உலகத்தின் மிகப்பெரிய மந்திர சக்தி அன்புதான்.

அவர்களிடம் போய் அவர்கள் சொன்னதைக் கேட்டு அதன் படி நடந்து கொள்ளுங்கள் என்று நான் சொல்லவில்லை. அது தவறு. அது உங்கள் வாழ்க்கையை அழித்துக் கொள்வதாகும். அதனால் அவர்களுக்கும் ஒன்றும் பயனில்லை.

அவர்களிடம் போகும் போது கருணையுடன், மன்னிக்கும் மனோபாவத்துடன் செல்லுங்கள். அவர்கள் உங்கள் கருணையை, அன்பை, உங்கள் மகிழ்ச்சியை உணர வேண்டும். அவர்கள் உங்கள் கொண்டாட்டத்தை உணர வேண்டும். இந்த சந்நியாசத்தில் உங்களுக்கு என்ன நிகழ்ந்தது என்று அவர்கள் புரிந்து கொள்ளட்டும். நீங்கள் முன்னால் இருந்ததற்கும் இப்போது இருப்பதற்கும் உள்ள வித்தியாசத்தை அவர்கள் பார்க்கட்டும்.

புத்தரின் தந்தை அவர் மேல் மிகுந்த கோபத்துடன் இருந்தார். பல வருடங்கள் கழித்து புத்தரைப் பார்த்த போது கூட அவரது கோபம் ஆறவில்லை. கோபத்தில் அவரால் புத்தரைச் சரியாகக் கூட பார்க்க முடியவில்லை. புத்தர் அமைதியாக இருந்தார். அவரது தந்தையோ அவரை கண்டபடி திட்டிக் கொண்டிருந்தார்.

"சித்தார்த்தா, நீ என்னைக் கொன்று விட்டாய். 12 வருடம் கழித்து ஏன் இப்போது என்னைப் பார்க்க வந்தாய்? எவ்வளவு நாள் நான் காத்திருந்தேன்! நீ எனக்கு மகன் இல்லை. நீ என்னுடைய எதிரி."

புத்தர் ஒன்றுமே பேசாமல் அமைதியாக இருந்தார். சிறிது நேரம் கோபத்தில் கத்தியபின் தான் புத்தர் அதுவரை ஒன்றுமே பேசவில்லை என்பது அவர் தந்தைக்குத் தெரிந்தது.

"நீ ஏன் பேசாமல் நிற்கிறாய்?" என்று மகனைப் பார்த்துக் கோபத்துடன் கேட்டார்.

புத்தர் கனிவுடன் சொன்னார். "இந்த 12 வருடங்களாக உங்கள் மனதில் அடக்கி வைத்திருந்ததை எல்லாம் முதலில் வெளியில் கொட்டிவிடுங்கள். உங்கள் மனதை அழுத்தும் பாரத்தை இறக்கி வையுங்கள். உங்கள் மன பாரம் குறைந்தால் தான் நீங்கள் என்னைப் பார்க்க முடியும். இப்போது கோபம் உங்கள் கண்களை மறைத்துக் கொண்டிருக்கிறது.

"ஒன்றை மட்டும் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளுங்கள். நீங்கள் இப்போது உங்கள் மகனிடம் பேசவில்லை. யாரோ ஒரு மூன்றாம் மனிதரிடம் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் அரண்மனையை விட்டு ஓடிய உங்கள் மகன் இறந்துவிட்டான்.

"நான் புது மனிதனாகப் பிறப்பெடுத்து வந்திருக்கிறேன். நான் புது உணர்வுகளுடன், புதிய அன்புடன், புதுப்பிக்கப்பட்ட கருணையுடன் திரும்பி வந்திருக்கிறேன்.

"என்னைப் பார்ப்பதற்கு முன்னால் உங்கள் சுமையை வெளியே இறக்கி வையுங்கள். கோபம் கொப்பளிக்கும் உங்கள் கண்களால் இப்போது என்னைப் பார்க்க முடியவில்லை. உங்கள் கண்கள் தெளிவாகப் பார்க்கும் வரை காத்திருங்கள்."

தந்தையோ கோபத்தில் நடுங்கிக் கொண்டிருந்தார். சாந்தமான இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவரது மனம் குளிர்ந்தது. கோபத்தின் கண்ணீர்த் துளிகள் அவர் கண்களில் இருந்து வழிந்தன. தனது கண்களைத் துடைத்துக் கொண்டார்.

முன்னால் நிற்கும் புத்தரைத் தீர்க்கமாகப் பார்த்தார். "இவன் அரண்மனையை விட்டு ஓடிய என் மகன் அல்லன். இவன் வேறு மனிதன். முற்றிலும் மாறுபட்ட மனிதன். முகமும் உடலமைப்பும் ஒன்றாக இருக்கலாம். ஆனால் இவன் வேறு ஆள். இவனிடம் ஓர் ஒளி இருக்கிறது. புதுத் தெளிவு இருக்கிறது. இதெல்லாம் என் மகனிடம் நான் பார்த்ததில்லை."

இதை உணர்ந்த மன்னர் புத்தரின் காலில் வேரறுந்த மரம் போல் வீழ்ந்தார்.

"என்னையும் உன்னுடன் சேர்த்துக்கொள். எனக்கு சந்நியாசம் வழங்கு. எனக்கு வயதாகிவிட்டது. சாவு நெருங்கிவிட்டது. நீ

அனுபவித்த அந்த நிம்மதியை நானும் அனுபவிக்க வேண்டும். என்னை மன்னித்துவிடு.

"என் கோபத்தை மன்னித்துவிடு. உனக்கு என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. உனக்குள் என்ன நடந்து கொண்டிருக் கிறது என்பதும் எனக்குத் தெரியாது. நீ வந்ததும் நல்லதாகப் போயிற்று. நீ என்னை இன்னும் நினைவில் வைத்திருப்பதற்கு நன்றி. நீ என்னை இன்னும் மறக்கவில்லை என்று உணரும் போது பெருமையாக இருக்கிறது."

நீங்கள் உங்கள் பெற்றோர்களிடம் மீண்டும் போகும் போது, முதலில் அவர்களது கோபத்துக்கு வடிகாலாக இருங்கள். உங்கள் பெற்றோர்கள் ஜெர்மன் நாட்டவர்கள். அதிலும் யூதர்கள்.

அதனால் அவர்கள் கோபம் புத்தரின் தந்தையின் கோபத்தை விட பல மடங்கு அதிகமாக இருக்கும். அவர்கள் சொல்வதை மௌனமாகக் கேளுங்கள். கோபப்படாதீர்கள். தியானநிலையில் அமைதியாக, மௌனமாக இருங்கள். உங்கள் அமைதி அவர் களைப் பற்றிக் கொள்ளும். அவர்களுக்கு நீங்கள் உண்மையிலேயே உதவி செய்ய வேண்டுமென்றால் அமைதியாக அவர்கள் கோபத்தை தாங்கிக்கொள்ளுங்கள்.

என்னுடைய ஒவ்வொரு சந்நியாசியும் தனது பெற்றோர்களுக்கு உதவ வேண்டும். ஏனென்றால் அவர்கள் நம்மைப் பெற்று ஆளாக் கியவர்கள். அவர்களுக்கு எந்த வழி சரி என்று தோன்றியதோ அந்த வழியில் உங்களை வளர்த்தார்கள். பாவம், அவர்களுக்கு வேறு வழி தெரியாது.

அவர்களால் என்ன செய்ய முடியுமோ, அதையெல்லாம் உங்களுக்காகச் செய்தார்கள். அவர்கள் செய்வதெல்லாம் உங்கள் நன்மைக்காக என்று நினைத்துக் கொண்டுதான் செய்தார்கள். அதனால் உங்களுக்கு உண்மையிலேயே நன்மை விளைந்ததா என்பது வேறு விஷயம். அவர்கள் நோக்கத்தில் குற்றம் இல்லை. அதனால் அவர்களிடம் நீங்கள் மறுபடியும் செல்லும் போது அவர்களுக்கு உதவ வேண்டும்.

*கடைசியாக ஒரு கேள்வி:*

*எங்களைப் பார்க்கும் போது உங்களுக்குச் சலிப்பாக இல்லையா? எங்கள் முட்டாள்தனங்களைப் பார்க்கும் போது, உங்களுக்கு வெறுப்பாக இல்லையா?*

நான் உங்கள் முட்டாள்தனங்களை மிகவும் ரசிக்கிறேன். நான் இந்த உலகில் பிறந்ததற்கு எதையாவது செய்ய வேண்டும் அல்லவா? உங்கள் முட்டாள்தனங்களைப் போக்கும் காரியத்தில் இறங்கி விட்டால் நான் ஆயுள் உள்ள வரையில் உழைத்துக் கொண்டே யிருக்கலாமே!

சொர்க்கத்தில் இருந்த ஏசுநாதருக்கு சலிப்பாக இருந்தது. தனது தந்தையான கடவுளிடம் போய்க் கேட்டார்.

"எனக்கு ஏதாவது வேலை கொடுங்கள். ஒன்றுமே செய்யாமல் சலிப்பாக இருக்கிறது."

"சரி, இந்தா இந்த அறத்தை எடுத்துக் கொண்டு போய் இமய மலையில் கூர்மையான இருக்கும் சிகரங்களின் முனை களைத் தேய். அவற்றை வழுவழுப்பாக மாற்று."

ஏழாயிரம் ஆண்டுகளுக்குப் பின் ஏசுநாதர் மீண்டும் கடவுளிடம் வந்தார்.

"முடித்துவிட்டேன். அடுத்து?"

"இந்தா இந்தக் கரண்டியை வைத்துக் கொண்டு இந்து மகா சமுத்திரத்தில் உள்ள நீரை வெளியில் கொட்டு."

அடுத்த 7000 ஆண்டுகளில் அந்த வேலையும் முடிந்தது.

"அடுத்து?" என்று துடிப்புடன் வந்து நின்றார் ஏசுநாதர்.

அவரது தொணதொணப்பைப் பொறுக்க மாட்டாத கடவுள் சொன்னார்.

"பூமியில் உள்ள மனிதர்கள் ஒருவரை ஒருவர் நேசிக்க வேண்டும் என்று அவர்களுக்கு புரியவை. மனிதர்கள் உள்ள வரை, காலங்கள் உள்ளவரை உனக்கு வேலை இருக்கும். ஓய்வே இருக்காது."

நான் பூசாரி இல்லை. மதகுருவோ, பாதிரியோ இல்லை. உங்களை ஆளாக்குவது நான் செய்தேயாக வேண்டிய கடமையில்லை. அப்படியிருந்தால்தான் எனக்கு சலிப்பு உண்டாகும். உங்களை ஆளாக்குவது என் அன்பின் வெளிப்பாடு. என் மகிழ்ச்சியின் வெளிப்பாடு.

போப்பாண்டவரின் கோடைக்கால வீட்டை அழகுபடுத்திக் கொண்டிருந்தார்கள். வேலை எப்படி நடக்கிறது என்பதைப் பார்க்க போப்பாண்டவர் வந்தார். அழகுணர்ச்சி அதிகம் உள்ள கட்டடக் கலை நிபுணர் ஓர் அழகான விலை மதிக்கமுடியாத 12ஆம் நூற்றாண்டு சிலுவையை போப்பாண்டவரின் படுக்கையறையில் அவரது படுக்கைக்கு மேல் தொங்கவிட்டிருந்தார்.

அதைப் பார்த்தவர்கள் எல்லாம் பாராட்டினார்கள்.

ஆனால் போப்பாண்டவருக்கு அது கொஞ்சம் கூட பிடிக்கவில்லை. கட்டடக்கலை நிபுணரிடம் அவர் சொன்னார்.

“அது வேண்டாம். எனது தொழிலை ஞாபகப்படுத்தும் எந்த விஷயமும் எனது படுக்கையறையில் இருக்கக்கூடாது.”

போப்பாண்டவருக்கு மதம் ஒரு வேலை. ஒரு தொழில். ஆனால் எனக்கு இதெல்லாம் அன்பின் வடிவம். விளையாட்டைப் போன்றது. நானாக விரும்பிச் செய்வது. அதனால் தான் நான் என் பணியை மிகவும் ரசித்துச் செய்கிறேன்.

ஒரு ரஷிய விண்வெளி வீரர் விண்வெளிப் பயணத்தை முடித்துவிட்டு பூமிக்குத் திரும்பினார்.

அப்போது ரஷிய அதிபராக இருந்த பிரஷ்னேவ் அந்த வீரரைப் பார்த்துக் கேட்டார்.

“தோழரே, உண்மையைச் சொல்லுங்கள். மேலே போகும் போது கடவுளைப் பார்த்தீர்களா?”

“ஆமாம் பார்த்தேன்.”

“நான் நினைத்தேன். சரி, இதைப் பற்றி வேறு யாரிடமும் எதுவும் சொல்லாதீர்கள்.”

சில மாதங்களுக்குப் பிறகு அதே விண்வெளி வீரர் வாடிகனுக்குப் போய் போப்பாண்டவரைப் பாரத்தார்.

“நீங்கள் விண்வெளியில் கடவுளைப் பார்த்தீர்களா?”

இந்த வீரர் கொஞ்சம் குறும்புக்காரர்.

“உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் நான் கடவுளைப் பார்க்கவில்லை.”

“நான் சந்தேகப்பட்டது சரியாகப் போயிற்று. இந்த உண்மையைத் தயவு செய்து வெளியில் சொல்லிவிடாதீர்கள்.”

○

# 4. உண்மையான மதம் இனிமேல்தான் பிறக்க வேண்டும்

*கேள்வி: ஓஷோ, பெர்டோல்ட் ப்ரெட் (Bertolt Brecht) போன்று மதத்தையும் ஆன்மிகத்தையும் வெறுத்து ஒதுக்கியவர்கள் பற்றிச் சொல்லுங்களேன். அவர் ஆன்மிகத்தை வெறுத்தாலும் அவருடைய சக்திவாயந்த, ஆக்கபூர்வமான அன்பு இந்த நூற்றாண்டில் ஒரு கோபமான சூரியப் பிரகாசமாக சுடர் விட்டு எரிகிறது. இந்த விந்தை எப்படி நிகழ்கிறது என்று கொஞ்சம் விளக்குங்களேன்.*

**டிம்** க்ரீன்,

பல நூற்றாண்டுகளாக மதம் என்பது வாழ்க்கைக்கு எதிராகவே இருந்து வந்திருக்கிறது. வாழ்க்கையைப் புறக்கணிக்கும் எந்த அமைப்பும் ஆக்க சக்தி கொண்டதாக இருக்க முடியாது. ஆக்கசக்தி தழைக்க வேண்டுமென்றால் வாழ்க்கையை உறுதிப்படுத்தும் தத்துவம் வேண்டும். பிரபஞ்ச இருப்புநிலையின் மேல் ஏற்படும் தணியாக் காதலே ஆக்கசக்தி. ஆனால் இது வரை மதங்கள் எல்லாம் வாழ்க்கையை வெறுத்து ஓட வேண்டும் என்றுதான் உபதேசம் செயது வந்திருக்கின்றன.

இதனால்தான் ஆக்கசக்தி கொண்ட மனிதர்கள். ஆக்க பூர்வமான தொழிலில் உள்ளவர்கள் மதங்களைக் கண்டாலேயே பயந்து ஓடுகிறார்கள். அவர்களுக்கு மதத்தில் ஈடுபாடு உண்டானால் அவர்களுடைய ஆக்கசக்தி துண்டைக் காணோம், துணியைக் காணோம் என்று ஓடிவிடும். ஆக்கசகதி வேண்டும் என்று

விரும்புவர்கள் மதங்களை விட்டு கொஞ்சம் விலகி இருப்பது நல்லது. மதங்கள் அவர்களைச் சும்மா விடாது. இம்மியளவு கூட ஆக்கசக்தி இல்லாதவர்கள்தான் மதங்களின் மேல் பற்றுள்ள வர்களாக இருக்கிறார்கள்.

இங்கே நான் புத்தரைப் பற்றி, லா ட்சூவைப் பற்றி, ஏசுநாதரைப் பற்றி, ஜராத்ருஷ்டரைப் பற்றி, நபிகள் நாயகத்தைப் பற்றி, மகாவீரரைப் பற்றி, பகவான் கிருஷ்ணரைப் பற்றி, கபீரைப் பற்றி, குரு நானக்கைப் பற்றி எல்லாம் பேசவில்லை.

அவர்கள் விதிவிலக்கானவர்கள். அவர்களை விட்டுவிடுங்கள். அவர்கள் எல்லாம் பிரமிக்க வைக்கும் ஆக்கசக்தி கொண்டவர்கள். அவர்கள் எல்லாருமே கவிஞர்கள். மற்ற கவிஞர்களை விட பல மடங்கு உயர்ந்தவர்கள் சாதாரணக் கவிஞர்கள் கவிதை எழுத வேண்டும் என்று நினைத்து கவிதை எழுதினார்கள்.

ஆனால் புத்தர், கிருஷ்ணர், ஏசு போன்றவர்கள் வாழ்ந்த வாழ்க்கையே ஒரு கவிதை. அவர்கள் பெரிய இசைக் கலைஞர்கள். அவர்கள் இசைக்கருவிகளை இயக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் அவர்கள் இதயத்தில் இசை இருந்தது. வாழ்வில் இசைவு இருந்தது. ஸ்வரம் இருந்தது. ராகம் இருந்தது. இனிமை இருந்தது.

அவர்களுடைய இதயத் துடிப்பே அவர்கள் இசைக்கு ஏற்ற தாளமாக இருந்தது. அவர்கள் வாழ்க்கையே ஒரு நல்ல பாட்டாக, நடனமாக இருந்தது. அவர்கள் வாழ்க்கையே ஒரு கொண்டாட்டம் தான். அதனால் மேலே சொன்னவர்களை எல்லாம் விதிவிலக்குகள் என்று சொன்னேன்..

கிறிஸ்துவ மதம், இந்து மதம், இஸ்லாம், சமணர்களின் மதம், பௌத்த மதம் - இந்த மதங்களுக்கும் இவற்றைத் தோற்றுவித்தவர் களுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இதைக் கொஞ்சம் ஆழமாகச் சிந்தித்துப் பார்த்தால் ஆச்சரியப்படுவீர்கள். நான் கண்டுபிடித்தது இதுதான்.

தங்களைக் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் ஏசுநாதரைப் பற்றியோ, அவர் சொன்ன செய்திகளைப் பற்றியோ கவலைப்படுவதில்லை. தங்களை இந்துக்கள் என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு பகவான் கிருஷ்ணர் சொன்னதைப் பற்றி அக்கறையில்லை. அவர்கள் கிருஷ்ணரை வணங்குகிறார்கள் என்பது உண்மைதான்.

அதனால் அவர்கள் வாழ்க்கையில் எந்த வித்தியாசமும் உண்டாகவில்லை. கிருஷ்ணர் சொன்ன தத்துவத்தை அவர்கள் புரிந்து கொள்ள முயற்சி செய்யக்கூட இல்லை. கிருஷ்ணரையே தங்கள் கருத்துகளின் படிதான் பார்த்தார்கள். புரிந்து கொண்டார்கள். பௌத்தர்களின் கதையும் அதுதான். சமணர்களும் அப்படித்தான்.

எல்லா மதங்களும் அவற்றை நிறுவியவர்களுக்கு எதிராகவே வளர்ந்திருக்கின்றன. மதங்கள் எல்லாம் மதகுருமார்களின் கைகளில், பாதிரியார்களின் கைகளில், பூசாரிகளின் கைகளில் மாட்டிக் கொண்டு தவிக்கின்றன.

அரசியல்வாதியும், பூசாரியும் கூட்டணி அமைத்துக்கொண்டு மக்களை ஏமாற்றுகின்றனர். மக்களைச் சுரண்டுவதற்குச் சிறந்த வழி அவர்களது அறிவை அழிப்பதுதான் என்று அவர்களுக்குத் தெரியும். பெர்டோல்ட் ப்ரெக்ட் போன்றவர்களால் இது போன்ற மதங்களை ஆதரிக்க முடியாது. இந்த மதங்கள் மனித இனத்தையே அடிமைப்படுத்திவிட்டன. இவை மக்களைச் சுதந்திரமாக இருக்க அனுமதிக்கவில்லை.

மதத்தின் பெயரால் மனிதர்கள் அடிமையாக்கப்பட்டார்கள். மனிதனின் விடுதலைக்கு உதவுவதற்குப் பதிலாக, இந்த மதங்கள் மனிதனை அடைத்துவைக்கும் பெரிய சிறைச்சாலைகளாகிவிட்டன.

மதவாதிகளின் உத்தி மிகவும் நுணுக்கமானது. குள்ளநரித் தனமானது. உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் ஒரே மாதிரியான உத்திகளைத்தான் கையாளுகின்றன.

அந்த உத்தியின் அடிப்படைத் தத்துவம் இதுதான். 'முதலில் மனிதனுக்கு வாழ்க்கையின் மேல் இருக்கும் ஆசையை ஒழிக்க வேண்டும். மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை வேரிலேயே கிள்ளி எறிய வேண்டும். வாழ்க்கையே ஒரு கொண்டாட்டம் என்ற எண்ணத்தை ஆரம்பத்திலேயே நசுக்கிவிட வேண்டும்.

பிரபஞ்ச இருப்புநிலையில் வேரூன்றி நிற்கிறான் மனிதன். அந்த வேர்களையே அறுத்து எறிந்துவிட்டால், அதன் பின் அவன் வாழ்க்கைக்கு எங்கிருந்து போஷாக்கு வரும்? வேர்கள் அறுக்கப்பட்ட மனிதன் தனக்குள்ளேயே சுருங்கிப் போவான். அவனுடைய இருப்பே விஷமாகிவிடும்.

யாருமே வாழ்க்கையிலிருந்து தப்ப முடியாது. வாழ்க்கையிலிருந்து தப்பி மலையுச்சியில் வாழ்பவர்கள் கூட சந்தையில் உழைப்பவர்களை நம்பித்தான் வாழ வேண்டும். வாழ்க்கையே வேண்டாம் என்று ஆண்டி மடத்தில் அண்டி வாழ்பவர்கள் கூட வெளியில் இருப்பவர்களை நம்பித்தான் இருக்கிறார்கள்.

இப்படி யோசித்துப் பாருங்கள். இந்த உலகத்தில் உள்ள அனைத்து மனிதர்களும் வாழ்க்கையை விட்டு, துறவறம் மேற்கொண்டால், எப்படி இருக்கும்? அது உலகளாவிய தற்கொலையாகத்தான் இருக்கும். புத்த மதத்தைச் சேர்ந்த துறவிகள், துறவிகள் அல்லாதவரிடம்தான் பிச்சை எடுக்க வேண்டும். கிறிஸ்துவ மதத்துறவி இன்னும் துறவறம் பூணாமல் இருப்பவர்களிடம் தான் தனது உணவைப் பெற வேண்டும்.

உயிரோடு இருக்கும் வரை யாருமே வாழ்க்கையிலிருந்து தப்ப முடியாது. அது முடியாத காரியம். ஆனால் அந்த முயற்சியில் உங்கள் வாழ்க்கையின் வேர்களில் நஞ்சு செலுத்தப்படலாம்.

அப்போது உங்களால் வாழ்க்கையிலிருந்து தப்பிக்கவும் முடியாது. வாழ்க்கையை முழுதாக வாழவும் முடியாது. வாழ்கிறோமே என்ற குற்ற உணர்வுதான் உங்களுக்கு மிஞ்சும். வாழ்வதே ஒரு பாவச் செயலோ என்று எண்ணத் தொடங்குவீர்கள். எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் உங்கள் வாழ்க்கையை வெட்டிக் குறைத்துக் கொள்வீர்கள். குறைந்த பட்ச வாழ்க்கை வாழத் தொடங்குவீர்கள். வாழ்க்கை என்பதே தவிர்க்க முடியாத தீமையாகிவிடும்.

அதனால் தான் நாம் வாழ்க்கையில் சிரிப்பைத் தொலைத்து விட்டோம். முழுமையைத் தொலைத்துவிட்டோம். மக்கள் எப்போதும் சோகமாகவே இருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கை அர்த்தமில்லாமல் போய்விட்டது. அவர்கள் ஆக்கசக்தியை இழந்துவிட்டார்கள். வாழ்வுக்கும், சாவுக்கும் இடைப்பட்ட ஒரு திரிசங்கு நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். இங்கும் இல்லாமல் அங்கும் இல்லாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் மூல காரணம் இப்போது உலகில் இருக்கும் மதங்கள்.

பெர்டோல்ட் ப்ரெக்ட் போன்றவர்களின் கருத்தை நான் ஆதரிக்கிறேன். இப்போது இருக்கும் எந்த மதத்தையும், ஆன்மிகத்தையும் நான் ஆதரிக்க மாட்டேன். அதே சமயத்தில்

பெர்டோல்ட் ப்ரெக்ட் சொல்வதை என்னால் முழுவதுமாக ஏற்றுக் கொள்ளவும் முடியாது.

மதங்கள் மனிதனுக்குச் செய்த கொடுமைகளை நான் மறுக்கவில்லை. ஆனால் இவை எதுவும் உண்மையான மதம் இல்லை. உண்மையான மதம் இனிமேல் தான் பிறக்க வேண்டும். நீங்கள் கிறிஸ்துவ மதத்தை எதிர்த்து நில்லுங்கள். இந்து மதத்தை எதிர்த்து நில்லுங்கள். இஸ்லாம், புத்த மதம் எதை வேண்டு மானாலும் எதிர்த்து நில்லுங்கள். தப்பில்லை.

ஆனால் சமய உணர்வை எதிர்க்காதீர்கள். மதத்தையும் சமய உணர்வையும் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். அது உங்கள் வளர்ச்சியைப் பாதிக்கும். பூசாரிகளைத் தூக்கியெறியுங்கள். போப்பாண்டவரைப் பழித்துப் பேசுங்கள். சங்கராச்சாரியாரை எதிர்த்து நில்லுங்கள்

ஆனால் புத்தரை, லா ட்சூவை, ஏசுநாதரை, நபிகள் நாயகத்தை எதிர்க்காதீர்கள். அவர்கள் நமது ஆன்மிக வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றியிருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் ஆக்கசக்தியின் உறைவிடங்கள். மக்கள் அவர்களைத் தவறாகப் புரிந்து கொண் டார்கள். ஆனால் அதற்கு அவர்கள் என்ன செய்ய முடியும்? பெர்டோல்ட் பிரெக்ட் போன்றவர்கள் அவர்கள் தத்துவத்தை விளக்கினால் நன்றாக இருக்கும்.

பெர்டோல்ட் பிரெக்ட் சொல்வதை ஒரு நிலைவரை நான் ஏற்றுக் கொள்கிறேன். அதன் பின் நான் அவருடன் வேறுபடு கிறேன். மதங்கள் என்ற பெயரில் இருக்கும் இந்த புளுகுமூட்டை களை அழிக்க வேண்டும். அப்போதுதான் உண்மையான மதம் தோன்ற முடியும். மக்கள் மனங்களில் வேரூன்ற முடியும். ஆனால் சமய உணர்வைப் பழிக்கக்கூடாது. அப்படி சமய உணர்வைப் பழித்தால்.... டிம் க்ரீன் முதலில் சொன்னது நினைவுக்கு வருகிறது

*அவருடைய சக்திவாயந்த ஆக்கபூர்வமான அன்பு இந்த நூற்றாண்டில் ஒரு கோபமான சூரியப் பிரகாசமாக சுடர் விட்டு எரிகிறது.*

அன்பு இருக்கும் உள்ளத்தில் என்றுமே கோபம் இருக்காது. கோபம் அழிக்கும் சக்தி. அன்பு ஆக்கும் சக்தி. கோபம் வெறுப்பின் இனத்தைச் சேரந்தது. கோபம் அன்பின் வெளிப்பாடு அல்ல. இந்த இடத்தில் தான் பெர்டோல்ட் பிரெக்ட் தவறு

செய்துவிட்டார். நீங்கள் சமய உணர்வை எதிர்க்கும் போது, உங்களிடம் இருக்கும் ஆக்கசக்தி மிளிரலாம். ஆனால் அதில் உயிர் இருக்காது. உயிர்ப்பு இருக்காது. அதில் அழகு இருக்காது. அது இயல்பாக இருக்காது.

நவீன கலைகளைக் கவனித்தால் போதும். இந்த உண்மையை நீங்கள் உணர முடியும். Modern Art என்று சொல்லப்படும் நவீன ஓவியங்களைப் பாருங்கள். அவற்றில் ஆழ்நிலை சிந்தனை இல்லை. ஆன்மிக பலம் இல்லை. பிக்காசோவின் ஓவியங்களைப் பார்க்கும் போது அவற்றை வரைந்தவருக்கு மறை கழண்டு விட்டதோ என்று தான் எண்ணத் தோன்றுகிறது.

பிகாசோ ஒரு மாபெரும் மேதை. கொஞ்சம் ஆன்மிகம் மட்டும் அவரிடம் இருந்திருந்தால் அவர் மைக்கேல் ஆஞ்சலோவையும் மிஞ்சியிருப்பார். அவரிடம் திறமை இருந்தது. கூர்மதி இருந்தது. கலை இருந்தது. ஆனால் ஏதோ ஒன்று குறைகிறது. அவரிடம் உள் ஒழுங்கு இல்லை. அவருக்குள்ளே இருந்த குழப்பநிலை அவரது ஓவியங்களில் வெளிப்பட்டது.

அதனால் தான் மைக்கேல் ஆஞ்சலோவின் கலை வடிவங்கள் இன்னும் அழகாக இருக்கின்றன. பிக்காசோவின் ஓவியங்கள் அசிங்கமாக இருக்கின்றன. பிக்காசோவின் ஓவியங்களை உற்றுப் பார்க்கும் யாரும் அதில் மறைந்துள்ள ஒரு பைத்தியக்காரத்தனத்தை உணராமல் இருக்க மாட்டார்கள்.

பிக்காசோவைப் பற்றி பல கதைகள் உள்ளன. அவற்றில் சில..

ஓர் அமெரிக்கக் கோடீஸ்வரன் பிக்காசோவைத் தேடி வந்தான்.

“எனக்கு உடனடியாக உங்களுடைய ஓவியங்கள் இரண்டு வேண்டும். என்ன விலை கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்.” என்று அவரிடம் சொன்னான்.

பிக்காசோவுக்கு குழப்பம். அவரிடம் ஒரே ஓர் ஓவியம்தான் தயாராக இருந்தது. இன்னொரு ஓவியத்தை வரைய பல நாட்கள், மாதங்கள் கூட ஆகலாம். அதனால் ஓர் உத்தி செய்தார் பிக்காசோ. இரண்டு ஓவியங்களுக்கும் மிக அதிகமான விலையைச் சொன்னார். அதிக விலையைக் கேட்ட செல்வந்தன் பயந்து

போய், 'எனக்கு ஓர் ஓவியமே போதும்.' என்று சொல்வான் என்று அவர் எதிர்பார்த்தார்.

ஆனால் கோடீஸ்வரன் அசரவில்லை. அவர் கேட்ட விலையை உடனே கொடுத்துவிட்டான்.

"எங்கே என் இரண்டு ஓவியங்கள்?" என்று கேட்டான்.

பிக்காசோ வீட்டிற்குள்ளே போனார். தான் வரைந்து வைத்த ஓவியத்தை இரண்டாகக் கிழித்தார்.

"இந்தா நீ கேட்ட இரண்டு ஓவியங்கள்" என்று செல்வந்தனிடம் கொடுத்துவிட்டார்.

அவரது ஓவியங்களை நான்காகக் கூட கிழிக்கலாம். யாராலும் கண்டுபிடிக்க முடியாது.

இன்னொரு முறை ஒரு பணக்காரப் பெண்மணி பிக்காசோ விடம் பணத்தைக் கொட்டிக் கொடுத்து தனது படத்தை வரையச் சொன்னாள். பிகாசோவும் ஓவியத்தை வரைந்தார். அதைப் பார்க்க வந்த அந்த பெண்மணி சொன்னாள்.

"எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. ஆனால் என்னுடைய மூக்குதான் சரியாக வரவில்லை. பெரிதாகத் தோன்றுகிறது. அதை மட்டும் கொஞ்சம் திருத்திக் கொடுங்கள்."

"அது முடியாத காரியம் அம்மணி." என்றார் ஓவிய மேதை.

"ஏன் முடியாது? நீங்கள் என் படத்தை வரைந்திருக்கிறீர்கள். அதற்காக நீங்கள் கேட்ட தொகையைத் நான் தந்துவிட்டேன். நீங்கள் வரைந்த என் மூக்கு பிடிக்கவில்லை என்று சொல்கிறேன். திருத்தித் தருவது உங்கள் கடமை."

"அதைச் சொல்லவில்லை. இந்த ஓவியத்தில் உங்கள் மூக்கு எங்கே இருக்கிறது என்று தேடுவது முடியாத காரியம் என்று சொன்னேன்.

ஒரு மனிதன் திருமணம் செய்து கொள்ள நல்ல அழகான பெண்ணைத் தேடிக் கொண்டிருந்தான்.

அவனை அணுகிய ஒரு தரகன், "ஒரு பணக்கார விதவை இருக்கிறாள். மிகவும் அழகானவள். உன்னை விட ஒன்றிரண்டு வயது பெரியவளாக இருப்பாள். ஆனால் பார்த்தால் அப்படித் தெரியாது. அவளுடைய அழகை வார்த்தைகளால் வர்ணிக்க

முடியாது. என்னுடன் வா, அவளைக் காட்டுகிறேன்.'' என்று சொன்னான்.

தரகனுடன் போய் பெண்ணைப் பார்த்தான் அவன். அவனால் அவனது கண்களையே நம்பமுடியவில்லை. அவன் வாழ்க்கையில் அது வரை அவ்வளவு அசிங்கமான பெண்ணைப் பார்த்ததில்லை.

ஒரு கண் ஒரு பக்கம் பார்க்கும் போது, மறு கண் அடுத்த பக்கம் பார்த்து கொண்டிருந்தது. மூக்கு கோணலாக இருந்தது. பற்கள் வெளியில் தெத்திக் கொண்டிருந்தன. அவள் தலையில் இருந்தது போலி முடி என்று அப்பட்டமாகத் தெரிந்தது. அவளுடைய ஒரு கால் மற்றொரு காலை விட குட்டையாக இருந்தது. குமட்டிக் கொண்டு வந்தது அவனுக்கு.

தரகனின் சட்டையைப் இழுத்துப் பிடித்து அவன் காதருகில் கிசுகிசுத்தான்

“இவளையா அழகு என்று சொன்னாய்?''

“நீ சத்தமாகவே பேசலாம். அவள் முழுச் செவிடு. உனக்குக் கலா ரசனையில்லாவிட்டால் நான் என்ன செய்ய முடியும்? உனக்கு பிக்காசோவின் கலை பிடிக்கும் என்று நினைத்தேன். நீ இப்படி ரசனை கெட்டவனாக இருப்பாய் என்று யாருக்குத் தெரியும்?''

நவீன கலை அசிங்கமாக இருப்பதன் காரணம் அதில் ஆன்மிக சாரம் இல்லை. இந்தக் காலத்துக் கவிதையும் அசிங்கமாகத்தான் இருக்கிறது. இந்தக் காலத்து இசை அதைவிட மோசம். அதில் சங்கீதம் இல்லை, வெறும் சத்தம்தான் இருக்கிறது. இன்றைய இசையைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால் அது கொச்சையாகப் பாலுணர்வைத் தூண்டும் சத்தம். அவ்வளவு தான்.

ஆன்மிகம் இல்லை என்றால் மிஞ்சி நிற்பது கொச்சையான பாலுணர்வுதான். ஒருவிதத்தில் ஆன்மிகமும் பாலுணர்வும் ஒரே சக்திதான். ஆனால் ஆன்மிகம் அந்த சக்தியின் சிகரமாக விளங்குகிறது. பாலுணர்வு அந்த சக்தியின் அடிமட்டத்தில் கரடு முரடான நிலையில் இருக்கிறது. பாலுணர்வு என்பது விலங்கின் சக்தி. ஆனால் அதே சக்தி ஆன்மிகத்தோடு கலக்கும் போது தெய்விக சக்தியாக மாறுகிறது. சமாதிநிலையாக பரிமளிக்கிறது. தன்னுணர்வுக்கு மேற்பட்ட பேருணர்வாக உருமாறுகிறது. தெய்வ சக்தியாகவே மாறிவிடுகிறது.

அதனால்தான் பெர்டோல்ட் பிரெக்ட் கோபமாக இருக்கிறார். அவரது கோபத்தை நாம் புரிந்து கொள்ளலாம். ஆனால் கோபத் திற்கு ஆக்கும் சக்தி கிடையாது. அப்படியே கோபத்தின் விளை வாக எதையாவது உருவாக்கினாலும் அதனுள்ளே அழிவு சக்தி இருக்கும்.

பல லட்சம் மக்களைக் கொன்று குவித்த ஹிட்லர் இளைஞ னாக இருந்த போது ஓவியனாக வேண்டும் என்று ஆசைப்பட்டான. இதைக் கேட்கவே வியப்பாக இருக்கிறது அல்லவா? அவனுக்கு கலைக் கல்லூரியில் இடம் தர மறுத்துவிட்டார்கள்.

அதன் பின் கட்டடக்கலை நிபுணராக வேண்டும் என்று விரும்பினான். தொழில் கல்லூரியிலும் அவனது விண்ணப்பம் நிராகரிக்கப்பட்டது. அதே மனிதன் தான் மனித இன வரலாற்றின் மிகப் பெரிய அழிவு சக்தியாக உருவெடுத்தான். அவனுக்குக் கலைக்கல்லூரியில் இடம் கிடைத்திருந்தால் அவன் இன்னொரு பிக்காசோவாக உருவெடுத்திருப்பான். அவனது அழிவு சக்தியை அவனது ஓவியங்களில் வெளிப்படுத்தியிருப்பான்.

ஹிட்லர் சில ஓவியங்களை வரைந்திருக்கிறான். அதை இன்னும் பத்திரமாக வைத்திருக்கிறார்கள். அந்த ஓவியங்கள் அவனது மனநிலையைத் துல்லியமாக விளக்குகின்றன. அவனது ஓவியங்களில் இரத்தச் சிவப்பு நிறத்தை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்தியிருக்கிறான். வண்ணங்களிலேயே அவனுக்குப் பிடித்தது, இரத்தச் சிவப்பும், கறுப்பும் தான். அவனது ஓவியங் களில் இந்த வண்ணங்கள்தான் தூக்கலாக இருக்கின்றன.

கட்டடக்கலை பற்றிய அவனது சில படங்களையும் விட்டுச் சென்றிருக்கிறான் அந்த கொடுங்கோலன். அந்தப் படங்களில் நாம் தாஜ்மகாலைப் பார்க்க முடியாது. அவன் வரைந்த கட்டடம் பைத்தியக்கார ஆஸ்பத்திரியைப் போல் காட்சியளிக்கிறது.

ஆனால் பாருங்கள், ஹிட்லர் மிக சக்திவாய்ந்த மனிதனா னான். உலகையே நடுங்க வைத்த சர்வாதிகாரியானான். அரசியல் வாதியானான். தனது நாட்டையே, தனது மக்களையே, மனித இனத்தையே தனது கலைகளுக்கு களமாக்கினான். அந்தக் களத்தில் இரத்தச் சிவப்பு நிறத்தையும், கறுப்பு நிறத்தையும் அள்ளித் தெளித்து ஓவியம் வரைந்தவன் ஹிட்லரா. கறுப்பு மரணத்தின் - வண்ணம். இரத்தச் சிவப்பு கோபத்தின், கொலைவெறியின் வண்ணம்.

பெர்டோல்ட் பிரெக்ட் ஒரு புத்தனாக மலர்ந்திருக்கலாம். நீச்சே (Friedrich Nietszche) ஒரு புத்தனாக மலர்ந்திருக்கலாம். ஆனால் மதம் என்ற பெயரால் நடந்த கூத்துக்களைப் பயங்கரமாக எதிர்த்தார்கள். எதிர்ப்பு அதிகமாக ஒரு கட்டத்தில் போலி மதங் களை எதிர்ப்பதோடு சமய உணர்வையே எதிர்க்க ஆரம்பித்தார்கள். அந்த இடத்தில் தான் இந்த மேதாவிகள் பெரிய தவறு செய்தார்கள்.

மதத்தின் பெயரால் நடக்கும் கேலிக்கூத்தை நானும் மனப் பூர்வமாக எதிர்க்கிறேன். ஆனால் நான் சமய உணர்வை எதிர்க்க வில்லை. மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் சமய உணர்வு வேண்டும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்.

உண்மையான சமய உணர்வுக்கு, மதமே இல்லாத நாத்திகத்தால் எந்த ஆபத்தும் இல்லை. அதற்கு போலி மதங்களால் தான் ஆபத்து ஏற்படுகிறது. போலிகள் உண்மையைப் போலவே இருப்பதால்தான் உண்மைக்கு ஆட்த்து ஏற்படுகிறது.

மனித இனத்தின் மேல் பல நூற்றாண்டுகளாக ஆதிக்கம் செலுத்தி வந்த போலி மதங்களை நாம் வேரோடு களைந்தெறிய வேண்டும்.

எனது அணுகுமுறை வாழ்க்கையை உறுதிப்படுத்துவது. அது வாழ்க்கையை மறுப்பது இல்லை. என் சந்நியாசிகள் அன்புடன், சந்தோஷமாக, ஆக்கசக்தியோடு, ரசிப்புத் தன்மையுடன், ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் இருக்க வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். மதங்கள் என்ற பெயரால் நடமாடிக் கொண்டிருக்கும் போலிகள் எல்லாம் அழுதுவடிந்து கொண்டு வாழ்க்கையையே சோகமயமாக்கிவிட்டன.

நான் என் சீடர்களுக்கு அனப காட்டச் சொல்லித் தருகிறேன். வாய்விட்டுச் சிரிக்க, வாழ்க்கையைக் கொண்டாடச் சொல்லித் தருகிறேன். கொண்டாட்டம் தான் உண்மையான வழிபாடு. கொண்டாட்டத்தின் மூலமாகத்தான் கடவுளுக்கு நமது நன்றியைக் காட்ட முடியும்.

வாழ்க்கையை வெறுத்து ஓடுவது கடவுள் மேல் புகார் கொடுப்பதற்குச் சமமாகும். உங்கள் வாழ்க்கை கடவுள் உங்களுக்குப் பரிசாகக் கொடுத்தது. அதை வேண்டாம் என்று நீங்கள் தூக்கிப்

போட்டால் என்ன அர்த்தம்? கடவுளை அவமரியாதை செய்கிறீர்கள் என்று தான் அர்த்தம்.

கடவுள் உங்களுக்குக் கொடுத்த மகத்தான பரிசு, வாழ்க்கை. அதற்கு நீங்கள் கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும். அந்த நன்றியுணர்வுதான் ஆன்மிகத்தின் வித்து.

பெர்டோல்ட் பிரெக்ட் போன்ற மனிதர்கள் அழகான மனம் கொண்டவர்கள். மதங்களில் உண்மை எது, போலி எது என்பதை அவர் போன்றவர்கள் கண்டுணர்ந்தால், அவர்களால் இந்த உலகம் மகத்தான பயன் அடைந்திருக்கும். உண்மை எது போலி எது என்று பிரித்துணராமல் ஒட்டு மொத்தமாக மதத்தை, சமய உணர்வைப் பழித்ததுதான் அவர்கள் செய்த குற்றம்.

அதுதான் மேற்கில் உள்ளவர்கள் செய்த மாபெரும் குற்றம். நீட்சே இறந்து நூறு ஆண்டுகள் ஆகிவிட்ட பின்பும் மேலை நாட்டு அறிவுஜீவிகள் மதத்தைக் கண்மூடித்தனமாக எதிர்த்துக் கொண்டு இருக்கிறார்கள். நீட்சே சொன்னார். "இறைவன் இறந்துவிட்டான். மனிதனுக்கு விடுதலை கிடைத்துவிட்டது."

இதையே சுலோகமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் மேலை நாட்டு அறிவு ஜீவிகள். அது ஏன் என்று இப்போது எனக்குப் புரிகிறது. நீட்சே அப்படிச் சொல்லியிருக்கக்கூடாது.

மாறாக, "பூசாரிகளின் இறைவன் இறந்துவிட்டான். மனிதனுக்கு விடுதலை கிடைத்துவிட்டது" என்றுதான் சொல்லியிருக்க வேண்டும். குறைந்த பட்சமாக "இறைவன்" என்ற வார்த்தைக்கு அடுத்து "பூசாரிகளின்" என்ற வார்த்தையை அடைப்புக்குறிக் குள்ளாவது போட்டிருக்க வேண்டும். அப்படிப் போட்டிருந்தாலாவது அவர் சொன்னதன் அர்த்தம் விளங்கியிருக்கும். பூசாரிகளின் கடவுள் மெய்ஞ்ஞானிகள் வழிபடும் கடவுள் இல்லை.

பூசாரிகளின் கடவுள் இறந்து விட்டார் என்று சொல்லவும் அவசியம் இல்லை. பூசாரிகளின் கடவுள் முதலில் இருந்தே பிண மாகத்தான் இருந்தார். பூசாரிகளின் கடவுள் ஆரம்பத்தில் இருந்தே உயிருடன் இல்லை. உயிருடன் இருக்கும் கடவுள், உயிர்ப்புடன் இருக்கும் கடவுள் ஞானிகளின் கடவுள்தான்.

ஞானிகளின் கடவுளை அடைய நான் உங்களுக்கு வழிகாட்டுகிறேன்.

வெறும் நம்பிக்கையால் மட்டுமே ஞானிகளின் கடவுளை அடைந்து விட முடியாது. அதற்கு நமக்குள்ளேயே ஆழமாகப் போய் முத்தெடுக்க வேண்டும். அந்தக் கடவுளுக்கும் மதங்கள் விவரிக்கும் இறைமையியலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அந்தக் கடவுளைக் காண வேண்டுமென்றால் நமக்குள் நமது மனதின் ஆழத்தில் தேட வேண்டும்.

அந்த உள்தேடுதலில்தான் அவரைக் காண முடியும். நீங்கள் யார் என்று எந்த நொடியில் முழுமையாக உணர்கிறீர்களோ, அதே நொடியில் உங்களுக்குள் இருக்கும் ஞானிகளின் கடவுளை உணர்கிறீர்கள். அந்த உணர்தலில் தான் உங்கள் விடுதலை இருக்கிறது.

ஒரு வகையில் பூசாரிகளின் கடவுள் சாவது நல்லதுதான். அந்த போலிக்கடவுளைத் தூக்கியெறிந்தால்தான் உங்களுக்குள் இருக்கும் ஞானிகளின் உண்மையான கடவுளை நீங்கள் காண முடியும். உங்கள் விடுதலை, உங்கள் உண்மை இதுதான் உங்கள் கடவுள்.

உண்மையை கண்டுணரும் வரை உங்களுக்குள் ஓர் இனம் தெரியாத கோபம் இருக்கும். உங்கள் வாழ்க்கை அர்த்தமற்றதாக, வெறுமையானதாக இருக்கும். உங்கள் படைப்புகள் அழகானதாக இருக்காது. ரோஜாக்களில், பறவைகளின் பாடல்களில், சூரிய அஸ்தமனத்தில், விண்மீன்களில் இருக்கும் உண்மையான அழகு உங்கள் படைப்புகளில் இருக்காது. கிறுக்குப் பிடித்த ஒரு மனத்தின் வெளிப்பாடுகளாகத்தான் உங்கள் படைப்புகள் இருக்கும்.

உங்கள் படைப்புகளை தூரிகை மூலமாகவோ, கல்லின் மீதோ நீங்கள் வெளிக் கொணரலாம். அப்படி வெளிக்கொணர்வதால் உங்கள் கிறுக்குத்தனத்தை வெளியே இறக்கி வைத்துவிட்ட நிம்மதி உங்களுக்குக் கிடைக்கலாம்.

ஆனால் உங்கள் படைப்புகளைப் பார்க்கும் மற்றவர்களுக்கு அது அழகாகத் தோன்றாது. அவர்களுக்கு அதனால் நன்மை விளையாது. உங்கள் படைப்புகளைப் பார்க்கும் மற்றவர்களையும் உங்கள் கிறுக்குத்தனம் தொற்றிக் கொள்ளும். அது ஒரு பயங்கரமான தொற்று வியாதி.

புத்தரின் சிலையைப் பாருங்கள். அதன் முன் சிறிது நேரம் உட்கார்ந்திருங்கள். அதை அமைதியாகப் பாருங்கள். உங்களுக்கு

ஆச்சரியமாக இருக்கும். உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று தன் துடிப்பு அடங்கி அமைதிப்படுவதை உங்களால் உணரமுடியும்.

குர்ஜிஃப். இதனை "கொள்குறிக் கலை" (objective art) என்று சொல்வார். புத்தரின் சிலையை உருவாக்கியவர் தனது தியானத் தினால் தான் அதைச் செய்தார். அந்த சிலை அவரது ஆழ்நிலை சிந்தனையின் விளைவு. அது புத்தரின் உடலமைப்பைத் துல்லியமாகப் பிரதிபலிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

உள்ளபடியே புத்தரின் சிலைகள் அவரது புற வடிவை அப்படியே பிரதிபலிப்பதில்லை. அது அவரது பிம்பம் இல்லை. அது ஒரு குறியீடு அவ்வளவுதான். அது புத்தரின் தியான நிலையை, ஆழ்நிலை சிந்தனையைக் குறிக்கிறதே ஒழிய, அவரது உடலமைப்பைக் குறிக்கவில்லை. சலனமற்று இருக்கும் புத்தரின் நிலையை அது குறிக்கிறது.

"ஒன்றும் செய்யாமல் அமைதியாக உட்கார்ந்திருக்கும் போது வசந்தம் வருகிறது. புல் தானாகவே முளைக்கிறது."

அந்த மௌனத்தைக் குறிக்கிறது புத்தரின் சிலை. புத்தர் எந்த செயலையும் செய்யவில்லை. அவர் முன் நீங்கள் அமர்ந் திருக்கும் போது நீங்களும் மௌனத்தில் ஆழ்ந்து போவீர்கள். பிக்காசோவின் ஓவியத்தின் முன் உட்கார்ந்தால் உங்கள் மனம் பெருங்குழப்பத்தில் ஆழ்ந்துவிடும். நீங்கள் கோபப்படுவீர்கள். இருப்பு கொள்ளாமல் தவிப்பீர்கள். பிக்காசோவின் ஓவியத்தின் முன்னால் உங்களால் ஆழ்நிலை சிந்தனையில் ஈடுபட முடியாது. அது சாத்தியமில்லை.

உங்கள் படுக்கையறையில் பிக்காசோ ஓவியங்களை மாட்டி வைத்தால் இரவில் கெட்ட கெட்ட கனவுகளாக வரும்.

*இரண்டாவது கேள்வி:*

*ஓஷோ என்னால் ஏன் உங்கள் தத்துவத்தைப் புரிந்து கொள்ளமுடியவில்லை?*

தத்துவமா? என்ன அது? எந்த தத்துவத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள்? நான் சொல்வது தத்துவம் இல்லை. வாழும் உண்மை. வாழவைக்கும் உண்மை. நான் உங்களுக்கு எந்த

தத்துவத்தையும் உபதேசிக்கவில்லை. என்னுடைய மகிழ்ச்சியை, என்னுடைய உள்பார்வையை, என்னுடைய அன்பை, என்னுடைய ஒளியைப் பகிர்ந்து கொள்கிறேன்.

தத்துவம் என்பது மனம் சம்பந்தப்பட்டது. நான் என் மனத்தை விட்டெறிந்து பல காலம் ஆகிவிட்டது. இங்கே நடப்பது ஒரு சேர்க்கை. இதயங்களின் சேர்க்கை. உங்களுக்கு என் மௌனம் புரியாது என்பதற்காக நான் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறேன்.

இந்த வார்த்தைகள் எல்லாம் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் என் மௌனத்தை நீங்கள் புரிந்து கொள்ள உதவி செய்யும் என்ற நம்பிக்கையில்தான் பேசிக் கொண்டிருக்கிறேன்.

வார்த்தைகள் வானில் இருக்கும் நிலவைச் சுட்டிகாட்டும் விரலகள்தான். நிலவைப் பாருங்கள். நிலவைக் காட்டும் என் விரல்களைக் கடிக்க முயற்சி செய்யாதீர்கள்.

எனக்கும் தத்துவத்துக்கும் சம்பந்தமேயில்லை. தத்துவம் மிகவும் சாதாரணமான விஷயம். உண்மையைப் பற்றிய சிந்தனைதான் தத்துவம். அது குருடன் ஒளியைப் பற்றிச் சிந்திப்பதைப் போன்றது. பிறவிக் குருடன் ஒளியைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே யிருக்கலாம். ஆனால் அந்த சிந்தனை ஒளியைப் பற்றி அவனுக்கு ஒரு தீர்வைத் தருமா? தராது.

இல்லை ஒளியைப் பற்றி நீண்ட காலம் சிந்தித்துக் கொண்டிருப்பதால் மட்டுமே அவனுக்கு ஒளியின் அனுபவம்தான் கிடைத்துவிடுமா? ஒளியைப் பற்றிய எல்லா விஷயங்களையும் அந்த குருடன் தெரிந்து கொள்ளலாம். அது அலைவடிவில் செல்லும். ஒரு நொடிக்கு மூன்று லட்சம் கிலோமீட்டர் பயணம் செய்யும் என்று கூடத் தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் ஒளியைப் பற்றித் தெரிந்து கொண்டதால் மட்டும், அவன் ஒளியைத் தெரிந்து கொண்டதாகி விடுமா? ஒளியைப் பற்றித் தெரிந்து கொள்வது என்பது வேறு. ஒளியைத் தெரிந்து கொள்வது என்பது வேறு. ஒளியைப்பற்றித் தெரிந்து கொள்ள மனம் போதும். ஆனால் ஒளியைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் கண் வேண்டும். பார்க்கும் திறம் வேண்டும்.

நான் தத்துவவாதி இல்லை. மருத்துவன். உங்கள் கண்களைத் திறக்க உதவுவதுதான் என் பணி. நீங்கள் எத்தனையோ ஜன்மங்களாக உங்கள் கண்களை மூடிக்கொண்டு இருந்துவிட்டீர்கள்.

அதனால் இப்போது கண்களைக் மூடிக் கொண்டிருக்கும் பழக்கத்துக்கு அடிமையாகிவிட்டீர்கள். அதை எப்படித் திறக்க வேண்டும் என்று உங்களுக்கு மறந்து போய்விட்டது.

உங்கள் கண்களில் எந்த நோயும் இல்லை என்பதை அறி வுறுத்தவே நான் வந்திருக்கிறேன். உங்கள் கண்களைத் திறவுங்கள் அது போதும். அப்போது எதை நீங்கள் அறிகிறீர்களோ அதுதான் இறைவன். இறைவன் ஒரு தத்துவம் அல்ல. இறைவன் ஓர் அனுபவம். தத்துவவாதிகள் தங்கள் தத்துவங்களை வரையறுக்க தங்கள் வாழ்நாட்களையே செலவிட்டிருக்கிறார்கள்.

ழான் பால் சார்த்ரே சொல்கிறார்: இருப்பது என்பது செய்வது (To be is to do)

ஆல்பர்ட் கேமஸ் சொல்கிறார்: செய்வது என்பது இருப்பது (To do is to be)

இவர்களுக்கு நடுவே கோமாளியைப் போல் தோன்றும் ஃப்ராங்க் சினாட்ரா "டு பி டு பி டு" (Do-be-do-be-do) என்று பாடுகிறார்.

இவை எல்லாம் தத்துவம். தத்துவமல்லாமல் நான் சொல்வது "இருப்புநிலை என்பது இருப்பதுதான்." (To be is to be)

இதில் செய்வதற்கு ஒன்றும் இல்லை. செயலைப் பற்றியக் கேள்வியே இல்லை. இருப்புநிலைதான் வாழ்க்கை. இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டாம். ஏனென்றால் அந்த முயற்சியே ஒரு செயலாகிவிடும். அதன்பின் இருப்பைவிட்டு நழுவி விடுவீர்கள்.

இந்த இடத்தில் தான் பெரும்பாலானவர்கள் தவறு செய் கிறார்கள். இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்தால், தவறாகத் தான் புரிந்து கொள்வீர்கள். புரிந்து கொள்ளுதல் என்பது மனத்தின் செயல்பாடுதான்.

உங்கள் மனம் பெருங்குழப்பத்தில் இருக்கிறது. இதைச் செய் வதா, அதைச் செய்வதா என்று சதா அலைபாய்ந்து கொண்டேயி ருக்கிறது. உங்கள் மனத்தில் ஆயிரம் தத்துவங்கள் தத்தளித்துக் கொண்டிருக்கின்றன. உங்கள் மனம் முழுவதுமாகப் பாழடைந்து விட்டது.

இரண்டு ஹிப்பிகள் கஞ்சா அடித்துவிட்டு சாலையில் நடந்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு போலீஸ் வாகனம்

பயங்கரமான சைரன் ஒலியுடன், பளீரிடும் சிவப்பு விளக்குடனும் போய்க் கொண்டிருந்தது.

அப்போது ஒரு ஹிப்பி அடுத்தவனைப் பார்த்துச் சொன்னான்.

“இந்த போதை போகவே போகாது என்று நினைத்தேன். இதோ போய்க்கொண்டிருக்கிறதே.”

மனம் என்பதே ஒரு வகைக் கஞ்சாதான். அது உங்களைச் சதா போதையிலேயே வைத்திருக்கிறது. நீங்கள் மனத்தை உங்களிடமிருந்து தூக்கி எறிய வேண்டும். அதனை விலக்கி வைக்க வேண்டும். இதில் புரிந்து கொள்ளுதலுக்கு வழியேயில்லை. கண்கூடாகத் தெரியும் உண்மையைப் பார்க்க வேண்டும் அவ்வளவு தான். இது பார்வை சம்பந்தப்பட்டது. புரிந்துகொள்ளுதலுக்கு இங்கு இடமில்லை.

நான் உங்களை மனமின்மை நிலையை நோக்கி அழைத்துச் செல்கிறேன். நீங்கள் அதை உங்கள் மனதின் மூலம் புரிந்து கொள்ள முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள். அது நடக்காத காரியம். மனதின் மூலம் மனமின்மையைப் புரிந்து கொள்ள முடியாது. மனமின்மை புரிதலுக்கு அப்பாற்பட்டது. மனதால் அதனைப் பற்ற முடியாததால் அப்படி ஒரு நிலையே இல்லை என்று மனம் மறுக்கத் தொடங்குகிறது.

மனதை விலக்கி வையுங்கள். என் பேச்சைக் கேட்கும் போது அதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யாதீர்கள். அதைக் கவனியுங்கள் போதும். நான் சொல்வது உண்மையா, பொய்யா என்ற ஆராய்ச்சியில் இறங்காதீர்கள்.

அதன் உண்மைநிலைபற்றி கவலைப் படாதீர்கள் நான் சொல்வதை நம்புங்கள். நான் இப்படி சொல்வதற்குக் காரணம், நீங்கள், என் பேச்சு உண்மையா, பொய்யா என்ற ஆராய்ச்சியில் இறங்கிவிடக்கூடாது என்பதற்காகத்தான். பறவைகளின் ஒலிகளைக் கேட்பது போல், பைன் மரக்காட்டிற்குள் காற்றின் ஒலியைக் கேட்பது போல், ஓடும் நீரின் சத்தத்தைக் கேட்பது போல் என் பேச்சைக் கேளுங்கள். போதும்.

ஆனால் நீங்கள் உங்கள் மூளையிடம் மாட்டிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் மூளை எப்போதும் உங்களை ஒரு போதைநிலையிலேயே வைத்திருக்கிறது. எண்ணங்கள், கருத்துகள், பொருள் விளக்கங்கள் தான் இந்த போதைநிலைக்குக் காரணம்.

ராமு பெரிய குடிகாரன். இரவு குடி போதையில் வரும் போது அவனுக்கு அவனது வீடே அடையாளம் தெரியாது. 'உன் வீட்டு வாசலில் ஓர் அரிக்கேன் விளக்கை ஏற்றி வை. இரவில் போதையில் உன் வீட்டை அடையாளம் கண்டு கொள்வது சுலபம்' என்று அவனது நண்பன் அறிவுரை கூறினான்.

அன்றிரவு பயங்கர போதையில் தள்ளாடி நடந்து வந்து கொண்டிருந்தான் ராமு. அரிக்கேன் விளக்கைப் பார்த்ததும் 'இதுதான் என் வீடாக இருக்கும்' என்று தீர்மானித்து விளக்கை எடுத்துக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்தான். மாடிப்படி ஏறி தனது படுக்கை அறைக்குள் போனான்.

"சரிதான். இதுதான் என் படுக்கை. இதோ என் மனைவி படுத்துக் கொண்டிருக்கிறாள். நான் பக்கத்தில் படுத்துக் கொண்டு தூங்கப்போகிறேன். ஆனால் கையில் விளக்குடன் நிற்கும் இந்த ஆள் யார்?"

மனம் பற்றிய விஷயங்களில் எச்சரிக்கையாக இருங்கள். இதுவரை நீங்கள் மனதை ஒரு போதைப் பொருளாக நினைத்துப் பார்த்ததில்லை. மனம் ஒரு நுட்பமான போதைப் பொருள். உங்கள் குழந்தை பருவத்திலிருந்தே இந்த சமூகம் உங்கள் மனம் மூலமாக உங்களுக்குப் போதை ஏற்றிக் கொண்டே இருந்திருக்கிறது.

இப்போது அந்த போதை உங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதி யாகிவிட்டது. அது நீங்கள் பார்க்கும் எல்லாவற்றுக்கும் ஒரு வண்ணம் பூசுகிறது. நீங்கள் எதைப் பார்த்தாலும் அந்த வண்ணத் தின் மூலமாகத்தான் பார்க்கிறீர்கள். நீங்கள் எதைக் கேட்டாலும், கவனித்தாலும் அதன் மூலம் தான் செய்கிறீர்கள். பார்க்கின்ற காட்சிக்கு ஆதரவாகவும், எதிராகவும் அது உடனே கருத்தைத் தெரிவித்துவிடுகிறது. அதைத்தான் உங்கள் கருத்தாக நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்.

என் பேச்சைக் கேட்கும் போது எனக்கு ஆதரவளிக்கலாமா, இல்லை என்னை எதிர்க்கலாமா என்று சிந்திக்க முற்பட்டால் உங்களால் என்னைத் தெரிந்து கொள்ளவே முடியாது.

ஒரு குடிகாரன் பெரிய நட்சத்திர ஹோட்டலின் நீச்சல் குளத்துக்கு அருகில் நின்று கொண்டிருந்தான். அப்போது அந்த ஹோட்டலின் மேனேஜர் அவனை நோக்கி ஓடி வந்தார்.

“உங்களை வெளியேற்ற வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன்.”

“நான் என்ன தவறு செய்தேன்?”

“நீச்சல் குளத்தில் சிறுநீர் கழித்துவிட்டீர்கள்.”

“ஆமாம், உங்கள் நீச்சல் குளத்தில் இதுவரை யாருமே சிறுநீர் கழிக்கவில்லையோ?”

“உங்களைப் போல் பன்னிரெண்டு அடி உயரத்தில் இருக்கும் குதிக்கும் பலகையிலிருந்து இதுவரை யாருமே சிறுநீர் கழித்ததில்லை.”

நீங்கள் எங்கே நின்று கொண்டிருக்கிறீர்கள், என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், யார் நீங்கள் என்பதே உங்களுக்குத் தெரியாது. உங்கள் போதையைத் தெளிவிக்க வேண்டும் என்பதற்காகத்தான் நான் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கிறேன். உங்கள் மனம் என்னும் போதை வஸ்துவிலிருந்து உங்களை விடுவிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

உங்கள் மனம் உங்களைக் கிறுக்குப் பிடித்த நிலையிலேயே வைத்துக் கொண்டிருக்கிறது. மனம் என்பதே கிறுக்குத்தனம்தான். பைத்தியங்கள் உங்களை விட ஒரு படி அதிகம் முன்னேறிவிட்டன. அவ்வளவுதான். மற்றபடி அடிப்படையில் உங்களுக்கும், பைத்தியம் பிடித்தவர்களுக்கும் பெரிய வேறுபாடு ஒன்றும் இல்லை. உங்கள் நோய் முற்றவில்லை. அவர்களின் நோய் முற்றிவிட்டது. அவ்வளவுதான் வித்தியாசம்.

நீங்கள் 90 டிகிரி பைத்தியமாக இருக்கிறீர்கள். அடுத்தவர் 99 டிகிரியில் இருக்கிறார். மூன்றாமவர் 100 டிகிரி போய் எல்லைக் கோட்டைத் தாண்டிவிட்டார். அப்போது அவர் பைத்தியம் பிடித்தவராகிவிடுகிறார். அவரால் இயல்பு வாழ்க்கை வாழமுடியாது.

உண்மையிலேயே நல்ல மனநலம் உள்ளவன் யார் தெரியுமா? தனது மனத்தை விட்டுவிட்டு வெளியே வந்தவன் தான். அவனது பார்வைதான் பழுதுபடாமல் தீர்க்கமாக இருக்கும். உங்கள் தன்னுணர்வு அழுக்கில்லாமல் இருக்கும் பளபளப்பான கண்ணாடியைப் போல் நிர்மலமாக இருக்கிறது.

இரண்டு பைத்தியக்காரர்கள் ஒரு மரக்கிளையின் மேல் படுத்திருந்தார்கள். திடீரென்று ஒருவன் கீழே விழுந்தான்.

“ஏன், என்ன ஆயிற்று?” மரத்தின் மேலே இருந்தவன் கேட்டான்.

“நான் விழ வேண்டிய அவசியம் வந்துவிட்டது. நான் தான் பழுத்துவிட்டேனே. பின் எத்தனை நாள் தான் மரத்தில் இருப்பது?”

பூங்கா ஒன்றில் ஒரு மனிதன் நடந்து கொண்டிருந்தான். எங்கிருந்தோ வந்த இன்னொருவன் திடீரென்று முதலாமவன் கன்னத்தில் பளார் என்று அறைந்தான். “ஏன்? உனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது”

“ஆமாம். அதனால் உனக்கு ஒன்றும் கஷ்டம் இல்லையே?” என்று ஆதுரத்துடன் கேட்டான் அடித்தவன்.

உங்கள் மனம் நாள் முழுவதும் கனவு கண்டு கொண்டே யிருக்கிறது. அது பகலில் காணும் கனவுகளுக்கு எண்ணங்கள் என்று பெயர். அவை வார்த்தைக் கனவுகள். இரவில் காணும் கனவுகள் எண்ணங்களின் படங்கள். வார்த்தைக் கனவுகளுக்கும், எண்ணங்களின் படங்களுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. நீங்கள் முழித்திருக்கும் போது உங்கள் கண்களை மூடிக் கொண்டு உள்ளே பார்த்தால் வண்ணப்படங்களாக கனவுகள் தொடர்ந்து ஓடிக் கொண்டிருப்பது தெரியும்.

ஆழ்நிலை சிந்தனை என்பது இந்த கனவு ஓட்டங்களில் இருந்து தப்பிப்பதுதான். தியானம் சிந்தனையும் இல்லை, கனவும் இல்லை. இருப்புநிலையே தியானம். அப்போது ஒரு கட்டத்தில் நான் சொல்லும் உண்மையை உங்களால் பார்க்கமுடியும். நான் சொல்லும் உண்மையை ஏற்றுக்கொள்வது அல்ல. எல்லாவற்றுக்கும் மேலான உண்மையை உணர்வளவில் புரிந்து கொள்வது. உண்மை என்பது ஒரு தீர்வோ, தீர்மானமோ, முடிவோ அல்ல. அது ஓர் உணர்வு. ஒரு புரிதல். அது ஒரு வெளிப்பாடு.

“ஒவ்வொரு நாளும் எனக்குப் பயங்கரமான கனவு வருகிறது.” என்று ஒருவன் தனது நண்பனிடம் சொன்னான்.

“என்ன கனவு?”

“ஒரு கவர்ச்சி நடிகை ஆடைகளே இல்லாமல் என் அறைக்குள் நுழைகிறாள்”

“இனிய கனவுதானே? இதில் பயங்கரம் என்ன இருக்கிறது?”

“உனக்குப் புரியாது. அவள் அறைக்குள் நுழைந்து பயங்கர சத்தத்துடன் கதவைச் சாத்துகிறாள். அந்தச் சத்தத்தில் நான் விழித்துக் கொள்கிறேன்.”

ஒரு சிவப்பிந்தியனும் ஒரு ஹிப்பியும் மதுபானக்கடையில் அடுத்தடுத்து உட்கார்ந்திருந்தார்கள். ஹிப்பி நீளமான தலைமுடி யுடன் பயங்கரமாக இருந்தான். சிவப்பிந்தியன் ஹிப்பியையே பார்த்துக் கொண்டிருந்தான். ஹிப்பிக்குக் கோபம் வந்துவிட்டது.

“ஒரு மணி நேரமாக என்னையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? என்ன விஷயம்?” என்று கத்தினான் ஹிப்பி.

“இல்லை, பல வருடங்களுக்கு முன்னால் உன் சாயலில் இருந்த ஒரு காட்டு விலங்குடன் உடலுறவு கொண்டேன். ஒரு வேளை நீ அந்த உறவில் பிறந்த பிள்ளையோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.”

என்னோடு இருக்கும் போதாவது இந்த முட்டாள்தனங்களில் ஈடுபடாதீர்கள். எப்படி நேராகச் சிந்திப்பது என்பதைச் சொல்லிக் கொடுக்க நான் வரவில்லை. காரண காரியத்தோடு எப்படி சிந்திப் பது என்பதையோ, தத்துவரீதியாக, ஓர் அறிவு ஜீவியைப் போல் எப்படி சிந்திப்பது என்பதையோ நான் உங்களுக்குக் கற்றுத் தரப்போவதில்லை.

சிந்திப்பது என்ற முட்டாள்தனத்தை எப்படிக் கழற்றி எறிவது என்பதைத்தான் நான் சொல்லித்தரப் போகிறேன். எண்ணங்களை விட்டபின்தான் மௌனம் வரும். அந்த மௌனத்தில்தான் உங்களால் உண்மையை உள்ளபடி பார்க்க முடியும்.

உங்களுக்குள் எல்லாமே அமைதியாக இருக்கும் போது, உங்களுக்குள் இருப்பவை எல்லாம் அசைவற்று இருக்கும்போது, நான் சொல்வதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நான் சொல்வதைத்தான் புத்தர் 2500 ஆண்டுகளுக்கு முன் சொன்னார். சுவாங் ஹ்சுவான் 2000 ஆண்டுகளுக்கு முன் சொன்னார்.

என்னை மட்டுமல்லாமல் ஒவ்வொரு காலத்திலும் இருந்த, இருக்கும், இருக்கப்போகிற எல்லா ஞானிகளையும் புரிந்து கொள்வீர்கள். ஏனென்றால் நீங்களே அந்த பேருண்மையைச் ருசிக்கத் தொடங்கியிருப்பீர்கள்.

*மூன்றாவது கேள்வி:*

*ஓஷோ, உங்களுக்குத் தான் போதுமான அளவு சீடர்கள் இருக்கிறார்களே? பின் ஏன் உங்களைப் பற்றியும். இந்த கூட்டமைப்பைப் பற்றியும் வீடியோக்கள் எடுத்து அதைப் பரப்பி வருகிறீர்கள்?*

தேவேஷ், எனக்கு உலகம் முழுவதும் 1,50,000 சந்நியாசிகள் இருக்கிறார்கள். உலக ஜனத்தொகையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இது கடலில் கரைத்த பெருங்காயத்தின் அளவுதான். மனித இனத்தின் தன்னுணர்வை மாற்ற வேண்டும் என்று கிளம்பினால் இந்த கூட்டம் போதவே போதாது. இது ஓர் ஆரம்பம். இவர்கள் எல்லாம் விதைகள். அவ்வளவுதான். இந்த புதிய செய்தியை முடிந்த மட்டும் மக்கள் மத்தியில் பரப்ப வேண்டும் என்பது தான் என் ஆசை.

உண்மை எப்போதும் மாறுவதில்லை. அது அப்படியேதான் இருக்கிறது. உண்மையை அறிந்தவர்கள் யார் என்பது முக்கிய மல்ல. அவர்கள் உண்மையை எப்போது உணர்ந்தார்கள் என்பதும் முக்கியமல்ல. காலம், இடம் கூட முக்கியமில்லை. உண்மையை உணர வேண்டும் என்பதுதான் முக்கியம்.

இது மனித இனத்தின் வரலாற்றில் மிக முக்கியமான கால கட்டம். இன்று மனிதன் இருக்கும் நிலையில் இரண்டில் ஒன்று நடந்தே தீரும். ஒன்று, மனிதன் தன் இனத்தை முழுவதுமாக அழித்துவிடுவான். இல்லையென்றால், ஒரு புதிய மனிதன் பிறந்து வந்து மனித இனத்தையும் இந்த உலகையும் காப்பாற்றுவான்.

மனிதனின் தன்னுணர்வை மாற்ற வேண்டிய அவசியமும், அவசரமும் இன்று போல் என்றுமே இருந்ததில்லை. மனிதனின் பார்வையில் அடிப்படை மாற்றத்தைக் கொண்டுவர வேண்டிய தேவை இன்று இருப்பது போல் என்றுமே இருந்ததில்லை. நான் அதை உடனே செய்தாக வேண்டும். நமக்கு நேரம் இல்லை. அரசியல்வாதிகள் அணுகுண்டுகளையும், ஹைட்ரஜன் குண்டு களையும், மற்ற பேரழிவு ஆயுதங்களையும் செய்து குவித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த பத்து வருடங்களில் மட்டும் மனிதனிடம் இருக்கும் அழிவு சக்தி 700 மடங்கு அதிகமாகி யிருக்கிறது.

பத்து வருடங்களுக்கு முன்னால் இந்த பூமியை ஒட்டு மொத்தமாக அழிக்கும் அளவிற்கு நம்மிடம் அணுகுண்டுகள் இருந்தன. ஆனால் இன்று நம்மிடம் இருக்கும் அழிவு சக்தியைக் கொண்டு 700 பூமிகளை ஒரு நொடிப்பொழுதில் அழித்துவிடலாம். இதைவிட பெரிய பைத்தியக்காரத்தனம் இருக்க முடியுமா?

பூமியை அழிப்பதால் யாருக்கு என்ன லாபம்? இந்த பிரபஞ்சத்தில் மனிதன் வாழ்வதற்கு ஏற்ற வேறு பூமிகள் உண்டா என்று நமக்குத் தெரியாது. ஐம்பதாயிரம் கிரகங்களில் ஏதோ ஒரு வகையில் உயிர்கள் வாழ்வதாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஆனால் இப்போது அது ஒரு புனைவுதான். காலம் தான் அந்த புனைவு உண்மையா, பொய்யா என்று சொல்ல வேண்டும். அப்படியே அது உண்மையாக இருந்தாலும், அந்த 50000 கிரகங்களில் ஒன்றைக் கூட நாம் இன்னும் சென்றடைய வில்லை. நமக்கு வெகு அருகில் இருக்கும் சந்திர மண்டலத்தையே இப்போதுதான் நெருங்கியிருக்கிறோம்.

அந்த கிரகங்கள் வெகு தூரத்தில் இருப்பதாகச் சொல் கிறார்கள். நமக்கு வெகு அருகில் இருக்கும் கோள் 4 ஒளிவருடங்கள் தூரத்தில் இருக்கிறது. அதாவது ஒரு விண்கலம் ஒளியின் வேகத்தில் பயணித்தால்....... ஆனால் அதுவே நடக்காத காரியம். ஒளியின் வேகம் அபரிமிதமானது. ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு 1,86,000 மைல்.

ஒளியின் வேகத்தில் செல்லக் கூடிய ஒரு விண்கலத்தை உருவாக்கினால் அந்த கிரகத்துக்குப் போய்த் திரும்பி வர 8 ஆண்டுகள் ஆகும். ஆனால் எந்த விண்கலமும் ஒளியின் வேகத் தில் பயணிக்க முடியாது. ஒளியின் வேகத்தில் போகும் எதுவும் ஒளியாகவே மாறிவிடும். அந்த விண்கலம் உருகி ஒளியாகிவிடும்.

அதில் பயணிக்கும் மக்கள் ஒளியாகவே ஆகிவிடுவார்கள். அப்படியே மறைந்துவிடுவார்கள். அந்த வேகத்தில் உண்டாகும் உஷ்ணத்தில் எல்லாமே எரிந்து ஒளிமயமாகிவிடும். அந்த உஷ்ணத்தைத் தாங்க்க்கூடிய உலோகத்தை நாம் இன்னும் கண்டுபிடிக்கவில்லை.

இது பக்கத்தில் உள்ள கிரகத்துக்கு. இந்த கிரகத்தில் உயிர்கள் இல்லை. விஞ்ஞானிகள் உயிர்கள் இருப்பதாக நம்பும் கிரகங்கள் ஆயிரக்கணக்கான ஒளி வருடங்கள் தூரத்தில் இருக்கின்றன.

அவற்றை அழிக்க நம்மால் முடியாது. அவற்றைச் சென்றடையவே முடியாது என்னும் போது அவற்றை அழிக்கும் சக்தியைப் பற்றிப் பேசவே தேவையில்லை. அப்படி இருக்கும் போது நாம் ஏன் அழிவு ஆயுதங்களைச் செய்து குவிக்க வேண்டும்?

அணுகுண்டுகள், ஹைட்ரஜன் குண்டுகள், லேசர் கதிர்கள் என்று அழிவு ஆயுதங்களைச் செய்து கொண்டேயிருப்பதால் என்ன லாபம்? ஒவ்வொரு மனிதனையும் 700 முறை கொல்ல வேண்டும் என்று நினைக்கிறார்களோ? அது எப்படி முடியும்? ஒரு முறை கொன்றவுடன் அந்த மனிதன் பிணமாகிவிடுகிறானே? அவனை எப்படி மறுபடியும் கொல்ல முடியும்? அதுவும் அணுகுண்டினால் உயிரிழக்கும் மனிதர்களின் பிணங்களைக்கூடப் பார்க்க முடியாது.

மனிதர்கள் ஒருமுறைதான் இறப்பார்கள். சாதாரண மனிதர்கள் யேசு கிறிஸ்து அல்ல. அவர் இறந்தவுடன் மீண்டு வந்தார். அதைப் போல் இறந்த மனிதர்கள் மீண்டு வர மாட்டார்கள். அப்படியே வந்தாலும் சத்தியமாக 700 முறை மீண்டு வர மாட்டார்கள். பின் ஏன் அரசியல்வாதிகள் 700 முறை கொல்வதற்கு ஆயுதங்களைத் தயராக வைத்திருக்கிறார்கள்? இவர்களைப் பைத்தியக்காரர்கள் என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்வதாம்?

இந்த பைத்தியக்கார உலகத்திலே, பைத்தியக்கார அரசியல் வாதிகளிடம் அதிகாரம் இருக்கும் வரையில், பூமியில் இருக்கும் உயிர்களைக் காப்பாற்றும் ஒரே வழி ஆழ்நிலை சிந்தனை தான்.

நமக்கு உள்ளே நடக்கும் புரட்சியின் வித்து வேகமாகப் பரவ வேண்டும். நான் இந்த நூற்றாண்டின் மனிதன். நான் மாட்டு வண்டிகளை நம்பவில்லை. ரோல்ஸ் ராய்ஸ் கார்களை நம்புகிறேன். என் ரோல்ஸ்ராய்ஸ் கார்களை நீங்கள் இங்கே பார்க்கலாம்.

தனது செய்தி அதிகமான மக்களைச் சென்றடைய வேண்டும் என்ற ஆதங்கம் புத்தருக்கும் இருந்தது. ஆனால் அன்றிருந்த சூழ்நிலையில் கிராமம் கிராமமாக கால்நடையாகச் செல்வதைத் தவிர அவருக்கு வேறு வழிகள் எதுவும் இல்லை. இந்த கால்நடைப் பிரசாரம் எத்தனை மக்களைச் சென்றடையும்?

அவருடைய பிரசாரம் ஒரே ஒரு மாகாணத்தில் தான் நடந்தது. அதன் பெயர் பீகார். பீகார் என்ற சொல்லுக்குப் பொருளே, 'புத்தர் பயணம் செய்த மாகாணம்' என்பதுதான். அந்த

மாகாணத்தின் எல்லைகள் வரைதான் புத்தர் பயணம் செய்தார். அந்த ஒரு மாகாணத்தில் கூட எல்லாப் பகுதிகளுக்கும் அவரால் போகமுடியவில்லை. சில முக்கியமான நகரங்களுக்கு மட்டுமே போனார் அவர்.

நாற்பத்தியிரண்டு வருடங்கள் கால்நடையாகவே பயணம் செய்தார் புத்தர். அவருக்கு முதுமை வந்தபோதும், நோய் வந்த போதும், பயணம் செய்து கொண்டிருந்தார் அவர். அவர் இறக்கும் போது அவரது வயது 82.

அந்த வயதில் கூட அவர் தனது பயணங்களை நிறுத்த வில்லை. பீகாரின் கடுமையான வெயிலைக் கூட பொருட்படுத்தா மல் பயணம் செய்து கொண்டிருந்தார் அவர். அவர் நோய்வாய்ப் பட்டிருந்ததால் அவரோடு ஒரு வைத்தியரும் கூடவே பயணம் செய்தார்.

அத்தனை அல்லல்களுக்கு நடுவில் புத்தர் ஏன் பயணம் செய்ய வேண்டும்? பரிபூர்ண ஞானத்தை அடைந்த அந்த மகான் ஒரே இடத்தில் அமைதியாக தியானத்தில் உட்கார்ந்திருக்கலாமே?

தனது செய்தி மக்களுக்குச் சென்றடைய வேண்டும் என்று நினைத்தார் அவர். மகாவீரரும் அதையேதான் செய்தார்.

இரண்டு துறவிகள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"உனக்குத் தெரியுமா? ஏசுநாதர் உயிர்த்தெழுந்த போது முதலில் பெண்களுக்குத்தான் காட்சியளித்தார்."

"ஏன்?"

"அப்போதுதான் அவர் உயிர்த்தெழுந்த விஷயம் வேகமாகப் பரவும் என்று நினைத்தார் அவர்."

நா:ீ எங்கேயும் போவதில்லை. அதற்கு அவசியமும் இல்லை. அது பழங்காலத்து முறை. ஊர் ஊராகப் போய் தங்கள் செய்தியைச் சொல்வது காலாவதியாகிவிட்ட வழிமுறை. தனிப்பட்ட முறையில் பயணம் செய்து நான் அதிகம் மக்களைப் பார்க்க முடியாது.

ஆனால் இப்போதுதான் ஊடகங்கள் இருக்கின்றனவே? என்னுடைய வார்த்தைகள் பூமியின் ஒரு கோடியில் இருந்து மறு கோடி வரைச் செல்கின்றன. புத்தகங்கள் கூட கொஞ்சம் பழைய

முறைதான். இப்போது அதைவிட எளிய, புதிய முறைகள் வந்துவிட்டன.

வீடியோ சாதனங்கள் வந்துவிட்டன. நீங்கள் என்னை நேரில் பார்த்து என் உரையைக் கேட்பது போல உலகத்தின் மறு கோடியில் உள்ள ஒருவர் என்னைப் பார்த்தபடியே என் உரையைக் கேட்க முடியும். ஆளையே பார்க்காமல் அவரது பேச்சைக் கேட்பதற்கும், அவரை நேரில் பார்த்து அவர் சொல்வதைக் கேட்பதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது.

அதனால்தான் இன்று தொலைக்காட்சி வானொலியை விட பலமடங்கு சக்தி வாய்ந்த ஊடகமாக இருக்கிறது.

உதாரணமாக நீங்கள் என் பேச்சை ஒலி நாடாக்களில் கேட்கும் போது என் கைகளை பார்க்க முடியாது. எனது கையசைவில் நான் பேசுவதைவிட அதிகம் விஷயங்களைச் சொல்கிறேன். ஒலிநாடாக்களில் உங்களால் அதைக் கவனிக்க முடியாது.

அது மட்டுமில்லை. ஒலிநாடாக்களில் உங்களால் என் கண்களைப் பார்க்க முடியாது. வார்த்தைகளால் சொல்ல முடியாத நுணுக்கமான விஷயங்களை என் பார்வையால் நான் சொல்வதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. என் ஒலி நாடாக்களைக் கேட்கும் போது ஏதொ ஒன்றை, விலை மதிக்க முடியாத ஒன்றை நீங்கள் தவற விட்டுவிடுவீர்கள். அசரீரியாக என் குரலை மட்டும் கேட்பதால் பயனில்லை.

நான் திரைப்படச் சுருள், தொலைக்காட்சி, வீடியோ போன்ற நவீன சாதனங்களைப் பயன்படுத்துகிறேன். நான் முழுக்க முழுக்க இருபதாம் நூற்றாண்டு ஆசாமி. நான் இந்த நூற்றாண்டை நேசிக் கிறேன். மற்றவர்களைப் போல் நவீன யுகத்தை நான் எதிர்க்க வில்லை. எனக்கு விஞ்ஞானத்தின் மீதும் தொழில் நுட்பத்தின் மீதும் காதலே உண்டு.

ஆனால் அவை தவறான ஆசாமிகளிடம் மாட்டிக் கொண்டிருக்கின்றன என்பதுதான் என் வருத்தம். ஆனரல் அதுதான் இயற்கையின் நியதி. அரிய கண்டுபிடிப்புகள் எப்போதும் முதலில் தவறான ஆட்களிடம் மாட்டிக் கொண்டுவிடுகின்றன. காரணம், தவறான ஆசாமிகள் சூழ்ச்சி செய்வதில் கில்லாடிகள். தங்களது சூழ்ச்சியால் விஞ்ஞான முன்னேற்றங்களை தங்களுக்குச் சாதகமாக வளைத்துப் போடுவதில் சமர்த்தர்கள்.

அணு சக்தியைக் கண்டுபிடித்ததுகூட உலகத்திற்குப் பெரிய வரமாக இருந்திருக்கலாம். ஆனால் நமது கெட்டகாலம் அது அரசியல்வாதிகளின் கைகளில் மாட்டிக் கொண்டு விட்டது. அது ஞானிகளின் கையில் இருந்திருந்தால் நாம் மூன்றாவது உலகப் போருக்கு அஞ்ச வேண்டிய அவசியமேயில்லை.

இந்த உலகத்தையே நாம் செல்வச் செழிப்பால் நிரப்பி விடலாம். உலக வரலாற்றில் முதல்முறையாக வறுமையை உலகத்திலிருந்து விரட்டி அடித்திருக்கலாம். வறுமை என்பது கடந்த காலத்தின் அவமானச் சின்னமாக மட்டுமே இருந்திருக்கும். மனிதனை வாட்டும் பல நோய்கள் மறைந்திருக்கும்.

மனிதனின் ஆயுட்காலம் கற்பனை செய்து பார்க்கமுடியாத அளவு அதிகரித்திருக்கும். சராசரியாக 300 வயது வரை வாழ்வது கூட சாதாரண விஷயமாகப் போயிருக்கும். மனிதனின் உடல் இன்னும் அதிக காலத்துக்கு வாழ ஏற்றது என்று தான் விஞ்ஞானிகள் சொல்கிறார்கள்.

மக்கள் 70 வயதில் சாகிறார்கள். காரணம் அப்படிச் சாவது மனிதனுக்குப் பழக்கமாகப் போய்விட்டது. அது அவர்கள் மனதில் ஒரு வலுவான எண்ணமாகப் புகுந்துவிட்டது. மனிதர்களின் கூட்டு மனதில் அந்த எண்ணம் வலுப்பெற்றுவிட்டது. தன்னைத்தானே வசியம் செய்து கொள்வது போல், ‘எழுபது வயதில் இறந்து விடுவோம்’ என்று மக்கள் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதால், அதற்கு மேல் வாழ அவர்களால் முடியவில்லை.

உங்கள் உடலில் உள்ள உயிரணுக்களைக் கூட மாற்றியமைக்கமுடியும் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். நீங்கள் எவ்வளவு வயது வரை வாழ்வீர்கள், எப்படி வாழ்வீர்கள், எந்த மாதிரியான நோய்கள் உங்களைத் தாக்கும் என்று ஒரு நிகழ்ச்சி நிரலே உங்கள் உயிரணுக்களில் பதிவாகியிருப்பதாகச் சொல்கிறார்கள். அந்த நிகழ்ச்சி நிரலை மாற்ற முடியும் என்று இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள்.

நாம் எப்படி அணுவைப் பிளந்தோமோ, அதே போல் நமது உயிரணுவையும் பிளக்கலாம். அதன் உள்ளே பதிவாகியிருக்கும் நிகழ்ச்சி நிரலை மாற்றி அமைக்கலாம். ஒரு புதிய நிகழ்ச்சி நிரலையே பதிவு செய்யலாம். அப்படிச் செய்தால் நாம் 300, 400 ஏன் 500 வருடம் கூட வாழமுடியும். நாம் வாழும்

வரை நோய் நொடியில்லாமல் இளமையுடன் வாழ வகை செய்து கொள்ளலாம். முதுமை இந்த உலகத்திலிருந்து மறைந்துவிடும். இதெல்லாம் நடக்க வாய்ப்பு இருக்கிறது.

விஞ்ஞானம் மனிதனுக்கு ஏராளமான சக்தியைக் கொடுத் திருக்கிறது. ஆனால் இந்த சக்தி தவறான ஆசாமிகளின் கைகளில் மாட்டிக் கொண்டதுதான் இன்றைய அவலம். சரியான ஆசாமி களே இப்போது இல்லை என்ற நிலை வந்துவிட்டது. இப்போது நமது பணி சரியான ஆசாமிகளை உருவாக்குவதுதான். அதற்கு சரியான உணர்வுநிலையை நாம் உருவாக்க வேண்டும்.

அதனால் நவீன உத்திகளுடன் எனது பணியைத் தொடரப் போகிறேன். எவ்வளவு பேருக்கு முடியுமோ அவ்வளவு பேருக்கு என் செய்தி சென்றடைய வேண்டும் என்பதுதான் என் ஆசை. உலகத்தின் ஒவ்வொரு நாட்டிலிருந்தும் வந்திருக்கும் மக்களை இங்கே பார்க்கலாம். எனது சந்நியாசிகள் இல்லாத நாடே இந்த உலகத்தில் இல்லை. அவர்கள் போகும் இடத்தில் எல்லாம் ஒரு கலகத்தை உருவாக்குகிறார்கள். அவர்களுடைய பேச்சாலும் செயலாலும் ஒரு பெரும் புரட்சி உருவாகத்தான் போகிறது.

அரசியல் புரட்சிகள் புரட்சிகளே இல்லை. ஆன்மிகப் புரட்சிதான் உண்மையான புரட்சி. நாம் உள்ளே மாறாவிட்டால் வெளியே நடக்கும் மாற்றங்களால் எந்தப் பயனும் இல்லை.

நான் பழைய பாணியில் வாழும் துறவி இல்லை. "சீடர்கள் இல்லாவிட்டால் எதற்காகக் கவலைப் பட வேண்டும்? அதிகம் மக்களுக்கு செய்தி போய்ச் சேர வேண்டும் என்று ஏன் ஆதங்கப் பட வேண்டும்?" போன்ற கேள்விகள் என் மனதில் எழவே எழாது.

இதில் எனக்குக் கவலையும் இல்லை. ஆதங்கமும் இல்லை. நான் செய்யும் பணியை மகிழ்ச்சியுடன், ரசித்து அனுபவித்துச் செய்து கொண்டிருக்கிறேன். சொல்லப் போனால் இது எனக்கு பணியோ, வேலையோ இல்லை. விளையாட்டு. இதற்கு ஓர் அவசரத் தேவையும் இருக்கிறது என்பதையும் நாம் மறுக்க முடியாது.

தேவேஷ் ஏன் அப்படிக் கேட்டான் என்று என்னால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது. அவன் இந்த கூட்டமைப்பின் திரையிலாகாவில் வேலை செய்கிறான். எப்போதும் வீடியோ கேமராவின் பின்னால் உட்கார்ந்திருப்பதுதான் அவனுடைய

வேலை. அந்த கேமரா வழியாக இங்கே நடப்பதைப் பார்க்கும் போது அவனுக்குப் புதிராக இருந்திருக்கும். இது போல் பல கேள்விகளை எனக்கு எழுதியனுப்பியிருக்கிறான்.

இரண்டு நாட்களுக்கு முன்னால் பிரேம் சின்மயா இறந்த போது எனக்கு உடனே ஒரு கேள்வியை எழுதியனுப்பினான் தேவேஷ். " ஓஷோ, பிரேம் சின்மயாவின் சாவு, அதன்பின் நடந்த கொண்டாட்டம் கூட வீடியோ எடுக்கப்பட்டது. ஏன்? சாகும் போதாவது ஒரு மனிதனை நிம்மதியாகச் சாகவிடக்கூடாதா?"

ஆனால் சின்மயா தான் செத்துவிட்டானே! செத்தபின் நீங்கள் அவனை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். புகைப்படம் எடுக்கலாம், வீடியோ எடுக்கலாம், திரைப்படம் எடுக்கலாம், தொலைக்காட்சியில் காட்டலாம்.

கே.பி. என்ற இன்னொரு சந்நியாசி சின்மயாவின் தலையை நிமிர்த்தி வைத்தான். இல்லாவிட்டால் வீடியோவில் அழகாக வராதாம்! நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். பிரேம் சின்மயா மேலே இருந்தபடி சிரித்துக் கொண்டிருப்பான். நாம் செய்யும் வேலைகளை ரசித்துக் கொண்டிருப்பான். "இப்படி எல்லாம் செய்வார்கள் என்று தெரிந்திருந்தால் இன்னும் கொஞ்சம் முன்னாலேயே செத்திருப்பேனே!" என்று சொல்லிக் கொண்டிருப்பான் பிரேம் சின்மயா.

அவன் அமைதியாக இறந்து போனான். இறந்து போகும் போது அவனிடம் அபரிமிதமான அமைதி இருந்தது. அந்த அமைதியை நான் இங்கே வார்த்தைகளால் விவரிக்க முடியாது. தேவேஷ், உன்னுடைய வீடியோ படம் சின்மயாவை எந்த வகையிலும் பாதிக்காது. அவனுடைய உயிரை உருக்கிக் கொண்டிருந்த புற்று நோயே அவனை பாதிக்கவில்லை.

அவன் செத்தபின் நீ எடுத்த இந்த வீடியோ படம்தானா அவனைப் பாதித்துவிடப் போகிறது? கடைசி நாட்களில் அவன் பயங்கர வலியில் துடித்துக் கொண்டிருந்தான். என்றாலும் அவன் ஒரு சாட்சியாக இருந்து அவனுக்கு நடந்ததை அவனே பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய சாவு மிகவும் அழகானது. ஒரு சந்நியாசி அப்படித்தான் சாக வேண்டும்.

இப்போது நார்டன் வந்துவிட்டான். நேற்றுத்தான் அவன் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தான்.

"சின்மயாவின் சாவையும், அதனைத் தொடர்ந்த கொண்டாட் டத்தையும் வீடியோ படத்தில் பார்த்ததை நான் என் பாக்கியமாகக் கருதுகிறேன். எனக்கும் புற்று நோய் இருக்கிறது. 'இன்னும் 2 வருடங்கள் தான் உயிர் வாழமுடியும்.' என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள். மிச்சமிருக்கும் காலத்தை இங்கேயே கழிக்கலாம் என்று தான் வந்திருக்கிறேன்."

சின்மயாவின் சாவையும், அதன் பின் நடந்த கொண்டாட் டத்தையும் பார்த்துவிட்டு மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்தான் நார்ட்டன்.

வாழ்க்கையை மட்டும் கொண்டாட நான் கற்றுத் தரவில்லை. சாவையும் கொண்டாட கற்றுத் தருகிறேன். வாழ்க்கையின் உச்சகட்டம், வாழ்க்கை நாடகத்தின் கிளைமேக்ஸ் காட்சி சாவுதான்.

உங்கள் வாழ்க்கையை ஒழுங்காக வாழ்ந்தால் உங்கள் சாவு உங்களுக்குக் கொண்டாட வேண்டிய ஒரு திருவிழாவாகத்தான் இருக்கும்.

சின்மயாவின் சாவும் அழகுதான். பரிபூர்ண அமைதியில், பரிபூர்ண சரணாகதியில் இறந்தான் சின்மயா. அதைப் பார்க்க நார்ட்டனுக்கும் சந்தோஷமாக இருந்தது. இப்போது நார்ட்டன் தனது சாவை எதிர் நோக்கிக் காத்திருக்கிறான். தேவேஷ், கூடிய சீக்கிரத்தில் இன்னொரு சாவை நீ படம் பிடிக்க வேண்டியதிருக்கும். எதற்கும் தயாராக இரு.

*நான்காம் கேள்வி:*

*ஓஷோ, கடவுள் ஏன் இத்தாலியர்களைப் படைத்தார்?*

சஞ்சயோ, நீ இத்தாலியன் யாரையாவது காதலிக்கிறாயா என்ன? இல்லாவிட்டால் இந்த கேள்வி ஏன் வரவேண்டும்? இது உண்மையிலேயே பெரிய கேள்விதான். உன் கேள்விக்குப் பதில் சொல்ல நான் ஆகாஷிக் ஆவணங்களைப் பார்க்க வேண்டி யிருந்தது.

ஏனென்றால் இந்த கேள்விக்கு விடை, பைபிளிலோ, குரானிலோ, இல்லை இந்து மதத்தின் வேதங்களிலோ இல்லை. இது மிகவும் முக்கியமான கேள்வி என்று தான் சொல்ல வேண்டும்.

ஆகாஷிக் ஆவணங்கள் கூட் ஹூமி (Koot Humi) என்பவரது கட்டுப்பாட்டில் இருக்கிறது. அவருடைய அனுமதி இல்லாமல் நான் அந்த ஆவணங்களைப் பார்க்க முடியாது. அவரிடம் சொன்னேன். "ஒரு சிறிய சந்தேகம் ஏற்பட்டுள்ளது. கடவுள் ஏன், எப்படி இத்தாலியர்களைப் படைத்தார் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு உதவி செய்யுங்கள்."

அவருக்குப் புதிராக இருந்தது. அவர் சொன்னார். "இதுவரை யாருமே இப்படி ஒரு கேள்வியைக் கேட்டதில்லை ப்ளாவாட்ஸ்கியோ, அன்னி பெசண்ட் அம்மையாரோ கூட இந்த மாதிரி ஒரு கேள்வியைக் கேட்டதில்லை. யார் இந்த சஞ்சயோ? மறைபொருளைப் பற்றிப் பேசுவதில் கில்லாடியாக இருக்கிறாளே!"

நான் பதில் சொன்னேன்.

"என் சந்நியாசிகள் எல்லாருமே அந்த மாதிரி கில்லாடிகள் தான். அவர்கள் என்னிடம் கேட்கும் கேள்விகளை வேறொரு துறவியிடம் கேட்டால் ஒன்று, அந்த துறவி துண்டைக் காணோம், துணியைக் காணோம் என்று ஓடிப் போயிருப்பார்.

"இல்லாவிட்டால் கேள்வி கேட்டவர்களை ஆசிரமத்திலிருந்து வெளியே தூக்கியெறிந்திருப்பார்கள். ஆனால் என்னிடம் அவர்கள் எப்போது வேண்டுமானாலும் எந்தக் கேள்வி வேண்டுமானாலும் கேட்கலாம். சஞ்சயோ கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல என்னை ஆவணங்களைத் தேட அனுமதியுங்கள்."

அவர் அனுமதித்தார்.

அந்த ஆவணங்களைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டுத் தேடினேன். அப்போது இந்த வரிகளைப் பார்க்க நேர்ந்தது.

"ஆரம்பத்தில் முழு இருளும் ஸ்பாகெட்டியும் (நமது சேமியாவைப் போன்ற இத்தாலிய உணவு வகை. மாவினால் ஆனது. spagetti) தான் இருந்தன. கடவுளுக்கு ஸ்பாகெட்டி மிகவும் பிடித்திருந்தது.

"ஒரு நாள் கும்மிருட்டில் அமர்ந்து ஸ்பாகெட்டியை சாப்பிட்டுக் கொண்டிருந்த போது கடவுளுக்கு ஒரு யோசனை வந்தது. இந்தக் கையில் கொஞ்சமும், அந்தக் கையில் கொஞ்சமுமாக ஸ்பாகெட்டியை எடுத்துக் கொண்டார் கடவுள். இரண்டு கைகளையும் சேர்த்துத் 'வாப்' (wop) என்ற சத்தத்துடன்

தட்டிய போது முதல் இத்தாலியன் பிறந்தான். அதனால் தான் இன்றளவும் இத்தாலியர்களை wops என்று சொல்கிறார்கள்.

இப்போது உங்கள் மனத்தில் இன்னொரு கேள்வி தோன்றும். அதைத் தயவு செய்து என்னிடம் கேட்காதீர்கள். ஸ்பாகெட்டியைப் படைத்தது யார்? இந்தக் கேள்விக்கான விடையை என்னால் ஆகாஷிக் ஆவணங்களில் கூட கண்டுபிடிக்க முடியவில்லை.

கூட் ஹூமியைக் கேட்டபோது அவருக்குக் கோபம் வந்துவிட்டது. "வாயை மூடு. அந்த மாதிரி கேள்விகளை எல்லாம் நாங்கள் எழுதி வைத்துக் கொள்வதில்லை. அவற்றுக்குப் பதிலும் இல்லை. கடவுள் தான் சர்வ வல்லமையுடையவராயிற்றே? அவரால் தான எந்த அதிசயமும் செய்ய முடியுமே? கொஞ்சம் ஸ்பாகெட்டியைச் செய்ய முடியாதா என்ன?"

நான் சொன்னேன்."அது கொஞ்சம் கஷ்டம். இத்தாலியரின் துணை இல்லாமல் கடவுள் கூட ஸ்பாகெட்டி செய்ய முடியாது.

ஆகாஷிக் ஆவணங்கள் மேலும் சொல்கின்றன. "கடவுள் இத்தாலியை உருவாக்கிய நாள் இறையருள் பெற்ற நாள். தான் படைத்ததைத் திருப்தியுடன் பார்த்துக் கொண்டு வந்தார் கடவுள்.

"நான் ஏற்கனவே செய்ததை விட இப்போது சிறப்பாகச் செய்திருக்கிறேன். என்ன ஆச்சரியம்! இந்த இயற்கை காட்சி அவ் வளவு அழகாக அமைந்துவிட்டது. இது ஒரு வரம் பெற்ற நாடு."

அவ்வளவு அழகாக ஒரு நாட்டை உருவாக்கிவிட்டு இதனால் தனக்குத் திருஷ்டி பட்டுவிடப் போகிறதே என்ற பயத்தில் இத்தாலியர்களை உருவாக்கினார் கடவுள்.

ஒன்று மட்டும் நிச்சயம். இத்தாலியர்கள் இல்லாமல் இந்த உலகம் இவ்வளவு அழகாக இருந்திருக்காது. இவ்வளவு சுவாரசியமானதாக இருந்திருக்காது. உலகத்தை உருவாக்கியதில் இத்தாலியர்களின் பங்களிப்பு மகத்தானது.

இன்னொரு விஷயத்தையும் நான் உறுதியாகச் சொல்லியாக வேண்டும். இத்தாலியர்களின் பங்களிப்பு இல்லாமல் இந்த நமது கூட்டமைப்பு உருவாகியிருக்காது. நான் இல்லாவிட்டால் கூட இந்த கூட்டமைப்பு செயல்பட்டுக் கொண்டிருக்கும்.

ஆனால் இத்தாலியப் பெண்ணான தீக்ஷா இல்லாமல் இது செயல்படாது. நான் இங்கே இல்லாவிட்டால் கூட நீங்கள்

மௌனத்தில், தியானத்தில் அமர்ந்திருக்க முடியும். ஆனால் தீக்ஷா இல்லாமல் எத்தனை நேரம் தான் உங்களால் மௌனமாக இருக்க முடியும் சொல்லுங்கள்.

மத்தியதர இத்தாலியக் குடும்பங்கள் அதிகம் வசிக்கும் பகுதியில் ஒரு பெண் ஜனத்தொகை கணக்கெடுத்துக் கொண்டிருந் தாள். ஒரு வீட்டின் அழைப்பு மணியை அழுத்திய போது அதைத் திறந்த மனிதன் நிர்வாணமாக இருந்தான்.

இந்தப் பெண் அதனால் அதிர்ச்சி அடைந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. அவனுடைய நிர்வாணத்தைக் கவனிக்காதது போல் கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள்.

ஆனாலும் அந்த ஆண் தன் செயலுக்கு நியாயம் கற்பித்தான்.

"நீங்கள் என்னைப் புரிந்து கொள்வீர்கள் என்று நினைக் கிறேன். நான் நிர்வாண சங்கத்தின் உறுப்பினன். "

"அது பற்றி பிரச்சினை இல்லை. உங்களைப் பற்றிய தகவல்கள் வேண்டும். உங்களுக்கு மணமாகிவிட்டதா?"

"ஆகிவிட்டது மூன்று முறை."

"குழந்தைகள்...?"

"முதல் மனைவி மூலம் 7 குழந்தைகள். இரண்டாவது மனைவி மூலம் 12, மூன்றாவது மூலம் 15. மொத்தம் 34."

"எனக்கென்னவோ நீங்கள் நிர்வாண சங்கத்தின் உறுப்பினராகத் தெரியவில்லை. ஆடைகளை மாட்டிக் கொள்ளவே உங்களுக்கு நேரம் கிடைக்கவில்லை என்றுதான் தோன்றுகிறது."

கூச்ச சுபாவமுள்ள ஓர் ஓவியன் ஓர் அழகான இத்தாலியப் பெண்ணைப் பார்த்தான். தனது ஓவியத்துக்கு மாதிரியாக இருக்க முடியுமா என்று மென்மையாகக் கேட்டான். அவள் அதற்கு சன்மானமாக நூறு டாலர் கேட்டாள்.

ஓவியன் தனது நண்பர்களிடம் எல்லாம் கடன் வாங்கி ஒரு நாள் குறித்து அவளைத் தனது வீட்டிற்கு வரச் சொன்னான்.

"அம்மணி, உங்கள் மார்பகங்களை அப்படியே வரைய விரும்புகிறேன். மேலாடைகளைக் களைய முடியுமா?"

அதற்கு அவள் 200 டாலர் கேட்டாள். அவன் கையில் இருந்ததை எல்லாம் விற்று, அடகு வைத்து 200 டாலர் திரட்டி அவளை மீண்டும் தன் வீட்டுக்கு அழைத்து வந்தான்.

திறந்த மார்போடு அவளைப் பார்த்த ஓவியனுக்கு அவளை நிர்வாணமாக வரைய ஆசை வந்தது. அதற்கு எவ்வளவு என்று அவளிடம் கேட்டான். அவள் 400 டாலர் கேட்டாள்.

தன் ஓவியங்களை எல்லாம் அடிமாட்டு விலைக்கு விற்று பணத்தைத் திரட்டினான்.

அவளும் குறித்த நாளில் அவனது வீட்டிற்கு வந்து தனது ஆடைகளை எல்லாம் களைந்துவிட்டு நிர்வாணமாக அவன் முன் அமர்ந்தாள். அவளை அந்தக் கோலத்தில் பார்த்த ஓவியனுக்கு ஆசை வந்துவிட்டது.

“தேங்காய் உடைப்பது போல் வெளிப்படையாகவே கேட்கிறேன் பெண்ணே! உன்னோடு உடலுறவு கொள்ள வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. அதற்கு எவ்வளவு வேணடும் சொல்.”

“அதற்கு எல்லாரையும் போல் பத்து டாலர் கொடுங்கள் போதும்.” என்று சொன்னாள் அந்த இத்தாலியப் பெண்.

இத்தாலியப் பெண் மரியாவிற்கு ஆறு மகன்கள். அனைவரின் முடியும் கறுப்பாக இருந்தது. ஏழாவதாகப் பிறந்த மகனுக்கு முடி சிவப்பாக இருந்தது. மரியாவின் கணவனுக்கு சந்தேகம். கோபம்.

“அடிப் பாவி. எனக்குத் துரோகம் செய்துவிட்டாயே! இவனுக்கு நான் தகப்பன் இல்லை என்ற உண்மையை ஒத்துக் கொள்.”

“என் குழந்தையின் மேல் சத்தியம். அவன் உங்கள் குழந்தைதான்.” மரியா மன்றாடினாள்.

ஆனால் அவள் கணவன் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. கோபம் தலைக்கேற அவளைத் துப்பாக்கியால் சுட்டுவிட்டான். அவள் இறப்பதறகு முன் தன் கணவனை தன்னருகே அழைத்து கிசுகிசுப்பான குரலில் சொன்னாள்.

“இதோ சாகப் போகிறேன். உண்மையைச் சொல்லி விடுகிறேன். இந்த ஏழாவது பையன் சத்தியமாக உங்கள் பையன் தான். மற்ற ஆறு பேருக்கும் நீங்கள் தகப்பன் இல்லை.”

ஓர் இத்தாலியன் பிழைப்புக்காக அமெரிக்கா போனான். அங்கே போய் நல்ல வேலை கிடைத்தவுடன் தனது மனைவியை

அழைத்துப் போவதாகச் சொன்னான். இடைப்பட்ட காலத்தில் இருவரும் ஒருவருக்கொருவர் துரோகம் செய்யக்கூடாது என்று ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

இரண்டு வருடம் கழிந்தது. கணவனும் நல்ல வேலையில் இருந்தான். உடனே மனைவியை அமெரிக்கா கிளம்பி வருமாறு சொன்னான்.

அவளைப் பார்த்தும் கணவன் சொன்னான், “கண்ணே, நீ இன்னும் அழகாக இருக்கிறாய்.”

“நீங்களும் தான் ராஜாவைப் போல் இருக்கிறீர்கள்.” மனைவி உருகினாள்.

இரண்டு வருடம் பிரிந்திருந்த போது நடந்த விஷயங்களைப் பகிர்ந்து கொண்டார்கள்.

“உனக்குத் தெரியுமா மரியா, இந்த இரண்டு வருடங்களில் நான் எவ்வளவு பெரிய தியாகம் செய்திருக்கிறேன் என்று? நமது ஒப்பந்தப்படி நான் உனக்குத் துரோகம் செய்யவில்லை. சில சமயங்களில் எனது ஆசையை அடக்க முடியாமல் வேறு பெண்ணிடம் போவேன்.

“ஆடைகளைக் களைந்து அவள் மேல் படுக்கப் போகும் முன் நமது ஒப்பந்தம் நினைவுக்கு வரும். சே, இது தப்பு என்று விலகி வந்துவிடுவேன். நீ எப்படி? நீயும் என்னைப் போல் நமது ஒப்பந்தப்படி நடந்து கொண்டாயா?”

மனைவி சிந்தனையுடன் சொன்னாள்.

“உங்களுக்கென்ன மேலே இருந்து எளிதாகக் கீழே இறங்கி விடுவீர்கள். அடியில் படுத்துக் கொண்டிருப்பவர்கள் பாதியில் எழுந்திருப்பது நடக்காத காரியம்.”

இத்தாலியர்கள் இல்லாத உலகம் உலகமாக இருக்காது. அவர்கள் இந்த மண்ணோடு இயைந்து வாழ்பவர்கள். அப்படி வாழ்பவர்களைக் கண்டால் எனக்கு மிகவும் பிடிக்கும். அவர்களுடைய வேர்கள் இந்த பூமியில் ஆழமாகப் பதிந்திருக்கின்றன. இந்தியர்களைப் போல் வானத்தைப் பார்த்தபடி தத்துவ சிந்தனையில் ஆழ்ந்திருக்க மாட்டார்கள். அது தான் இத்தாலியர்களின் அழகு.

வானத்தைப் பார்த்து வாழ்பவர்களையும், மண்ணோடு இயைந்து வாழ்பவர்களையும் ஐக்கியப்படுத்துவதே என் பணி. எனது சந்நியாசிகள் இத்தாலியர்களைப் போல் மண்ணுலக மக்க ளாகவும் இருக்க வேண்டும். இந்தியர்களைப் போல் வானத்தைப் பார்ப்பவர்களாகவும் இருக்க வேண்டும். உங்கள் வேர்கள் மண்ணில் ஆழமாகப் போனால்தான் உங்கள் கிளைகள் வானத்தை நோக்கி நட்சத்திரங்களைத் தொடும் அளவிற்கு உயரமாக வளரும். அதன் பின் நீங்கள் நட்சத்திரங்களுடன் ரகசியம் பேசலாம்.

இதுவரை வானத்து மக்களுக்கும், மண்ணுலக மக்களுக்கும் இடையே ஒரு பாகுபாடு இருந்து வந்திருக்கிறது. மதவாதிகள் மண்ணுலக மக்களை புலனின்பப் பிரியர்கள் என்று உதாசீனப் படுத்தினார்கள். மண்ணுலக மக்கள் மதவாதிகளை கவைக்கு உதவாதவர்கள் என்று ஓரம் கட்டினார்கள். இருவர் கூற்றிலும் உண்மை இருக்கிறது. ஆனால் பாதி உண்மைதான் இருக்கிறது. முழுப் பொய்யை விட பாதி உண்மை ஆபத்தானது. ஏனென்றால் பாதி உண்மை பார்ப்பதற்கு முழு உண்மையைப் போலவே காட்சியளிக்கும்.

நிஜ மனிதனிடம் சில முரண்பாடுகள் இருக்கத்தான் செய்யும் என்பதுதான் முழு உண்மை. முரண்பாடுகளைத் தாங்கும் அளவிற்கு அவன் மனம் விசாலமானதாக இருக்கும் என்பதுதான் உண்மை. அவன் ஆணாகவும் இருப்பான். பெண்ணாகவும் இருப்பான். அவன் உலக விஷயத்தில் நாட்டம் உடையவனாகவும் இருப்பான். ஆன்மிகத்தில் ஆர்வம் உடையவனாகவும் இருப்பான். லோகாயதமாகவும் செயல்படுவான், ஆன்மிகவாதியாகவும் பரிமளிப்பான்.

அப்படி மனிதனை நாம் ஒன்று சேர்க்கவில்லை என்றால் மன நல மருத்துவர்கள் கூறும் மனச்சிதைவு நோய்க்கு இன்றைய மனிதன் பலியாகிவிடுவான்.

என் சந்நியாசிகள் இந்த உலகத்திலும் நாட்டம் கொள்ள வேண்டும். மறு உலகத்திலும் ஆர்வம் காட்ட வேண்டும். அவர்கள் புலனின்பத்தையும் துய்க்க வேண்டும். ஆன்மிகத்திலும் திளைக்க வேண்டும். அது மிகவும் கடினமான காரியம். இது, அது என்ற பாகுபாடுகளை அவர்கள் களைந்தெறிய வேண்டும்.

இரண்டிற்கும் நடுவே அவர்கள் ஒரு பாலம் அமைக்க வேண்டும். அந்த பாலம் அமைந்துவிட்டால் மனித வரலாற்றிலேயே

முதன் முறையாக மனிதன் முழுமை பெற்று விடுவான். முழுமை பெற்ற மனிதன் புனிதமானவன் ஆகிவிடுவான்.

இன்றைய ஆன்மிக வாதியும் முழுமை பெற்றவன் இல்லை. உலக இன்பத்தில் ஆழ்ந்திருப்பவனும் முழுமை பெற்றவன் இல்லை. இருவருமே பாதி மனிதர்கள் தான். பாதியாக இருக்கும் எந்த மனிதனுக்கும் துன்பங்கள் உண்டு. பாதி மனிதனால் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. வாழ்க்கையைக் கொண்டாட முடியாது. வாழ்க்கை எவ்வளவு பெரிய வரப்ரசாதம் என்று அவனால் உணர முடியாது.

கீழே விழுந்து கிடக்கும் தூசி கூட புனிதமானது என்பதை நீங்கள் உணர வேண்டும். உங்கள் உடலே ஒரு கோயில் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். புத்தனாக மலர்ந்துவிட ஜோர்பாவாக நீங்கள் மாற வேண்டும்.

○

## 5. உங்களுக்குள் ஓர் உலகம்

வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:

தாவோ நிர்மலமான தெளிவாகவும் வெளிப்டுகிறது. தெளிவற்ற சேறாகவும் வெளிப்படுகிறது.

அது அசைவாகவும் தோன்றுகிறது, அசைவற்ற இருப்பாகவும் பரிமளிக்கிறது.

வானம் நிர்மலமாக இருக்கிறது. பூமி சேறும் சகதியாகத் தெளிவற்று இருக்கிறது.

வானம் அசைந்து கொண்டிருக்கிறது. பூமி அசையாமல் இருக்கிறது

ஆண்மை நிர்மலமாக இருக்கிறது, பெண்மை கலங்கலாக இருக்கிறது

ஆண்மை செயல்பாட்டுடன் இருக்கிறது. பெண்மை செயலற்ற நிலையாகப் பரிமளிக்கிறது.

அதனுடைய வேராக இருக்கும் சாரத்திலிருந்து வெளிப்படும் தாவோ, பிரபஞ்சத்தில் உள்ள கடைசிப் பொருள் வரை ஊடுருவிப் பாய்கிறது. அதுதான் வானத்தையும், பூமியையும், இரண்டுக்கும் இடைப்பட்ட எல்லா பொருள்களையும் அளித்துக் காக்கிறது.

நிர்மலமான தெளிவே தெளிவற்ற கலங்கலை உருவாக்குகிறது. அசைவுதான் அசைவற்ற இருப்புநிலையை உருவாக்குகிறது.

தாவோ ஒரு சாதாரண மதம் அல்ல. அது ஆணித்தரமான, உண்மையான நம்பகமான மதம். உண்மையான மதத்திற்கு ஆணிவேர் முழுமையான விஞ்ஞானம். மதமும் விஞ்ஞானமும் வெவ்வேறு திசைகளை நோக்கிப் பயணித்தாலும், அவற்றின் அணுகுமுறை ஒன்றே. மதம் விஞ்ஞானபூர்வமாக இருக்கலாம்.

அதே சமயத்தில் விஞ்ஞானமாக மாறிவிடாமலும் இருக்க லாம். அதே போல் விஞ்ஞானம் சமய உணர்வுள்ளதாக இருக்க லாம். அதே சமயத்தில் ஒரு மதமாக மாறிவிடாமலும் இருக்கலாம்.

தாவோ விஞ்ஞானபூர்வமாக இருக்கிறது. ஆனால் விஞ்ஞானமாக அது மாறிவிடவில்லை.

விஞ்ஞானத்தின் சாரம் என்ன? நமக்கு வெளியே இருக்கும் உலகை, புற உலகை எந்தவித முற்சாய்வும், பாரபட்சமும் இல்லாமல் அறிந்து கொள்வது. மெய்ஞ்ஞானத்தின் சாரமும் இதுதான். ஆனால் அது அறிய முற்படும் உலகம் உள் உலகம். நமக்குள்ளே இருக்கும் உலகம். அவ்வளவுதான் வித்தியாசம்.

அகவுலகை அறிய முற்படும் போது மனதில் ஏற்கனவே செய்த தீர்வுகள், பழைய எண்ணங்கள், முற்சாய்வு, பாரபட்சம் எதுவும் இல்லாமல் அறிய வேண்டும். ஒரு விஞ்ஞானி இந்துவாகவோ, கிறிஸ்தவனாகவோ, முகமதியனாகவோ இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அவனால் விஞ்ஞானபூர்வமாக ஆராய்ச்சியில் ஈடுபட முடியாது. தனது சோதனைக் கூடத்தில் நுழையும் முன் அவனது மதத்தை வெளியில் வைத்துவிட்டுத்தான் நுழைய வேண்டும்.

கலிலியோ ஒரு மதநம்பிக்கையுள்ள கிறிஸ்தவராக இருந்தார் என்று வைத்துக் கொள்வோம். கிறிஸ்தவ மத நம்பிக்கையில் மூழ்கியிருந்தார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அவரால், 'சூரியன் பூமியைச் சுற்றி வரவில்லை. பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது.' என்ற மகத்தான உண்மையைக் கண்டுபிடித்திருக்க முடியாது.

கோபர்னிக்கஸ் கிறிஸ்தவராக இருந்திருந்தால் அவரது விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் பைபிளைத் தாண்டி வெளியில் போயிருக்காது. பைபிள் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வந்த புத்தகம். அந்தக் காலத்தில் இருந்த விஞ்ஞான உண்மை களைத்தான் அதனால் சொல்ல முடியும். பைபிள் எப்படி நவீன

விஞ்ஞான ஆராய்ச்சிகளைப் பற்றிப் பேச முடியும்? அதற்கு வாய்ப்பேயில்லை.

உலகத்தின் பல மதங்களின் புனித நூல்கள் தேவையில்லாத தகவல்களை தாங்கி நிற்கின்றன. அந்த தகவல்கள் மத நூல்களில் இடம் பெறவே கூடாது. அந்த தகவல்கள் சமயம் பற்றிய தகவல்கள் அல்ல. அவை அந்தக் கால புற உலகத்தைப் பற்றியவை.

அந்தக் காலத்தில் விஞ்ஞானம் என்று தனியாக ஒன்றும் கிடையாது. அதனால் எல்லாத் தகவல்களையும் மதநூல்களில் எழுதி வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். பல ஆயிரம் வருடங் களாக இந்த மத நூல்கள் கலைக்களஞ்சியங்களாக இருந்தன. மனிதனுக்கு தெரிந்த எல்லா விஷயங்களையும் மதநூல்களில் எழுதிவைத்துவிட்டுப் போய்விட்டார்கள்.

இந்துக்களின் வேதங்களை சம்ஹிதை என்று சொல்வார்கள். சம்ஹிதை என்றால் தொகுப்பு என்று பொருள். அவை தொகுப்பாக மட்டுமே இருந்திருக்கின்றன. என்சைக்ளோபீடியா பிரிட்டானிக்கா (Encyclopedia Brittanica) போன்று அவையும் கலைக் களஞ்சியங்களாகத்தான் இருந்து வந்தன.

வேதங்களில் எல்லாமே இருக்கிறது. அந்தக் கால இலக்கியம், விஞ்ஞானம், வானவியல், பூகோளம், சரித்திரம், கலை என்று எல்லாமே வேதத்தில் இருக்கின்றன. மனித இனம் முன்னேற்றம் அடைய அடைய ஒவ்வொரு துறையும் தனியாகப் பிரிந்து வளரத் தொடங்கியது.

விஞ்ஞானம் என்பது புற உலகில் உண்மையைத் தேடுவது. மெய்ஞ்ஞானம் என்பது அகவுலகில் உண்மையைத் தேடுவது. வெளியே இருக்கும் உலகைப் போல் உங்களுக்கு உள்ளேயும் ஓர் உலகம் இருக்கிறது. உங்களைப் பொறுத்த மட்டில் உங்களுக்குள் இருக்கும் உலகம் வெளியில் இருக்கும் உலகத்தைவிட மிகவும் முக்கியமானது. ஏனென்றால் அது உங்களுக்கே உங்களுக்கு மட்டும் சொந்தமான உலகம். உங்களுக்குள்ளேயே இருக்கும் உலகம்.

புறவுலக உண்மைகளைக் கண்டறியும் விஞ்ஞானம் அசுர வேகத்தில் வளர்ந்துவிட்டது. ஆனால் உள்ளிருக்கும் உலகத்தை அறியும் விஞ்ஞானம் இன்னும் பின் தங்கிய நிலையிலேயே இருக்கிறது. இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய நம்பிக்கை களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறோம்.

வெளியுலகத்தைப் பொறுத்த மட்டிலும் நாம் ஓரளவு பக்குவம் அடைந்துவிட்டோம். விஞ்ஞானத்துக்குப் புறம்பான எந்த நம்பிக்கையையும் தூக்கியெறியத் தயாராக இருக்கிறோம்.

சில சமயங்களில் விஞ்ஞானத்தின் புதியகண்டுபிடிப்புகள் ஆயிரம் ஆண்டுகளாக நாம் வைத்திருந்த நம்பிக்கையைத் தவிடு பொடியாக்கிவிடுகின்றன. அப்போது நமது பழைய நம்பிக்கைகளைக் கடாசிவிட்டு புதிய கண்டுபிடிப்பை ஏற்றுக் கொள்கிறோம்.

ஆனால் நமது அகவுலகில் இந்த அளவு பக்குவத்துடன் நாம் செயல்படுவதில்லை. என்னதான் புதிதாகக் கண்டுபிடிக்கப் பட்டாலும் பழைய நம்பிக்கைகளைப் பிடிவாதமாகப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறோம்.

தாவோ அக உலகத்தை விஞ்ஞானபூர்வமாக அணுகும் ஓர் உண்மையான மதம். தாவோவை அகவுலக விஞ்ஞானம் அல்லது இருப்புநிலை விஞ்ஞானம் என்று சொல்லலாம். கோ ஹ்சுவானின் சூத்திரங்களை நாம் தியானிக்கும் போது இந்தக கருத்தை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இன்னொரு முக்கியமான விஷயத்தையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். பிரபஞ்ச இருப்பு நிலை என்பது நேர்-எதிர் துருவங்களைத் தன்னுள்ளே கொண்டது என்பது தான் தாவோவின் அடிப்படைச் சூத்திரம்.

வேறு எந்த மதமும் இந்த உண்மையை இவ்வளவு தெளிவாக உரைக்கவில்லை. பிரபஞ்ச இருப்புநிலை நேர்-எதிர் துருவங்களைத் தன்னுள்ளே கொண்டது என்று சொல்லும் போது அது காரண-காரிய அறிவின் பாற்பட்டதல்ல என்பது நமக்குப் புரிகிறது. அது விவாத ஆராய்ச்சி வகையைச் சேர்ந்தது. அது அரிஸ்டாட்டிலின் தத்துவ வகையைச் சார்ந்ததல்ல. ஹெகலின் தத்துவ வகையைச் சார்ந்தது.

தர்க்கமும் (logic)விவாத ஆராய்ச்சியும்(dialectics) ஒன்றுக்கு ஒன்று எதிரானது. தர்ககம் எளிதானது நேரானது. நேர்கோட்டில் காரண-காரியங்களைக் காட்டி விளக்குவது. விவாத ஆராய்ச்சி கொஞ்சம் சிக்கலானது. உதாரணமாக இரண்டு புள்ளிகளுக்கு இடையே மிகக் குறைந்த தூரம் ஒரு நேர்கோடுதான் என்ற தேற்றத்தை எடுத்துக் கொள்வோம். இதை தர்க்கம் எளிதாக விளக்கிவிட முடியும்.

ஆனால் அந்தக் காலத்தில் பட்டி மன்றம் நடத்துவார்களே ஞாபகம் இருக்கிறதா உங்களுக்கு? சிவன் மன்மதனை எரித்தாரா இல்லையா என்று ஓர் இரவு முழுவதும் விவாதம் நடக்கும். எரிஞ்ச கட்சி, எரியாத கட்சி என்று பிரித்துக் கொண்டு விவாதம் செய் வார்கள். அது விவாத ஆராய்ச்சி வகையைச் சேர்ந்தது. எதிர்க் கட்சி என்று ஒன்று இருந்தால்தான் விவாதம் செய்ய முடியும்.

எதிர்ப்பு இல்லை என்றால் விவாதம் இல்லை. நேர்மறை எதிர்மறை என்ற இரு துருவங்கள் இல்லாமல் மின்சாரம் இருக்க முடியாது. மின்சாரம் தர்க்க வகையைச் சேர்ந்தது இல்லை. அது விவாத ஆராய்ச்சி வகையைச் சேர்ந்தது. ஆண் சக்தி, பெண் சக்தி என்ற இரண்டு இல்லாமல் மனித இனமே இருக்க முடியாது.

ஆண்கள் மட்டுமே உள்ள ஓர் உலகத்தைக் கற்பனை செய்து பாருங்கள். கொடுமையாக இருக்கும். பெண்கள் மட்டுமே உள்ள உலகமும் அப்படித்தான் இருக்கும். அப்படிப்பட்ட உலகங்கள் நீண்ட நாட்கள் இருக்க முடியாது. அந்த மாதிரி உலகத்தில் சக்தியே இருக்காது. இரு துருவங்களான ஆண்மையும், பெண்மையும் உராயும் போதுதான் சக்தி பிறக்கிறது.

ஹெகல் தத்துவத்தின் சாராம்சம் இதுதான். ஒவ்வொரு கோட்பாட்டுக்கும் ஓர் எதிர் கோட்பாடு வேண்டும். கோட்பாட்டுக்கு எதிர் கோட்பாடு இல்லாவிட்டால் அங்கே ஆற்றல் இருக்காது. வெறும் தேக்கம் தான் இருக்கும்.

பொருளை உணரும் அந்த உணர்வுநிலை இருந்தால் தான் உணரப்படும் பருப்பொருள் இருக்கும். பருப்பொருளை வைத்துத்தான் அதை உணரும் உணர்வு நிலை செயல்படும். வானம்-பூமி, இறைவன்-இருப்புநிலை, பகல்-இரவு, வேனிற்காலம்-குளிர்காலம், பிறப்பு-இறப்பு இவை எல்லாமே எதிரெதிர் துருவங்கள். நமது பார்வைக்கு எதிர்ப்பவைப் போல் தோன்றினாலும், ஆழமாகப் பார்த்தால் இவை எல்லாம் ஒன்றை ஒன்று சார்ந் திருப்பது தெளிவாகும்.

இதை 200 வருடங்களுக்கு முன் ஹெகல் கண்டுணர்ந்து சொன்னார். ஆனால் தாவோவைப் பற்றிச் சொல்லியவர்கள் இதே தத்துவத்தை 5000 ஆண்டுகளுக்கு முன்பே சொல்லிவிட்டார்கள். அவர்கள்தான் விவாத ஆராய்ச்சிக்கு முன்னோடிகள். உலகத்தின் முதல் விவாத ஆராய்ச்சியாளர்கள் அவர்கள்தான். பிரபஞ்ச

இருப்பு நிலையைப் பற்றிய முக்கியமான உள்பார்வையை அவர்கள்தான் உலகிற்கு வழங்கினார்கள்.

வாழ்க்கை அதன் எதிர் துருவம் இல்லாமல் தனியாக ஒரு நொடி கூட இருக்க முடியாது. எதிர் துருவத்தைச் சார்ந்தே இருக்கிறது. அசப்பில் பார்க்க நேர் எதிர் துருவங்கள் ஒன்றை ஒன்று எதிர்ப்பது போல் தோன்றினாலும், உள்ளபடியே அவை ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கின்றன. ஒரு பெண் இல்லாவிட்டால், ஓர் ஆண் ஆணாக இருக்க முடியாது. அதே போல் ஆண் இல்லாவிட்டால் ஒரு பெண் பெண்ணாக இருக்க முடியாது. அவர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்தே இருக்கிறார்கள்.

அதனால் தான் சுயபால் விழைவு உள்ளவர்களிடம் (homosexuals and lesbians) ஏதோ ஒன்று குறைகிறது. அவர்கள் உறவு முறையில் முழுமை இல்லை. சுயபால் விழைவின் அடிப்படையில் அமையும் உறவு தர்க்க ரீதியானது. அதனாலேயே அது இன்னும் எளிதாக இருக்கிறது. சமூக அங்கீகாரம் கிடைக் காதே தவிர, ஓரின உறவுகளில் பெரிய சிக்கல் எதுவும் இருக்க வாய்ப்பில்லை. அத்தகைய உறவுகளிலே முரண்பாடுகள் இல்லை.

ஆங்கிலத்தில் ஓரினச் சேர்க்கையாளர்களை gay என்று அழைப்பார்கள். Gay என்றால் மகிழ்ச்சியாக இருப்பவர்கள் என்று அர்த்தம். அவர்கள் உள்ளபடியே மகிழ்ச்சியாகத்தான் இருக் கிறார்கள். ஏனென்றால் ஆணும் ஆணும் சேர்ந்திருக்கும் உறவில் முரண்பாடுகளேயில்லை.

ஓர் ஆண் மற்றோர் ஆணைப் புரிந்து கொள்வதில் பெரிய சிக்கல் எதுவும் இருக்க முடியாது. ஆனால் ஓர் ஆணால் ஒரு பெண்ணைப் புரிந்து கொள்ளவே முடியாது. அதே போல் ஒரு பெண் மற்றொரு பெண்ணை எளிதாகப் புரிந்து கொள்வாள். அவள் ஆணைப் புரிந்து கொள்ள முயலும் போதுதான் சிக்கலே ஏற்படுகிறது. ஏனென்றால் ஆணின் வாழ்க்கை, மனப்போக்கு, அணுகுமுறை எல்லாமே மாறுபட்டது.

ஆணும் பெண்ணும் அடிப்படையில் வேறானவர்கள். அவர்கள் வேறு வேறு மையங்களில் இருந்து செயல்படுகிறார்கள். ஓர் ஆணுக்கு ஒரு பெண் செய்வது எல்லாம் அபத்தம் என்று தோன்றுகிறது. அதே போல் ஆண்கள் முட்டாள்கள் என்பது பெண்களின் எண்ணம்.

ஆண் தனது அறிவு மூலமாகச் செயல்படுகிறான். பெண் தனது உள்ளுணர்வு மூலமாகச் செயல்படுகிறாள். ஆண் காரண-காரியங்களை ஆராய்ந்து முடிவெடுக்கிறான். பெண் நேராக முடிவெடுக்கிறாள். அவள் காரண-காரியங்களைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. அவளால் எப்படி அவ்வளவு வேகமாக காரண-காரிய விளக்கங்கள் இல்லாமல் முடிவெடுக்க முடிகிறது என்று ஓர் ஆண் சதா ஆச்சரியப்பட்டுக் கொண்டேயிருக்கிறான். அவள் எப்படி முடிவெடுத்தாள் என்று ஆணால் சத்தியமாகப் புரிந்து கொள்ள முடியாது.

ஆண் ஒரு பெண்ணுடன் வாழ்நாள் முழுவதும் சேர்ந்து வாழ்ந்த போதிலும், அந்தப் பெண் அவனுக்கு இன்னும் ஒரு புதிராகத்தான் தோன்றுகிறாள். அதே போல் ஆண் பெண்ணுக்குப் புதிராகத் தோன்றுகிறான்.

ஒரு பெண்ணுக்கு எளிதாகப் புரியும் பல விஷயங்கள் ஆணுக்கு லேசில் புரிவதில்லை. புகைப் பிடித்தால் புற்று நோய் வரும் என்ற உண்மையை ஏன் ஆணால் புரிந்து கொள்ளமுடியவில்லை என்று பெண் இன்னும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறாள்.

முல்லா நசுருதீன் ஒரு நாள் விஸ்கி அருந்திக் கொண்டிருந்தார். அவரது மனைவி அவரைக் கடிந்து கொண்டாள்.

“இந்த குடிப்பழக்கத்தை விட்டொழியுங்கள் என்று நானும் இதுவரை லட்சம் முறை சொல்லிவிட்டேன். கேட்டால்தானே! இது மெல்லக் கொஞ்சும் நஞ்சு. ஏன் இப்படி கொஞ்சம் கொஞ்சமாகத் தற்கொலை செயது கொள்கிறீர்கள்?”

“இப்படி மிகைப்படுத்திப் பேசும் பழக்கத்தை இன்றோடு விட்டுவிடு. நீ நிச்சயம் லட்சம் முறை சொல்லியிருக்க முடியாது. ஆயிரம் முறை சொல்லியிருந்தால் அதிகம். மேலும், எனக்கு உடனே சாக வேண்டிய அவசியம் இல்லை. அதனால் இந்த மெல்லக் கொல்லும் நஞ்சினைத் தேர்ந்தெடுத்தேன். இதில் என்ன தவறு இருக்கிறது?”

ஆணும் பெண்ணும் தொட்டதெற்கெல்லாம் விவாதம் செய்து கொண்டு இருக்கிறார்கள். எந்த விஷயத்திலும் அவர்கள் ஒத்துப் போவதில்லை. அவர்களால் ஒத்துப் போக முடியாது. அது நடக் காத காரியம். அதனால் தான் ஆண்-பெண் உறவில் எப்போதுமே ஓர் இறுக்கம் இருக்கிறது.

ஓரினச் சேர்க்கையாளர்களுக்கு இந்த பிரச்சினை இல்லை. அதனால்தான் அவர்கள் எப்போதும மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்.

இரண்டு ஓரினச் சேர்க்கையாளர்கள் காலையில் கையோடு கை கோத்து நடைப்பயிற்சி செய்வதைப் பார்த்திருக்கிறீர்களா? அவர்களுடைய மகிழ்ச்சி அப்பட்டமாகத் தெரியும். கணவன்-மனைவியிடத்தில் அந்த மகிழ்ச்சி இருக்காது.

ஓரினச் சேர்க்கை என்பது சிக்கலில்லாத எளிதான உறவு. அது எளிதாக இருப்பதால், அதில் இறுக்கம் இல்லை என்பதால், அதில் முரண்பாடுகளுக்கு இடம் இல்லை என்பதால் அதிலே ஆன்மிக வளர்ச்சிக்கும் வழியில்லை. அதில் வலியும் கிடையாது, வளர்ச்சியும் கிடையாது. உறவு கொள்ளும் இருவரையும் வளர்ச்சி யில்லாமல் தேக்கிவைத்துவிடும் தன்மையுடையது அது. அதிலே ஆச்சரியங்களுக்கு இடமேயில்லை.

ஓர் ஆண் ஒரு பெண்ணை முழுமையாகக் கண்டுபிடித்துப் புரிந்து கொள்வதில் தான் வாழ்க்கையின் சுவையே இருக்கிறது. அதே போல் ஒரு பெண் ஓர் ஆணைப் புரிந்து கொள்வதில்தான் சுவாரசியமே இருக்கிறது.

நீங்கள் ஆணாக இருந்தால், ஒரு பெண்ணைப் புரிந்து கொள்ள ஒரு வாழ்நாள் போதாது உங்களுக்கு. அதே போல் ஒரு பெண்ணால் ஒரு வாழ்க்கையில் ஆணைப் புரிந்து கொள்ள முடியாது. நேர் எதிர் துருவங்களில் நீங்கள் இருந்தால் ஒருவரை ஒருவர் வாழ்நாள் முழுவதும் ஆராய்ந்து கொண்டேயிருப்பீர்கள். எப்போதும் உங்களால் ஒரு தீர்வுக்கு வரமுடியாது.

பிரபஞ்ச இருப்புநிலை காரண-காரிய விளக்கத்துக்கு அப்பாற்பட்டது. அது அப்படி இருப்பதுதான் நல்லது. இல்லை என்றால் வெறும் சாவு மட்டும் தான் இருந்திருக்கும். உயிரோ, உயிர்ப்போ இருந்திருக்காது.

கடவுள் அரிஸ்டாட்டிலைப் போல் தர்க்கவாதியாக இருந்திருந்தால் இந்த உலகில் உயிரோ, உயிர்ப்போ இருந்திருக்காது. உலகம் முழுவதும் அமைதி இருந்திருக்கலாம். ஆனால் அதை அறிந்து கொண்டு அனுபவிக்க யாரும் இருந்திருக்க மாட்டார்கள். அந்த வகையில் கடவுள் ஹெகலின் வழிமுறைப் படி விவாத ஆராய்ச்சியாகத் துருவங்களைப் படைத்தது நாம் செய்த பாக்கியம்.

தாவோ யின் சக்தியைப் பற்றியும், யாங் சக்தியைப் பற்றியும் (yin and yang) விளக்குகிறது. பிரபஞ்ச இருப்புநிலையைப் புரிந்து கொள்ள இதுதான் அடிப்படை அணுகுமுறை. இதனுள்ளே நீங்கள் இன்னும் ஆழமாகப் போக வேண்டும்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே உள்ள கவர்ச்சியின் அடிப்படை என்ன? ஒருவருக்கு ஒருவர் புதிராக விளங்குவதுதான். அதுதான் அவர்களிடையே மோதல்களையும், முரண்பாடுகளை யும் உருவாக்குகிறது. அதுதான் அவர்களிடையே கவர்ச்சியையும் உண்டாக்குகிறது. அவர்கள் விலகி இருக்க இருக்க அந்த கவர்ச்சி இன்னும் அதிகமாகிறது.

இந்த நவீன யுகத்தில், இந்த காலத்திய சமூகங்களில் இந்த ஆண்-பெண் கவர்ச்சி குறைந்து கொண்டே வருகிறது. ஏனென்றால் இப்போது ஆணும் பெண்ணும் பொதுவாகவே நெருங்கிப் பழக ஆரம்பித்துவிட்டார்கள்.

அதனால் ஒரே மாதிரியாகத் தோன்ற ஆரம்பித்துவிட்டார்கள். ஒரே மாதிரியாக ஆடை உடுத்துகிறார்கள். ஒரே மாதிரியாகப் புகைபிடிக்கிறார்கள். ஒரே மாதிரியாக மது அருந்துகிறார்கள். ஒரே மாதிரி நடந்து கொள்கிறார்கள். ஒரே மாதிரியான மொழியில் பேசத் தொடங்கிவிட்டார்கள். பெண் விடுதலை இயக்கம்தான் இந்த 'ஒரே மாதிரி'களுக்கு எல்லாம் மூல காரணம்.

'நீ ஆண்களைப் போலவே நடந்து கொள்ள வேண்டும்.' என்று பெண் விடுதலை இயக்கம் பெண்களுக்குச் சொல்லிக் கொடுக் கிறது. ஆண்களைப் போல் முரட்டுத்தனமாக, மென்மையில்லாமல், நடந்து கொள்வது தான் பெண் விடுதலை என்று பெண்ணிய வாதிகள் கத்திக் கொண்டிருக்கிறார்கள்.

பெண்கள் முரட்டுத்தனமாக இருக்கலாம். ஆனால் அப்படி யிருக்கும் போது முக்கியமான ஒன்றை அவர்கள் இழந்து விடுவார்கள். ஆமாம், அவர்கள் தங்கள் பெண்மையை இழந்து விடுவார்கள். அவர்களும் ஆண்களைப் போலாகிவிட்டால் பெண்ணிடத்தில் 'புதிர்' எதுவும் இருக்காது. இந்த கொடுமைதான் இப்போது உலகத்தில் நடந்து கொண்டிருக்கிறது. இதுவரை இப்படி எதுவும் நடந்ததில்லை.

பழங்கால சமுதாயங்களின் மூதறிஞர்கள் ஆணும் பெண்ணும் வேறு வேறாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார்கள்.

அவர்களிடத்தில் எவ்வளவு வேறுபாட்டைக் காண்பிக்கமுடியுமோ அந்த அளவுக்கு மனித இனத்துக்கு நன்மை என்ற அபூர்வ உண்மையைக் கண்டுகொண்டார்கள்.

இயற்கை ஆணையும், பெண்ணையும் வெவ்வேறாகத்தான் படைத்திருக்கிறது. நாகரிகமும் ஓரளவிற்கு இந்த வேறுபாட்டைப் பாதுகாக்க வேண்டும்.

ஆணும் பெண்ணும் சமமாக இருக்கக்கூடாது என்று நான் சொல்லவில்லை. உரிமையில், கடமையில், சமூக அந்தஸ்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இம்மியளவு வேறுபாடு கூட இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அது சமூக அநீதியாகிவிடும். அதே சமயம் இருபாலாரும் வேறுபாடில்லாமல் ஒரே மாதிரியாகவும் இருக்கக் கூடாது.

சமமாக இருப்பதும், ஒன்று போல் இருப்பதும் வேறு வேறு என்பதை முதலில் நாம் புரிந்து கொள்ளவேண்டும். சமத்துவம் வேறு, ஒற்றுமை வேறு.

பெண்கள் ஒன்றை மட்டும் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். பெண்கள் ஆண்களைப் போல் இருக்க ஆரம்பித்தால் அவர்களுக்கு சமத்துவம் கிடைக்காது.

பெண் விடுதலை இயக்கம் உண்மையிலேயே பெண்களுக்குத் தான் அதிகமான கெடுதல் செய்திருக்கிறது. பெண்கள் ஆண்களின் நகல்களானால் அவர்கள் வாழ்க்கை இரண்டாம் தரமாகிவிடும். ஆண்களின் நகல்களாக இருக்கும் பெண்களுக்கு என்றுமே ஆண் களுக்குச் சமமான சமுதாய அந்தஸ்து கிடைக்காது. அவர்களால் உண்மையாகவே ஆண்களாக மாறமுடியாது. ஏனென்றால் ஆண்கள் அளவிற்கு முரட்டுத்தனம் அவர்களுக்கு இயல்பாகவே கிடையாது.

பெண்கள் முரட்டுத்தனமாக இருப்பது போல் பாசாங்கு செய்யலாம். ஆனால் அது வெறும் பாசாங்காக மட்டுமே இருக்கும். வெளியே முரட்டுத்தனமாக இருப்பது போல் அவர்கள் நடிப்பார்கள். உள்ளே அந்த பெண்மையின் மென்மை அப்படியே இருக்கும். அப்படி வெளியே முரட்டுத்தனமும், உள்ளே மென்மையும் இருந்தால் அது அவர்களுக்குள் ஒரு பிரிவினையைத் தோற்று விக்கும். அந்த பிரிவினை தீவிரமாகும் போது மனச்சிதைவையே உண்டாக்கிவிடும். அவர்கள் இருவேறு நபர்களாக வாழ்வார்கள். பெண்மையின் புதிர் மறைந்து போய்விடும்.

அவர்கள் ஆண்களோடு ஆண்களாக தர்க்கம் பேசிக் கொண்டிருப்பார்கள். ஆண்களைப் போலவே அவர்களும் மாறிவிடுவார்கள். அதன் பின் பெண்மையின் அழகு போய்விடும். அவர்கள் அசிங்கமாகிவிடுவார்கள். இயல்பாக இருப்பது தான் அழகு. இயற்கைக்கு விரோதமாக இருப்பது அசிங்கம்.

பெண்கள் ஆண்களுக்குச் சரிசமமாக இருக்க வேண்டும் என்பது தான் என் விருப்பம். ஆனால் பெண்கள் ஆண்களைப் போல் இருப்பதை நான் விரும்பவில்லை. பெண்கள் அழகாக இருக்க வேண்டுமென்றால் அவர்கள் ஆண்களைப் போல் இருக்கவே கூடாது.

எவ்வளவுக்கெவ்வளவு ஆண்-பெண்ணிடையே வித்தியாசம் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. பெண்கள் தங்களுடைய தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அவர்களிடம் உள்ள பெண்மை அதிகமாக அதிகமாக கவர்ச்சி அதிகமாகும். அவர்களைப் புரிந்து கொள்வது இன்னும் கடினமாக இருக்கும். அவர்கள் இன்னும் பெரிய புதிராகத் தோன்றுவார்கள். அது தான் பிரபஞ்ச இருப்பு நிலையின் நியதி. தாவோ காட்டும் வழி.

உலகத்தில் இருக்கும் பல்லாயிரம் மனத்தத்துவ நிபுணர்களில் கார்ல் கஸ்டாவ் யூங் (Carl Gustav Jung)மட்டும்தான் தாவோவைக் கொஞ்சமாவது புரிந்து கொண்டவர். மேலை நாட்டு அறிஞர்களில் தாவோவை ஆழமாகப் படித்தது அவர் மட்டும்தான்.

தாவோவை அவர் மனத்தத்துவத்தில் புகுத்தினார். தாவோவை சமகாலத்துக்குக் கொண்டு வந்தார். உங்களுக்கு தாவோவைப் பற்றிப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் நீங்கள் யூங்கைப் புரிந்து கொள்ள வேண்டும். அவர் தாவோவைப் பற்றிச் சொல்லும் கருத்துகளை ஊன்றிப் படிக்க வேண்டும். இந்த விஷயத்தில் அவர் சரியான பாதையில் போய்க் கொண்டிருந்தார். ஆனால் அவரது மரணத்துக்குப் பின் அவர் செய்து வந்த பணி அப்படியே நின்று போனது.

தாவோவைப் புரிந்து கொள்வது என்பது மிக நீண்ட பயணம். அந்தப் பயணத்தில் அவர் சில அடிகளைத்தான் எடுத்து வைத்திருந்தார். ஆனால் சரியான திசையில் சரியான முறையில் தனது பயணத்தைத் தொடங்கியிருந்தார். ஆனால் பாவம் அதற்குள்

மரணம் வந்து அந்த பயணத்தைத் நிறுத்திவிட்டது. தாவோ பெரிய கடல். அதில் சில துளிகளைத்தான் யூங் பருகியிருந்தார். அத்ற்குள் காலன் அவரை அழைத்துக் கொண்டு போய்விட்டான்.

யாராவது அவர் பணியைத் தொடர வேண்டும். இந்தப் பணியில் பல அறிஞர்கள் ஈடுபட வேண்டும். தாவோவின் உள்பார் வையை நவீன யுகத்துக்குத் தரவேண்டும். தாவோ பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் புழக்கத்தில் இருந்த மொழியில் எழுதப்பட்டது.

அதை இன்றைய மொழியில் சரியாகத் தர முயற்சிகள் எடுக்க வேண்டும். சில சமயங்களில் தாவோவைப் புரிந்து கொள்ள மொழியே தடையாக இருக்கிறது. இந்த நிலையை மாற்ற வேண்டும்.

உதாரணமாக இந்த மாதிரி சூத்திரங்களை நாம் படிக்கும் போது இங்கே இருக்கும் பெண்கள் முகம் சுளிப்பார்கள். பெண்களை மட்டமாகச் சொல்கிறார்களே என்று உள்ளூர எரிச்சல் படுவார்கள். ஆனால் கோ ஹ்சுவான் பெண்களை அவமானப் படுத்தவில்லை. அவர் அன்று புழங்கிய மொழியில் இருந்த ஒரு வார்த்தைப் பிரயோகத்தைக் கையாள்கிறார். அன்று அந்த ஒரு வழிதான் இருந்தது.

இங்கே அவர் ஆண்மையையும், பெண்மையையும் மதிப்பீடு செய்யவில்லை. ஆண்மை உயர்ந்தது என்றோ, பெண்மை தாழ்ந்தது என்றோ அவர் சொல்லவில்லை. இந்த விஷயத்தை நாம் எப்போதும் நினைவில் வைத்திருக்க வேண்டும். இதை மறந்துவிட்டால் உங்கள் மனம் இந்த உன்னதமான சூத்திரங்களை ஏற்றுக் கொள்ள மறுத்துவிடும்.

குறிப்பாகப் பெண்கள் இந்த சூத்திரங்களை வெறுக்கத் தொடங்கிவிடுவார்கள். அதன்பின் அவர்களால் அவற்றைப புரிந்து கொள்ள முடியாது. அதுவும் பெண் விடுதலை இயக்கத்தில் தொடர்புடையவர்கள் இந்த சூத்திரங்களைக் கேட்டவுடன் தங்கள் மனங்களை மூடிக்கொண்டு விடுவார்கள்.

இந்த சூத்திரத்தின் அழகை அவர்களால் புரிந்து கொள்ள முடியாது. அவர்களுக்கு எல்லாம் ஒன்றை சொல்ல விரும்புகிறேன். இங்கே கோ ஹ்சுவான் ஆண்மை, பெண்மை என்று சொல்வது உடற்கூறு சம்பந்தப்பட்ட ஆண்மை, பெண்மை இல்லை. மனவியல் ரீதியான ஆண்மை, பெண்மையைத்தான் அவர் சொல்கிறார்.

ஓர் ஆண் முழுக்க முழுக்க ஆண்மையோடு இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அதே போல் ஒரு பெண் முழுக்க முழுக்க பெண்மையோடு இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரு பெண் சில சமயங்களில் ஆணைப் போல் செயல்படலாம் - நமது நாட்டின் ஜான்சி ராணியைப் போல. மேலைநாடுகளில் ஜோனைப் (Joan of Arc) போல. இந்தப் பெண்கள் சிறந்த வீரர்கள். இவர்களிடம் பெண்மையைவிட ஆண்மையே மிகுந்திருந்தது.

உடற்கூறு ரீதியாக இவர்கள் பெண்கள் தான். இவர்கள் உடலமைப்பில் எந்த குறைபாடும் இல்லை. ஆனால் மனத்தளவில் இவர்கள் ஆண்களாக, போர் வீரர்களாகத்தான் இருந்தார்கள். அவர்களை ஆண்களாகத்தான் கருத வேண்டும்.

அதே போல் பெண்மை மிகுந்த ஆண்கள் பலர் இருக்கிறார்கள். கவிஞர்கள், நடனமாடுபவர்கள், இசைக் கலைஞர்கள், ஓவியர்கள், பாடகர்கள் போன்றவர்களிடம் பொதுவாகப் பெண்மை மிகுந்திருக்கும். அவர்களின் இருப்புணர்வு மென்மையாக, பெண்மையாகவே இருக்கும். மனத்தளவில் அவர்கள் பெண்கள்தான்.

அவர்கள் பெண்களைத் திருமணம் செய்து கொள்ளலாம். குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளலாம். என்றாலும் இருப்புணர்வின் ஆழத்தில் அவர்கள் பெண்களாகத்தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு இருப்பது ஒரு பெண்ணின் மனம்தான். ஆண் பெண்ணாக இருப்பது, பெண் ஆணாக இருப்பது - நீங்கள் நினைப்பதை விட அதிகமாக இருக்கிறது.

அடுத்து ஒவ்வோர் ஆணும், ஒவ்வொரு பெண்ணும் தன்னுடைய எதிர்மறைத் தத்துவத்தை தன்னுள்ளே அடக்கி வைத்திருக்கிறான். (ள்) ஒவ்வொரு மனிதனும் தனது ஆழ்மனதில் கொஞ்சமாவது பெண்மையை வைத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவனது இருப்புணர்வில் போதுமான ஆற்றல் இருக்காது. அவன் உயிர் வாழ்வதற்குத் தேவையான விசைத்திறன் இருக்காது.

ஆண்மை-பெண்மை என்ற எதிரெதிர் தத்துவங்கள் உள்ளே இருக்கும் போதுதான் உயிர் வாழும் ஆற்றல் பிறக்கிறது. எதிரெதிர் தத்துவங்கள் இருப்பதால் எப்போதும் ஓர் இறுக்கம் இருந்து கொண்டேயிருக்கும். இந்த இறுக்கம் அதிகமானால் மனிதனுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். இந்த இறுக்கம் மிகவும் குறைந்து போனால் வாழவே முடியாது. மனிதன் இறந்து விடுவான்.

புத்தரின் வாழ்வில் ஓர் அழகான நிகழ்வு.

ஒரு பெரிய நாட்டின் இளவரசன் புத்தரிடம் துறவு வாங்கிக் கொண்டு அவரிடம் சீடனாகச் சேர்ந்தான். அது வரை அவன் மிகவும் ஆடம்பரமான வாழ்க்கை வாழ்ந்தவன். பெரிய சிதார் இசைக் கலைஞன். அவனது இசையின் புகழ் நாடு முழுவதும் பரவியிருந்தது.

ஆனால் அவனுக்கு அந்த இசையைவிட புத்தரின் ஆன்மாவில் பிறந்த இசையின் மேல் அதிக நாட்டம் ஏற்பட்டது. சிதார் இசைக் கலைஞனாக இசையின் எல்லையையே பார்த்து விட்டதால் அவனால் புத்தரின் ஆன்ம இசையை, அவர் காட்டிய இசைவைப் புரிந்து கொள்ள முடிந்தது.

புத்தர் அவன் நாட்டுக்கு வருகை தந்த போதுதான் அவன் அவரைப் பற்றிக் கேள்விப் பட்டான். அவரைப் பற்றிக் கேட்டதுமே அவனுக்கு அவர் மேல் மதிப்பும் மரியாதையும் உண்டாயிற்று. ஏன் ஒரு வகைக் காதலே உண்டாயிற்று என்று சொல்லலாம். தனது நாட்டைத் துறந்தான், ராஜ போக வாழ்க்கையைத் துறந்தான். புத்தரின் சீடனாக இருப்பதே போதும் என்று சொல்லிவிட்டான்.

அவன் இப்படி எடுத்தேன் கவிழ்த்தேன் என்று துறவியாவது புத்தருக்கே பிடிக்கவில்லை.

அவர் அன்புடன் சொன்னார். "மகனே, அவசரப்படாதே. அடுத்த நான்கு மாதங்களுக்கு நான் இங்கே தான் இருக்கப் போகிறேன். அதற்குள் நன்றாகச் சிந்தித்து முடிவெடு."

மழைக்காலம் வந்துவிட்டால் புத்தர் வெளியே போகமாட்டார். ஒரே இடத்தில் தான் தங்கியிருப்பார்.

"மழைக்காலம் தொடங்கிவிட்டது. நான் இங்கேதான் இருக்கப் போகிறேன். அதனால் அவசரப்படாதே. நன்றாக யோசித்து முடிவெடு. நான்கு மாதங்களுக்குப் பின்னும் உனக்கு துறவறத்தில் நாட்டம் இருந்தால் நான் உன்னைத் துறவியாக்குகிறேன்."

அதற்கு அந்த ராஜகுமாரன் சொன்னான்.

"நான் ஏற்கனவே முடிவெடுத்துவிட்டேன். இதில் யோசிக்க என்ன இருக்கிறது? இந்த முடிவை இப்போதே எடுத்தால் தான் உண்டு. நாளை பற்றி யாருக்குத் தெரியும்? "நிகழ்காலத்தில் வாழுங்கள்." என்று எப்போதும் அறிவுரை சொல்லும் நீங்கள் ஏன் என்னை நான்கு மாதங்கள் காத்திருக்கச் சொல்கிறீர்கள்?

"நாளை என்ன வேண்டுமானாலும் நடக்கலாம். நான் இறந்து போகலாம். இல்லை நீங்கள் இறந்து போகலாம். இல்லை வேறு ஏதாவது நடக்கலாம். யாருக்குத் தெரியும்? என்னால் இனிமேல் ஒரு நாள் கூட பொறுத்திருக்க முடியாது."

இளவரசன் விடாப்பிடியாக இருக்கவே புத்தரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவனுக்குத் தீட்சை கொடுத்துத் துறவி யாக்கினார் புத்தர். அது வரை ராஜ போக வாழ்க்கை வாழ்ந்த ஒருவனால் பிச்சைக்காரனாக வாழ முடியுமா என்று புத்தர் சந்தேகப்பட்டார்.

அப்படிப் பார்த்தால் புத்தரே இளவரசராக இருந்து துறவி யானவர்தானே! அவர் செய்ததை அவனால் செய்ய முடியாதா என்ன என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டார் புத்தர்.

பாலும் பழமும், பட்டும் பதவிசுமாக இருக்கும் ஆடம்பரமான அரண்மனை வாழ்க்கையும் புத்தருக்குத் தெரியும். தெருவில் அடுத்த வேளை சோற்றுக்குப் பிச்சை எடுக்கும் பிச்சைக்கார வாழ்க்கையும் அவருக்குத் தெரியும். பிறந்ததில் இருந்தே ராஜ போகமாக அரண்மனையில் வாழ்ந்து விட்டுத் திடீரென்று ஒரு நாள் தெருவிற்கு வந்து பிச்சை எடுப்பது எவ்வளவு கஷ்டமான காரியம் என்று புத்தருக்குத் தெரியும்.

ஆனால் புத்தர் போதுமான அவகாசம் எடுத்துக் கொண்டார். அரண்மனையை விட்டு வெளியே வந்து ஆறு வருடங்களுக்குப் பிறகுதான் புத்தருக்கு ஞானம் கிடைத்தது. கொஞ்சம் கொஞ்சமாகத் தான் புத்தர் கஷ்டங்களுக்குப் பழகிக் கொண்டார். ஒண்ட ஓர் இடம் இல்லாமல், பசிக்கு உணவில்லாமல், நண்பர்களில்லாமல், எந்த முகாந்தரமும் இல்லாமல் முளைத்துவிட்ட பகைவர்களோடு வாழ்வது என்பது எவ்வளவு பெரிய துன்பம் என்பது புத்தருக்குத் தெரியும்.

புத்தர் யாருக்கும் எந்தத் தீமையும் செய்யவில்லை என்றாலும் அவருக்கு நிறைய பகைவர்கள் இருந்தார்கள். இந்த மக்கள் பெரிய முட்டாள்கள். அவர்கள் எப்போதும் பொய்யிலேயே வாழ்ந்து பழகிவிட்டார்கள்.

அதனால் தான் புத்தனைப் போல் உண்மையில் நிலைத் திருக்கும் ஒரு மனிதனைப் பார்த்தால் அவர்களுக்கு வலி ஏற்படு கிறது. தாங்கள் அவமானப்படுத்தப்பட்டதாக நினைக்கிறார்கள். அந்த உண்மை மனிதருக்குப் பகையாளிகளாக மாறுகிறார்கள்.

அது இருக்கட்டும். இந்த ராஜகுமாரன் கதைக்கு வருவோம்.

அந்த இளவரசனால் சந்நியாசத்தைத் தாக்குப் பிடிக்க முடியுமா என்று புத்தர் யோசித்தார். ஒரு வகையில் புத்தருக்கு அந்த இளைஞனைப் பார்க்க வருத்தமாக இருந்தது. என்றாலும் அவனுக்கு தீட்சை கொடுத்து அவனைப் புத்து பிட்சுவாக்கினார்.

துறவறம் பெற்றவுடன் அந்த ராஜகுமாரனின் நடத்தையைப் பார்த்து எல்லாரும் மூக்கில் விரல் வைத்தார்கள். பொதுவாகத் துறவிகள் என்றால் உணவை அளவோடு சாப்பிட வேண்டும். புத்தரும் மற்ற துறவிகளும் ஒரு நாளில் ஒரு முறை தான் உணவு உண்பார்கள்.

ஆனால் ராஜகுமாரனோ ஒரு படி மேலே போய்விட்டான். இரண்டு நாளைக்கு ஒரு முறைதான் அவன் உணவு உண்டான். மற்ற துறவிகள் இரவில் சுகமான படுக்கையில் படுக்காமல் மரத்தின் அடியில் தரையில் படுப்பார்கள்.

அந்த இளைஞன் வெட்ட வெளியில் படுப்பான். குளிர் நடுக்குவதைப் பற்றிக் கவலைப் படமாட்டான். மற்ற துறவிகள் சாலையில் நடப்பார்கள். ஆனால் இளவரசனோ சாலை ஓரத்தில் இருக்கும் கல்லின் மேலும் முள்ளின் மேலும் நடப்பான். அதனால் ஏற்படும் வலியைப் பொருட்படுத்த மாட்டான்.

அவன் ஆசிரமத்தில் சேரும் போது ராஜாவைப் போல அழகாக இருந்தான். சில மாதங்களிலேயே அவன் உடல் கருத்து, களையிழந்து விட்டது. உள்ளே வந்த போது கட்டுமஸ்தான உடலுடன் ஆரோக்கியமாக இருந்தான். சில மாதங்களிலேயே நோய்வாய்ப்பட்டான். ஆள் மிகவும் மெலிந்து அசிங்கமாகி விட்டான். அவன் கால்களில் காயங்கள், கொப்புளங்கள்.

மற்ற துறவிகள் புத்தரிடம் போய்ச் சொன்னார்கள்.

"இவனுக்கு நீங்கள் ஏதாவது செய்ய வேண்டும். மிகவும் தீவிரமாக இருக்கிறான் இவன். தன்னைத்தானே சித்திரவதை செய்து கொள்கிறான். அவன் தன்னை அழித்துக் கொள்ளத் தொடங்கி விட்டான்."

அன்றிரவு புத்தர் இளவரசனைப் பார்க்கப் போனார்.

"உன்னிடம் ஒரு கேள்வி கேட்கலாமா?" சாந்த ஸ்வரூபியின் வார்த்தைகள் அவனை வருடிக் கொடுத்தன.

“நிச்சயமாக. குருவே, நான் உங்கள் சீடன். உங்கள் உடைமை. என்னை நீங்கள் என்ன வேண்டுமானாலும் கேட்கலாம். பதில் தெரிந்தால் சொல்ல வேண்டியது என் கடமை. கேளுங்கள், பிரபுவே!”

“நீ ராஜகுமாரனாக இருந்த போது பெரிய இசைக் கலைஞன் என்று பெயரெடுத்தாய் என்று கேள்விப்பட்டேன். நீ நன்றாக சிதார் வாசிப்பாயாமே?”

“ஆமாம், பிரபு. ஆனால் அதெல்லாம் இப்போது முடிந்து விட்டது. நான் அதை முற்றிலுமாக மறந்துவிட்டேன். ஒரு காலத்தில் நான் நன்றாக சிதார் வாசித்தது உண்மைதான்.

“அப்போது அது என் பொழுது போக்கு. அது மட்டும் தான் பொழுதுபோக்கு. ஒரு நாளில் எட்டு மணி நேரம் சாதகம் செய்வேன். அதனால் அதில் விற்பன்னனானேன். நாடு முழுவதும் புகழ் பெற்றேன்.”

“சிதாரைப் பற்றி எனக்கு ஒரு சந்தேகம். சிதாரின் தந்திகள் மிகவும் இறுக்கமாகக் கட்டப்பட்டால் என்னவாகும்?”

”வேறு என்ன ஆகும்? தந்திகள் அறுந்து போகும். அதன்பின் அதிலிருந்து இசை வராது.”

“இன்னொரு கேள்வி. தந்திகள் மிகவும் தளர்வாக இருந்தால்...”

“இது என்ன கேள்வி பிரபுவே? போதுமான இறுக்கம் இல்லாவிட்டால் தந்தியிலிருந்து இசை வராது. அபஸ்வரம்தான் வரும். “

“மகனே, நீ புத்திசாலி. உனக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. வாழ்க்கையும் சிதாரைப் போல் ஓர் இசைக் கருவிதான். அதிலிருந்து நல்ல இசை வர வேண்டுமென்றால் போதுமான இறுக்கம் வேண்டும்.

“அந்த இறுக்கம் குறிப்பிட்ட அளவுதான் இருக்க வேண்டும். அதைவிடக் குறைவாக இருந்தால் தந்திகள் மிகவும் தளர்வாக இருந்தால் அவற்றிலிருந்து இசை வராது, அபஸ்வரம்தான் வரும். தளர்வாக இருக்கும் வாழ்க்கையில் சுவை இருக்காது. சலிப்புதான் இருக்கும்.

"இறுக்கம் குறிப்பிட்ட அளவுக்கு மேல் இருந்தால் தந்திகள் அறுந்து போகும். அப்போதும் வாழ்க்கையில் இசை இருக்காது. உனக்குப் பைத்தியம் பிடிக்கும்.

ஆரம்ப கட்டத்தில் உன் வாழ்க்கை மிகவும் தளர்வாக இருந்தது. சுக போகங்களில் பொழுதைக் களித்தாய். அதனால் தான் உனக்குள் இருக்கும் இசையை உன்னால் கேட்க முடிய வில்லை.

"ஆனால் இப்போது உன் வாழ்க்கை மிகவும் இறுக்கமாக இருக்கிறது. அதனால் இப்போதும் உன் வாழ்க்கையில் இசை யில்லை. இசைவும் இல்லை. சிதாரின் தந்திகளை மிகவும் இறுக்கமாக இல்லாமலும், மிகவும் தளர்வாக இல்லாமலும், சரியான அளவு இறுக்கத்தில் வைக்க ஏதாவது வழி இருக்கிறதா?"

"இருக்கிறது."

"அதுதான் என் போதனை. இரண்டு துருவங்களுக்கு இடைப்பட்ட நடுவழியில் பயணம் செய். அந்த இறுக்கம் முழுவதும் போய்விடக் கூடாது. அப்படி போனால் நீ இறந்து போய்விடுவாய். அதே சமயத்தில் இறுக்கம் மிகவும் அதிகமாகவும் கூடாது. அப்படியானால் உனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்."

இன்று இந்த உலகத்தில் இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. கீழை நாடுகள் இறுக்கத்தை மிகவும் குறைத்து தளர்வு நிலையில் வாழ்கின்றன. அதனால் அங்கு சாவும், பட்டினியும் இருக்கிறது. மேலை நாடுகளில் இறுக்கம் மிகவும் அதிகமாக இருக்கிறது. அதனால் தான் அங்கே பல விதமான மன நோய்கள் இருக் கின்றன. மேற்கு தனது பாரத்தைத் தான் தாங்கமாட்டாமல் தவித்துக் கொண்டிருக்கிறது. கிழக்கில் சோம்பேறித்தனம் தலைவிரித்து ஆடுகிறது.

வாழ்க்கைக்குக் கொஞ்சம் இறுக்கம் தேவைதான். சரியான அளவு இறுக்கம் இருக்கும் போது வாழ்க்கை சமச்சீர் நிலையை அடைகிறது. அதுதான் தாவோ கற்றுக் கொடுக்கும் வாழும் கலைப் பயிற்சி. சமச்சீர் நிலையில் ஒரே சீராகத் துடித்துக் கொண்டிருக்கும் ஞானிகளின் நாடித் துடிப்பு

இந்த சூத்திரத்தில் உள்ள வார்த்தைகளை அப்படியே அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. அதில் வரும் ஆண், பெண் போன்ற வார்த்தைகளை உடற்கூறு ரீதியாகப் பொருள் கொள்ளக்கூடாது.

ஒவ்வோர் ஆணும், ஒவ்வொரு பெண்ணும் தனக்கு எதிர் துருவத்தை தனக்குள்ளே அடக்கி வைத்திருக்கிறான் (ள்).

நீங்கள் உணர்வளவில் ஆணாக இருந்தால், ஆழ்மனதில் பெண்ணாக இருப்பீர்கள். நீங்கள் பெண்ணா? அப்படியென்றால் நிச்சயம் உங்கள் ஆழ்மனதில் ஆண்மை இருக்கத்தான் செய்யும். உங்கள் உணர்வும் ஆழ்மனதும் எதிரெதிர் துருவங்கள். அவை இரண்டுக்கும் நடுவே எப்போதும் ஓர் இறுக்கம் இருக்கத்தான் செய்யும். அந்த இறுக்கம் அதிகமாவும் இருக்கக் கூடாது. அதிகம் குறையவும் கூடாது. இது தான் சமயத்தின் அடிப்படை விஞ்ஞானம்.

தாவோ அதிசயங்களை நம்புவதில்லை. வாழ்க்கையை மாற்றக்கூடிய அறிவியல் பூர்வமான வழிகளை மட்டுமே தாவோ நம்புகிறது.

லா ட்சூ, ஷுவாங் ட்சூ, லை ட்சூ ஆகிய மூன்று சீன ஞானிகளும் காட்டு வழியே நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். இடையே ஒரு காட்டாறு குறுக்கிட்டது. ஆற்றைக் கடந்தால் தான் அவர்கள் பயணத்தைத் தொடர முடியும்.

உடனே லை ட்சூ ஆற்றங்கரையில் அமர்ந்து தாவோவைக் குறித்து தியானம் செய்ய ஆரம்பித்தார். பத்து நிமிடம் கழிந்தது. அவர் தியானத்திலிருந்து எழுந்தார். தண்ணீரின் மேல் நடந்து சென்று அக்கரையை அடைந்து விட்டார்.

அடுத்ததாக ஷுவாங் ட்சூ இருபது நிமிடங்கள் பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்தார். பின் அவரும் எழுந்து சென்று தண்ணீரின் மேல் நடந்து அக்கறையை அடைந்து விட்டார்.

இவர்கள் நிகழ்த்திய அதிசயங்களை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார் லா ட்சூ. மற்றவர்களைப் போலவே ஆற்றங்கரையில் அமர்ந்து தியானம் செய்ய ஆரம்பித்தார். சுமார் ஒரு மணி நேரம் கழித்து, தாவோ மேல் முழு நம்பிக்கையுடன் எழுந்து நின்று தண்ணீரின் மேல் நடக்க ஆரம்பித்தார். அவர் முதல் அடியை வைத்ததுதான் தாமதம், உடனே பெரிய சத்தத்துடன் கீழே விழுந்துவிட்டார்.

மறுகரையில் இருந்து இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஷுவாங் ட்சூ பெரிதாகச் சிரித்தார். பின் லை ட்சூவைப் பார்த்துக் கேட்டார்.

“பாவம் லா ட்சூ விழுந்துவிட்டார். நாம் எப்படி ஆற்றின் கீழே இருக்கும் பாறைகளில் கால் வைத்து நடந்து வந்தோம் என்று அவருக்குச் சொல்லிவிடலாமா?”

தாவோ யதார்த்தமானது. தத்துவம் என்ற பெயரில் புழங்கும் எந்த முட்டாள்தனத்தையும் தாவோ நம்புவதில்லை.

தெருவில் ஒருவன் நாட்டு மருந்தைக் கூவி விற்றுக் கொண்டிருந்தான். “இந்த லேகியத்தைச் சாப்பிட்டால் நீங்கள் நீண்ட நாட்கள் இளமையுடன் வாழலாம். “ என்று பறைசாற்றிக் கொண்டிருந்தான்.

அவனுக்கு உதவியாக ஒரு சிறுவன் கூடவே இருந்தான்.

லேகியம் விற்பவன் உற்சாகமாகக் கத்திக் கொண்டிருந்தான்.

“விட்டால் வராது. போனால் கிடைக்காது. இது அமிர்தம். அதிசயம் ஆனால் உண்மை. தினமும் காலை நான் இதை ஒரு தேக்கரண்டி அருந்துகிறேன். என்னைப் பாருங்கள். எவ்வளவு இளமையாக இருக்கிறேன். உண்மையிலேயே எனக்கு 700 வயதாகி விட்டது.”

மக்களால் இதை நம்பவும் முடியவில்லை. ஒதுக்கவும் முடியவில்லை. கடைசியில் ஓர் ஆசாமி உதவிக்காக இருந்த அந்த சிறுவனைத் தனியே தள்ளிக் கொண்டு போனான்.

“ஏம்ப்பா உங்காளு பீலா விடறாரா இல்லை உண்மையைச் சொல்றாரான்னே தெரியலையே! அவருக்கு 700 வயசாம்ல”

“அது எனக்குத் தெரியாதுங்க.” பையன் மிகவும் சத்தமாகச் சொன்னான். எல்லாரும் இப்போது அந்த பையனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

“ஏன் உனக்குத் தெரியாது?” அந்த ஆசாமி மீண்டும் அந்தப் பையனிடம் கேட்டான்.

“நான் 300 வருஷமாத்தாங்க அவர்கிட்ட வேலை பாக்கறேன். அதனால் அவருக்கு 700 வயசு ஆயிருச்சா இல்லையான்னு எனக்குத் தெரியாது.”

உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் அதிசயங்களையும், அற்புதங்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றன -

தாவோவைத் தவிர. தாவோ ஒரு நேரிடையான மதம். அதனால் அதற்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.

மற்ற மதங்கள் எல்லாம் காலாவதியாகிவிட்ட பின்பும் தாவோ மட்டும் நிலைத்து நிற்கும். காரணம், அது இன்று வேகமாக வளர்ந்து வரும் விஞ்ஞானத்தோடு இயைந்து இருக்கிறது.

விஞ்ஞானத்தோடு இசைவாக இருப்பது மட்டும் அல்லாமல் தாவோ விஞ்ஞானத்தையே சரியான திசையில் வளர்த்துச் செல்லும் வல்லமை உடையது. இன்றைய விஞ்ஞானத்துக்கு அவசரத் தேவை ஒரு புதிய பார்வை. அதை தாவோவால் மட்டுமே தர முடியும். நீங்கள் இதைத்தான் நம்ப வேண்டும் என்று தாவோ எப்போதுமே வற்புறுத்தியதில்லை. உண்மையைப் புரிந்து கொள்ள அது உங்களுக்கு உதவி செய்வதுதான் அதன் நோக்கம். இந்த அணுகுமுறை இன்றைய விஞ்ஞானத்திற்கு இன்னும் அதிகமான போஷாக்கு அளிக்கும்.

இந்த சூத்திரங்களைக் கண்மூடித்தனமாக நம்ப வேண்டியதில்லை. இவற்றைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். உங்கள் மனதில் பல பிறவிகளாகத் தேங்கி நிற்கும் முற்சாய்வுகளையும், தீர்வுகளையும் ஒதுக்கி வைத்துவிட்டு, நீங்கள் ஆண், அல்லது பெண் என்பதை மறந்து விட்டு இந்த சூத்திரங்களைப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

*வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:*

*தாவோ நிர்மலமான தெளிவாகவும் வெளிப்படுகிறது. தெளிவற்ற சேறாகவும் வெளிப்படுகிறது. அது அசைவாகவும் தோன்றுகிறது, அசைவற்ற இருப்பாகவும் பரிமளிக்கிறது.*

சேறு என்ற வார்த்தைப் பிரயோகத்தைத் தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். தெளிவற்ற நிலையைக் குறிப்பதற்காகத்தான் அந்த வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தெளிவு, தெளிவற்ற நிலை எல்லாமே தாவோதான். *தாவோ நிர்மலமான தெளிவாகவும் வெளிப்படுகிறது....*

இங்கே நிர்மலமான தெளிவு என்பது ஒழுக்க விதிகளையோ, நன்னடத்தை விதிகளையோ குறிப்பதல்ல. அதற்கும்

ஒழுக்கத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. தெளிவு என்பது இங்கே படிகம் போன்ற, சுத்தமான. எளிதில் புலப்படுகிற, ஒளிவு மறைவு இல்லாத ஒரு நிலையைக் குறிக்கிறது.

தெளிவற்ற சேறு என்பது அதற்கு நேர் எதிரான ஒரு நிலையைக் குறிக்கிறது. எளிதில் புலப்படாத, கலங்கலாக, முழுவதும் வெளிப்படாத ஒரு தெளிவற்ற நிலை அது. ஆனால் இந்த இரண்டு துருவங்களும் தாவோவின் வெளிப்பாடுகளே. தாவோ நிர்மலத்தில் மட்டும் விளங்கவில்லை. சேற்றிலும், அழுக்கிலும் இருப்பதும் அதே தாவோதான்.

சாதாரண மனிதன், ஞானம் பெறாத மனிதன் மனத்தளவில் சேறும் சகதியுமாகத்தான் இருக்கிறான். புத்தரைப் போன்ற ஞானிகளின் மனம் நிர்மலமான தெளிவாக ஒளிர்கிறது. ஞானம் பெறாத மனிதன் அரைத் தூக்க நிலையிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் மனம் மேகமூட்டமாக இருக்கும் வானத்தைப் போல் தெளிவில்லாமல் துடித்துக் கொண்டிருக்கிறது. தானே உருவாக்கிய புகை மண்டலத்தில் தனது தெளிவைத் தொலைத்து விடுகிறான் அவன்.

இவ்வுலக வாழ்க்கை என்ற கனவிலிருந்து விழித்துக் கொண்ட ஒருவன், ஆசைகளில் இருந்து விடுபட ஒருவன் தெள்ளத் தெளிவாக இருக்கிறான். மேகமூட்டம் இல்லாத பிரகாசமான பகலைப் போல் அவன் மனம் ஒளி வீசுகிறது.

தாவோ இந்த இரண்டுமாக இருக்கிறது என்பதைத்தான் நாம் நன்றாக மனதில் வாங்கிக் கொள்ள வேண்டும். ஆசைகளை வென்ற ஞானியான புத்தர் தெய்விகமானவர். அதே சமயம் ஆசைகளில் ஆட்பட்டு பிறவித் துயரில் உழன்று கொண்டிருக்கும் சாதாரண மனிதனிடத்திலும் தெய்விகம் குடிகொண்டு இருக்கிறது. புத்தருக்கும், சாதாரண மனிதனுக்கும் அடிப்படையில் எந்த வேறுபாடும் இல்லை. இருவருமே தெய்வாம்சம் பொருந்தியவர்கள்தான். வெளிப்படுதலில்தான் வித்தியாசம் இருக்கிறது.

ஞானம் பெறாதவன் மனதில் ஆசைகள், அபிலாஷைகள், கனவுகள் நிறைந்திருக்கின்றன. அதனால் அவன் சேறும் சகதியுமான நிலையில் வெளிப்படுகிறான். ஞானி ஆசைகளையும் கனவுகளையும் வென்றவன்.

அவை எல்லாம் வெளித்தோற்றங்கள் தான் என்பதை தன் இருப்புணர்வில் உணர்ந்தவன். கனவுகளைக் கனவுகள் என்று அவன்

உணர்ந்து கொண்டதால் அந்தக் கனவுகள் தாமாகவே அவன் மனதிலிருந்து விலகிவிட்டன. அதனால் அவன் மனம் சேறும் சகதியும் இல்லாமல் தெளிந்த நீரோடையைப் போல் நிர்மலமாக இருக்கிறது. அவனது கண்களில் இருக்கும் தெளிவின் மூலமாக அவனால் உண்மையை உள்ளபடி பார்க்க முடிகிறது.

*தாவோ அசைவாகவும் தோன்றுகிறது, அசைவற்ற இருப்பாகவும் பரிமளிக்கிறது.* தாவோவை அடைய வேண்டுமென்றால் நீங்கள் அசைவில்லாமல் ஓர் இடத்தில் தியான நிலையில் உட்கார வேண்டும் என்ற அவசியம் இல்லை. அசைவுகளிலும் நீங்கள் தாவோவை அனுபவித்து உணரலாம். அசைவில்லாத நிலையிலும் நீங்கள் தாவோவை உணரலாம்.

இதிலே இரண்டு சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. புத்தர் பல ஆண்டுகள் மௌனமாக அமர்ந்து பின் தாவோவைக் கண்டுணர்ந்தார். அவர் அதை நிர்வாண நிலை என்று சொல்கிறார். தாவோவுக்கு புத்தர் கொடுத்த பெயர் நிர்வாணம். அவ்வளவுதான்.

ஜலாலுதீன் ரூமியைப் பாருங்கள். கடவுள் மேல் கொண்ட தணியாத காதலால் அவர் பல ஆண்டுகள் நடனமாடிக் கொண்டிருந்தார். ஒரு நாள் நடனமாடிக் கொண்டிருந்த போது அவர் தாவோவை உணர்ந்தார். அவர் தாவோவை இறைவன் என்று சொல்கிறார். தாவோவுக்கு ரூமி கொடுத்த பெயர் இறைவன். அவ்வளவுதான். தாவோவை நீங்கள் அசைவற்ற மௌனம் மூலமாகவும் அடையலாம், அசைவுள்ள இயக்கம் மூலமாகவும் அடையலாம். இரண்டும் ஒன்றுதான்.

அதனால் தான் எனது கூட்டமைப்பில் இரண்டு வகையான தியானங்களும் பயிற்றுவிக்கப்படுகின்றன. ஒரு பக்கம் என் சந்நியாசிகள் ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் இருக்கிறார்கள். மற்றொரு பகுதியில் எந்த செயலும் இல்லாமல் ஓர் இடத்தில் ஆழ்நிலை சிந்தனையில் அமர்ந்திருக்கிறார்கள். ஸாஸென், விபாஸ்னா (zazen, vipassana) போன்ற அமைதியான தியான முறையில் தாவோவை அடைந்து கொண்டிருக்கிறார்கள்.

இந்தப் பகுதியில் இருப்பவர்கள் அந்தப் பகுதிக்குப் போகலாம். அங்கே இருப்பவர்கள் இங்கே வரலாம். இரண்டுமே தாவோவை அடையும் வழிகள் தான். தாவோவை நீங்கள் உற்சாகமான நடனத்திலும் பார்க்கலாம். கஷ்ட மௌனத்திலும் பார்க்கலாம்.

உங்களால் இரண்டு வழிகளிலும் தாவோவைப் பார்க்க முடிந்தால் இன்னும் நல்லது. நடனத்தில் தாவோவைப் பார்த்து, பின் மௌனத்திலும் தாவோவை உங்களால் உணர முடிந்தால் உங்கள் அனுபவம் புத்தருடையதை விட, ஜலாலுதீன் ரூமியினுடையதை விட இன்னும் ஆழமாக, செழிப்பாக இருக்கும். ஏனென்றால் நீங்கள் இறைவனின் சந்நிதானத்தை இரு வேறு வழிகள் மூலமாக நெருங்குகிறீர்கள்.

இரண்டு வழிகளிலும் நீங்கள் இறைவனை அடைந்தால் உங்களிடம் நெகிழ்வுத் தன்மை அதிகமாக இருக்கும். இந்த இரண்டு பாதைகளின் அழகையும் நீங்கள் உணர்வீர்கள். ஒரு பாதையில் நீங்கள் சந்திக்கும் சில அழகான விஷயங்களை மறு பாதையில் பார்க்க முடியாது.

இரண்டு பாதைகளிலும் ஆச்சரியப்படவைக்கும் அழகான விஷயங்கள் பல இருக்கின்றன. ஆனால் ஒரு பாதையில் இருப்பவை பொதுவாக அடுத்த பாதையில் இருக்காது.

மௌனத்தில் உட்கார்ந்திருப்பவனுக்குப் புலப்படாத அழகு, நடனமாடுபவனுக்குப் புலப்படும். மௌனத்திலேயே பயணம் செய்து அவன் ஞானத்தை அடைந்து விடுவான். ஆனால் நடனமாடுபவனின் வழியில் நடந்த சில அற்புதங்களை அவன் அறிய மாட்டான்.

அதே போல் மௌனத்தின் வழியில் இருக்கும் சில அழகுகளை நடனத்தின் பாதையில் செல்பவன் பார்க்க முடியாது.

நான் சொல்வது இதுதான். எதற்காகத் தேவையில்லாமல் ஒன்றை ஒதுக்கி வைத்து அடுத்ததை மட்டும் அனுபவிக்க வேண்டும்? பல பரிமாணங்கள் உள்ளவர்களாக நாம் ஏன் இருக்கக் கூடாது? எத்தனை வழிகளில் முடிகிறதோ அத்தனை வழிகளிலும் ஏன் கடவுளைத் தரிசிக்கக் கூடாது? அப்போதுதானே கடவுளுடைய அன்பின் பல பரிமாணங்கள் நமக்குத் தெரியும்?

அவற்றைத் தெரிந்து கொண்டால் இந்த மதங்கள் எல்லாம் தேவையில்லாமல் ஒன்றோடு ஒன்று சண்டை போட்டுக் கொண்டிருப்பது நமக்குப் புரியும். மதங்களின் வாதங்கள் அர்த்தமற்றவை. அவை எல்லாம் அன்பு வடிவமாக இருக்கும் ஒரே இறைவனைப் பற்றித்தான் பேசுகின்றன.

அவர்களுக்கு பல வழிகள் இருப்பது தெரியாது. அதனால தங்கள் வழிதான் ஒரே வழி என்று பேத்திக் கொண்டிருக்கிறார்கள். ''இதுதான் முடிவான உண்மை.'' என்று ஒரு மதம் சொன்னால், ''இல்லை. அதற்கு நேர் எதிரான எங்கள் உண்மைதான் முடிவான உண்மை'' என்று இன்னொரு மதம் சொல்கிறது. இது என்ன கேலிக் கூத்து?

''நடனமாடுவதன் மூலம் ஞானத்தைப் பெறலாமா?'' என்று புத்த மதத்தைச் சேர்ந்தவனைக் கேட்டுப் பாருங்கள். அவன் அதை மூர்க்கமாக மறுப்பான்.

“அது எப்படி நடனமாடி ஞானத்தைப் பெற முடியும்? அப்படி முடிந்தால் புத்தர் ஏன் பல ஆண்டுகள் மௌனமாக ஓர் இடத்தில் உட்கார்ந்து கஷ்டப்பட வேண்டும்? புத்தர் என்ன ஒன்றும் தெரியாத முட்டாளா?''

இப்படி அவன் பேசினால் நம்மால் என்ன பதில் சொல்ல முடியும்?

ஜலாலுதீன் ரூமியைப் பின்பற்றுவரிடம் போய், “ஏன் இப்படி தா, தை என்று நடனமாடிக் கொண்டேயிருக்கிறீர்கள்? மௌனமாக ஓர் இடத்தில் அமர்ந்து. ஒன்றும் செய்யாமல் இருந்து ஞானம் பெற முடியாதா என்ன?'' என்று கேளுங்கள்.

அவன் தனது ஆட்டத்தை நிறுத்தாமலேயே பதில் சொல்வான்.

“அது நடக்காத காரியம். சும்மா இருந்தே ஞானம் பெற முடியும் என்றால் ஜலாலுதீன் ஏன் நடனமாடிக் கொண்டிருந்தார்? சும்மா இருப்பதை விட்டுவிட்டு அவர் ஏன் இரவும் பகலும் நடனமாட வேண்டும்? அவர் என்ன முட்டாளா?''

இதற்கும் நம்மிடத்தில் பதில் இல்லை.

ஜலாலுதீன் இறுதியாக ஞானம் பெற்ற போது அவர் 36 மணி நேரம் இடைவிடாமல் நடனமாடிக் கொண்டிருந்ததாகச் சொல்கிறார்கள். ஞானம் பெறுவதற்கு முன் புத்தர் 7 நாட்கள் எந்த அசைவும் இல்லாமல், கண் இமைகளைக்கூட அசைக்காமல் உட்கார்ந்திருந்தாராம்.

தொடர்ந்து நடனமாடிய ஜலாலுதீன் நடுவில் சில நொடிகள் கூட ஓய்வு எடுக்க வில்லை. 36 மணி நேரம் ஆடிவிட்டுப் பின் அப்படியே மயங்கி விழுந்தார்.

மயக்கம் தெளிந்து அவர் கண்களைத் திறந்து பார்த்ததும் அதுவரையில் இருந்த அந்த வயதான மனிதர் மறைந்துவிட்டார். அவரிடத்தில் ஓர் இளைஞன் புதிதாகப் பிறந்திருந்தான். ரூமி ஒரு புத்தம்புது மனிதரானார்.

அதனால் சூஃபி ஞானிகள் உட்கார்ந்த இடத்திலேயே ஞானம் பெறமுடியும் என்ற சித்தாந்தத்தை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

அதை விடுங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். நான் இறைவனை இரண்டு வழிகளிலும் போய்ப் பார்த்திருக்கிறேன். அவனை அசைவில், இயக்கத்தில் கண்டிருக்கிறேன். அசைவற்ற இருப்புநிலையிலும் அவனது அன்பை உணர்ந்திருக்கிறேன். அதனால் தான் கோ ஹ்சுவான் சொல்வதை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன்.

*தாவோ அசைவாகவும் தோன்றுகிறது, அசைவற்ற இருப்பாகவும் பரிமளிக்கிறது. வானம் நிர்மலமாக இருக்கிறது. பூமி சேறும் சகதியாகத் தெளிவற்று இருக்கிறது.*

வானம் எப்போதும் மாசு மருவற்ற நிர்மலத்தன்மையைக் குறிக்கும். வானம் தூய்மையானது. அதில் ஒன்றுமேயில்லையே! ஒன்றுமில்லாமல் இருப்பதுதான் தூய்மையின் உச்சகட்டம். பூமி பொருள்களால் நிறைந்திருக்கிறது. அதனால் தான் அது நிர்மலமானதாக இல்லை. அது சேறும் சகதியுமாக இருக்கிறது.

அன்று நான் சொன்னது ஞாபகம் இருக்கிறதா? உங்கள் கைகள் நட்சத்திரங்களைத் துழாவ வேண்டும். அதே சமயத்தில் உங்கள் கால்கள் பூமியில் ஆழமாகப் பதிந்திருக்க வேண்டும். கொஞ்சம் வானம், கொஞ்சம் பூமி சேர்ந்து உருவாக்கப்பட்ட அற்புதமான படைப்பு நீங்கள்.

உங்களுக்குள் ஒரு நிர்மலமான பகுதி இருக்கிறது. அதை வானம் உங்களுக்குப் பரிசாகக் கொடுத்தது. உங்களுக்குள் சேறும் சகதியுமாக இருக்கும் ஒரு பகுதியும் இருக்கிறது. அது பூமியின் பரிசு. வானமும் பூமியும் சேர்ந்ததால் வந்த விளைவுதான் நீங்கள்.

இதுவரை எல்லா மதங்களும் வானம் இல்லாவிட்டால் பூமி என்று ஏதாவது ஒன்றை மட்டுமே தெரிவு செய்து, மற்றதை ஒதுக்கிவிட்டன. உதாரணமாக யூதர்களின் மதம் பூமியைத் தெரிவு செய்தது. சமணர்களின் மதம் வானத்தைத் தெரிவு செய்தது.

ஆனால் இந்த இரண்டு மதங்களும் பாதிப் பாதி மதங்கள் தான். அவை முழுமையான மதங்கள் இல்லை. இரண்டிலும் ஏதோ ஒரு குறை இருக்கத்தான் செய்கிறது. ஆனால் தாவோ முழுமையான மதம். தாவோ வானம், பூமி என்ற இரண்டையும் அரவணைத்துக் கொள்கிறது.

தாவோ மட்டுமே புனிதமான அனுபவத்தைத் தர வல்லது. ஏனென்றால் தாவோ மட்டுமே குறையில்லாத முழுமையான மதம்.

*வானம் நிர்மலமாக இருக்கிறது. பூமி சேறும் சகதியாகத் தெளிவற்று இருக்கிறது.*

அதனால் தான் நீங்கள் ஜோர்பாவாக இருக்க வேண்டும் என்று நான் சொல்கிறேன். ஜோர்பா என்றால், நிகாஸ் கஜண்ட்ஜாக்கிஸ் வடிவமைத்த கிரேக்கன் ஜோர்பா இல்லை. அவன் பூமியைச் சேர்ந்தவன். சேற்றிலும் சகதியிலும் உழல்பவன். புத்தனாக மலர்ந்து விட்ட ஜோர்பாவாக நீங்கள் இருக்க வேண்டும் என்பது தான் என் லட்சியம்.

நீங்கள் புத்தனாக இருக்க வேண்டாம். ஏனென்றால் புத்தன் முழுக்க முழுக்க வானத்தைச் சேர்ந்தவன். அவன் அக்கரையில் வாழ்பவன். பூமியை வெறுப்பவன். ஏன் இரண்டுமாக நீங்கள் இருக்கக்கூடாது?

இரண்டுமாக இருக்க முடியும் என்றால் ஏன் ஒன்றை விட வேண்டும்? முழுமையாக வாழ முடியும் என்னும் போது ஏன் பாதி வாழ்க்கை வாழ வேண்டும்? வாய்ப்புகளைப் பயன் படுத்தி மேலும் மேலும் வளர்ந்து உயர்ந்த இருப்புநிலையை அடைந்தால் என்ன?

*வானம் அசைந்து கொண்டிருக்கிறது. பூமி அசையாமல் இருக்கிறது*

*ஆண்மை நிர்மலமாக இருக்கிறது, பெண்மை கலங்கலாக இருக்கிறது*

இவை எல்லாம் உருவகங்கள். இங்கே ஆண்மை என்பது உடற்கூறு ரீதியாக ஆண்களிடம் உள்ள தன்மை என்று பொருள் இல்லை. ஆண்மை என்பது இங்கே அறிவைக் குறிக்கிறது. அறிவு எப்போதும் தெளிவாகவே இருக்கிறது. உதாரணமாக இரண்டும் இரண்டும் நான்கு என்று அறிவு சொல்லும் போது அதில் தெளிவுக்குப் பஞ்சமில்லை.

அறிவின் உச்சகட்டம் ஞானம். புத்தர் என்ற சொல்லுக்கே உச்சகட்ட ஞானத்தை அடைந்தவர் என்று பொருள். அவரது வார்த்தைகள் தெள்ளத் தெளிவாக இருக்கின்றன. அவற்றில் சேறோ சகதியோ, சந்தேகமோ, குழப்பமோ எதுவும் இல்லை.

புத்தருடையதைப் போன்ற தெளிவான வாக்கியங்களை நீங்கள் வேறு எங்கும் பார்க்க முடியாது. அவரது வாக்கியங்களில் புதிர் இருக்காது மறை பொருள் இருக்காது. உள்ளதை உள்ளபடி சொல்லும் சாதாரண வாக்கியங்கள் அவை.

புத்தர் தனது சீடர்களிடம் அடிக்கடி சொல்வார். “என்னிடம் தத்துவார்த்தமான கேள்விகளைக் கேட்காதீர்கள். அவற்றால் யாருக்கும் பயனில்லை. அவை உங்களுக்கு எந்த வகையிலும் உதவாது. உங்களைப் பாதிக்கும் உண்மையான நேரடியான கேள்வி களை மட்டுமே என்னிடம் கேளுங்கள். உங்கள் வாழ்க்கையில் உள்ள பிரச்சினைகளைப் பற்றி மட்டுமே பேசுங்கள். அவற்றைத் தீர்த்து வைக்க நான் உதவுகிறேன்.

அவர் இந்தக் கதையை பல முறை சொல்லியிருக்கிறார்.

ஒரு நாள் ஒரு தத்துவவாதியின் மேல் எங்கிருந்தோ வந்த அம்பு பாய்ந்துவிட்டது. அருகில் இருந்தவர்கள் அவரிடம் ஓடினார்கள். அந்த அம்பை வெளியில் எடுக்க முயற்சி செய்தார்கள். ஆனால் தத்துவவாதி அவர்களைத் தடுத்தார். “முதலில் இந்த அம்பு உண்மையா, இல்லை வெறும் வெளித் தோற்றமா என்பதைச் சொல்லிவிட்டுப் பின் அம்பை எடுங்கள்.”

அது உண்மையா பொய்யா என்பது தத்துவார்த்தமான கேள்வி. குறிப்பாக இந்தியாவில். இந்த உலகம் மாயையா, இல்லையா என்று அவர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

அந்த தத்துவவாதி பழைய பழக்கத்தில் பேச ஆரம்பித்தார். “இந்த அம்பு உண்மையா, பொய்யா என்பதை முதலில் நாம் தீர்மானம் செய்ய வேண்டும். இது பொய் என்றால் இதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?

“இது இங்கே இருப்பது போல் மாயத் தோற்றத்தைக் காட்டு கிறது என்றால் அதனை வெளியே எடுப்பதால் என்ன லாபம்? உண்மையிலேயே இந்த அம்பு இங்கு இல்லை. இது பாம்பு போல் தோற்றமளிக்கும் ஒரு கயிறு. உண்மையிலேயே இது கயிறுதான்.

“நீங்கள் தான் இருட்டில் இதைப் பாம்பு என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனால் இதைக் கொல்ல வேண்டிய அவசியம் இல்லை. உண்மையிலேயே இல்லாத ஒரு பாம்பை எப்படி உங்களால் கொல்ல முடியும்?”

அம்பை எடுக்க வந்த புண்ணியவான்கள் வாயடைத்துப் போய்விட்டார்கள். அவர்களுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை.

உள்ளபடியே அந்த அம்பு உண்மையிலேயே அவர் மேல் இருக்கிறது என்பது நிரூபிப்பது கஷ்டமான காரியம். அதை நிரூபிக்க வழியில்லை. எல்லாமே ஒரு மாயையாக இருக்கலாமே!

உதாரணமாக இதோ நான் உங்கள் முன் பேசிக் கொண்டிருக் கிறேன். இது உங்கள் கனவல்ல என்று எப்படி உங்களால் நிரூபிக்க முடியும், சொல்லுங்கள். பல சமயங்களில் இது கனவாகவே இருக்கலாம்.

என் சந்நியாசி அசாங் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறான். “ ஓஷோ உங்களுக்கு நன்றி. நீங்கள் என் கனவில் அடிக்கடி காட்சி தருகிறீர்கள்.” இதோ இப்பொது அசாங் இங்கே உட்கார்ந் திருக்கிறான். இப்போது அவன் காண்பது கனவா, இல்லை நனவா? அவனுக்குக் குழப்பமாக இருக்கும். இது கனவா நனவா என்று உறுதியாக யாராலும் சொல்ல முடியாது.

மேற்கத்திய தத்துவத்தில் பெர்க்கிலி (Berkeley) என்ற மேதை இந்த வகை கொள்கையை உடையவர். அவர் இந்த உலகமே உங்கள் மனத்தில் தோன்றும் ஓர் எண்ணம் தான் என்று சொல் கிறார். உலகம் என்ற எண்ணம் உங்கள் மனதில் இருக்கிறது அவ்வளவுத ான். உண்மையிலேயே உங்களுக்கு வெளியே இவ்வளவு பெரிய உலகம் இல்லை என்று சொல்கிறார். வெளியில் காணும் உலகம் நீங்கள் காணும் கனவுதான் என்று அவர் சொல்கிறார்.

ஒரு நாள் பெர்க்கிலி அவரது நண்பர் ஜான்சனுடன் காலையில் நடைப் பயிற்சி செய்து கொண்டிருந்தார். ஜான்சன் யதார்த்தவாதி. ‘இந்த உலகம் உங்கள் மனதில் தான் இருக்கிறது. உண்மையில் அது இல்லை.’ என்று ஜான்சனிடம் அவர் சொன்ன போது ஜான்சனுக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்துவிட்டது.

சரி, இவரை வாய் வார்த்தையாய்த் திருத்த முடியாது ்பதை உணர்ந்த ஜான்சன் கீழே இருந்த ஒரு கல்லை எடுத்து

பெர்க்கிலியின் காலில் போட்டார். வலி தாங்க முடியாமல் பெரிக்கிலி கதறினார். அவரது காலிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

“பெர்க்கிலி, இப்போது என்ன சொல்கிறாய்?” என்று பெருமிதத்துடன் கேட்டார் ஜான்சன்.

“இப்போதும் அதையே தான் சொல்கிறேன். இதுவும் உன் மனதில் இருக்கும் ஓர் எண்ணம்தான். நீ என் மேல் கல்லை எறிந்தது, நான் வலியால் கத்தியது, என் முன்னே நிற்கும் நீ, எல்லாமே எண்ணங்கள்தான். நான் இருப்பது உன் எண்ணத்தில். நீ இருப்பது என் எண்ணத்தில். இதில் யாருமே உண்மையில்லை.

“உலகே மாயை. நாம் எல்லாருமே வெறும் எண்ணங்கள் மட்டும்தான். நீ கல்லை விட்டு எறிந்ததால் மட்டும் அந்தக் கல் உண்மை என்று ஆகிவிடாது. ஏனென்றால் நான் பல முறை கனவிலேயே கத்தியிருக்கிறேன்.

“சில சமயங்களில் என் கனவுகளில் என் மேல் கல் பட்டிருக்கிறது. கனவிலேயே இரத்தம் வருவதைப் பார்த்திருக்கிறேன். அதனால் அந்தக் கனவு உண்மை என்று ஆகிவிடுமா? நான் கண்ட கனவுக்கும் இப்போது நடக்கும் நிகழ்வுக்கும் என்ன வித்தியாசம், சொல், பார்ப்போம்.”

ஜான்சனால் பதில் பேச முடியவில்லை.

இப்படி ஒரு தத்துவத்தைப் பொய் என்று நிரூபிப்பது கடினம். நமது நாட்டில் ஆதி சங்கரர் இந்த் தத்துவத்தைத்தான் அத்வைதம் என்று போதித்தார். மேலைநாட்டில் அதே தத்துவத்தைத்தான் பெர்க்கிலி போதித்தார்.

இருவருக்கும் இதுவரை எதிர்ப்பு இல்லை. இவர்களை யாருமே நம்பவில்லை. அவர்களே கூட அவர்களை நம்பவில்லையோ என்றுதான் தோன்றுகிறது. அவர்கள் தத்துவத்தை அவர்களே நம்பியிருந்தால் அவர்கள் சாப்பிட்டிருக்க மாட்டார்கள், தூங்கி யிருக்க மாட்டார்கள். எல்லாமே கனவு என்றால் எதற்காகக் கவலைப் பட வேண்டும்?

எல்லாமே கனவு, எண்ணங்கள்தான் என்று வாய்கிழியப் பேசிய பெர்க்கிலி திருமணம் செய்து கொண்டார். மனைவியோடு உடலுறவு கொண்டார். அதன் மூலம் குழந்தைகளைப் பெற்றார்.

இது என்ன முட்டாள்தனம்? தொடர்ந்து உணவருந்தினார். சில சமயம் நோய்வாய்ப்பட்டார். அதற்கு மருந்து உட்கொண்டார். இவர்கள் கொள்கையை இவர்களே நம்பினார்களா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

சங்கரர் உலகே மாயை என்று சொல்கிறார். இந்த உலகைத் துறந்து விட வேண்டும் என்றும் சொல்கிறார். இந்த உலகமே மாயை என்றால் அதை எதற்குத் துறக்க வேண்டும்? உங்களால் எதைத் துறக்க முடியும்? உலகம் என்பதே இல்லை என்றால் அதை எப்படித் துறப்பதாம்? இல்லாத ஒன்றைத் துறப்பது முடியாத காரியம். உலகமே இல்லை என்றால், நாம் பார்ப்பவை யாவுமே பொய் என்றால், பார்க்கும் நாம் மட்டும் எப்படி உண்மையாக இருக்க முடியும்? பார்ப்பவை இல்லாவிட்டால் பார்ப்பவரும் இல்லாதவராகிவிடுவார். துறப்பதற்கு ஒன்றும் இல்லையென்றால், துறப்பவரே இல்லாதவராகிவிடுவார்.

அவர்கள் தங்கள் தத்துவங்களையே நம்பவில்லை. என்றாலும் அவர்களை எதிர்த்து வாதம் புரிவது இயலாத காரியம். அதற்கு வழியே இல்லை. இந்த மாயாவாதத்தைக் கண்டிக்க ஆயிரம் வழிகளில் முயன்று பார்த்தார்கள். எல்லாமே தோல்விதான்.

உதாரணமாக, பெர்க்கிலி சொல்வார். 'நீங்கள் உங்கள் அறையை விட்டு வெளியே போனால் அறையில் இருக்கும் மேஜை, நாற்காலி, புத்தகங்கள் உடனே மறைந்துவிடும். ஏனென்றால் அவற்றைப் புறநிலைப்படுத்த நீங்கள் இல்லையே! திரைப்படம் ஓடிக்கொண்டிருக்கும் புரொஜெக்டரை (projector) நீங்கள் வெளியே எடுத்துக் கொண்டு போய்விட்டால், சுவரில் தெரிந்து கொண்டிருந்த திரைப்படம் தானாகவே மறைந்துவிடும். திரைப்படம் ஓடிக் கொண்டிருக்கும் அறையை விட்டு நீங்கள் வெளியே போய்விட்டாலேயே, உங்களைப் பொறுத்தமட்டில் அந்த திரைப்படம் மறைந்துவிடும்.'

உடனே நீங்கள் கேட்கலாம், 'அது எப்படி மறையும்? நான் வரும் போது பார்த்தேனே, படம் ஓடிக் கொண்டிருந்ததே? நான் வெளியே வந்துவிட்டால் படம் எப்படி மறையும்?'

உடனே பெர்க்கிலி கேட்பார், 'நீங்கள் அங்கே இல்லாத போது திரையில் படம் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதை உங்களால் நிரூபிக்க முடியுமா?'

நீங்கள் சொல்வீர்கள், 'ப்பூ.. இது பெரிய காரியமா? நான் அறையைவிட்டு வெளியே போய்விட்டு பின் கதவில் இருக்கும் சாவித்துவாரம் வழியாகப் பார்த்தால் படம் ஓடுவது எனக்குத் தெரியுமே?'

அவர் சொல்வார், 'ஆமாம் தெரியும். ஆனால் இப்போது நீங்கள் அந்த சாவித்துவாரம் வழியாக அந்த அறைக்குள் நுழைந்து விட்டீர்களே! அதனால் படம் தெரியும். படம் என்ற எண்ணத்தை அந்த சிறு துவாரம் மூலமாக நீங்கள் புறநிலைப்படுத்திவிட்டீர்கள்'

பெர்க்கிலியின் வாதங்களைப் பல வருடங்களாகக கேட்டுக் கொண்டிருந்த ஒருவன் எப்படியாவது அவரது வாதம் தவறு என்று நிருபித்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண் டான். பல நாட்கள் சிந்தித்து பின் ஒரு நாள் பெர்க்கிலியிடம் போய் நின்றான்.

"நீங்கள் ரெயிலில் போய்க் கொண்டிருக்கிறீர்கள். ரெயிலில் ஒரு பெட்டியில் நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள். ரெயில் வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. உங்கள் பெட்டியும் ரெயிலுடன் போய்க் கொண்டிருக்கிறது. உங்கள் பெட்டியின் அடியில் நிச்சயமாக சக்கரங் கள் இருக்கும். அந்த சக்கரங்களை நீங்கள் பார்க்க முடியாது.

"ஆனால் அவை இல்லை என்றும் உங்களால் மறுக்க முடியாது. ஏனென்றால் உங்கள் பெட்டி நகர்வதால் அதற்கு சக்கரம் இருக்கிறது என்பது தெளிவாகிறது. எனவே நீங்கள் பார்க்காத சக்கரமும் உண்மை என்று தெளிவாகிறது. எனவே இந்த உலகமே ஒரு கனவு என்று சொல்லும் உங்கள் கொள்கை தவறு...."

"நிறுத்தப்பா. உனக்குத் தெரியாது. அது கடவுளின் எண்ணமாக இருக்கலாமே! இந்த உலகம் என்னுடைய எண்ணம் மட்டும் இல்லை. இறுதியாகப் பார்த்தால் இது கடவுளின் எண்ணம். இது கடவுளின் கனவு. அவர் கனவில் தான் நாம் இருக்கிறோம். நாம் என்றால், நான், நீ, அந்த ரெயிலை ஓட்டுபவர், ரெயில் பயணி, ரெயிலில் உள்ள சக்கரங்கள் எல்லாமே கடவுளின் கனவில் வரும் காட்சிகள்."

பெர்க்கிலியை வாதத்தில் ஜெயிக்க வந்தவன் பின்னங்கால் பிடரியில் பட அந்த இடத்தைவிட்டே ஓடிப் போனான்.

இந்த மாதிரி தத்துவங்களைத் தகர்க்க முடியாது. அவை அபத்தமானவை என்று நமக்குத் தெரியும். என்றாலும் அவற்றை மறுத்துப் பேச முடியாது.

சரி, இப்போது அம்பு தைத்த தத்துவவாதி என்ன ஆனார் என்று பார்ப்போம். மக்கள் அந்த அம்பைப் பிடுங்கிப் போட்டு அவரைக் காப்பாற்றலாம் என்று நினைத்தார்கள். ஆனால் அவர் அம்பு உண்மையா, பொய்யா என்ற தத்துவக் கேள்வியை எழுப்பி அவர்களை ஒன்றும் செய்ய விடாமல் செய்துவிட்டார். மக்கள் குழப்பத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது புத்த பெருமான் அந்த வழியே போய்க் கொண் டிருந்தார். அவரிடம் போய் நடந்ததைச் சொன்னார்கள். புத்தர் கருணை பொங்கும் முகத்துடன் அந்த தத்துவவாதியின் அருகே வந்தார்.

"இந்த அம்பு உண்மையா, பொய்யா போன்ற கேள்விகளை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். சாவகாசமாக நாம் ஒரு பட்டிமன்றமே நடத்தலாம். முதலில் இந்த அம்பை உங்கள் உடம்பில் இருந்து எடுக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்த அம்பு உங்களைக் கொன்றுவிடும்.

"நீங்கள் உயிரோடு இருந்தால்தான் நாம் நமது வாதங்களைத் தொடர முடியும். இந்த அம்பை உங்களிடம் இருந்து எடுத்த பின் அம்பு உண்மையா, பொய்யா என்பதை நீங்களே தீர்மானம் செய்து கொள்ளுங்கள்.

"இப்போதைய அவசரத் தேவை தத்துவ விவாதம் இல்லை, இந்த அம்பை வெளியில் எடுத்துப் போட்டு உங்களுக்குச் சிகிச்சை செய்யக்கூடிய ஒரு நல்ல வைத்தியர். இந்த அம்பில் இருக்கும் விஷத்தை வெளியில் எடுத்து, பின் விஷமுறிவுக்கு ஏற்ற மருந்தைக் கொடுக்க வல்ல நல்ல வைத்தியர்தான் உங்களுக்குத் தேவை. அம்பு பொய்யா? அப்படியே இருந்துவிட்டு போகட்டும். ஆனால் அதை விவாதிக்க இது நேரமில்லை."

மனிதனின் நிலை குறித்தும் புத்தர் இதே கருத்தைத்தான் சொல்வார். நீங்கள் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அதனால் உங்களுடைய அவசரத் தேவை அந்தத் துன்பத்தைத் தரும் விஷ அம்பை உங்களிடம் இருந்து உருவிப் போடுவதுதான். இது தத்துவ விவாதம் இல்லை. உங்களுடைய ஜீவ-மரணப் போராட்டம். புத்தருடைய வார்த்தைகள் தெளிவாக இருக்கின்றன. அவை அறிவு சார்ந்ததாய், எல்லாரும் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் எளிதாக இருக்கின்றன.

ஒரு சராசரி அறிவுள்ள மனிதன் புரிந்து கொள்ளக் கூடியதைத் தான் புத்தர் போதித்தார். அதனால் தான் இன்று புத்தர் பிரபலமாக இருக்கிறார். அவருடைய அணுகுமுறை அறிவு சார்ந்ததாக இருக்கிறது. அதனால் தான் இந்த நூற்றாண்டில் கூட அவரது முறை செல்லுபடியாகிறது.

*ஆண்மை நிர்மலமாக இருக்கிறது*

இதன் உட்பொருள் என்னவென்றால் இருப்பதிலேயே மிகவும் கீழ்நிலையில் இருப்பது நமது அறிவு அதாவது வெளியில் உள்ளவற்றைப் பகுத்தறியும புறத்தறிவு. ஞானம் எல்லாவற்றிற்கும் மேலே உச்சத்தில் இருக்கிறது.

*பெண்மை கலங்கலாக இருக்கிறது*

இந்த வாக்கியத்தின் உட்கருத்தையும் சற்று கூர்ந்து கவனிக்க வேண்டும். கலங்கல் என்று சொல்லப்படுவது கீழ்மட்ட நிலையில் மிருகங்களுக்கு இருக்கும் உணர்வு. விலங்குகளுக்கு மனச்சாட்சி இல்லை. நம்மைப் போல் சிந்திக்கும் திறன் இல்லை.

அவற்றின் உடல்கள் சொல்வதை, உணர்வு சொல்வதை விலங்கு அப்படியே செய்துவிடுகிறது. அதில் முரண்பாடுகளும் இல்லை. ஆனால் அது கீழ்மட்ட நிலையில் உள்ளது. உச்சகட்டத்தில் இருப்பது நமக்குள்ளே இருக்கும் உள்ளுணர்வு.

சூஃபி ஞானிகள், ஜென் துறவிகள் பேசுவது நமக்கெல்லாம் புதிராக இருக்கிறது. அவர்கள் வார்த்தைகளை அப்படியே அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. அவர்கள் வார்த்தைகள் தெளிவாக இருப்பதில்லை. அவற்றை நாம் எளிதில் புரிந்து கொள்ள முடியாது. கொஞ்சம் போராடித்தான் புரிந்து கொள்ள வேண்டும்.

நான் மீண்டும் சொல்கிறேன். இங்கே ஆண், பெண் என்று நான் சொல்வது உடற்கூறு ரீதியான பாகுபாடுகளை அல்ல. ஆனால் உடற்கூறு ரீதியாகவே பார்த்தாலும் ஆணைவிட ஒரு பெண் தனது உள்ளுணர்வை அதிகம் பயன்படுத்துகிறாள். அவளது உள்ளுணர்வு ஆணுடையதைவிட வலுவாக இருக்கிறது.

“நீங்கள் பல ஞானிகளைப் பற்றி எங்களுக்குச் சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் எல்லாருமே ஆணாக இருப்பதன் மர்மம் என்ன? ஒரு பெண் கூடவா புத்தரைப் போல், மகாவீரரைப் போல் ஞானியாகவில்லை?” என்று பலரும் என்னிடம் கேட்கிறார்கள்.

ஞானிகள், புத்தர்கள் எப்போதும் ஆண்களாகத்தான் இருப்பார்கள். ஞானத்தை அடைய, இறைவனை அடைய ஒரு பெண்ணின் அணுகுமுறை அடிப்படையில் மாறுபட்டதாக இருக்கும். அதனால் தான் புத்தர்களில் பெண்பாலார் இருக்க மாட்டார்கள்.

ஞானம் பெற்ற பெண்கள் பக்த மீராவாக, மேக்டலீனாக, லல்லாவாக, ரபியாவாகத்தான் இருப்பார்கள். ஆனால் அவர்கள் புத்தர்களாக இருக்க மாட்டார்கள். அவர்கள் அணுகுமுறை வேறுபட்டதாகத்தான் இருக்கும். மீரா அறிவுஜீவித்தனமாகப் பேசமாட்டாள். பக்தி ரசம் சொட்டச் சொட்டப் பாடுவாள்.

புத்தரைப் போல் மீரா உபதேசங்கள் செய்ததாக வரலாறு இல்லை. மீராவின் பாட்டும் நடனமும் முற்றிலும் வேறு வகையைச் சேர்ந்தது. மீரா வாத-பிரதிவாதங்களில் கலந்து கொள்ள மாட்டாள். அது பெண்மையின் வழியல்ல. அவளுடைய வாதம் எல்லாம் அவளுடைய அழகு நடன்ம் தான்.

பரவசம் பொங்கும் நடனம்தான் அவள் நம் முன் வைக்கும் வலுவான வாதம். உங்களால் அவளுடைய நடனத்தைப் பார்க்க முடிந்தால், அதில் பொதிந்திருக்கும் பரவசத்தை உணர முடிந்தால் நீங்கள் ஞானம் பெற்றவர்களாகிவிடுவீர்கள். உங்களால் அவளுடைய நடனத்தைப் புரிந்து கொள்ள முடியாது. நடன மாடுபவர்களை நாம் யாருமே புரிந்து கொள்ள முடியாது. அவர்கள் நாட்டியத்தைப் பார்க்க முடியும், அதில் உள்ள பரவசத்தை உணர முடியும். மீராவின் வார்த்தைகள் அறிவுபூர்வமானவை அல்ல. உணர்வுபூர்வமானவை.

உதாரணமாக மனவியல் மேதை ஃப்ராய்டு அவருக்குத் தெரிந்த பெண் ஞானிகளை எல்லாம் கடுமையாகக் கண்டித்து எழுதினார். நல்ல வேளை, அவருக்கு நமது நாட்டின் பக்த மீராவைப் பற்றித் தெரியாது. தெரிந்திருந்தால் மீராவையும் பழித்திருப்பார். ஃப்ராய்டுக்கு சில நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த பெண் ஞானி புனித தெரசாவைப் பற்றித் தெரியும்.

அவளை அவர் பயங்கரமாகப் பழித்துரைத்தார். ஏனென்றால் புனித தெரசா தான் ஏசுநாதரைத் திருமணம் செய்து கொண்டதாகக் கூறினாள். இது போதாதா ஃபராய்டுக்கு, அவருக்குப் பிடித்தமான செக்ஸ் கோட்பாட்டை உள்ளே கொண்டுவர?

'என்ன ஏசுநாதர் தன் கணவர் என்று சொன்னாளா? சரிதான். அவளுக்கு ஒருவகை வக்கிர பாலுணர்வு இருக்கிறது. அதனால் தான் இப்படி எல்லாம் பேசுகிறாள்.' என்று கூறினார் அந்த மனவியல் மேதை.

அது மட்டும் இல்லை. 'அவள் தனது பாலுணர்வைக் கட்டுப் படுத்தி வைத்திருந்தாள். அது பீறிட்டு வெளியே கிளம்பும்போது இப்படியெல்லாம் கிறுக்குத்தனமாகப் பேசுவாள். ஓர் ஆணுடன் இயல்பான உடலுறவு கொள்ள முடியாததால் வானத்தில் இருக்கும் கடவுளைப் புணர்ந்ததாகப் பேத்திக் கொண்டிருக்கிறாள். யாரோ, ஏசுவாம், கிறிஸ்துவாம். என்ன பைத்தியக்காரத்தனம்? ஏசுவோடு அவளுக்குக் கள்ளக்காதலா?' என்ற ரீதியில் புனித தெரசாவை நக்கலடித்திருக்கிறார் ஃப்ராய்டு.

இன்னொரு கோணத்தில் பார்க்கும் போது அந்த ஃபராய்டுக்கு நமது மீராவைப் பற்றித் தெரியாதது ஒரு துரதிர்ஷ்டம் தான். மீராவைப் பற்றித் தெரிந்திருந்தால், அவளை இன்னும் மோசமாகப் பழித்திருப்பார் ஃப்ராய்டு. அது அவருக்கு அல்வா சாப்பிடுவது மாதிரி. புனித தெரசாவாவது வெறும் திருமணம் என்பதோடு நிறுத்திக் கொண்டாள். மீரா அதற்கு ஒரு படி மேலே போய் விட்டாள்.

"இறைவா, என் தலைவா! என் காதலா! நீ எப்போது வருவாய்? உனக்காக நான் படுக்கையை விரித்து வைத்திருக்கிறேன். அந்தப் படுக்கையில் ரோஜா மலர்களைத் தூவியிருக்கிறேன்.

"உன் வருகைக்காக நான் ஏக்கத்தோடு காத்துக் கொண் டிருக்கிறேன். இரவு கழிந்து கொண்டேயிருக்கிறது. நீ இன்னும் வரவில்லையே? நான் உனக்காகக் கதறி அழுது கொண் டிருக்கிறேன். நீ எப்போது இங்கே வரப் போகிறாய்? எப்போது என்னோடு உறவு கொள்ளப் போகிறாய்?"

மீரா இலை மறைவு காய் மறைவாகக்கூட பேசவில்லை. அவள் நேரிடையாக தேங்காய் உடைத்தது போல் பேசுகிறாள். ஃப்ராய்டு அவளது வார்த்தைகளை அப்படியே அர்த்தம் செய்து கொண்டிருப்பார். அதுதான் அவருடைய பாணி.

அப்படி அர்த்தம் செய்து கொண்டால் எல்லா ஞானிகளையும் வக்கிரம் பிடித்தவர்கள் என்று எளிதாக நிரூபித்து விடலாம். உண்மை என்னவென்றால் ஃப்ராய்டே வக்கிரம் பிடித்தவர்தான்.

அவரால் பெண்மையை, பெண்ணின் மனதைப் புரிந்து கொள்ள முடியாது.

அதனால் தான் யூங் (Jung) ஃப்ராய்டை விட்டு விலகிப் போனார். ஃப்ராய்டின் புரிந்து கொள்ளுதல் அறிவுஜீவித்தனமாகவே இருந்தது. அதில் ஆழமான அறிவோ ஞானமோ இல்லை. அதில் உள்ளுணர்வுக்கு வேலையே இல்லை. ஆனால் யூங்கின் மனம் பெண்மையானது. அவரால் எந்த அளவுக்கு அறிய முடியுமோ, அதே அளவிற்கு உணரவும் முடியும்.

பெண்களோடு நெருங்கிப் பழகும் எல்லா ஆண்களுக்கும், பெண்கள் வித்தியாசமானவர்கள் என்ற அடிப்படை உண்மை புரிந்திருக்கும். ஒரு பெண்ணோடு தர்க்கரீதியாக விவாதம் செய்ய முடியாது. அதை அவள் புரிந்து கொள்ள மாட்டாள். புரிந்து கொள்ள முடியாது. அவளது போக்கைப் பார்க்கும் அவள் வேறு கிரகத்தைச் சேர்ந்தவளோ என்று நமக்கு நினைக்கத் தோன்றும்.

அதே போல் தான் ஒரு பெண்ணின் நிலையும். எப்போது பார்த்தாலும் அறிவின் மூலமாகவே உலகத்தை உணர முயன்று கொண்டிருக்கும் முட்டாள்கள் என்று தான் ஆண்களைப் பற்றி அவர்கள் நினைப்பார்கள். உணர்வு சம்பந்தப்பட்ட எதையும் புரிந்து கொள்ள லாயக்கில்லாதவர்கள் ஆண்கள் என்றுதான் பெண்கள் நினைக்கிறார்கள்.

ஆண் வாதம் செய்கிறான். தர்க்கரீதியாக உண்மையைப் புரிய வைக்க முயற்சி செய்கிறான். ஆனால் அதை பெண்ணின் மனம் ஏற்றுக் கொள்வதில்லை. அது அவளுடைய வழியில்லை. தர்க்கத்திற்கும், பெண்ணிற்கும் சம்பந்தமேயில்லை.

தன் மனைவியோடு பல மணிநேரம் செய்யும் வாதத்தைவிட ஒரு சிறிய ரோஜாப்பூ அதிக மதிப்புடையது என்பதைப் பல கணவரகள் புரிந்து கொள்வதில்லை.

ஒரு மணி நேரம் வாய்கிழியப் பேசுவதைப் புரிந்து கொள்ளாத ஒரு பெண், கணவன் கொண்டு வந்து தரும் சிறிய ரோஜாப்பூவின் பின்னால் இருக்கும் அவனது அன்பைப் புரிந்து கொள்கிறாள். நீங்கள் ஏன் அவளைக் காதலிக்கிறீர்கள் என்று நாட்கணக்கில் வாதம் செய்யுங்கள்.

உங்கள் வார்த்தைகளில் ஒன்று கூட அவள் மண்டையில் ஏறாது. ஒரு சிறிய ரோஜா மலரைக் கொண்டு போய், "நான்

உன்னைக் காதலிக்கிறேன்.'' என்று மென்மையாகச் சொல்லுங்கள். அவள் புரிந்து கொள்வாள். பெண் உணர்ச்சிமிக்கவள். உணர்வு பூர்வமானவள். ஓர் ஆணால் ஒரு பெண்ணைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் அவள் சொல்வது, செய்வது எல்லாமே காரண-காரிய அறிவுக்குப் புறம்பானதாக இருக்கும்.

கொஞ்சம் கொஞ்சமாக கணவர்கள் மௌனிகளாகி விடுகிறார்கள். பின் செவிடுகளாகிவிடுகிறார்கள். பெண்களைப் பேச விடுகிறார்கள். "அவள் என்ன அபத்தத்தை வேண்டுமானாலும் பேசிவிட்டுப் போகட்டும். நாம் ஏன் அதைக் கவனிக்க வேண்டும்?'' என்ற மனோபாவத்துக்கு வந்துவிடுவார்கள்.

கடவுள் ஏன் முதலில் ஆணைப் படைத்து, சிறிது நேரம் கழித்துப் பெண்ணைப் படைத்தார் தெரியுமா? பாவம், ஆண் இரண்டு வார்த்தையாவது நிம்மதியாகப் பேசட்டுமே என்றுதான்.

பிருந்தாவனத்தில் இரண்டு சந்நியாசிகள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். "பல நாட்கள் முயன்று பார்த்தேன். விட முடியவில்லை. அதை விடுவதற்கு மிக அதிகமான மனோதிடம் வேண்டியிருந்தது. கடைசியில் ஒருவழியாக அதை விட்டுவிட்டேன். இப்போது எனக்கு வெற்றிதான்.''

"எதை விட அவ்வளவு கஷ்டப்பட்டாய்?''

"உணவுக் கட்டுபாட்டை. இப்போது மனம் போல் உண்கிறேன்.''

ஒரு பெண் மற்றொரு பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தாள்.

"நான் இந்த உலகின் எட்டாவது அதிசயமாம். நேற்று என் காதலன் என்னிடம் வழிந்தான்.''

"அது சரி, நீ என்ன சொன்னாய்?''

"ஏழு அதிசயங்களில் ஏதாவது ஒன்றோடு உன்னைப் பார்த்தேன், மவனே, நீ செத்த...''

"உனக்கு டைப்ரைட்டர் தெரியுமா?'' வேலைக்கு வந்த பெண்ணிடம் முதலாளி கேட்டார்.

"தெரியும் சார். நான் பைபிள் முறையைக் கடைப் பிடிக்கிறேன்.''

"டைப் அடிப்பதில் பைபிள் முறையா? நான் கேள்விப் பட்டதேயில்லையே?''

"தேடுங்கள். கிடைக்கும் என்று ஏசுநாதர் சொன்னாரே அந்த முறை. தேடித் தேடி டைப் அடிப்பேன்."

ஆண்கள் ஏன் பெண்டாட்டி தாசர்களாக, ஆமாம்சாமிகளாக இருக்கிறார்கள்? ஏறக்குறைய எல்லா ஆண்களும் அப்படித்தான் இருக்கிறார்கள். அப்படித்தான் இருக்க முடியும். எவ்வளவு நேரம் தான் மனைவியோடு வாதம் செய்ய முடியும் சொல்லுங்கள். மனைவியோடு வாதம் செய்வதில் பயனேயில்லை. அப்படி வாதம் செய்யும் போது நீங்கள் முட்டாளைப் போல் காட்சியளிப்பீர்கள். மனைவியோடு வாதிடுவதற்குப் பதிலாக சுவரோடு வாதிடலாம்.

நீங்கள் வாதம் செய்வீர்கள். உங்கள் மனைவி பெருங்குர லெடுத்து அழுவாள். உங்களுக்கு என்ன செய்வது என்று தெரி யாது. நீங்கள் அவளிடம், "அமைதி, அமைதி. நாம் உட்கார்ந்து பேசித் தீர்த்துக் கொள்ளலாமே!" என்று அவளிடம் மன்றாடிக் கொண்டிருக்கும் போது அவள் சாமான்களைத் தூக்கியெறிய ஆரம்பிப்பாள். பாத்திரங்களைப் போட்டு உடைப்பாள். கதவை டமால் என்ற பெருஞ்சத்தத்துடன் சாத்துவாள்.

அவளோடு பேசி என்ன பயன் என்று விரக்தி வந்துவிடும் உங்களுக்கு. அவளோடு எப்படித் தொடர்பு கொள்வது? அவளை எப்படிப் புரிந்து கொள்ளச் செய்வது என்று தவித்துக் கொண்டிருப்பீர்கள்.

அவள் சொல்வதைக் கேடக வேண்டும். இல்லாவிட்டால் வீண் வம்பில் மாட்டிக் கொள்ள வேண்டும் என்ற நிலைக்கு வந்துவிடுவீர்கள். அதன் பின் பெண்டாட்டி தாசனாகிவிடுவீர்கள். அவளைப் பொறுத்த மட்டில் உங்கள் வாத-பிரதிவாதங்கள் எல்லாம் கவைக்கு உதவாத குப்பை.

இப்படித்தான் ஒரு பெண்டாட்டி தாசன் இருந்தான். அவன் மனைவி வைத்ததுதான் சட்டம். அவர்கள் ஒரு நிர்வாணக் குடியிருப்புக்குப் போக கிளம்பிக் கொண்டிருந்தார்கள். அந்த குடியிருப்பில் ஆடையணிந்தவர்களுக்கு அனுமதியில்லை. அப்போதும் கணவன் எந்த மாதிரியான உடை அணியக்கூடாது என்று மனைவி ஒரு மணி நேரம் அறிவுரை கொடுத்துக் கொண்டிருந்தாளாம். இது எப்படி இருக்கு?

"நான் என் மனைவியை விவாகரத்து செய்யப்போகிறேன்."

"அதற்கு வலுவான காரணம் வேண்டும்." என்று அவனது வக்கீல் சொன்னார்.

‘‘அவள் சதா எதையாவது தைத்துக் கொண்டேயிருக்கிறாள்.’’

‘‘அது ஒரு காரணமா? நிறையப் பெண்கள் தைக்கிறார்களே!’’

‘‘நாங்கள் உடலுறவு கொள்ளும் போது கூட இவள் தைத்துக் கொண்டிருக்கிறாள்.’’

ஒரு கணவன் அடிக்கடி வெளியூர்ப் பயணம் செய்து கொண்டிருப்பான். ஒரு நாள் குறித்த நேரத்துக்கு முன்னதாகவே வீட்டுக்கு வந்துவிட்டான். வீட்டில் மனைவியுடன் படுக்கையில் வேறோர் ஆணைப் பார்த்ததும் கொதித்துவிட்டான். கையில் இருந்த துப்பாக்கியை எடுத்து அடுத்த ஆணைச் சுட முயற்சி செய்தான்.

மனைவி ஓ என்று கதறினாள். ‘‘ஐயோ, உங்களுக்கு என்ன ஆயிற்று? ஏன் உங்கள் குழந்தைகளின் தகப்பனைக் கொல்லப் பார்க்கிறீர்கள்?’’

*ஆண்மை நிர்மலமாக இருக்கிறது, பெண்மை கலங்கலாக இருக்கிறது*

*ஆண்மை செயல்பாட்டுடன் இருக்கிறது. பெண்மை செயலற்ற நிலையாகப் பரிமளிக்கிறது.*

*அதனுடைய வேராக இருக்கும் சாரத்திலிருந்து வெளிப்படும் தாவோ, பிரபஞ்சத்தில் உள்ள கடைசிப் பொருள் வரை ஊடுருவிப் பாய்கிறது. அதுதான் வானத்தையும், பூமியையும், இரண்டுக்கும் இடைப்பட்ட எல்லா பொருள்களையும் அளித்துக் காக்கிறது.*

*நிர்மலமான தெளிவே தெளிவற்ற கலங்கலை உருவாக்குகிறது. அசைவுதான் அசைவற்ற இருப்புநிலையை உருவாக்குகிறது.*

மேலே உள்ள துணுக்குகளைப் படித்துவிட்டு உடற்கூறு ரீதியான ஆண்மையும் பெண்மையும், உண்மையான ஆண்மையும் பெண்மையும் ஒன்றுதான் என்று கோ ஹ்சுவான் கூறுகிறார் என்று எண்ணிவிடாதீர்கள். இந்த இரண்டுக்கும் கொஞ்சம் தொடர்பு இருக்கிறது. ஆனால் இவை இரண்டும் ஒன்றல்ல.

*(ஓஷோ பேசிக் கொண்டிருக்கும் போது எங்கோ தூரத்தில் சத்தமாக ஒரு குயில் கூவுகிறது)*

இது பெண்மையின் குரல். அந்த பெண்குயில் சொல்கிறது, ‘‘இந்த தாவோவே ஓர் அபத்தம்.’’ அது தன்னுடைய எதிர்ப்பைக் காட்டுகிறது.

○

## 6. நிலைபேறுடைமையைச் சுவைப்போம்

*முதல் கேள்வி:*

*ஓஷோ, மனதைப் பயன்படுத்தாமல் எப்படி தியானிப்பது என்று சொல்லிக் கொடுங்களேன்!*

தியானத்திற்கும் மனதிற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. தியானம் அல்லது ஆழ்நிலை சிந்தனை என்பதே மனமில்லாத ஒரு நிலைதான். நமது தியானத்திற்குப் பெரிய இடைஞ்சல் நமது மனம்தான். மனதின் மூலமாக தியானம் செய்ய முற்படுவது முட்டாள்தனம். அதில் உங்களுக்குத் தோல்வியே கிட்டும். ஏனென்றால் அது இயற்கையில் நடக்கவே முடியாத ஒரு செயல்.

ஒரு ஜென் மாணவன் பல வருடங்களாகத் தியானம் செய்ய முயற்சி செய்து கொண்டிருந்தான். 'எனக்கு அந்த அனுபவம் கிடைத்தது. இந்த அனுபவம் என்னைச் சிலிர்க்க வைத்தது. எனக்குத் தியானம் கைகூடிவிட்டது.' என்று சொல்லிக் கொண்டு பல முறை தனது குருவைத் தேடி வந்தான். ஒவ்வொரு முறையும் குரு, 'நீ சொல்வது எல்லாம் அபத்தம். போய் ஒழுங்காகத் தியானம் செய்யும் வழியைப் பார்.' என்று துரத்திவிடுவார்.

ஒரு நாள் சீடன் தனது குடிசையில் பத்மாசனம் போட்டுக் கொண்டு தியானத்தில் ஆழ்ந்திருந்த போது குரு அவனைத் தேடி வந்தார். அவனைப் முரட்டுத்தனமாகப் பிடித்து உலுக்கினார்.

"ஏய் முட்டாளே, என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நம்மிடம் நிறைய புத்தர் சிலைகள் இருக்கின்றன. அதனால் நீயும் புத்தரைப் போல் சிலையாக உட்கார வேண்டிய அவசியம் இல்லை.

"இப்படி புத்தரைப் போல் உட்கார்வதால் சத்தியமாக உனக்குத் தியானம் கைகூடாது. நான் சொன்னதைச் செய். உடலை செயலற்று

வைத்திருப்பதால் மட்டுமே மனம் செயலற்றுப் போய்விடாது. நீ உன் மனதின் மூலமாகத்தான் உன் உடலைக் கட்டுப்படுத்தி வைத் திருக்கிறாய். மனம் மூலமாகச் செய்யப்படும் எந்தச் செயலும் மனதை இன்னும் வலுப்படுத்தும். அது மனதிற்கு போஷாக்ஷகக் கொடுக்கும்.''

சொல்லிவிட்டுப் போய்விட்டார் குரு. ஒரு வருடம் கழிந்தது. குரு மீண்டும் வந்தார். காலை வேளை. சூரிய ஒளியையும் குளிர்ந்த காற்றையும் அனுபவித்தபடி பரவச நிலையில் அமர்ந் திருந்தான் சீடன். கண்களை மூடிக் கொண்டு தியானம் செய்வதாக நினைத்துக் கொணடிருந்தான்.

பார்த்தார் குரு. இவன் சொல்லித் திருந்த மாட்டான் என்று தெரிந்துகொண்டார் அவர். கீழே கிடந்த ஒரு செங்கல்லை எடுத்து அருகில் இருந்த கருங்கல்லில் பெரிய சத்தத்துடன் தேய்க்க ஆரம்பித்தார். அந்த சத்தம் சீடனுக்கு இடையூறாக இருந்தது. அதற்கு மேல் அவனால் 'தியான'த்தில் உட்காரமுடியவில்லை. குருவைப் பார்த்துக் கத்தினான்.

''ஏன் இப்படி செங்கல்லால் சத்தம் போட்டு என் தியானத்தைக் குலைக்கிறீர்கள்?''

குரு அமைதியாகச் சொன்னார். ''இந்த செங்கல்லைத் தேய்த்து, தேய்த்து நான் ஒரு கண்ணாடியை உருவாக்கப் போகிறேன். இன்னும் கொஞ்ச நேரம் தேய்த்தால் இந்த செங்கல் கண்ணாடியாகிவிடும்.''

சீடனால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ''குருவே, உங்க ளுக்கு மறை கழன்று விட்டது என்று நான் சந்தேகப்பட்டது சரியாகப் போயிற்று. எவ்வளவுதான் தேய்த்தாலும் செங்கல் கண்ணாடியாகுமா? உங்கள் வாழ்நாள் முழுவதும் தேய்த்தாலும் செங்கல் செங்கல்லாகத்தான் இருக்கும் கண்ணாடியாகாது. உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது.''

புன்முறுவலுடன் பதில் சொன்னார் குரு.

''பரவாயில்லை. நான் நினைத்ததைவிட நீ புத்திசாலியாகவே இருக்கிறாய். தேய்ப்பதால் மட்டும் செங்கல் கண்ணாடியாகாது என்று தெரிகிறது அல்லவா? மீண்டும் மீண்டும் ஒரே மாதிரி எண்ணங்களை ஓடவிடுவதால் மனம் மூலம் தியானம் செய்ய முடியுமா என்ன? இரண்டும் ஒன்றுதான். மனத்தைக் கொண்டு

தியானம் செய்ய வேண்டும் என்ற முட்டாள்தனத்தை இன்றோடு விட்டுவிடு.''

சொல்லி முடித்துவிட்டுக் கையில் இருந்த செங்கல்லை எதிரில் இருந்த குளத்தில் போட்டார் குரு. அந்த செங்கல் தண்ணீரில் விழுந்து உண்டாக்கிய பெரிய சத்தம் சீடனிடம் ஓர் அதிசயத்தை உருவாக்கியது. அந்த அதிர்ச்சியில் விழித்துக் கொண்டான் சீடன். பல ஆண்டுகளாக, பல ஜென்மங்களாகத் தொடர்ந்த அவனது ஆன்மிக உறக்கம் கலைந்தது. விழிப்பு நிலைக்கு வந்தான். அவனது வாழ்க்கையில் முதல் முறையாக தியானத்தைச் சுவைத்தான்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்த குரு சத்தமாகச் சொன்னார். ''அது!''

சீடன் சுதாரிப்பதற்குள் அது நடந்துவிட்டது. இப்படி நடக்க வேண்டும் என்பதற்காக அவன் காத்துக் கொண்டிருக்கவில்லை. குரு கல்லைக் குளத்தில் போடுவார் அந்த சத்தம் தன்னை விழிக்க வைக்கும் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அப்படி எதிர்பார்த்திருந்தால் அந்த செயலினால் அவனுக்குப் பலன் கிடைத்திருக்காது.

பாஷோ என்ற ஜென் கவிஞரின் ஹைக்கூ இதனை அழகாகச் சொல்கிறது.

*பழைய குளம்*

*தவளை உள்ளே குதிக்கிறது*

*அப்பா!.... அந்த சத்தம்...!*

அதுதான். அந்த சத்தம் ஒன்றே போதும். பல ஜென்மங்களாய்த் தொடரும் தூக்கத்தைக் கலைக்க!

தியானம் முயற்சியால் வருவதில்லை. சிலர் தியானம் கைகூடவில்லை என்றால் இன்னும் அதிகமாக முயல்கிறார்கள். இது சுத்த அபத்தம். முயற்சி மனதின் பாற்பட்டது. மனம் செய்யும் செயல்தான் முயற்சி. அந்த முயற்சி எப்படி நம்மை மனதைத் தாண்டி அழைத்துச் செல்ல முடியும்?

உங்கள் மனதையே சுற்றிச் சுற்றி வருவீர்கள். நீங்கள் தூக்கத்திலிருந்து விழிக்க வேண்டும். மனம் தான் தூக்கம். தூக்கம் தான் மனம். மனம் சதா கனவுகளில், எண்ணங்களில், நினைவுகளில், பயங்களில், ஆசைகளில் உழன்று கொண்டேயிருக்கிறது.

நீங்கள் கேட்கிறீர்கள்:

*மனதைப் பயன்படுத்தாமல் எப்படி தியானிப்பது என்று சொல்லிக் கொடுங்களேன்!*

ஏன் உங்களால் உங்கள் கண்களைக் கொண்டு பார்க்க முடியாதா என்ன? மனதை உள்ளே இழுக்காமல் உங்களால் எதையும் கவனிக்க முடியாதா? பறவைகள் போடும் மெல்லிய சத்தம், இந்த அமைதி - இதையெல்லாம் பார்க்க மனம் எதற்கு? இது கவனிப்பு. ஒருமுனைப்படுத்துதல் அல்ல.

ஆனால் இது உங்கள் பிரச்சினை மட்டும் இல்லை. தியானம் செய்ய வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கும் கோடிக்கணக் கானவர்களின் பிரச்சினை இது. அவர்கள் பாவம்! மனதை ஒருமுனைப்படுத்துதலை தியானம் என்று தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருமுனைப்படுத்துதல் என்பது மனம் சம்பந்தப்பட்ட ஒரு சமாசாரம்.

அதைத்தான் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் சொல்லித்தருகிறார்கள். ஒருமுனைப்படுத்துதலே வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அது பயன்றறது என்றும் நான் சொல்லவில்லை.

அறுவை சிகிச்சை போன்ற சில வேலைகளுக்கு அது அத்தியாவசியம். ஒருமுனைப் படுத்துவதற்கு முதற்காரியமாக ஒரு புறப்பொருள் வேண்டும். அதனால் தியானம் செய்பவர்களிடம் விளக்கை நினைத்துக் கொள்ளுங்கள், இறைவனின் உருவத்தை நினைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்கிறார்கள்.

விஞ்ஞானத்தில் இந்த ஒருமுனைப்படுத்துதல் வேண்டும். முன்னால் இருக்கும் பொருளின் மேல், நடந்து கொண்டிருக்கும் பரிசோதனையின் மேல் உங்கள் மனம் ஒருமுகப்பட வேண்டும். அப்போதுதான் நீங்கள் ஆழமாக அதைக் கவனிக்க முடியும். சரியான முடிவுகளை எடுக்க முடியும்.

அந்த புறப்பொருளைத் தவிர மற்ற எந்தப் பொருள் மீதும் உங்கள் கவனம் செல்லக்கூடாது. மற்றப் பொருள்களில் உங்களுக்கு இருக்கும் கவனத்தைப் பெயர்த்தெடுத்து முன்னால் இருக்கும் பொருளின் மேல், பரிசோதனையின் மேல் அதை வைக்க வேண்டும்.

அது மட்டும் இல்லை. உங்கள் உணர்வு நிலையை லேசர் ஒளிக்கதிரைப் போல் மிகவும் குறுகலாக, கூர்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அதுதான் விஞ்ஞானத்தின் வழி. புற உலகை ஆராய விஞ்ஞானத்தின் வழிதான் உதவும்.

ஆனால் அகவுலகில் அந்த வழி செல்லுபடியாகாது. அக வுலகில் நீங்கள் உங்கள் மனதை ஒருமுகப்படுத்தத் தேவையில்லை. கடவுளின் உருவத்தின்மேல், தீபத்தின் மேல், உள்ளே இருக்கும் ஒளியின் மேல், மனதில் இருக்கும் அன்பின் மேல் - எதன் மேலும் உங்கள் கவனத்தை முனைப்பாக வைக்கத் தேவையில்லை. அப்படி வைத்தால் அதன் பெயர் தியானம் இல்லை. தியானம் என்பது அதீத விழிப்புணர்வுடன் இருப்பதுதான்.

ஒருமுனைப்படுத்தப்பட்ட மனிதனின் கவனத்தைச் சிதறடிப்பது மிகவும் எளிது. வெளியில் நடக்கும் ஒரு சாதாரண நிகழ்வு கூட அவனது கவனத்தைச் சிதறடித்துவிடும். ஏனென்றால் அவன் இயற்கைக்குப் புறம்பான ஒரு செயலைச் செய்து கொண்டிருக் கிறான்.

ஒரு குழந்தை அழுதால் போதும். அவனுடைய 'தியானம்' கலைந்துவிடும். மேலே விமானம் பறக்கும் சத்தம், நாய் குரைக்கும் சத்தம் - இவைகூட அவனுக்கு இடைஞ்சலாக இருக்கும்.

எதுவும் அவன் கவனத்தைச் சிதறடிக்கும். அவன் கவனம் சிதறும் போது அவனுக்கு வருத்தமாக இருக்கும். வெறுப்பாக இருக்கும். 'ஐயோ, மீண்டும் தியானம் செய்யும் முயற்சியில் தோற்று விட்டேனே' என்று அவன் கலங்குவான்.

ஆனால் உண்மையான தியானத்தில் ஆழ்ந்திருப்பவனை வெளிநிகழ்வுகள் எதுவுமே தொந்தரவு செய்யாது. ஏனென்றால் அவன் மனதை ஒருமுனைப்படுத்தும் முயற்சியில் இறங்கவேயில்லை.

பிரபஞ்ச இருப்புநிலையில் நிகழ்வுகள் ஒன்றன் பின் ஒன்றாக நேர்கோட்டினைப் போல் நிகழ்வதில்லை. பல நிகழ்வுகள் ஒரே சமயத்தில் நிகழ்கின்றன. இதோ இங்கே நான் பேசிக் கொண்டிருக் கிறேன்.

பறவைகள் பறக்கும் சத்தம் கேட்டுக் கொண்டிருக்கிறது. வெளியே செல்லும் வாகனங்கள் உண்டாக்கும் சத்தம் இருக்கிறது. தூரத்தில் ரெயில் போகும் சத்தம் கேட்கிறது. இவை எல்லாமே ஒரே சமயத்தில் நிகழ்கின்றன. நீங்கள் எளிமையாக, அமைதியாக,

கவனமாக எல்லாவற்றையும் பார்த்துக், கேட்டு அனுபவித்தால் போதும்.

இதில் எதையுமே நீங்கள் விலக்கக்கூடாது. நீங்கள் விலக்கும் நிகழ்வுதான் உண்மையிலேயே உங்கள் தியானநிலைக்கு இடையூறாக இருக்கும். நீங்கள் எதையும் விலக்கவில்லை என்றால், உங்கள் விழிப்புநிலையில் இந்த பிரபஞ்சத்தின் நிகழ்வுகள் அத்தனையுமே இருந்ததென்றால் உங்களை எந்த நிகழ்வு பாதிக்க முடியும்?

இந்த குட்டிப் பறவை போடும் சத்தம் உங்களைத் திசை திருப்ப முடியுமா என்ன? உண்மையிலேயே பறவையின் சத்தம் உங்கள் மௌனத்தை இறுக்கித் தழுவிக் கொண்டு, அந்த மௌனத்திற்கே ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுக்கும். உங்களை எதுவும் திசை திருப்ப முடியாது. ஏனென்றால் நீங்கள் இறுக்கமான நிலையில் இல்லை.

ஒருமுனைப்படுத்துதல் என்பது இறுக்கமான நிலை. ஒரு முனைப்படுத்தப்பட்ட கவனத்திற்கு ஏற்ற ஆங்கிலச் சொல் attention. இந்த சொல்லின் வேரை ஆராய்ந்தால் அது tension என்று தெரியவரும். Tension என்றால் இறுக்கம் என்று பொருள். விழிப்பு நிலை என்பது வெறும் கவனம் இல்லை. அதில் இறுக்கம் இல்லை. இயல்பான ஒரு தளர்வுதான் இருக்கிறது. அமைதியான ஓய்வுதான் இருக்கிறது.

அதனால் அமைதியாக ஓய்வெடுங்கள். எண்ணங்கள் வந்து போகும். அதனால் என்ன? அவை உங்களை என்ன செய்ய முடியும்? ஆசைகள் வந்து போகும். அவை வந்து போவதைக் கவனியுங்கள். அவற்றை மதிப்பிடாதீர்கள். 'இது நல்லது, இது கெட்டது.' என்று தீர்ப்பு சொல்ல ஆரம்பித்துவிடாதீர்கள். 'ஆகா, இது புனிதமானது. இதுதான் ஆன்மிகத்தின் உச்சகட்டம்.' என்று பேத்தித் கொண்டிருக்காதீர்கள்.

இப்படியே தொடர்ந்து விழிப்பு நிலையில் இருந்தால் ஒரு காலகட்டத்தில் உங்கள் முதுகெலும்பில் எறும்பு ஊருவதைப் போன்ற ஓர் உணர்ச்சி தெரியும். உங்கள் குண்டலினி சக்தி மெதுவாக மேலே ஏறுவதை நீங்கள் உணர முடியும். உள்ளே ஓர் ஒளி தெரியும். வண்ணங்கள் தெரியும். மனதை மயக்கும் வண்ணங்கள் தெரியும். பல அழகான விஷயங்களைப் பார்ப்பீர்கள்.

ஆனால் இவை எல்லாமே வெறும் கற்பனைதான். உங்கள் மனம் செய்யும் மாயாஜாலம் தான் என்பதை மறந்துவிடாதீர்கள்.

இதுதான் உத்தம நிலை என்று பேச ஆரம்பித்துவிடாதீர்கள். என் கண்முன் ஏசுநாதர் தெரிகிறார், புத்தர் தெரிகிறார், கிருஷ்ணர் தெரிகிறார் என்று பினாத்த ஆரம்பிக்காதீர்கள். ஆனால் இந்த மாதிரி எல்லாம் நிகழ்ந்தால் நீங்கள் முன்னேறிக் கொண்டிருக் கிறீர்கள் என்பதையும் மறந்து விடாதீர்கள்.

புத்தர் உறுதியாகக் கூறுகிறார். ''உங்கள் வழியில் என்னைப் பார்த்தால் இரக்கமில்லாமல் கொன்று விடுங்கள்.''

இதன் பொருள் ''நான் உங்கள் தியானத்தில் வந்தால் அது சிறந்த நிலை என்று தப்புக் கணக்கு போடாதீர்கள். ஏனென்றால் அது வெறும் எண்ணம் தான். அதுவே சிறந்தது என்று நீங்கள் நினைத்து விட்டால் பின் அடுத்த நிலைக்கு முன்னேற முடியாது.

அப்படியே புத்தரே காட்சியளித்தாலும் அதைப் பாருங்கள். எந்த வித மதிப்பீடும், தெரிவும், முற்சாய்வும் இல்லாமல் அந்தக் காட்சியையும் பாருங்கள். உங்களுக்கு உள்ளே நடப்பதையும், வெளியே நடப்பதையும் தெரிவின்றிப் பார்க்க முடிந்தால் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் உங்களுக்கு உண்மையான தியானம் கைகூடும். அதில் நீங்கள் செய்ய வேண்டிய செயல் ஒன்றும் இல்லை.

நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் மதிப்பீடு செய்யாமல் நிகழ்வுகளைக் கவனிப்பது மட்டும்தான். ஒருநாள் உங்கள் மனம் பரிபூர்ண ஓய்வுநிலைக்குப் போய்விடும். அந்த நிலையில்தான் நிர்மலமான விழிப்புணர்வு பொங்கும். அந்த விழிப்புணர்வில் எல்லா ஆசைகளும், எண்ணங்களும் மறைந்துவிடும். மனம் என்ற ஒன்றே இல்லாமல் போய்விடும். மனமின்மை என்ற நிலை தான் தியான நிலை.

உங்கள் கேள்வியைப் பார்க்கும் போது நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டீர்கள் என்றே தோன்றுகிறது. 'தியானம் செய்' என்று நான் சொன்னால், ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு ஒரே பொருளை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற அர்த்தம் இல்லை.

'தியானம் செய்' என்ற சொல்லுக்கு 'கவனி' என்று தான் பொருள். நன்றாகக் கவனியுங்கள். நான் 'ஒருமுனைப்படுத்து'

என்று சொல்லவில்லை. எனக்கு ஒருமுனைப்படுத்துவதில் உடன் பாடு இல்லை. பரபரவென்று இருக்கும் பஜார் தெருவில் அமர்ந்து கொண்டு அங்கே நடமாடும் மக்களைக் கவனியுங்கள். அது தியானம்தான். ரெயில் நிலையத்தில் அமர்ந்து கொண்டு எல்லா சத்தங்களையும் கேட்டு அனுபவியுங்கள் அதுவும் தியானம்தான்.

ரெயில்கள் வந்து போவது, பயணிகள் இறங்குவது, கூலிகளிடம் பேரம் பேசுவது, வியாபாரிகளின் கூச்சல், பின் அந்த ரெயில் கிளம்பிப் போவது, அதன் பின் ஏற்படும் அசாதாரணமான மௌனம் - எல்லாவற்றையும் கவனித்தால் போதும். தியானம் கைகூடிவிடும். கவனியுங்கள். எந்தச் செயலிலும் ஈடுபடாதீர்கள்.

கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் ஓய்வு கொள்வீர்கள். உங்க ளிடம் உள்ள இறுக்கங்கள் தளரும். அப்போது ரோஜா மொட்டைப் போல உங்களிடம் உள்பார்வை விரியும். பின் அது மலர்ந்து மலராகும். அதில் இருந்து நறுமணம் வீசும். அந்த அமைதியில் தான் உண்மை குடிகொண்டு இருக்கிறது. அதில் தான் ஆனந்தம் இருக்கிறது, இறையருள் இருக்கிறது.

*இரண்டாவது கேள்வி:*

*ஓஷோ, அறிவு பயனற்றதா?*

அறிவுக்குச் சில பயன்கள் உண்டு. அது முற்றிலும் பயனற்றது என்று நான் சொல்ல மாட்டேன். ஆனால் நீங்கள் ஆன்மிகத்தில் உள் நோக்கிப் பயணம் செய்ய ஆரம்பித்தால் அறிவின் தேவை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிடும்.

நீங்கள் வெளியே பயணம் செய்ய ஆரம்பித்தால் அறிவின் தேவை அதிகமாகிக் கொண்டே போகும். அறிவுள்ள மனிதரை உலகமே போற்றும். இன்று பல துறைகளிலும் விற்பன்னர்கள் தேவை. அறிவும் திறமையும் உள்ள எத்தனையோ பேர் உலகிற்குத் தேவை.

ஆனால் உள்ளொளிப் பயணத்தில் இந்த கேள்விக்கே இடமில்லை. உள்ளே நிகழும் பயணத்தில் அறிவு இடையூறாகத்தான் இருக்கும். வெளியே பயன்படும் அறிவு உள்ளே பயனற்ற தாகிவிடுகிறது.

அறிவு வெளி உலகிற்கு ஒரு பாலம். உள் உலகிற்கு அதுவே தடைச்சுவர்.

நான் அறிவுக்கு எதிராக ஏதாவது சொன்னால் அது உள்ளொளிப் பயணம் மேற்கொள்பவர்களின் கண்ணோட்டத்தில் தான் இருக்கும்.

உள்ளே இருப்பதை அறிந்து கொள்ள அறிவு பயன்படாது. அதற்கு ஞானம் வேண்டும். அறிவு என்பது தகவல் சம்பந்தப் பட்டது. ஞானம் என்பது உருமாற்றம் சம்பந்தப்பட்டது. தகவல் என்பது கடன்வாங்கப்பட்ட அறிவு. ஞானம் முழுக்க முழுக்க நீங்களே சம்பாதித்த உங்களுக்கு மட்டுமே சொந்தமான ஒரு சக்தி.

அறிவு அகந்தையை வளர்க்கிறது. அகந்தை முற்றிலும் அழிந்த பின்புதான் ஞானமே பிறக்கிறது. நீங்கள் மற்றவர்களை விட உயர்ந்தவர்கள் என்ற உணர்வை உங்களுக்கு அறிவு கொடுக்கும். அது பணத்தைப் போல் ஒரு வித சக்தி. அறிவு ஒரு சக்தி.

நீங்கள் முதுகலை பட்டதாரி என்றால் இளங்கலை பட்டம் வாங்கியவர்களை விட உயர்ந்தவர் என்ற எண்ணம் உங்களுக்கு வந்துவிடுகிறது. நீங்கள் முனைவர் பட்டம் பெற்றவர் என்றால் உங்களுக்கு கொம்பு முளைத்தது போலத் தோன்றும் . உங்களிடம் பல பட்டங்கள் இருந்தால் நீங்கள் சாதாரணமான ஆள் இல்லை என்ற நினைப்பு உங்களுக்கு வந்துவிடுகிறது.

ஒரு முறை நான் வாரணாசியில் தங்கியிருந்த போது என்னைத் தேடி ஒருவன் வந்தான். அவன் 20 முதுகலைப் பட்டங்களைப் பெற்றிருந்தான். அதனாலேயே உலகப்புகழ் பெற்றிருந்தான். உலகிலேயே அவன் ஒருவன் தான் 20 MA பட்டங்கள் வாங்கியிருந்தான்.

நானும் என் வாழ்வில் அதுவரை அப்படி ஒரு வடிகட்டிய முட்டாளைப் பார்த்ததில்லை. சந்தேகமில்லாமல் அவன் முட்டாள்தான். அறிவைப் பெறுவதில் தன் வாழ்க்கையையே ஒட்டுமொத்தமாக வீண்டித்தவனை வேறு என்னவென்று சொல்வதாம்? அதுவும் ஒரே துறையில் ஆழமாக அறிவைப் பெறாமல் வெவ்வேறு துறைகளில் முதுகலைப் பட்டம் வாங்குவதையே தனது நோக்கமாகக் கொண்டிருந்தான்

அவன். அவன் என்னைப் பார்க்க வந்த போது அவனுக்கு 65 வயது ஆகியிருந்தது. அப்போது கூட இன்னொரு

பல்கலைக்கழகத் தேர்வுக்குத் தன்னைத் தயார்ப் படுத்திக் கொண்டிருந்தான். அவன் இறந்த போது 30 MA பட்டங்கள் வாங்கி விட்டிருந்தானாம்.

சே, என்ன வீணான வாழ்க்கை! அவன் என்னோடு பேசிய போது கவனித்தேன். குழந்தைத்தனமாக, மிகச் சராசரி அறிவுடன் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தான். இம்மியளவு கூட ஞானம் இருப்பதற்கான அடையாளம் அவனிடம் இல்லை.

ஞானம் பெற்ற ஒருவன் அகந்தையுடன் இருக்க முடியாது. உங்கள் அகந்தை என்பதே ஒரு மாயத் தோற்றம். இந்த அடிப்படை உண்மையை நீங்கள் பெற்ற ஞானம் உங்களுக்கு உணர்த்தா விட்டால் அந்த ஞானத்தால் எந்த பயனும் இல்லை. ஞானம் வராமல் அறிவு மட்டும் இருந்தால் அதைப் பீற்றிக் கொள்ளத்தான் மக்கள் விரும்புவார்கள்.

நமக்குள்ளே இருக்கும் உலகத்தில் அறிவோ, அகந்தையோ, படித்து வாங்கிய பட்டங்களோ பயன்படாது. பணிவும், எளிமையும்தான் அங்கே செல்லுபடியாகும். வெளி உலகத்தில் வேண்டுமானால் பட்டங்கள் பயன்படலாம்.

கௌரவமான தோற்றமுடைய ஒரு மனிதன் லண்டனில் இருக்கும் உலகப் பிரசித்தி பெற்ற ஹராட்ஸ் (Harrods) பல் பொருள் அங்காடிக்குப் போனான்.

“எனக்கு ஒரு நீர் யானை வேண்டும். அதையும் நீங்கள் இன்று மதியத்துக்குள் என் வீட்டில் டெலிவரி செய்ய வேண்டும். இல்லாவிட்டால் என்ன செய்வேன் என்று எனக்கே தெரியாது.”

“சரி அப்படியே செய்கிறோம். வீட்டில் அதை எங்கே வைக்க வேண்டும் என்று சொல்லவில்லையே?”

“என் குளியலறையில் உள்ள குளியல் தொட்டியில் வையுங்கள்.”

“உங்க வீட்டுக் குளியலறைத் தொட்டியில் ஒரு நீர் யானை இருக்க வேண்டும். சரிதானே? எதற்காக என்று நான் தெரிந்து கொள்ளலாமா?”

“ஓ.. அது என் மனைவிக்காக. என் மனைவியிடம் ஒரு கெட்ட பழக்கம். நான் என்ன சொன்னாலும், ‘ஓ, அதுவா, அது எனக்குத் தெரியுமே’ என்று எல்லாம் தெரிந்த மாதிரிப் பேசிக்

கொண்டிருக்கிறாள். நீங்கள் இன்று மதியம் தொட்டியில் நீர்யானையை வைத்துவிடுங்கள்.

"அவள் மாலை குளிக்கப் போகும் போது அதைப் பார்த்து அலறியடித்துக் கொண்டு என்னிடம் ஓடிவருவாள். 'ஐயோ, குளியல் தொட்டியில் நீர்யானை..' என்று கத்துவாள். அப்போது நான் பேப்பர் படித்துக்கொண்டே, 'ஓ அதுவா.. அது எனக்குத் தெரியுமே' என்று சொல்ல வேண்டும்."

உங்கள் அகந்தைத் தீயை விசிறி விட அறிவு வேண்டும். அதை விட்டால் அறிவுக்குப் பெரிதாக வேறு பயனில்லை. புற உலக அறிவு தான் மதங்களில் ஊழலைப் புகுத்தியிருக்கிறது.

ஒரு விஞ்ஞானிக்கு அறிவு அவசியம் வேண்டும். விஞ்ஞானமும் ஒரு வகையில் மரபைச் சார்ந்தேயிருக்கிறது. மதம் மரபைச் சார்ந்து இல்லை. ஆனால் மக்கள் இதை மாற்றிப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். மதத்திற்கு மரபு வேண்டுமென்றும், விஞ்ஞானத்திற்கு மரபு வேண்டாமென்றும்தான் இன்றும் பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது முற்றிலும் தவறு.

விஞ்ஞானம் மரபு வழிவருவது. நியூட்டன் இல்லாமல் ஓர் எடிசன் தோன்றியிருக்க முடியாது. எடிசன் இல்லாமல் ஓர் ஐன்ஸ்ட்டின் தோன்றியிருக்க முடியாது. விஞ்ஞானம் மரபு சார்ந்தது என்று இதை வைத்துத்தான் சொல்கிறேன். விஞ்ஞானத்தின் கடந்த காலத்தை நன்கு தெரிந்து கொண்டால்தான் நீங்கள் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபடமுடியும்.

ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டது என்ன, மனித இனத்துக்கு ஏற்கனவே தெரிந்தது என்ன என்பதை நீங்கள் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போது தான் நீங்கள் புதிதாக எதையாவது கண்டுபிடிக்க முடியும். தெரியாததைத் தெரிந்து கொண்டு உலகுக்குச் சொல்ல முடியும். ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டது உங்களுக்குத் தெரியவில்லை என்றால் நீங்கள் கண்டுபிடித்ததையே திருப்பிக் கண்டுபிடித்துக் கொண்டிருப்பீர்கள். உங்கள் உழைப்பு விழலுக்கு இரைத்த நீராகிவிடும்.

ஆனால் மதம் மரபு சார்ந்தது இல்லை. உண்மையான மதம் என்பது மரபுகளை எதிர்த்து நடக்கும் ஒரு கலகம், ஒரு புரட்சி. ஒரு புத்தர் அவதரிப்பதற்கு முன்னால் கிருஷ்ணர் அவதாரம் எடுத்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. மோசஸ் இல்லாமலேயே ஏசு நாதர் பிறந்திருக்கலாம்.

நபிகள் நாயகம் உருவாவதற்கு முன்னால் ஏசு உருவாகியிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. புத்தரைப் போன்ற ஒரு மகான் பிறந்தால் தான் பின்னாளில் ராமகிருஷ்ண பரம ஹம்சரைப் போன்ற ஒருவர் பிறப்பார் என்ற நியதியில்லை. மதம் தனிமனிதனைச் சேர்ந்தது. விஞ்ஞானம் கூட்டு முயற்சி. விஞ்ஞானம் கூட்டு முயற்சி என்பதால் அதற்கு அறிவு தேவைப்படுகிறது.

மதம் தனிமனிதனின் விவகாரம் என்பதால் அதற்கு அறிவு தேவையில்லை. ஞானம் தான் வேண்டும். ஒவ்வொரு மதமும் உண்மையைப் புதிதாக, தனியாகக் கண்டுபிடிக்க வேண்டும். நீங்கள் புத்தனை நம்பியோ, ஏசுவை நம்பியோ இருக்க முடியாது. ஒவ்வொரு மதமும் அரிச்சுவடியில் இருந்துதான் ஆரம்பமாக வேண்டும். "இதைத்தான் புத்தர் ஏற்கனவே கண்டுபிடித்துச் சொல்லிவிட்டாரே? நாம் ஏன் மீண்டும் சொல்ல வேண்டும்" என்று நீங்கள் இருக்க முடியாது.

ஆனால் விஞ்ஞானத்தில் இப்படி இருக்கலாம். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்துவிட்டார். ஆகையால் நாம் அதை மீண்டும் கண்டுபிடிக்கத் தேவையில்லை. நியூட்டன் புவியீர்ப்பு விதிகளைக் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டார். அதையே நீங்கள் மீண்டும் கண்டுபிடிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

ஒருவேளை நீங்கள் அமெரிக்காவைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கிளம்பினாலும் சரி, இல்லை புவியீர்ப்பு விதிகளைப் புதிதாகக் கண்டுபிடிக்கப்போகிறேன் என்று அலம்பல் செய்தாலும் சரி, அதை உங்கள் கண்டுபிடிப்பு என்று யாரும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். மனிதன் நிலவில கால் பதித்து விட்டான். இப்போது நீங்கள் சந்திரமண்டலத்துக்கே போனாலும் அது பெரிய விஷயமில்லை. நீங்கள் இந்த விஷயத்தில் முன்னோடியில்லை.

இந்த கோட்பாடுகள் உங்கள் உள் வாழ்க்கைக்கு ஒத்து வராது. புத்தர் தனது இருப்புநிலையை உணர்ந்தார். அது அவருடைய இருப்புநிலை. உங்களுடையது இல்லை. உங்களுடையதை நீங்கள்தான் கண்டுபிடித்து உணர வேண்டும். நீங்கள் புத்தரைக் கண்மூடித்தனமாக நம்பினால் உங்களுக்கு அவர் கண்டுபிடித்ததைப் பற்றிய அறிவு இருக்குமேயொழிய, நீங்கள் கண்டுபிடிக்கும் போது உண்டாகும் ஞானம் ஏற்படாது. வெறும் அறிவு மட்டும் உள்ள மனிதன் உள் வாழ்க்கையைப் பொறுத்த மட்டில் ஓர் ஆஷாட பூதிதான்.

என் பணி உங்கள் உள்ளொளிப் பயணத்தைப் பற்றியது. உங்கள் உள்ளே இருக்கும் விஷயங்களைப் பற்றிய கணிதத்தை, ரசாயனத்தை, பௌதிகத்தை நான் உங்களுக்குச் சொல்லித் தருகிறேன். நீங்கள் எப்படி உங்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதை மட்டும்தான் நான் சொல்லித் தருகிறேன். அதனால்தான் நான் அறிவை வெறுக்கிறேன்.

யூதர்கள் மதத்தில் சில விசித்திரமான வழக்கங்கள் இருக்கின்றன. உதாரணமாக கடவுளின் சந்நிதியில், "ஐயோ, நான் ஒன்றுமில்லாத குப்பை" என்று சொல்லிக்கொண்டு மாரில் அடித்துக் கொள்வார்கள். அகங்காரம் வரக்கூடாது என்பதற்காக இந்த ஏற்பாடு என்று அவர்கள் சொல்வதை நான் கேட்டிருக்கிறேன்.

இப்படித்தான் ஒரு நாள் யூதர்களின் மதகுருவும் (அவர்களை ரேபி என்று சொல்வார்கள்) ஆலய அதிகாரி ஒருவரும் யூதர்களின் ஆலயம் ஒன்றில் அமர்ந்து "நான் குப்பை" நான் குப்பை" என்று கத்தியபடி மார்பில் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அந்த ஆலயத்தின் காவலாளி அவர்களைப் பார்த்தான். அவனும் வந்து அவர்கள் அருகே அமர்ந்து 'நான் குப்பை' என்று சொல்லியபடி தனது மார்பில் அடித்துக் கொள்ள ஆரம்பித்தான். இப்போது அந்த ஆலய அதிகாரி ஓரக்கண்ணால் மதகுருவைப் பார்த்தார்.

"காலம் கெட்டுவிட்டது, குருவே. அங்கே பாருங்கள் நமது கோயில் காவல்காரன் நம்மைப் போல் 'நான் குப்பை' என்று சொல்லி மார்பில் அடித்துக் கொண்டிருக்கிறான். யார் எதைச் செய்வது என்று ஒரு விவஸ்தை வேண்டாம்?"

கேவலம், ஒரு காவல்காரன், இறைவன் சந்நிதியில் 'நான் குப்பை' என்று சொல்லுவதா? 'நான் குப்பை' என்று சொல்லிக் கொள்வதற்கு ஒரு குறைந்த பட்சத் தகுதி வேண்டாம்?

இப்போது புரிகிறதா இவர்களின் முட்டாள்தனம்?

சந்தர்ப்ப சூழ்நிலையால் ஒரு பாதிரியாரும், ஒரு திருடனும் சிறையில் தள்ளப்பட்டார்கள். சிறையில் இருந்து தப்ப இருவரும் சேர்ந்து திட்டம் போட்டார்கள்.

இரவு வேளை. நல்ல இருட்டில் திருடன் மெதுவாக சுவரேறிக் கொண்டிருந்தான். சத்தம் கேட்டுக் காவலாளி விழித்துக் கொண்டான்.

“யாரது?” என்று கத்தினான் காவலாளி.

“மியாவ்...” என்று பூனையைப் போல் கத்தினான் திருடன். சரி பூனைதான் என்று நினைத்து ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டான் காவலாளி. திருடன் தப்பித்து ஓடிவிட்டான்.

அடுத்தது பாதிரியின் முறை. சத்தம் கேட்டு காவலாளி “யாரது?” என்று கேட்க, அந்த பாதிரி தான் உபதேசம் செய்யும் அதே கம்பீரமான குரலில் சொன்னார்.

“ஒன்றுமில்லை. இது இன்னொரு பூனை.”

நமக்கு உள்ளே இருக்கும் உலகத்தில் நமது வெளியுலக அறிவு என்ற பணம் செலாவணியாகாது. அங்கே நீங்கள் உங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் உங்களைத் தெரிந்து கொள்ளா விட்டால் உங்கள் நம்பிக்கைகளே உங்களுக்குப் பாரமாகிப் போய்விடும்.

உங்கள் நம்பிக்கைகள் உங்களை மேலும் பந்தப்படுத்தும். அவை உங்கள் விடுதலைப் பாதையின் பெரிய தடைக்கற்களாகவே இருக்கும். அந்த நம்பிக்கைகள் புதிய அடிமை விலங்குகளை உருவாக்கும். அந்த அடிமை விலங்குகள் பார்க்க அழகாக, பளபளப்பாக இருக்கலாம். என்றாலும் அவை அடிமை விலங்குகள் தான். பொன்னால் செய்த விலங்கு என்றாலும், அது நம்மைக் கட்டுப்படுத்தத்தானே செய்கிறது?

அப்போது தான் திருமணமாகியிருந்தது அந்த கிராமத்துப் பெண்ணுக்கு. ‘தாம்பத்தியத்தைப்’ பற்றி ஒன்றும் தெரியாத அப்பாவியாக வளர்ந்து விட்டிருந்தாள் அந்த பெண். அவளுடைய தாய் அவளைத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்று அங்கே சேவல் ஒன்று பெட்டைக் கோழியைப் புணர்வதைக் காட்டினாள்.

“இன்று உனக்கு முதலிரவு. ஏறக்குறைய இதைப் போல ஏதோ நடக்கும் எதற்கும் தயாராக இரு.” என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள் தாய்.

அன்று இரவு அவளுடைய கணவன் ஆசையுடன் முதலிரவு அறைக்குள் நுழைந்தான். அவள் இருந்த கோலத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். உடம்பில் பொட்டுத் துணி இல்லாமல் படுக்கையில் இருந்தாள் புது மணப்பெண். ஆனால் அவளது தலையில் ஓர் இரும்புச் சட்டியை கட்டிக் கொண்டிருந்தாள்.

“ஏன் இந்தக் கோலம்...”

பயந்தபடியே கேட்டான் கணவன்.

“இங்கே பாருங்கள். என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். ஆனால் சேவலைப் போல் தலையில் கொத்தும் வேலை மட்டும் வேண்டாம். ஆமாம் சொல்லி விட்டேன்.”

தானாகப் புரிந்து கொள்ளாமல் அடுத்தவரிடம் கடன் வாங்கும் அறிவு அது போன்ற ஒரு நிலையைத்தான் உங்களுக்குக் கொடுக்கும். நீங்கள் ஏசுநாதர் சொன்னதைக் கிளிப்பிள்ளை மாதிரி சொல்லலாம். இல்லை, கிருஷ்ணர் சொன்ன கீதை சுலோகங்களை மனப்பாடமாக ஒப்புவிக்கலாம். இல்லை மோசஸ், லா ட்சு சொன்னதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கலாம்.

ஆனால் அவை உங்களுக்கு எந்த விதத்திலும் உதவாது. ஞானம் பெற்ற மகான்களின் வாழ்க்கை உங்களை உற்சாகப்படுத்தி உங்கள் வழியில் நடக்கவைக்கலாம். ஆனால் கண்ணை மூடிக் கொண்டு அவர்கள் சொன்னதையே சொல்வதால் உங்களுக்கு எந்த பயனும் உண்டாகாது. அறிவினால் பயனில்லை. ஞானம்தான் நம்மை விடுவிக்கும் சக்தி.

அறிவை விலக்கிவைத்தால்தான் ஞானமே பிறக்கும். அதை அறிவு என்று சொல்லலாம். இல்லை மனம் என்றும் சொல்லலாம். இரண்டிற்கும் வேறுபாடு இல்லை. அறிவுதான் மனம். மனம்தான் அறிவு. அறிவை நீங்கள் விலக்கி வைக்கும் போது உங்கள் மனத்தையும் விலக்கி வைக்கிறீர்கள். அறிதல் என்ற நிலையை விட்டு விலகி நிற்கிறீர்கள். அது அறியாமை அல்ல.

அறிவிற்கு அப்பாற்பட்ட நிலை. அறியாத நிலை. அறிவைப் பயன்படுத்தாத நிலை. அறிவு பயன்படாத நிலை. அது ஓர் அழ கான அனுபவம். அதுதான் வெகுளித்தனம். நீங்கள் குழந்தையாக இருந்த போது உங்களிடம் இருந்த வெகுளித்தனம். அந்த வெகுளித் தனம் வந்தவுடன் நீங்கள் மீண்டும் குழந்தையாகிவிடுவீர்கள். எதையும் ஆச்சரியத்துடனும், திகைப்புடனும் பார்க்கக் கற்றுக் கொள்வீர்கள். நீங்கள் புதிதாகப் பிறவி எடுத்தவரைப் போல உணர்வீர்கள். இந்த புதுப்பிறவிதான் உங்கள் இருப்புநிலையின் மகோன்னதத்தை உணர்த்தும்.

உங்களுக்குள்ளே ஒரு பெரிய பொக்கிஷம் இருக்கிறது. இந்த உலகத்தையெல்லாம் பிரகாசமாக வைக்கக்கூடிய ஓர் ஒளி

இருக்கிறது. ஆனால் நீங்கள் கடன் வாங்கிய அறிவைக் கட்டிப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதை விட்டொழித்து விட்டு உங்களுடைய மையத்துக்குச் செல்லுங்கள். அங்கே கொட்டிக் கிடக்கும் பொக்கிஷத்தின் உரிமையைக் கோருங்கள்.

அறிவு உங்களைச் வட்டத்தின் சுற்றளவிலேயே வைத்திருக்கிறது. அதிலிருந்து மையத்துக்கு நேராகக் குதியுங்கள். அறிவைத் துறப்பதுதான் உண்மையான துறவு.

நீங்கள் உங்கள் பணம், வீடு, கார் முதலியவற்றைத் துறக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. அவற்றால் எந்த பிரச்சினையும் இல்லை. உங்கள் மனதை, உங்கள் அறிவைத் துறங்கள். அங்கேதான் பிரச்சினையே இருக்கிறது. உங்கள் அறிவு தான் உங்கள் பாதையில் இருக்கும் மிகப் பெரிய தடைக்கல். உங்களை உங்கள் மையத்துக்குப் போகவிடாமல் தடுப்பது உங்கள் அறிவுதான்.

அறிவைத் துறந்துவிட்டு, அறியாத அந்த நிலையைக் கொண்டாடுங்கள். உங்களுக்குள் ஒரு பெரிய விடுதலை ஏற்படும். உங்களுக்குள் இருக்கும் புத்தர் மயக்கம் தெளிந்து விழித்துக் கொள்வார். அது ஒன்றுதான் உங்களுக்கு நிலைபேறுடைமையைத் தரும். வார்த்தைகள், சாஸ்திரங்கள், புனிதநூல்கள், நம்பிக்கைகள், அறிவு - இவை எல்லாம் உங்களைக் கட்டிப் போட்டிருக்கும் விலங்குகள்.

*மூன்றாவது கேள்வி:*

*ஓஷோ,*

*சேர்ந்து இருக்க வேண்டுமென்றால் தனியாக இருப்பது எப்படி என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொன்னீர்கள். என்னால் தனியாக இருக்க முடிகிறது. ஆனால் மற்றவர்களோடு சேர்ந்து இருக்கும் போதுதான் பிரச்சினை தொடங்குகிறது. ஏனென்றால் அப்போது தான் சில தேவைகளும், சில எதிர்பார்ப்புகளும் தோன்றுகின்றன.*

*ஒரு வேளை சேர்ந்திருக்கும் போதும் தனியாக இருக்கப் பழகிக் கொள்ள வேண்டுமோ? அன்பின்*

*உ ரியில் நடந்து செல்ல அதீத விழிப்புணர்வு தேவை என்று தோன்றுகிறது. இதைப் பற்றி...*

நான் மீண்டும் அதையே சொல்கிறேன். நீங்கள் தனியாக இருப்பது எப்படி என்று கற்றுக் கொண்டால் தான் உங்களால் மற்றவர்களோடு சேர்ந்து இருக்க முடியும். ஆனால் நான் 'தனி யாக' என்று சொன்னது 'துணையில்லாமல் தவிக்கும் நிலையைக்' குறிக்காது. நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டீர்கள்.

யார் வேண்டுமானாலும் துணையின்றி இருக்கலாம். ஆனால் தனியாக இருப்பது, தனிமையை அனுபவிப்பது பெரிய சாதனை.

பலர் துணையின்றி இருக்கிறார்கள். அப்படி இருக்கும் போது வேதனையில் தவிக்கிறார்கள். அந்தத் தவிப்பை நீங்கள் வெளிக் காட்டிக் கொள்ளாமல் இருக்க முடியும். வெளியே ஒரு பொய்த் தோற்றத்தை உருவாக்கிக்கொள்ள முடியும். துணையின்றி இருக்கும் நிலையின் துயரத்தைப் போக்க நீங்கள் சில மாற்றுச் செயல்களைச் செய்து உங்கள் மனதை அந்தத் துயரத்திலிருந்து திசை திருப்ப முடியும். அது வேறு, தனியாக இருக்கும் கலை வேறு.

துணையின்றி இருக்கும் போது ஏற்படும் துன்பத்தைத் தவிர்ப்பதால் மட்டும் நீங்கள் தனிமையில் இருப்பதாக அர்த்தம் இல்லை. நீங்கள் உங்கள் தனிமையை அனுபவிக்க வேண்டும். அதில் திளைத்துப் பரவசமடைய வேண்டும். தனிமை எந்த அளவுக்கு உங்களுக்கு ருசிக்க வேண்டுமென்றால், ஒருவேளை நீங்கள் கடைசி வரை வேறு துணையில்லாமல் தனியாகவே இருந்தாலும் அது உங்களை எந்த வகையிலும் பாதிகக்கூடாது. துணையின்மை ஒரு பிரச்சினையாக மாறிவிடக்கூடாது.

அந்த நிலையில் உங்களுக்கு ஒரு தாற்காலிக திருப்தி ஏற்பட்டால் போதாது. அதிலே நிரந்தர நிறைவு ஏற்பட வேண்டும். தாற்காலிக திருப்தி எப்படி வேண்டுமானாலும் ஏற்படலாம். அது ஒரு பொருட்டல்ல.

இருப்பதை வேறு வழியின்றி ஏற்றுக் கொள்ளும் போதே தாற்காலிக திருப்தி வந்துவிடும். வேறு என்ன செய்வது? துணை யில்லை என்றால் அந்த நிலைக்கும் நம்மைப் பழகிக் கொள்ள வேண்டியதுதான் என்று உங்கள் மனம் விரக்தியில் தீர்மானம் செய்யும் போது உங்களுக்குத் தாற்காலிக திருப்தி வந்துவிடும்.

எந்த சூழ்நிலைக்கும் மனித மனம் தன்னைப் பழக்கப்படுத்திக் கொண்டு விடும். ஆள் நடமாட்டமே இல்லாத ஒரு பாலை வனத்திலோ, தீவிலோ நீங்கள் தனியாக மாட்டிக் கொண்டால் கூட சீக்கிரத்திலேயே அந்த நிலை உங்களுக்குப் பழகிவிடும். அங்கே எப்படியும் நீங்கள் பிழைத்துக் கொள்வீர்கள். நாளாக ஆக உங்களுக்கு அந்த நிலையில் ஒரு திருப்தியும் உண்டாகிவிடும். ஆனால் அது தனிமையை அனுபவிப்பது ஆகாது.

இப்படித்தான் ஒரு கிறிஸ்தவப் பாதிரி ஆளில்லாத ஒரு தீவில் மாட்டிக் கொண்டார். அவர் சென்ற கப்பல் மூழ்கிய போது எப்படியோ தப்பித்துக் கொண்டு அந்த தீவுக்கு நீந்திச் சென்று விட்டார்.

அங்கே மனிதர்களே இல்லை. இருபது வருடம் அங்கே தனியாகவே வாழ்ந்தார். இருபது வருடம் கழித்து அந்தப் பக்கம் ஒரு கப்பல் போனது. அவர் கத்திக் கூச்சல் போட்டு தான் இருப்பதை கப்பலின் கேப்டனுக்கு உணர்த்தினார்.

அவரைப் பார்த்துவிட்ட கேப்டன் தானே ஒரு சிறு படகில் அவரை தீவிலிருந்து மீட்டுக் கொண்டுவர புறப்பட்டார்.

அந்த பாதிரியார் கேப்டனிடம் சொன்னார்.

"இந்த இடத்தை விட்டுக் கிளம்புவதற்கு முன்னால் நான் உங்களுக்கு ஒன்றைக் காட்ட விரும்புகிறேன். இருபது வருடம் நான் செய்த வேலையை நீங்கள் பார்க்க வேண்டாமா?"

அந்த பாதிரியார் கட்டடக்கலை கற்றவர். பாதிரியாவதற்கு முன் கட்டடக்கலை வல்லுநராக இருந்தவர். அந்த இருபது வருடங்களில் அந்தத் தீவில் கிடைத்த கட்டடப் பொருள்களை வைத்து ஒரு குட்டி நகரத்தையே உருவாக்கியிருந்தார்.

கேப்டனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அந்த குட்டி நகரம் அவ்வளவு அழகாக அமைந்திருந்தது. கேப்டன் சொன்னார், "என் கப்பலில் இருக்கும் எல்லாப் பயணிகளும் இதைப் பார்க்கட்டும். இது ஓர் அதிசயம். மிக அழகாக ஒரு மாதிரி நகரத்தை நிர்மாணித்து இருக்கிறீர்கள். பொம்மைகளைப் போல சின்னச் சின்ன வீடுகள், தெருக்கள். அப்பா.. என்ன நேர்த்தி.. எப்படி இதையெல்லாம் உங்களால் செய்ய முடிந்தது?"

"பொழுதைக் கழிக்க ஏதாவது செய்ய வேண்டுமே? உண்மையிலேயே இப்படி ஒரு பொம்மை நகரத்தை அமைத்தது எனக்கு மிகவும் திருப்தியாக இருந்தது. என் பொழுதும் நன்றாகப் போயிற்று.

சில ஆண்டுகளில் இந்த தீவுக்கு வெளியே இருக்கும் உலகத்தையே நான் மறந்துவிட்டேன்.

"மனிதர்கள் வாழும் உலகத்துக்குப் போக வேண்டும் என்ற ஆசையே என்னைவிட்டுப் போய்விட்டது. இல்லை, இல்லை, அந்த ஆசை போய்விட்டது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். உங்கள் கப்பலைப் பார்த்தவுடன் தான் அந்த ஆசை என் மனதில் இன்னும் இருக்கிறது என்று தெரிந்தது. இந்த மாதிரி வீடுகளைக் கட்டுவதற்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் இந்த தீவிலேயே கிடைத்தன.

"இருப்பதிலேயே அழகான அமைப்பு என்ன தெரியுமா? வாருங்கள், காட்டுகிறேன்."

அதற்குள் கப்பலில் இருந்த பயணிகள் எல்லாரும் படகு மூலம் அந்த தீவுக்கு வந்துவிட்டனர்.

தீவில் இருந்தவர் அவர்களை ஒரு தேவாலயத்திற்கு அழைத்துக் கொண்டு போனார். அது அவரே கட்டிய தேவாலயம். அது ஒரு கத்தோலிக்க தேவாலயம். அந்த தேவாலயம் கொஞ்சம் பெரிதாக, ஓர் ஆள் உள்ளே நுழைந்து வழிபாடு செய்யும் வகையில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. தீவில் வசித்தவர் தினமும் அங்கே போய் வழிபடுவது வழக்கம். அவரால் தினமும் சர்ச்சுக்குப் போகும் பழக்கத்தை மாற்றிக் கொள்ள முடியவில்லை.

அந்த சர்ச்சை விட்டு வெளியே வந்த கேப்டனுக்கும் பயணிகளுக்கும் இன்னோர் ஆச்சரியம் காத்திருந்தது. அந்த தேவாலயத்துக்கு எதிரே மற்றொரு தேவாலயம் கட்டப்பட்டிருந்தது. அது ஒரு ப்ராட்டஸ்டென்ட் (Protestant) தேவாலயம்.

கேப்டன் கேட்டார். "நீங்கள் ஓர் ஆள் வழிபடுவதற்கு ஒரு தேவாலயம் போதாதா? ஏன் இன்னொன்றைக் கட்டினீர்கள்?"

"ஓ அதுவா? இது (கத்தோலிகக தேவாலயம்) நான் தினமும் போகும் சர்ச். அது நான் போகவே போகாத சர்ச்."

பழைய பழக்கங்கள். ஆனால் அவருக்கு அதில் பரம திருப்தி. அவர் மேலும் சொன்னார்.

"அந்த சர்ச்சுக்கு யாருமே போவதில்லை. அது எப்போதும் காலியாகவே இருக்கும் அங்கே வழிபாடே நடப்பதில்லை. யாரும் அதனுள் நுழைந்து நான் பார்த்ததில்லை."

அது எப்படி பார்க்க முடியும்? அந்தத் தீவின் மொத்த ஜனத்தொகை 1. அது நமது கதாநாயகர்தான். அவரோ கத்தோலிக்கர். அவர் கத்தோலிக்க தேவாலயத்தில் தொழுகிறார். எதிரணியினரின் தேவாலயத்துக்கு யார் போவார்கள்?

என்றாலும் எதிரணியினர் தேவாலயம் காலியாக, மூளியாக இருக்கிறது என்பதில் அவருக்கு ஒரு குரூர திருப்தி. மனிதன் தன்னை எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளும் வல்லமை படைத்தவன்.

மனிதனின் மிகப் பெரிய பலங்களில் அதுவும் ஒன்று. எந்தவித தடப்வெப்ப நிலைக்கும் அவனால் தன்னை மாற்றிக் கொள்ள முடியும். எஸ்கிமோ நாட்டின் குளிர், ஆப்பிரிக்க பாலைவனத்தின் வெயில், சிரபுஞ்சியின் மழை, அரேபிய பாலைவனங்களின் மழையின்மை - எந்த சூழ்நிலையிலும் மனிதன் தன்னை மாற்றிக் கொண்டு வாழ முடியும். மனிதனின் நெகிழ்வுத் தன்மைதான் இதற்குக் காரணம்.

நீங்கள் துணையின்றித் தனியாக இருக்கும் போது, திருப்தியுடன் இருக்கலாம். இல்லை அப்படி இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் மற்றவர்களுடன் சேர்ந்து இருக்கும் போது உங்கள் மனம் நிறைவாக இருந்தால்தான் உங்கள் தனிமைக்கு ஓர் அர்த்தம் இருக்கும்.

தனியாக இருக்கும் போது திருப்தியுடன் இருந்து, மற்றவர்களோடு இருக்கும் போது தவிப்புடன் இருந்தால், அந்த திருப்தி போலியானது, தாற்காலிகமானது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். உண்மையை சொல்லப்போனால் நீங்கள் தனிமையில் இல்லை. துணையின்றி இருந்திருக்கிறீர்கள். அவ்வளவுதான்.

துணையின்றி இருப்பது தனிமையாகாது. மற்றவர்களுடன் சேர்ந்து இருக்கும் போது உங்களுக்கு எந்த பாதிப்பும் ஏற்படவில்லையென்றால், உங்களுக்கு எந்த ஆசையும், தவிப்பும், தேவையும், எதிர்பார்ப்பும், பொறாமையும், அடுத்தவர்கள் மேல் ஆதிக்கம் செலுத்தும் நினைப்பும் தோன்றவில்லையென்றால் நீங்கள் உண்மையிலேயே தனிமையில் இருந்து மனநிறைவை அடைந்திருக்கிறீர்கள் என்று பொருள்.

உங்களால் உண்மையிலேயே தனிமையில் திளைத்திருக்க முடியவில்லை என்று தான் நான் நினைக்கிறேன். அப்படி இருக்க

முடிந்தால் இந்த கேள்வியே தோன்றியிருக்காதே! உங்களால் தனிமையில் மனநிறைவைக் காணமுடிந்தால், அதன் பின் நீங்கள் தனியாக இருந்தாலும் சரி, ஆயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டத்தில் இருந்தாலும் சரி, எப்போதும் உங்கள் தனிமையில் தான் திளைத்திருப்பீர்கள்.

அந்த அழகில் லயித்திருக்கும் போது, அடுத்தவர்களை ஆள வேண்டும் என்ற அசிங்கமான நினைப்பு வரவே வராது. அது ஏன் வர வேண்டும்? நீங்கள் சந்தோஷத்தால் நிரம்பி வழியும் போது அடுத்தவர்களை ஏன் உடைமையாக்கிக் கொள்ள வேண்டும்? அது அசிங்கமான செயலாகத் தோன்றும். அந்த அசிங்கத்தை உங்களால் உணரமுடியும்.

நீங்கள் தனியாக இருக்கும் போது இந்த அசிங்கமான ஆசைகள் எதுவும் தோன்றாமல் இருந்து, மீண்டும் மற்றவர்களுடன் இருக்கும் போது இந்த ஆளுமை, உடைமை, பொறாமை போன்றவை தலையெடுத்தால், இந்த தேள்களும், பாம்புகளும் உங்கள் ஆழ் மனதில் இருந்து உங்கள் மேல் மனதுக்கு வந்து ஆட்டம் போடத் தொடங்கினால் என்ன அர்த்தம்?

அவை எல்லாமே உள்ளேயே இருந்தன. சரியான வாய்ப்பிற்காகக் காத்துக் கொண்டிருந்தன என்பதுதான் அர்த்தம். மற்றவர்களுடன் இருக்கும் போது அவற்றிற்கு ஆட்டம் போட நல்ல வாய்ப்பு கிடைக்கிறது.

அதனால் தான் என் சந்நியாசிகளிடம், 'இமயமலைக்குப் போய் தியானம் செய்யுங்கள்' என்று நான் சொல்வதில்லை. அவர்கள் மக்கள் வாழும் இடங்களை விட்டு நகரும் போது, மனதில் இருக்கும் பேய்கள் ஆட்டம் போட வாய்ப்பு இல்லாமல் போகிறது.

ஆனால் பேய்கள் அப்படியே மனதில் இருக்கும். ஐம்பது ஆண்டுகள் தவம் செய்துவிட்டு அவர்கள் நாட்டுக்குள் நுழையும் போது அந்த பேய்கள் ஆட்டம் போடத் தொடங்கும். அந்த பேய்களுக்கு ஆட்டம் போட வாய்ப்பு கொடுத்து, அவற்றின் ஆட்டத்தை ரசித்துப் பின் அவற்றை அழித்துவிட வேண்டும் என்பதுதான் என் வழி.

உலகத்தை வெறுத்துவிட்டு இமயமலையில் உள்ள ஒரு குகையில் நீங்கள் தனியாக உட்கார்ந்து கொள்ளலாம். 'ஆஹா,

எனக்கு தனிமை என்றால் என்னவென்று தெரிந்து விட்டது' என்று உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டு உங்கள் வாழ்நாள் முழுவதும் அந்த குகையில் இருக்கலாம்.

நீங்கள் தனியாகத் துணையின்றி இருப்பதோடு மட்டும் அல்லாமல் திருப்தியுடன் இருப்பதாக உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டிருப்பீர்கள். உங்களிடம் தாற்காலிக திருப்தி இருக்குமே யொழிய நிரந்தரமான ஆனந்தமோ, நிறைவோ இருக்காது. அந்த தனிமைக் குகையில் உங்களுக்கு உலகக் கவலைகள் இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஆனந்தம் இருக்காது. கவலைகள் இல்லாத நிலைக்கும் பரமானந்தமான நிலைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது.

நோயில்லாமல் இருந்தால் உடல்நலத்துடன் முழுமையாக இருப்பதாக அர்த்தம் இல்லை. உடல் நலம் என்பது நோயின் மையைவிட ஒரு படி மேலே. பலர் நோயில்லாமல் இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் உடல்நலம் இல்லை. அபூர்வமாகச் சிலருக்கு நோய்கள் இருக்கலாம். என்றாலும் அவர்கள் உடல்நலத்துடன் இருப்பார்கள். உடல்நலம் என்பது முற்றிலும் வேறுபட்ட கோட்பாடு. அதற்கும் மருத்துவத்திற்கும் எந்த தொடர்பும் இல்லை என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

உதாரணமாக, பிரேம் சின்மயாவிடம் பெரிய நோய் இருந்தது. புற்று நோய். அதைவிட பெரிய நோய் எதுவுமே கிடையாது. அதுவும் வேகமாக அவனது உடலில் பரவிக் கொண்டிருந்தது. ஆனாலும் அவன் உடல்நலத்துடன் இருந்தான்.

அவனிடம் நாம் புரிந்து கொள்ள முடியாத ஒரு 'நலம்' இருந்தது. அவனது நோய் அவனது உடலில் மட்டுமே இருந்தது. அதைத் தாண்டி அவனது உணர்வு நிலைக்கு அந்த நோய் வர அவன் அனுமதிக்கவில்லை. அவன் தனது நோய்வாய்ப்பட்ட உடலுக்கு மேல் மகிழ்ச்சியுடன் 'மிதந்து' கொண்டிருந்தான்.

சின்மயாவின் கடைசிகாலத்தில் அவனுக்கு நர்சாக இருந்து பார்த்துக் கொண்ட பூஜா சில நாட்களுக்கு முன்பு எனக்கு கடிதம் எழுதியிருந்தாள்.

"ஓஷோ, சின்மயாவுக்கு சேவை செய்ய முடிந்ததை எனக்குக் கிடைத்த பெரிய பேறாகக் கருதுகிறேன். நான் பல ஆண்டுகள் நர்சாக இருந்திருக்கிறேன். பல சாவுகளைப் பார்த்திருக்கிறேன்.

“ஆனால் சின்மயாவின் சாவு வித்தியாசமானது. மற்ற சாவுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது, அது ஒரு மேன்மையான சாவு என்றுதான் சொல்லவேண்டும். சாகும் போது அத்தனை அழகுடன், அத்தனை அமைதியுடன், அத்தனை ஆழமான தியானத்துடன் இருந்த ஒரு மனிதனை அதுவரை என் வாழ்க்கையில் நான் பார்த்ததேயில்லை.

சின்மயா கடைசியாக எனது உரையைக் கேட்டுக்கொண்டிருந்த போது பூஜா அங்கே இருந்திருக்கிறாள். அதைப் பற்றி அவள் எழுதுகிறாள். “ அவன் வலியால் துடித்துக் கொண்டிருந்தான். அது அவனுடைய புற்று நோயின் உச்சகட்டம். அவனது வலியை மறக்கடிக்க பல ஊசிகள் போட்டோம்.

என்றாலும் அவனது வலி குறையவில்லை. மருந்தின் அளவை இரண்டு மடங்கு, மூன்று மடங்கு ஆக்கினோம். பயனில்லை. அவனது வலியைக் குறைக்க எங்களால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. ஆனால் நீங்கள் ஏசுநாதரைப் பற்றிய ஒரு ஜோக்கைச் சொன்ன போது, ஏசு நாதரால் குணப்படுத்த முடியாத ஒருவனைப் பற்றி - அவனுக்கும் புற்று நோய் என்று சொன்னீர்கள் - சொன்ன போது சின்மயா வாய்விட்டுச் சிரித்தான்.

“அந்த சிரிப்பு நிச்சயமாக அவனது உடலோடு சம்பந்தப்பட்டது இல்லை. ஏனென்றால் அவனது உடல் சிரிக்கும் நிலையில் இல்லை. அந்த வலியில் எப்படி சிரிக்க முடியும்? அது இன்னும் ஆழத்திலிருந்து அவன் ஆன்மாவிலிருந்து வந்த சிரிப்பு. உள்ளே அவன் இன்னும் பலமாகச் சிரித்திருக்க வேண்டும். அந்த சிரிப்பின், அந்த மகிழ்ச்சியின், அந்த பேரின்பத்தின் ஒரு கீற்றுத்தான் அவன் உதட்டில் தெரிந்த சிரிப்பு.”

மருத்துவ ரீதியாகப் பார்க்காமல் வேறு ஒரு கோணத்தில் பார்த்தால் சின்மயா சாகும் வரை நல்ல உடல் நலத்துடன் இருந்தான் என்று தான் சொல்ல வேண்டும். இன்று பலரும் மருத்துவ ரீதியாகத் தான் உடல் நலத்துடன் இருக்கிறார்கள். டாக்டர்கள் அவர்களுக்கு எந்த நோயும் இல்லை என்று சான்றிதழ் கொடுத்துவிடுவார்கள்.

ஆனால் அவர்கள் முழுமையான உடல் நலத்துடன் இல்லை. உள்ளே, ஆழத்தில் அவர்களுக்கு கவலை, பயம், வெறுமை, துயரம் எல்லாம் இருக்கின்றன. அதை அவர்களால் மறைக்க முடிகிறது. அமுக்கி வைக்க முடிகிறது. மனிதனுடைய சூழ்ச்சித்திறம்

அளவிட முடியாதது. அவனால் மற்றவர்களை மட்டும் ஏமாற்ற முடியாது. தன்னைத்தானே கூட ஏமாற்ற முடியும்.

நீங்கள் கேட்கிறீர்கள்:

*சேர்ந்து இருக்க வேண்டுமென்றால் தனியாக இருப்பது எப்படி என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொன்னீர்கள்.*

அதையே தான் மீண்டும் சொல்கிறேன். தனியாக இருக்க, அதில் இன்பம் காண கற்றுக் கொண்டாலொழிய, உங்களால் மற்றவர் களோடு சேர்ந்து இருக்க முடியாது. அப்படியே மீறி இருந்தாலும் அது உங்களுக்கு தொல்லைகளை, மன உளைச்சலைத்தான் தரும். ஏனென்றால் நீங்கள் தனியாக இருக்கும் போது உங்களுக்குள் தூங்கிக் கொண்டிருக்கும் சில எண்ணங்களும், உணர்வுகளும் அடுத்தவர்களோடு சேர்ந்து இருக்கும்போதுதான் வெளிப்படும்.

நீங்கள் மற்றவர்களோடு இருக்கும் போது அவர்களில் யாராவது ஒருவர் நீங்கள் பல ஆண்டுகளாக, ஏன் பல பிறவிகளாக அமுக்கிவைத்திருக்கும் உணர்வுகளைத் தூண்டிவிடலாம். அவர் உங்களுக்கு ஒரு சவாலாக இருப்பார். நீங்கள் அவருக்கு ஒரு சவாலாக இருப்பீர்கள்.

ஆண்-பெண் உறவு உங்கள் ஆழ்மனதில் இருக்கும் உணர்வுகளை மேல் மனதுக்குக் கொண்டுவந்துவிடும். அவற்றின் நிஜமான நிறங்களை அப்போது தான் உங்களால் பார்க்க முடியும். ஆனால் உறவின் ஆரம்ப நிலையில் இது நடக்காது. ஏனென்றால் ஆண்-பெண் உறவின் ஆரம்பகட்டத்தில் இருவருமே தங்களது போலி முகங்களை, முகமூடிகளைத்தான் அடுத்தவருக்குக் காட்டுகின்றனர்.

ஓர் ஆணையோ, பெண்ணையோ முதன் முதலில் ஒரு கடற்கரையில், ஒரு நல்ல பௌர்ணமி இரவில், முழுநிலவின் வெளிச்சத்தில் சந்திக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். சில மணி நேரங்கள் நீடிக்கும் அந்த சந்திப்பில் உங்கள் போலி முகத்தை, முகமூடியைத்தான் காட்டுவீர்கள்.

ஏனென்றால் உங்களுக்கு அடுத்தவரைப் பற்றித் தெரியாது. அடுத்தவருக்கும் உங்களைப் பற்றித் தெரியாது. அதனால் அவரும் உங்களைப் போலவே ஒரு போலி முகத்தை வைத்துக் கொண்டு காதல் மொழிகளோ, ஆசை மொழிகளோ பேசி அந்த மாலைப் பொழுதை இனிதாக்கிவிட்டுப் போய்விடலாம். இதே நிலை உங்கள்

திருமணம் வரைத் தொடரலாம். தேனிலவு முடிந்தபின் எல்லாமே முடிந்து விடும். முகமூடிகள் கிழிந்துவிடும்.

உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் எல்லாத் திருமணங்களும் தேனிலவோடு முடிந்து விடுகின்றன. அதன் பின் யதார்த்தம் ஆரம்பமாகிறது. திருமணம் என்ற கானல் நீர் மறைந்துவிடுகிறது. இப்போது இருவரும் திருமண பந்தத்தில் மாட்டிக் கொண்டு விட்டீர்கள்.

உங்களால் எளிதில் தப்பித்துவிட முடியாது என்று அடுத்தவருக்குத் தெரியும். இனிமேல் வேஷம் போட அவசியமில்லை என்று அடுத்தவர் நினைக்கிறார். நீங்களும் அப்படியே நினைக்கிறீர்கள். நீங்கள் இருவருமே உங்கள் உண்மையான முகங்களைக் காட்டத் தொடங்குகிறீர்கள்.

உங்களுக்கு இனிமேல் பயமில்லை. உங்களுடைய உண்மையான ஸ்வரூபத்தைக் காட்டிவிடலாம். உங்கள் மனைவியால், உங்கள் கணவனால் எளிதில் உங்களை விட்டுவிட்டு ஓட முடியாது.

இந்த நிலையில் தான் உறவு வெடிக்கத் தொடங்குகிறது. அவர்கள் அமுக்கிவைத்திருந்ததெல்லாம் வெளியில் வருகின்றன. சேர்ந்து வாழ்வதே ஓர் அசிங்கமாகப் போய்விடுகிறது.

அதனால்தான் மனிதன் பல நூற்றாண்டுகளாக அடுத்தவர்களோடு சேர்ந்து வாழ்வதைத் தவிர்ப்பதற்காகவே காடுகளை நோக்கி, மலைகளை நோக்கி, ஆசிரமங்களை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறான். ஆனால் அது உண்மையான ஆன்மிகம் இல்லை. அப்படி ஓடிப் போவதால் உங்கள் வளர்ச்சி தடைப்படுகிறது. அது உங்களுடைய தப்பித்து ஓடும் கோழை மனப்பான்மையையே காட்டுகிறது.

நீங்கள் இந்த உலகத்தில் மக்கள் கூட்டத்தில் தான் வாழ வேண்டும் என்று தான் நான் தொடர்ந்து வலியுறுத்தி வந்திருக்கிறேன். இந்த உலகத்தில் இருங்கள். ஆனால் ஜாக்கிரதையாக, விழிப்புணர்வுடன், கவனத்துடன் இருங்கள். உள்ளே தோன்றும் உணர்வுகளை அமுக்கி வைக்காதீர்கள்.

நீங்கள் தனியாக இருக்கும் போது உங்கள் உணர்வுகளை அமுக்கிவைக்கவில்லை என்றால் தனிமையே ஒரு பரவசமான நிலையாகிவிடும். அழகான அனுபவமாகிவிடும். அந்த பரவச

நிலையிலேயே அடுத்த மனிதனைச் சந்தித்து உறவாடுங்கள். உங்கள் வழக்கமான துன்பநிலையில் அடுத்தவனைச் சந்திக்காதீர்கள்.

நீங்கள் தனிமையின் பரவசத்தில் இருக்கும் போதே அடுத்தவனைச் சந்திக்கும் போது அந்த பரவசம் பல மடங்கு அதிகமாகும்.

நீங்கள் எந்த உணர்வோடு மற்றவர்களைச் சந்திக்கிறீர்களோ, அந்த உணர்வை அந்தச் சந்திப்பு பல மடங்கு அதிகமாக்கிவிடும். துன்பநிலையில் சந்தித்தால் உங்கள் துன்பம் இன்னும் அதிகமாகும். பரவசநிலையில் சந்தித்தால் பரவசம் இன்னும் அதிகமாகும். அப்படி பரவசநிலை அதிகமாகும் போது அந்த சந்திப்பே அழகாகி விடுகிறது. ஆனால் எல்லாவற்றிற்கும் முன்னால் தனிமையில் இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தனிமையில் திளைத்திருக்கக் கற்றுக் கொண்டால் சேர்ந்திருக்கும் போதும் தனிமையில் இருப்பது உங்களுக்கு எளிதாக வந்துவிடும். இந்த இரண்டும் ஒரே நிகழ்வுதான். தனியாக இருக்கக் கற்றுக் கொண்டால் உங்களால் ஒரு சந்திப்பிற்கு இடையிலும், ஓர் உறவுக்கு நடுவிலும் தனியாக இருக்க முடியும்.

அந்த சூழ்நிலையில் நீங்கள் அடுத்தவர்களைச் சந்திக்கும் போது அது உங்களுடைய ஆன்மிக வளர்ச்சிக்கு அடிகோலுகிறது. உங்கள் நேர்மை இன்னும் ஆழமாக, அர்த்தமுள்ளதாக மாறுகிறது. ஏனென்றால் அந்த சந்திப்பு உங்களுக்கு ஒரு பெரிய சவாலாக, ஓர் அரிய வாய்ப்பாக அமைந்துவிடுகிறது. உங்களை முழு வெளிச்சத்தில் கொண்டு போய் நிறுத்திவிடுகிறது. அடுத்தவர் உங்களை உள்ளபடியே பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குகிறார்.

உறவுகள் தான் உண்மையான கண்ணாடி. உங்கள் முகத்தை கண்ணாடியில் தான் பார்த்துக் கொள்ள முடியும். அதே போல் உங்கள் உண்மை நிலையை அடுத்தவர் மூலம் தான் பார்த்துக் கொள்ள முடியும். அடுத்தவர்தான் உங்களுக்குக் கண்ணாடி. ஆன்ம வளர்ச்சிக்கு இந்த கண்ணாடிகள் பெரிதும் உதவி செய்கின்றன.

ஒரு பெண் இருந்தாள். பார்க்க மிகவும் அசிங்கமாக இருப்பாள். அதனால் அவளுக்குக் கண்ணாடியைப் பார்த்தாலே வெறுப்பாக இருந்தது. கண்ணாடிகள் எல்லாம் சேர்ந்து கூட்டுச் சதி செய்து தன்னை வேண்டுமென்றே அசிங்கமாகக் காட்டுகின்றன என்று நினைத்துக் கொண்டிருந்தாள்.

"கண்ணாடி இல்லை என்றால் நான் அசிங்கத்தை உணர் வதில்லை. நான் சரியாகவே இருக்கிறேன். கண்ணாடி வந்தவுடன் நான் அசிங்கமாக மாறிவிடுகிறேன். அதனால் இந்தக் கண்ணாடி தான் ஏதோ விஷமம் செய்து என் தோற்றத்தை அசிங்கப் படுத்திவிடுகிறது."

அதனால் கண்ணில் தெரியும் கண்ணாடிகளை எல்லாம் உடைக்க ஆரம்பித்தாள். கண்ணாடிகள் தான் என் பகைவர்கள் என்ற கருத்து அவளது மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டது.

அவள் பைத்தியக்காரி என்று நீங்கள் கேலி செய்வது எனக்குப் புரிகிறது. உங்கள் துறவிகள், கன்னியா ஸ்த்ரீகள் அதே பைத்தியக்காரத்தனத்தைத் தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

துறவி மடங்களுக்குப் போவதன் பின்னணி என்ன? அவர்கள் கண்ணாடிகளில் இருந்து தப்பித்துக் கொள்ள முயற்சி செய்கிறார்கள். உறவைப் பழிக்கிறார்கள். உலகைப் பழிக்கிறார்கள். அன்பைப் பழிக்கிறார்கள். காதலைப் பழிக்கிறார்கள். இவை எல்லாம் அவர்கள் யார் என்று அவர்களுக்கு உணர்த்தும் கண்ணாடிகள். ஆகவே உண்மையில் அவர்கள் கண்ணாடிகளைப் பழிக்கிறார்கள்.

உங்கள் துறவிகளுக்குக் கண்ணாடிகளைக் கண்டால் பயம். கண்ணாடிக்கு பயப்படுகிறீர்கள் என்றால், நீங்கள் உங்கள் அசிங்க மான தோற்றத்திற்குப் பயப்படுகிறீர்கள் என்றுதான் அர்த்தம். உங்களுக்கு அதைப் பார்க்க விருப்பமில்லை என்று தான் பொருள்.

கண்ணாடிகள் இல்லாமல் உங்கள் அசிங்கத்தை நீங்களே பார்த்துக் கொள்ள முடியாது. அதனால் நீங்கள் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறீர்கள். நீங்கள் பார்த்துக் கொள்ள முடியவில்லை என்றால் அந்த அசிங்கம் இல்லை என்று ஆகிவிடாதே? அது உங்களிடம் அப்படியேதானே இருக்கிறது.

எந்த நேரத்திலும் அதை நீங்கள் சந்திக்க நேரிடலாம். அதற்கு கண்ணாடிகூட தேவையில்லை. தெளிந்த குளத்தில் உங்கள் அசிங்கம் உங்களைப் பயமுறுத்தலாம். நீங்கள் உங்கள் அசிங்கத்தைப் பார்க்கிறீர்களோ இல்லையோ, மற்றவர்கள் அதை சதா பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

உங்கள் புனிதர்களின், மகான்களின் முகங்களைப் பாருங்கள். அவர்கள் எல்லாருமே கவலையாகத்தான் இருக்கிறார்கள்.

அவர்கள் முகத்தில் பரவசம் இருப்பதற்கான எந்த அடையாளமும் இல்லை. அவர்கள் தாமரை மலர்களைப் போல இல்லை பாறாங் கற்களைப் போல இருக்கிறார்கள். உயிரில்லாமல், கடினமாக, மந்தமாக, செயலில்லாமல், துடிப்பில்லாமல் சராசரியாக இருக்கிறார்கள்.

அவர்களிடத்தில் அறிவின் கூர்மை இல்லை. அறிவைக் கூர்மைப்படுத்தக்கூடிய வாழ்க்கை நிகழ்வுகளில் இருந்து அவர்கள் காத தூரம் தள்ளிப் போய்விட்டார்களே! அவர்கள் அறிவு அழுக்கு படிந்து துருப்பிடித்து யாருக்கும் பயனில்லாமல் அழிந்து கொண்டிருக்கிறது. ஆனால் அவர்கள் திருப்தியுடன் இருக்கிறார்கள். 'கடவுள் எனக்கென்று விதித்த வாழ்க்கையை நான் வெற்றிகரமாக வாழ்ந்துவிட்டேன்' என்ற போலி திருப்தியுடன் நாட்களைக் கடத்துகிறார்கள். அவர்கள் ஆன்ம வளர்ச்சிக்கான பெரிய வாய்ப்பை நழுவ விட்டுவிட்டார்கள்.

கடவுள் அவர்கள் முன் தோன்றினால் என்ன சொல்வார்?

"நான் உங்களுக்கு அருமையான ஒரு வாழ்க்கையைக் கொடுத்தேன். ஆனால் நீங்கள் அதில் இருந்து தப்பி ஓடிவிட்டீர் கள். வாழ்க்கையை வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டீர்கள். நான் கொடுத்த பரிசை என் முகத்தின் மேல் தூக்கியெறிந்து விட்டீர்கள். நாத்திகர்கள் எனக்கு எதிரிகள் இல்லை. நீங்கள்தான் என் எதிரிகள்."

குர்ஜிஃப் என்ற மாமேதை ஒரு விநோதமான வாக்கியத்தை அடிக்கடி சொல்வார். அவரைப் போன்ற ஞானிகள் தான் நிர்வாண மான உண்மையை அப்படியே சொல்ல முடியும். "உங்கள் புனிதர்கள் எல்லாம் கடவுளின் எதிரிகள்." என்று சொல்வார் அந்த ஞானி.

முதன் முதலில் அந்த வாக்கியத்தைக் கேட்கும் போது உங்களால் அதை நம்ப முடியாது. அது எப்படி புனிதர்கள் கடவுளுக்கு எதிராகவா? வாய்ப்பேயில்லை என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் குர்ஜிஃப்பின் கூற்றில் ஒரு பேருண்மை இருக்கிறது. அவர் ஜோக்கடிக்க வில்லை. அவர் காமெடி, கீமெடி பண்ணவில்லை. உண்மையைத்தான் சொல்கிறார்.

புனிதர்கள் கடவுளின் எதிரிகள். ஏனென்றால் அவர்கள் வாழ்க்கையின் எதிரிகள். நான் வாழ்க்கையின் எதிரி இல்லை. நான் வாழ்க்கையை மனமார காதலிக்கிறேன்.

முதலில் தனிமையில் திளைத்திருக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அது ஆழ்நிலை சிந்தனையால் மட்டுமே முடியும். அதன் பின் உங்கள் வாழ்க்கையில் கண்ணாடிகளை - உங்களை உங்களுக்குக் காட்டும் மற்ற மனிதர்களை - உள்ளே அனுமதியுங்கள். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள், எங்கே இருக்கிறீர்கள். எந்த அளவு வளர்ந் திருக்கிறீர்கள் என்று அந்த கண்ணாடிகள் உங்களுக்குச் சொல்லும்.

இந்த கூட்டமைப்பில் இதுவரை யாரும் செய்யாத ஒன்றை நாம் செயது கொண்டிருக்கிறோம். மேலைநாடுகளில் வளர்ச்சி மையங்கள் என்ற பெயரில் சில அமைப்புகள் இருக்கின்றன. அங்கே மனவியல் சிகிச்சை அளிக்கிறார்கள். அதன் மூலம் நீங்கள் எந்த அளவு வளர்ந்திருக்கிறீர்கள் என்பதையும் கணிக்கிறார்கள். கீழை நாடுகளில் தியான மையங்கள் இருக்கின்றன.

அங்கே மக்கள் ஆழ்நிலை சிந்தனையில் ஈடுபடுகிறார்கள். ஆனால் இந்த கூட்டமைப்பில் இந்த இரண்டுமே மாறி மாறி செய்யப்படுகின்றன. வளர்ச்சி மையங்களில் ஒரு குழுவுடன் இருக்கிறார்கள். அங்கே தங்கள் வளர்ச்சியைப் பற்றி, தங்கள் நிலையைப் பற்றித் தெரிந்து கொள்கிறார்கள். அதன் பின் தியான மையங்களில் அமர்ந்து ஆழ்நிலை சிந்தனையில் ஈடுபடுகிறார்கள். அதன் பின் மீண்டும் வளர்ச்சிக் குழுக்களுடன் இருக்கிறார்கள்.

உடல் எடை குறைய வேண்டும் என்று தேகப் பயிற்சி செய்பவர்களை நீங்கள் பார்த்திருக்கலாம். அவர்கள் பயிற்சி செய்து முடித்தவுடன் எடை காட்டும் கருவியில் தங்கள் எடையைப் பார்த்துக் கொள்வார்கள். பின் மீண்டும் பயிற்சியில் ஈடுபடுவார்சள்.

பின் மீண்டும் எடை பார்க்கும் கருவி, மீண்டும் பயிற்சி என்று தொடர்ந்து செய்து கொண்டேயிருப்பார்கள். இந்த கூட்டமைப்பில் தியானம் என்பது தான் அந்த பயிற்சி. வளர்ச்சிக் குழுக்களுடன் இருப்பது எடை பார்க்கும் கருவியில் உங்கள் எடையைப் பார்த்துக் கொள்வதற்கு ஒப்பானது.

மேலோட்டமாகப் பார்க்கும் போது இதில் முரண்பாடு இருப்பது போல் தோன்றும். தியானம் என்பது தனிமையைக் கற்றுத்தரும் ஒரு பயிற்சி. வளர்ச்சிக் குழுக்களில் சேர்ந்து வாழ்வதைக் கற்றுக் கொள்கிறீர்கள். ஆனால் இதுதான் என் அடிப்படையான அணுகுமுறை. நீங்கள் இரண்டையுமே கற்றுக் கொள்ள வேண்டும்.

*அன்பின் வழியில் நடந்து செல்ல அதீத விழிப்புணர்வு தேவை என்று தோன்றுகிறது*

நீங்கள் சொல்வது சரிதான். இதில் இன்னோர் உண்மையையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். அன்பின் வழியில் நடக்க அதீத விழிப்புணர்வு வேண்டுமென்றால், அதீத விழிப்புணர்வுடன் இருக்க அபரிமிதமான அன்பு வேண்டும். அபரிமிதமான அன்பு, அதீத விழிப்புணர்வு - இவை இரண்டும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள்.

*நான்காம் கேள்வி:*

*ஓஷோ,*

*இப்படி தத்துவப் பாடங்களை நடத்திக் கொண்டு போகிறீர்களே! ஒரு மாறுதலுக்காக சில ஜோக்குகளைச் சொல்லுங்களேன். உங்கள் சந்நியாசிகள் அதை ரசிப்பார்கள் என்று நினைக்கிறேன்.*

உங்கள் கேள்வியில் இருந்து ஒன்று நிச்சயமாகத் தெரிகிறது. நீங்கள் என் சந்நியாசி இல்லை. *உங்கள் சந்நியாசிகள் அதை ரசிப்பார்கள் என்று நினைக்கிறேன்.* என்று சொல்கிறீர்கள்.

நீங்கள் தவறான இடத்தில் இருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். நீங்கள் இங்கே இருக்க வேண்டிய ஆளேயில்லை. நீங்கள் தவறான நோக்கத்துடன் இங்கே வந்திருக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. தத்துவம் கற்றுக் கொள்ள இங்கே வந்திருக்கிறீர்கள். நீங்கள் ஒரு 'சீரியஸ் சிக்கந்தராக' இருக்க வேண்டும். காரியத்திலேயே கண்ணாக இருக்கிறீர்கள். அது உள்ளே இருக்கும் மனநோய்க்கு அடையாளம்.

தத்துவம் குப்பை. எனக்கு தத்துவத்தில் ஈடுபாடு இல்லை. என் சந்நியாசிகளுக்கும் தத்துவம் கற்றுக் கொள்வதில் ஆர்வம் இல்லை. என்னோடு இருப்பவர்கள் வாழ்க்கையை விரும்புபவர்கள். தத்துவத்தை விரும்புபவர்கள் அல்லர். வாழ்க்கை உண்மை. தத்துவம் பொய். ஆனால் பல நூற்றாண்டுகளாக நாம் தத்துவத்தைப் போற்றி வந்திருக்கிறோம். இப்போதும் அந்த

மனக்கட்டுத் திட்டத்துடன்தான் வாழ்கிறோம். அதனால்தான் யாரும் தத்துவம் பொய் என்று உங்களிடம் சொல்வதில்லை.

புத்தர் தத்துவவாதி கிடையாது. அவர் சிறு கதைகள் நிறையச் சொல்லுவார். ஏசு நாதர் தத்துவம் கற்றவர் அல்லர். அவர் சொன்ன சிறுகதைகள் பைபிள முழுவதும் பரவி நிற்கின்றன.

நான் சொல்லும் ஜோக்குகள் இந்தக் கால சிறு கதைகள். ஏனென்றால் என்னைப் பொறுத்த மட்டில் வாழ்க்கையின் மிக முக்கியமான விஷயம் சிரிப்பு. சிரிக்கத் தெரியாதவர்கள் வாழத் தெரியாதவர்கள்.

பலர் இங்கே தவறான காரணங்களுக்காக வருகிறார்கள். இப்போது இது அடிக்கடி நிகழ்கிறது. ஏதோ கீழை நாட்டு தத்துவ மேதையைப் பார்க்க போகிறோம் என்ற எண்ணத்தில் இங்கே பலர் கூடுகிறார்கள். நான் கீழை நாட்டுக்காரனும் இல்லை. தத்துவ மேதையும் இல்லை. நான் மதவாதியில்லை. நான் மகாத்மா இல்லை. புனிதன் இல்லை, பாதிரியார் இல்லை, பூசாரி இல்லை. நீங்கள் எதை மதம் என்று புரிந்து கொண்டிருக்கிறீர்களோ அதற்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

ஏற்கனவே இருக்கும் எந்த பிரிவிலும் என்னை நீங்கள் வைக்க முடியாது. எனக்கென்று ஒரு புதிய பிரிவை நீங்கள் உருவாக்க வேண்டும். மனிதர்கள் உருவாக்கும் எந்த பிரிவிலும் நான் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை. பொருள்களைத்தான் வகைப்படுத்த முடியும். மனிதர்களையல்ல.

ஒரு பெண் பெரிய கடைக்குள் நுழைந்தாள். வெட்கத்தால் முகம் சிவக்க, “உங்களிடம் .... ப்ராவுக்குள் வைத்துக் கொள்ளும்.. ரப்பர்... மார்பகங்களைப் பெரிதாகக் காட்டக்கூடியவை.....”

“ஓ இருக்கிறதே” என்று உற்சாகமாகச் சொன்னார் கடைக்காரர்.

இப்போது அந்த பெண்ணுக்குத் தைரியம் வந்துவிட்டது.

“எனக்கு ஒன்று மட்டும் தெரிந்தாக வேண்டும். நல்ல தரமானவைகள் உங்களிடம் இருக்கிறதா?”

“அது என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்? நாங்கள் போலிகளை விற்பதேயில்லை.”

அவர்கள் விற்பதே போலிச் சமாசாரம். அப்பறம் அதில் என்ன போலிகள்?

இன்று உலகில் நிலவும் தத்துவங்கள் எல்லாம் பெண்கள் ப்ராவுக்குள் அடைத்துக் கொள்ளும் ரப்பர் சமாசாரங்களைப் போலத் தான் இருக்கின்றன. அவை யாவுமே போலிகள். நல்ல தரமுள்ள வைகளாக இருக்கலாம். ஆனால் போலிகள் போலிகள்தான். நயம் அக்மார்க் போலிகள்.

தத்துவங்கள் போலிகள். நான் நிஜமான இருப்புநிலை பற்றிக் கூற வந்திருக்கிறேன். ஆனால் நீங்கள் தவறான இடத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் உங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இடத்தைக் காலி செய்ய வேண்டும். வேறு வழியே இல்லை. நீங்கள் இங்கு தொடர்ந்து இருக்க வேண்டு மென்றால் இங்கே என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு அதில் பங்கு பெற வேண்டும். அது முடியாது என்று தோன்றினால் உங்களுக்கு எது சரி என்று ஏற்கனவே தெரியும் என்று நீங்கள் நம்பினால் இது உங்களுக்கான இடம் இல்லை. இங்கே உங்களுக்குச் சரியான சகவாசமும் கிடைக்காது.

முதன் முதலில் விமானம் கண்டுபிடித்தவர்களைப் பற்றித் தெரியுமா உங்களுக்கு? அந்த விமானம் தரையை விட்டுக் கிளம் பவேயில்லை. அவர்களுடைய பெயர்கள் தெரியுமா உங்களுக்கு? தெரியாது. அவர்கள் ராங் சகோதரர்கள். (Wrong Brothers) (விமானத்தை முதன் முதலில் கண்டுபிடித்தவர்கள் ரைட் சகோதரர்கள் (Wright Brothers) அதனால் ஓடாத விமானத்தைக் கண்டுபிடித்தவர்களை Wrong Brothers என்று ஓஷோ நக்கலடிக் கிறார்.)

ஆமாம் இங்கே இருப்பவர்கள் உங்களுக்கு Wrong Brothers தான். நீங்கள் மிகச் சரியான ஆசாமியாக இருப்பீர்கள் போலிருக் கிறதே! இங்கே நீங்கள் எங்களில ஒரு பகுதியாகிவிட வேண்டும்.

இந்த உலகத்தை முன்னொரு காலத்தில் பிரளயம் தாக்கிய போது நோவாவின் கப்பலில் எல்லா மிருகங்களிலும் தலா ஒரு ஜோடி இருந்தது என்று பைபிள் கதை சொல்கிறது. எனது ஆசிரமமும் அந்த கப்பலைப் போன்றதுதான். இங்கே எல்லா வகை மிருகங்களும் இருக்கின்றன. நான் இதை புத்தனின் அரங்கம் என்று அழைக்கப் போவதில்லை. இது நோவாவின் கப்பல்தான். அப்படித்தான் நான் இதை அழைப்பேன்.

உங்களுக்கு தத்துவம் கற்றுக் கொள்ள ஆர்வமாக இருந்தால் நீங்கள் ஏதாவது ஒரு பல்கலைக் கழகத்துக்குப் போக வேண்டும். இந்த உலகத்தில் ஆயிரக்கணக்கான பல்கலைக்கழகங்கள் இருக் கின்றன. போலியான ஏதாவது ஒன்றை நீங்கள் விரும்பினால் அது அங்கே விலை மலிவாகக் கிடைக்கும். ஆனால் அப்படிச் செய்யும் போது உங்கள் பொன்னான நேரம் வீணாகிறது என்பதை மட்டும் மறந்துவிடாதீர்கள். அதை நினைத்து ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் மனம் வருந்துவீர்கள்.

டிஸ்னி உலகத்தில் ஓர் அதிசயக் கிணறு இருக்கிறது. ஏதாவது ஆசைப்பட்டு அதில் காசைப் போட்டால் ஆசைப்பட்டது நடக்கும் என்று சொல்கிறார்கள். ஒரு சுற்றுலாப்பயணி மனதில் ஒரு பெரிய ஆசையை வைத்துக் கொண்டு காசைத் தூக்கிப் போட்டான். சிறிது நேரத்தில் மிக அழகான பெண் ஒருத்தி வந்து அவனது தோளைச் செல்லமாகத் தட்டினாள்.

தன்னைப் பின் தொடர்ந்து வருமாறு சைகை காட்டிவிட்டு வேகமாக நடந்தாள். தனது ஆசை இத்தனை வேகமாக நிறைவேறி விட்டதே என்று வியந்த அந்த பயணி அவளைப் பின் தொடர்ந்து போனான். ஓர் ஆடம்பரமான வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள். அவன் அணிந்து கொள்ள பட்டு ஆடைகளைக் கொடுத்தாள். பின் இனிமையான இசையைத் தவழவிட்டாள். வாசனை தரும் மெழுகுவர்த்திகளை ஏற்றினாள். அதன் பின் அவன் கையில் ஒரு மதுக் கோப்பையைக் கொடுத்தாள்.

இது கனவா, நனவா என்று அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. தன்னைத்தானே கிள்ளிப் பார்த்துக் கொண்டான்.

அதன் பின் அவள் தனது ஆடைகளைக் களைய ஆரம் பித்தாள். செந்நிறத்தில் நீளமாக இருந்த தலைமுடியைத் தலையில் இருந்து கழற்றினாள். போலிக் கண்புருவங்களை கழற்றினாள். தனது பல் செட்டை வாயிலிருந்து எடுத்தாள். எடுப்பாக இருந்த அவளது போலி மார்பகங்களைக் கழற்றினாள். அதன்பின் தான் தெரிந்தது அவள் பெண்ணே இல்லை என்று. பயணிக்கு தலை சுற்றிக் கொண்டு வந்தது. கோபத்தில் கத்தினான்.

“இதற்கு என்ன அர்த்தம்?”

“இனிமேலாவது அந்த கிணற்றில் நீ போலி நாணயங்களைப் போடக்கூடாது என்று அர்த்தம்.”

நீங்கள் கேட்கிறீர்கள்:

*இப்படி தத்துவப் பாடங்களை நடத்திக் கொண்டு போகிறீர்களே! ஒரு மாறுதலுக்காக சில ஜோக்குகளைச் சொல்லுங்களேன்.*

நான் இதுவரை என்ன செய்து கொண்டிருந்தேன் என்று நினைத்தீர்கள்? நான் என்ன தத்துவ பாடங்களையா போதித்துக் கொண்டிருந்தேன்? அப்படி நீங்கள் நினைத்தீர்கள் என்றால் நீங்கள் என் உரையை ஒரு வார்த்தை கூட கேட்கவில்லை என்று தான் அர்த்தம். தத்துவப் பாடங்களில் எனக்கு ஈடுபாடு இல்லை. எனக்கு ஜோக்குகள் சொல்லத்தான் பிடிக்கும். நான் தத்துவத்தை விளக்குவதற்காக ஜோக்குகள் சொல்லவில்லை. சில சமயங்களில் ஜோக்குகளை விளக்குவதற்காக நான் தத்துவம் சொல்லுவேன்.

நான் உங்கள் கேள்விகளை முதலில் படித்தேன் என்று நினைத்தீர்களா? முதலில் நான் என் ஜோக்குகளைப் பார்த்துவிட்டுப் பிறகு தான் உங்கள் கேள்விகளைப் பார்த்தேன். உங்கள் கேள்விகள் என் ஜோக்குகளோடு ஒத்துப்போனால் உங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்வேன்.

இல்லாவிட்டால் உங்கள் கேள்விகளைக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு நான் ஜோக்குகளைச் சொல்லிக் கொண்டிருப்பேன். என்னிடம் வழக்கமாகக் கேள்வி கேட்பவர்கள் இந்த உத்தியை நன்றாகப் புரிந்து கொண்டுவிட்டார்கள்.

அவர்கள் முதலில் தங்களிடம் இருக்கும் ஜோக்குகளை அனுப்புவார்கள். அதன் பின் அவர்கள் கேள்விகளை அனுப்பு வார்கள். அப்போதுதான் நிச்சயமாக அவர்கள் கேள்விக்கு விடை கிடைக்கும் என்று அவர்களுக்குத் தெரியும்.

அதை விடுங்கள். நாம் சில ஜோக்குகளைப் பார்ப்போம்.

நீங்கள் சிரிப்பதைப் பார்ப்பதில் ஆர்வமாக இருக்கிறேன்...

*உங்கள் சந்நியாசிகள் அதை ரசிப்பார்கள் என்று நினைக்கிறேன்.* என்று நீங்கள் சொன்னீர்கள். அது சரிதான். என் சந்நியாசிகளுக்கு என் ஜோக்குகள் என்றால் உயிர். நீங்கள் என்னுடைய சந்நியாசி இல்லை என்பது தெளிவாகிறது. அப்படி இருந்தால் நீங்கள், ''நாங்கள் அதை ரசிப்போம்'' என்று சொல்லியிருப்பீர்கள். அதை விட்டுவிட்டு 'உங்கள் சந்நியாசிகள்' என்று உங்களை கொஞ்சம் தூரத்தில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

தத்துவம் என்றால் என்ன? மனதால் எண்ண முடியாததைப் பற்றி எண்ணுவது. மனதால் புரிந்து கொள்ள முடியாததைப் புரிந்து கொள்ள முயற்சிப்பது. அது அபத்தமான காரியம். அது தத்துவ மேதைகளுக்கும் தெரியும். என்றாலும் அவர்களுக்கு அப்படிச் செய்வது மிகவும் பிடித்திருக்கிறது. தத்துவம் ஒரு விளையாட்டாக மாறிவிட்டது. சதுரங்கம் விளையாடுவது போல் தத்துவத்தில் புகுந்து விளையாடிக்கொண்டிருக்கிறார்கள்.

இப்படித்தான் ஒரு தத்துவ மேதை இந்த உலகத்தையே மாற்ற வேண்டும் என நினைத்தார். இறைவனின் படைப்பில் பல கோளாறுகள் இருப்பதைக் கண்டுபிடித்தார் அவர். 'இந்த கடவுளுக்கு எதற்கு இவ்வளவு அவசரம்? இன்னும் கொஞ்சம் யோசித்து சிறப்பாகச் செயலாற்றியிருக்கக்கூடாதா? படைப்பில் தான் எத்தனை குளறுபடிகள்! இவர் 7 நாட்களில் உலகைப் படைக்கவில்லை என்று யார் அழுதார்கள்?'

ஒரு நாள் புல்தரையில் ஓய்வாகப் படுத்திருந்தார். அப்போது வானத்தில் சில பறவைகள் பறந்து கொண்டிருந்தன. பக்கத்தில் ஒரு பெரிய மாடு மேய்ந்து கொண்டிருந்தது.

"இதோ இறைவனின் இன்னொரு இமாலயத்தவறு! பசுக்கள் மனிதனுக்குப் பயன்படும் மிருகங்கள். அவை பல இடங்களுக்குச் செல்ல வேண்டும். அவற்றுக்கு பறக்கும் சக்தியை இறைவன் தரவில்லை.

"அவை பாவம் தங்கள் பெரிய உடல்களைச் சுமந்து கொண்டு கால் நடையாகவே செல்ல வேண்டும். இந்த பறவைகள் வெறும் அலங்காரப் பொருள்கள். இவற்றால் மனித இனத்துக்கு எந்த பயனும் இல்லை. இவற்றிற்கு ஏன் பறக்கும் சக்தியைக் கொடுக்க வேண்டும் இறைவன்?"

அந்த நொடியில் மேலே பறந்து கொண்டிருந்த ஒரு பறவை அவர் மேல் எச்சமிட்டது.

அதிர்ச்சியில் உறைந்து போனார் மேதை. இதே போல் மாடுகள் பறந்து கொண்டிருக்கும் போது அவர் மேல் சாணி போட்டால்... நேரே பரலோகப் பயணம் தான்.

சிறிது நேரத்துக்குப் பின் சொன்னார்.

"இறைவா என்னை மன்னித்துவிடு. தெரியாமல் சொல்லி விட்டேன். நீ பேரறிஞன். பசுக்கள் பறக்க வேண்டாம். பறவைகளே பறக்கட்டும்."

தத்துவம் என்றால் என்ன? பயன்ற்ற விஷயங்களைச் சிந்திப்பது தான் தத்துவம். உதாரணமாக, அன்று உங்களிடம் சொன்னேன். ''இந்த உலகத்தின் ஆரம்ப காலத்தில் இருளும் ஸ்பாகெட்டியும் மட்டுமே இருந்தது'' நீங்கள் இயல்பான மனிதர்களாக இருந்ததால் இதை ஒரு புன்னகையோடு ஒதுக்கிவிட்டீர்கள்.

இதே வாக்கியத்தை ஒரு தத்துவமேதை கேட்டிருந்தால் இதனை நிரூபிக்க, அல்லது இதைப் பொய் என்று சொல்ல தன்னைத்தானே சித்திரவதை செய்து கொண்டிருப்பார். 'ஸ்பாகெட்டியை யார் செய்தது? அது எங்கிருந்து வந்தது?' இது உண்மை என்று நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். ஏனென்றால் எனக்கு என் இத்தாலிய சந்நியாசிகளைப் பற்றித் தெரியும்.

என் ஊடகமாக விளங்கும் ராதாவைப் பற்றியும் தெரியும். அவளது மூன்றாவது கண்ணை அன்று நான் தொட முயன்றேன். அவளிடம் அந்த மூன்றாவது கண்ணேயில்லை. வண்டி வண்டியாக ஸ்பாகெட்டி மட்டுமே இருந்தது. நானும் பல வருடங்களாக முயன்று கொண்டிருக்கிறேன்.

என்னால் ஸ்பாகெட்டியைத் தான் தொட முடிகிறதேயொழிய ராதாவின் மூன்றாவது கண்ணைத் தொடமுடியவில்லை. என்றாலும் அவளது மூன்றாவது கண்ணைத் தொட முயற்சிப்பது எனக்கு மிகவும் பிடிக்கும். அது மிகவும் மென்மையாக இருக்கும். அதனால் இந்தக் கதை உண்மைதான்.

ஆனால் தத்துவ மேதைகள் இதைப் போல் அபத்தமான கேள்விகளை வைத்துக் கொண்டு தங்கள் மண்டைகளைக் குடைந்து கொண்டிருக்கிறார்கள். ''கடவுள் உலகத்தைப் படைத்தார் சரி. கடவுளைப் படைத்தது யார்?'' என்று கேட்பார்கள்

அவர்கள். அதற்கு நீங்கள் என்ன பதில் சொன்னாலும் அதை வைத்துக் கொண்டு இன்னொரு கேள்வியைக் கேட்பார்கள். மனம் வெறுத்துப் போய் கடவுளைப் படைத்தது, X, Y, Z என்று நீங்கள் சொன்னாலும், X ஐ படைத்தது யார், Y ஐ படைத்தது யார், Z ஐ படைத்தது யார் என்று கேள்விக் கணைகளைத் தொடுப்பார்கள்.

அதனால் தான் அன்று உலகத்தின் படைப்பையும், ஸ்பாகெட்டியையும் பற்றி நான் கூட் ஹூமியிடம் பேசிக் கொண்டிருந்த போது ''வாயை மூடு'' என்று கோபமாகக் கத்தினார் அவர். ஏதாவது ஒரு கட்டத்தில் வாயை மூடத்தானே வேண்டும்?

எனக்கு முக்கியமானது இருப்புநிலைதான். தத்துவம் இல்லை. ஸ்பாகெட்டியை யார் படைத்தார்கள் என்று கேட்பதற்குப் பதில் ராதாவைப் பார்த்து ஸ்பாகெட்டியைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டேன். ஆகாஷிக் ஆவணங்கள் சொல்வது உண்மைதான்.

இது எல்லாரும் பொறாமைப்பட வேண்டிய விஷயம்தான். மாட்டுச்சாணியால் நிரம்பி இருப்பதை விட ஸ்பாகெட்டியால் நிரம்பியிருப்பது எவ்வளவோ மேல். இந்தியர்கள் மாட்டுச் சாணியால் நிரம்பியிருக்கிறார்கள். அதுவும் புனிதமான மாட்டுச் சாணியால். மாட்டின் சிறுநீரை அவர்கள் குடிக்கிறார்கள்.

அதிலும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. மொரார்ஜி தேசாய், இந்தியாவின் பிரதமராக இருந்தவர், தனது சிறுநீரையே குடித்தார். இது முன்னேற்றம். பரிணாம வளர்ச்சி. மாட்டின் மூத்திரத்திலிருந்து தனது மூத்திரத்துக்கு முன்னேறுவது உண்மையிலேயே பரிணாம வளர்ச்சிதான் என்பதை யாரும் மறுக்க முடியாது. அது சுதந்திரம் கற்றுத் தந்த பாடம்.

நீங்கள் உண்மையிலேயே என்னுடைய சந்நியாசியாக மாறுங்கள். வாழ்க்கையை வேடிக்கையாக எடுத்துக்கொண்டு வாழும் இந்த வாய்ப்பை நழுவ விட்டுவிடாதீர்கள். வாழ்க்கையில் சினனச் சின்ன சந்தோஷங்களே அதிகம். அதை நன்றாக அனுபவிக்கக் கற்றுக் கொண்டால் சாதாரண வாழ்க்கை அசாதாரணமாகிவிடும். தினசரி வாழ்க்கை திவ்வியமான வாழ்க்கையாகிவிடும். கெட்ட வார்த்தைகள் கூட புனிதமான வார்த்தைகளாகிவிடும்.

மதம் என்பது உங்களுக்கும் வாழ்க்கைக்கும் இருக்கும் தொடர்பை அறுக்கும் ஒரு சாதனம் அல்ல. உங்களை இன்பத் திலிருந்து விலக்கி வைக்கும் உபாயமும் அல்ல. அது உங்கள் மகிழ்ச்சியை ஆழப்படுத்தக்கூடிய வழி.

உண்மையிலேயே ஆழமாக மதத்தில் ஈடுபட்டிருப்பவன்தான் நன்றாகச் சாப்பிட்டு, அனுபவித்து, மகிழ்ச்சியாக இருக்க முடியும். இந்த உலக வாழ்க்கைதான் பெரிது என்று நினைத்துக் கொண் டிருக்கும் லோகாயதவாதிகள் வாழ்க்கையை அனுபவிக்க முடி யாது. ஒரு நல்ல ஆன்மிகவாதிதான் வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க முடியும். அவன் அப்படிச் செய்யும் போது சாப்பிடும் ஸ்பாகெட்டிகூட தெய்விகமாகி விடுகிறது.

மூன்றாவது கண்ணைப் பற்றி யார் கவலைப்பட்டார்கள்? அது யாருக்கு வேண்டும்? இருக்கும் இரண்டு கண்களுமே நமக்குத் தொல்லையாக இருக்கிறது. இதில் மூன்றாவது வேறு தேவையா என்ன? மூன்று கண்கள் இருந்தால் அவை உங்கள் முகத்தில் ஒரு முக்கோணத்தை உருவாக்கிவிடும்.

ஒரு தத்துவ மேதை மதுக்கடைக்குள் நுழைந்தார்.

"பத்து கிளாஸ் விஸ்கி." என்று கட்டளையிட்டார்.

"பத்தா?" என்று வாயைப்பிளந்தான் கடைக்காரன்.

"சொன்னதைச் செய். இன்று நான் ஓர் உண்மையைக் கண்டுபிடிக்க வந்திருக்கிறேன்."

அவர் முன் பத்து கிளாஸ் விஸ்கி வைக்கப்பட்டது.

கட கடவென்று அனைத்தையும் குடித்து முடித்தார்.

"ஒன்பது கிளாஸ் விஸ்கி" மீண்டும் ஆணை பறந்தது.

"இன்னும் ஒன்பதா?"

"சொன்னதைச் செய்."

ஒன்பது கிளாஸ் விஸ்கியையும் ஒரே மூச்சில் காலி செய்தார்.

அதன் பின் எட்டு கிளால், ஏழு கிளாஸ், ஆறு கிளால்... என்று போய் கடைசியாக ஒரு கிளாஸ் விஸ்கிவரை வந்துவிட்டார் அவர்.

அதையும் குடித்தபின் தத்துவ மேதை தான் கண்டுபிடித்த உண்மையைப் பறை சாற்றினார்.

"இதைச் சொல் சகோதரா, நான் விஸ்கியின் அளவை 10, 9, 8 என்று குறைத்துக் கொண்டே போகிறேன். ஆனால் போதை ஏறிக் கொண்டே போகிறதே? இது ஏன்? இதுதான் நான் கண்டு பிடித்த உண்மை."

கடைக்காரன் தலையில் அடித்துக் கொண்டான்.

*கடைசியாக ஒரு கேள்வி:*

*தன்னுடைய இருப்புநிலை பற்றிய உணர்வு ஒருவனுக்குப் பொங்கிவரும் போது, அந்த வெள்ளத்தை அவனால் உள்ளே வாங்கிக் கொள்ளமுடியாமல், அந்த பேரானந்தத்தை அவனால் ஜீ;ணிக்க முடியாமல் போகலாம்.*

*அந்த மாதிரி சமயங்களில் மனதில் போதுமான அளவு வெகுளித்தனமும், நம்பிக்கையும் வளரும் வரை அவன் தன் உணர்வுகளை அமுக்கி வைக்கலாமா? அதுதானே புத்திசாலித்தனம்? என் உடல் இப்போது மோசமான நிலையில் இருக்கிறது. நான் பல ஆண்டுகளாக என் உணர்வுகளை அடக்கி வைத்து வாழ்ந்ததால் தான் என் உடல் பாதிக்கப்பட்டது. இதனால் எனக்குப் போதுமான அவகாசம் கிடைத்ததாகவே தோன்றுகிறது.*

அடக்கிவைத்தல். எதிர்த்தல். இவற்றினால் எப்படி நம்பிக்கையும், வெகுளித்தனமும் வளரும், சொல்லுங்கள். அமுக்கி வைப்பதால் வெகுளித்தனம் வளருவது இன்னும் க்டினமாகி விடுகிறது. வெகுளித்தனம் என்பது ஏறக்குறைய நிர்வாணநிலை. உள்ளதை உள்ளபடியே வெளிப்படுத்தும் நிலை. ஓர் ஓரத்தில் சில உணர்வுகளை அடக்கி வைத்தாலும் அந்த நிலையை அடைய முடியாது.

உணர்வுகளை அமுக்கிவைப்பவர்கள் குழப்பவாதிகளாகி விடுகிறார்கள். அவர்களிடம் அப்பாவித்தனம் கொஞ்சம்கூட இருப்பதில்லை. அவர்கள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எல்லாம் வக்கிரம் பிடித்தவையாக, சூழ்ச்சி நிறைந்ததாகவே இருக்கின்றன. அவர்களுக்குள் ஒரு பாகுபாடு உண்டாகிவிடுகிறது.

அவர்களுக்குள் பல மனிதர்கள் இருக்கிறார்கள். உலகிற்குக் காட்ட அவர்களிடம் ஒரு முன் கதவு இருக்கிறது. அவர்களுக்கு மட்டுமே தெரிந்த ஒரு புழக்கடைக் கதவும் இருக்கிறது. சொல் வேறு, செயல் என்று தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர்கள் அவர்கள். எப்போதும் ஒரு பெருங்குழப்பத்தில் இருக்கும் அவர்கள் என்றுமே அப்பாவியாக இருந்ததில்லை.

வெகுளித்தனம் வளர வேண்டுமென்றால் உணர்வுகளை செயற்கையாக அமுக்கி வைக்கக்கூடாது. அதற்கு தன்னிச்சையான செயல்பாடு வேண்டும். இயல்புத் தன்மை வேண்டும். நீங்கள் உங்கள் கோபத்தை அடக்கினால், கோபமே உங்கள் பிரச்சினையாகிவிடும்.

பின் நீங்கள் பார்க்கும் எல்லாவற்றிலும் கோபம் மறைந்திருக்கும். அடக்கி வைத்த கோபத்தின் காரணமாக நீங்கள் 24 மணி நேரமும் கோபமாகவே இருப்பீர்கள். அதுவும் காரணமில்லாமல்.

ஏனென்றால் இப்போது கோபப்படுவதற்கு உங்களுக்குக் காரணமே தேவையில்லை. உள்ளே அடக்கி வைத்திருக்கும் கோபமே போதுமானது. ஏதாவது ஒரு நொண்டிசாக்கு கிடைத்தால் போதும் கோபத்தில் பொங்கி எழுவீர்கள். சாக்குகள் இல்லை என்றால் நீங்களாகவே ஏதாவது ஒரு சாக்கைக் கண்டுபிடிப்பீர்கள்.

சில கன்னியாஸ்திரீகள் ஒரு குழுவாக ஆப்பிரிக்காவில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். ஓர் ஆதிவாசிகள் கூட்டம் அவர்களைக் கடத்திக் கொண்டு சென்றுவிட்டது. ஐக்கியநாடுகள் சபைக்குத் தகவல் போனது. அவர்களை மீட்க விமானம் மூலம் ஓர் இராணுவப்படை அனுப்பப்பட்டது.

அந்தப் படை போராடி கன்னியாஸ்திரீகளை மீட்டது. அலங்கோலமான நிலையில் இருந்த கன்னியாதிரீகளை மீட்டுக் கொண்டு வந்தார்கள். அந்த கன்னியாஸ்திரீகளின் ஆடைகள் பல இடங்களில் கிழிந்திருந்தன. உதடுகள் வீங்கியிருந்தது. மார்பகங்கள் வெளியே தெரிந்தன. தலை முடி கலைந்திருந்தது.

அவர்கள் வீரர்களிடம் அழுதபடியே சொன்னார்கள். "எங்களால் தாங்க முடியவில்லை. அந்த கருப்பர்கள் அவர்களுடைய பெரிய 'அது' ... அப்...பா... இருபத்துநாலு மணி நேரமும்.. அதுதான்....... சே...."

படைவீரர்கள் தங்களால் முடிந்தவரை ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தார்கள். விமானத்தில் கடைசியாக ஏறிய கன்னியாஸ்திரீ வித்தியாசமாக இருந்தாள். அவளது ஆடை மடிப்புக் கலையாமல் இருந்தது. தலை முடி கூட கலையவில்லை. அவளிடம் வந்த வீரன், ஆறுதலுக்காகச் சொன்னான்.

“சிஸ்டர், பாவம் நீங்கள்! அந்த கருப்பர்கள் தங்கள் பெரிய ‘அது’ வால் உங்களை சதா....”

“இல்லை. எனக்கு ஒன்றும் ஆகவில்லை. நான் அப்படியேதான் இருக்கிறேன்.”

“அது எப்படி?”

“எனக்கு அதில் விருப்பமில்லை என்று சொல்லிவிட்டேன். அவர்கள் யாரையுமே வற்புறுத்தவில்லை.”

நீங்கள் உங்கள் உணர்வுகளை அடக்கிவைத்தால் அவை எப்படியாவது வெளியே வந்துவிடும். உங்கள் மனதில் இருக்கும் காமத்தை அடக்கிவைத்தால் யாராவது உங்களைக் கற்பழிப்பது போன்ற சூழ்நிலையை நீங்களே உருவாக்கிக் கொள்வீர்கள்.

அப்போது அந்த செயலுக்கான பொறுப்பு உங்களிடம் இல்லையே? நீங்கள் வசதியாக உங்களைக் கற்பழித்தவன் மேல் பழியைப் போட்டுவிடலாமே? அடக்கிவைப்பதால் தான் கற்பழிப்பே நடக்கிறது. அடக்கி வைப்பதால் தான் குற்றங்களே நடக்கின்றன. அடக்கிவைத்தல் அப்பாவித்தனத்தை உங்களுக்குக் கற்றுக் கொடுக்காது.

நீங்கள் வெகுளித்தனமாக இருப்பதற்கு உங்களுக்கு காலம் வேண்டியதில்லை. புரிந்து கொள்ளுதல் இருந்தால் போதும். உட்பார்வை இருந்தால் போதும். காலம் உங்களுக்கு எந்த விதத் திலும் உதவாது. சரியான காலத்துக்குக் காத்துக் கொண்டிருக்கும் அந்த வேளையில் நீங்கள் என்ன செய்வீர்கள்?

நீங்கள் உங்கள் பழைய பழக்கங்களைத் தொடர்ந்து கொண் டிருப்பீர்கள். தொடர்ந்து உங்கள் உணர்வுகளை அடக்கிவைத்துக் கொண்டிருப்பீர்கள். உங்களுக்கு உடனடியாக உட்பார்வை தேவை. நீங்கள் பல பிறவிகளாக அமுக்கி வைத்துவிட்டீர்கள். இதுவரை நடந்தது போதும். இனியும் தாமதப்படுத்தாதீர்கள்.

இதுதான் ஏற்ற காலம். இதுதான் ஏற்ற இடம். உண்மையைத் தெரிந்து கொண்டு அடக்கிவைப்பதை உடனே கைவிடுங்கள். உங்களால் இப்போது இங்கே அதை விட முடியவில்லை என்றால் எப்போதும், எங்கேயும் உங்களால் அதை விட முடியாது.

அதனால் தான் உலகத்தில் உள்ள எல்லா சமுதாயங்களும் என்னை வன்மையாகக் கண்டிக்கின்றன. உலகத்தின் எல்லாச்

சமுதாயங்களும் இந்த அடக்கிவைத்தலின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன. தன்னிச்சையாக தங்கு தடையின்றி செயல் படுவதே எனது அணுகுமுறை. அப்படிச் செயல்படும் போதுதான் உங்கள் வெகுளித்தனம் உங்களுக்கு மீண்டும் கிடைக்கும்.

வெகுளித்தனம் உங்களுடைய இயற்கையான குணம். அது சாதிக்க வேண்டிய ஒரு காரியம் இல்லை. உங்களுடைய அந்த இயற்கையான குணத்தை உங்களுடைய மனதின் ஆழத்தில் புதைத்து வைத்து விட்டீர்கள். நீங்கள் அமுக்கி வைத்திருக்கும் கோபம், காமம், ஆசைகள் எல்லாவற்றையும் அகற்றினால் அவற்றின் அடியில் புதைந்து கிடக்கும் உங்கள் வெகுளித்தனத்தை நீங்கள் பார்க்கலாம். நீங்கள் மீண்டும் குழந்தையாக மாறுவீர்கள்.

இதைத்தான் ஏசு நாதர் அழகாகச் சொன்னார்: "நீங்கள் மீண்டும் குழந்தையாக மாறினாலன்றி, நீங்கள் ஒரு புதுப்பிறவி எடுத்தாலன்றி, இறைவனின் சாம்ராஜ்ஜியத்துக்குள் உங்களால் நுழைய முடியாது."

○

## 7. விரிந்த வானத்திற்குள்...

*முதல் கேள்வி:*

*நீங்கள் எப்போதும் சொல்லிக் கொண்டிருப்பது போல் குழந்தைகள் அவ்வளவு புத்திசாலித்தனமாக இருக்கிறார்களா என்ன?*

புத்திசாலித்தனம் என்பது இயற்கையிலேயே அமைந்திருப்பது. அதைக் கற்றுக் கொள்ள முடியாது. அது நம் உள்ளேயே இருக்கிறது. அது உயிருடன் ஒன்றியிருப்பது. குழந்தைகள் மட்டுமில்லை விலங்குகள் கூட ஒரு வகையில் அறிவுத்திறத்தோடுதான் வாழ்கின்றன. மரங்களுக்கும் அறிவு உண்டு என்று விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கிறார்கள்.

ஆனால் அவற்றின் அறிவுத்திறம் வேறு வகையைச் சேர்ந்தது. ஒவ்வோர் உயிரினத்தின் அறிவும் ஒவ்வொரு வகையைச் சேர்ந்தது. அந்த உயிரினத்தின் தேவைக்கேற்ப அதற்கு அறிவு இருக்கிறது. எல்லா உயிர்களும் ஏதாவது ஒரு வகையில் அறிவுத்திறம் உள்ளவையே என்று இப்போது விஞ்ஞானம் நிரூபித்திருக்கிறது. அறிவில்லாத உயிர் என்று எதுவும் இல்லை. உயிருடன் இருப்பது, அறிவுடன் இருப்பது இரண்டும் ஒன்றுதான்.

மனிதனுக்கு மட்டும் ஒரு கூடுதலான குழப்பம் இருக்கிறது. மனிதனிடம் அறிவுத்திறமும் இருக்கிறது. அப்படி அறிவு இருப்பதை உணர்ந்து கொள்ளும் உணர்வுநிலையும் இருக்கிறது. அதுதான் மனித இனத்துக்கே உரிய சிறப்பு.

அது மனிதனுக்குக் கடவுள் கொடுத்த சலுகை, வரப்பிரசாதம் என்று எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால் அதே

வரப்பிரசாதம் தான் சமயத்தில் மனிதனுடைய துன்பத்துக்கும் காரணமாக இருந்துவிடுகிறது. தனக்கு அறிவுத்திறம் இருக்கிறது என்பதை மனிதன் எளிதில் உணர்ந்து கொண்டு விடுகிறான். அந்த உணர்வு பல பிரச்சினைகளுக்கு வழி கோலுகிறது. முதல் பிரச்சினை மனிதனின் அகந்தை.

மனிதனைத் தவிர வேறு எந்த உயிரினத்திலும் அகந்தை என்பது துளிக்கூட இல்லை. குழந்தை வளர வளர அதனுடைய அகந்தையும் வளர்ந்து கொண்டேபோகிறது. பெற்றோர்கள், பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் - இவை எல்லாம் சேர்ந்து மனிதனின் அகந்தையை வளர்த்து விடுகின்றன.

பல ஆயிரம் ஆண்டுகளாக மனித இனத்துக்கு வாழ்க்கை என்பதே ஒரு போராட்டமாகத்தான் இருந்து வந்திருக்கிறது. உயிருடன் இருப்பதற்கே மனிதன் போராட வேண்டியிருந்தது. அந்த சமயத்தில் மனிதனின் மனவியலில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும். 'நமது அகந்தை எந்த அளவு வலுவுள்ள தாக உள்ளதோ, அந்த அளவு நாம் ஆபத்துக்களை ஜெயித்து உயிர் வாழ முடியும்' என்ற மனக்கட்டுத்திட்டம் எப்படியோ மனிதனுக்குள் புகுந்து விட்டிருக்க வேண்டும். அதன்பின் வாழ்க்கை என்பதே உயிர் வாழ நடக்கும் ஒரு போராட்டமாக மாறிவிட்டது.

இந்த நேரத்தில் 'வலுவுள்ளவன்தான் பிழைத்திருப்பான்' என்ற கூற்றை விஞ்ஞானிகளும் மனிதனின் முன் வைத்தார்கள். அதனால் அவனுடைய அகந்தை இன்னும் வலுவாகிப் போனது. இதனால் நாம் நமது குழந்தைகளின் அகந்தையை இன்னும் வலுவுள்ளதாக்க பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம். நமது பிரச்சினையே அங்கேதான் தொடங்குகிறது.

அகந்தை வலுப்பெற்றவுடன் அது அறிவுத்திறத்தை பல படுகைகளாகச் சூழ்ந்து கொள்கிறது. அறிவுத்திறம் ஒளி என்றால், அகந்தை இருள். அறிவுத்திறம் மென்மையானது. அகந்தை கடினமானது. அறிவுத்திறம் அன்றலர்ந்த ரோஜா மலரைப் போன்றது என்றால், அகந்தை பாறாங்கல்லைப் போன்றது.

இந்த உலகத்தில் நீங்கள் உயிர் வாழ வேண்டுமென்றால் நீங்கள் ஒரு பாறாங்கல்லைப் போல் கடினமாக, யாரும் எளிதில் நுளைக்க முடியாதபடி, அழிக்க முடியாதபடி இருக்க வேண்டும் என்று எல்லாரும் சொல்கிறார்கள். நீங்கள் ஒரு கோட்டையைப்

போல் இருக்க வேண்டுமாம் என்று அந்த "மேதைகள்" சொல்கிறார்கள். அப்போதுதான் வெளியில் இருக்கும் பகைவர்கள் யாரும் உங்களைத் தாக்க முடியாதாம். உங்களை எதுவும் ஊடுருவிச் செல்ல முடியாத அளவிற்கு நீங்கள் வலிமையுள்ளவராக இருக்க வேண்டுமாம்.

ஆனால் அப்படி இருக்கும் போது நீங்கள் உங்களையே மூடிக் கொள்கிறீர்கள். அதன் பின் உங்கள் அறிவுத்திறத்தைப் பொறுத்த மட்டில் நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாக மடியத் தொடங்குகிறீர்கள்.

ஏனென்றால் உங்கள் அறிவுத்திறம் வளர, வாழ, இன்னும் விரிவாக, வெளிப்பட்டு பரவ திறந்த வானம், நல்ல காற்று, சூரிய ஒளி அவசியம் தேவை. அறிவுத்திறம் உயிர்ப்புடன் இருக்க வேண்டுமென்றால் அது ஆற்று வெள்ளத்தைப் போல் சதா ஓடிக் கொண்டேயிருக்க வேண்டும். அது ஓர் இடத்தில் தேங்க ஆரம்பித்தால் பின் மடிய ஆரம்பித்துவிடும். ஓட்டம் தான் உயிர். தேக்கம் சாவு.

நாம் நமது குழந்தைகளை அறிவுத்திறத்தோடு இருக்க அனுமதிப்பதில்லை. அவர்கள் அறிவுத்திறத்தோடு இருந்தால் அவர்கள் எளிதில் காயம்படக்கூடியவர்களாக, தாக்குதலுக்கு ஆட்படக்கூடியவர்களாக இருப்பார்கள். அவர்கள் மென்மையானவர்களாக, திறந்த உள்ளம் கொண்டவர்களாகத் திகழ்வார்கள். நம் குழந்தைகளிடம் அறிவுத்திறம் இருந்தால் இந்த சமுதாயத்தில், சர்ச்களில், கோயில்களில், மசூதிகளில் கல்வி அமைப்பில் நடக்கும் பல போலி ஒழுக்கங்களையும், தகிடுத்தத்தங் களையும் கண்டு பிடித்துவிடுவார்கள்.

அதன் பின் அவர்கள் கலகக்காரர்கள் ஆகிவிடுவார்கள். அவர்கள் யாருக்கும் கட்டுப்படாத தனிமனிதர்களாகி விடுவார்கள். அவர்களை அதன் பின் கட்டுப்படுத்துவது என்பது முடியாத காரியம். அவர்களை நீங்கள் நசுக்கலாம். அடிமைப்படுத்தலாம். அவர்களை அழிக்கவும் செய்யலாம். ஆனால் அவர்களை உங்கள் போலிவாழ்க்கைக்கு உடந்தையாக இருக்கச் சொல்லி வற்புறுத்த முடியாது.

ஒரு கோணத்தில் அறிவுத்திறம் என்பது ரோஜா மலரைப் போல மென்மையானது. மற்றொரு கோணத்தில் அதற்கே உரித்தான

சில பலங்கள் உண்டு. அந்த பலங்கள் எல்லாம் வெளிப்படையானவை அல்ல. மிகவும் நுணுக்கமானவை. அது ஒரு கலகக்காரனின் பலம். நானே அழிந்து போனாலும் என் மனம் ஒப்பாதத்தைச் செய்ய மாட்டேன் என்று முழங்கும் கலப்படமில்லாத வீரம். சாகவும் தயார், சித்திரவதைகளை அனுபவிக்கவும் தயார். ஆனால் நிச்சயமாக என் ஆன்மா விற்பனைக்கல்ல என்று சொல்லும் மனோதிடம் அது.

ஆனால் இந்த சமுதாயத்திற்கு கலகக்காரர்கள் தேவைப்படவில்லை. அடிமைகள், இயந்திரங்கள், ரோபோக்கள் தான் தேவைப் படுகிறார்கள். சமுதாயத்திற்கு மக்கள் தேவையில்லை. சொன்னதைச் செய்யும் இயந்திரங்கள் தான் தேவைப் படுகிறார்கள்.

அதனால் தான் குழந்தைகளின் மேல் மனக்கட்டுத்திட்டங்களை உருவேற்றுகிறது இந்த சமுதாயம். குழந்தையிடம் இருக்கும் அகந்தையை வலுப்படுத்துகிறது. அகந்தையை வலுப்படுத்துவதால் சமுதாயத்தின் இரண்டு நோக்கங்கள் நிறைவேறிவிடுகின்றன. அகந்தை வலுப்படுத்தப்பட்ட மனிதன் வாழ்க்கையைச் சந்தித்து அதனுடன் போராட தனக்கு வலிமையிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறான்.

இரண்டாவதாக அரசியல்வாதிகள், பூசாரிகள், மதகுருமார்கள் போன்ற சுயநலவாதிகளின் தேவைகளை அந்த மனிதன் கேள்விகள் கேட்காமல் பூர்த்தி செய்கிறான். இவர்கள் அந்த மனிதனை எளிதாகச் சுரண்டலாம். தங்கள் தேவைகளுக்கு அவனைத் தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதனால் தான் நமது கல்வி முறை 'நாமும் வாழ்க்கையில் சாதித்து பெரிய மனிதனாக வேண்டும்' என்ற பேரார்வத்தை, பேராசையை உண்டாக்குகிறது. இந்த பேராசை அகந்தையின் மறுவடிவம்.

"எதிலும் நீங்கள் முதல்வனாக இருக்க வேண்டும். புகழ் பெற வேண்டும். பிரதமராகுங்கள். முதலமைச்சராகுங்கள். நிறையப் பணம் சேருங்கள். உலகப் புகழ் பெறுங்கள். வரலாற்றில் உங்கள் பெயர் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படட்டும்." என்று மாணவர்களுக்கு சதா போதனை செய்து கொண்டிருக்கிறார்கள்.

நமது கல்விமுறை உங்களுக்கு முழுமையாக வாழ்வது எப்படி என்று சொல்லித் தருவதில்லை. எப்படி பண்புடன், அன்புடன்

நேர்த்தியாக வாழ வேண்டும் என்று அது சொல்லித்தருவதில்லை. உங்கள் சுயநலத்துக்காக அடுத்தவரை எப்படிச் சுரண்ட வேண்டு மென்று சொல்லித்தருகிறது. குள்ளநரியைப் போல் திட்டமிட்டு ஏமாற்றும் சாமர்த்தியசாலிகள் தான் வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்கள் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் சூழ்ச்சிக்காரர்கள். ஆனால் நாம் அவர்களைப் புத்தி சாலிகள் என்று தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறோம். அவர்களிடம் அறிவுத்திறம் இல்லை.

அறிவுத்திறம் மிக்க ஒருவன் அடுத்தவனைத் தனது தேவைக் காக என்றும் பயன்படுத்திக் கொள்ள மாட்டான். அடுத்தவனை அவன் மதிப்பான். எல்லாரும் சமம் என்ற உண்மையை அவன் எளிதாகப் புரிந்து கொள்வான். மனிதர்களிடம் உள்ள வேறுபாடு களையும் அறிவான் அவன்.

என்றாலும் இந்த வேறுபாடுகள் எந்த விதத்திலும் சமத் துவத்தைப் பாதிக்காது என்பதையும் உணர்வான். அடுத்தவர்களின் சுதந்திரத்தைப் பெரிதும் மதிப்பான். அவர்களை ஒரு போதும் சுரண்ட நினைக்க மாட்டான். ஜடப்பொருள்களை தனது தேவைக்குப் பயன்படுத்திக் கொள்வது போல் அடுத்தவர்களை அவன் பயன்படுத்திக் கொள்ளமாட்டான்.

எதிலும் தான் முதலில் இருக்க வேண்டும் என்ற அபத்தமான ஆசைக்கு அடுத்தவர்களைப் படிக்கற்களாகப் பயன்படுத்த மாட் டான். அதனால்தான் நாம் நம் குழந்தைகளை மனக்கட்டுத் திட்டத்துக்கு உட்படுத்துகிறோம்.

உங்கள் கேள்வி சரியானதுதான். ஏனென்றால் குழந்தைகளிடம் அறிவுத்திறம் இருக்கிறது என்று நான் மட்டும் சொல்லவில்லை. புத்தர், ஏசுநாதர், லா ட்சூ போன்று எல்லா விழிப்புணர்வு பெற்ற ஞானிகளும் இதையேதான் சொல்கிறார்கள்.

நீங்கள் மீண்டும் சிறு குழந்தையாக மாறினாலேயன்றி உங்களால் கடைத்தேற முடியாது என்று ஏசு நாதர் சொல்கிறார். அவர் மறுபடியும் சொல்கிறார்: நீங்கள் சிறு பிள்ளைகள் ஆனா லொழிய உங்களால் இறைவனின் சாம்ராஜ்ஜியத்திற்குள் நுழைய முடியாது.

ஏசு நாதர் அடிக்கடி சொல்லும் ஓர் அழகான சூத்திரம்: 'இந்த உலகில் கடைசியாக இருப்பவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.

ஏனென்றால் அவர்கள்தான் என் சாம்ராஜஜியத்தில் முதலில் இருக்கிறார்கள். ஆசையற்று இருக்கும் நிலையைத்தான் ஏசு நாதர் போதிக்கிறார்.

'எல்லாவற்றிலும் முதல் இடத்தில் இருக்க வேண்டும்' என்று நாம் உருவேற்றிக் கொண்டிருக்கும் போது, 'கடைசி இடத்தில் இருப்பதன் அவசியத்தை விளக்குகிறார் ஏசு நாதர்.

'பலவீனமானவர்கள் வரம் பெற்றவர்கள். இறைவனின் சாம்ராஜ்ஜியம் அவர்களுக்குத்தான் சொந்தம்.' என்கிறார் ஏசு நாதர். பலவீனமானவர்கள். சக்தியற்றவர்கள், வரிசையில் கடைசியில் நிற்பவர்களைத்தான் சிலாகித்துப் பேசுகிறார் ஏசு நாதர்.

ஏசுநாதரை அவர் வாழ்ந்த சமூகம் எதிர்த்ததில் எந்த ஆச்சரியமும் இல்லை. ஏனென்றால் ஏசுநாதர் பேராசையின் வேர்களை அழிக்க முயற்சி செய்து கொண்டிருந்தார்.

யூதர்கள் மிகவும் பேராசை பிடித்தவர்கள். பல நூற்றாண்டு களாக, அவர்கள் எத்தனை துன்பங்களைச் சந்தித்த போதிலும் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட இனம் தங்களுடையது என்று இறுமாப்புடன் இருக்கிறார்கள் அவர்கள். இந்த அபத்தமான எண்ணத்தால் பல ஆபத்துக்கள் அவர்களைச் சூழ்ந்திருக்கின்றன.

இந்த இறுமாப்பை விட்டால் யூதர்களை உலக மக்கள் ஏற்றுக்கொள்வார்கள். ஆனால் அவர்களால் இந்த எண்ணத்தைக் கைவிட முடியாது. இது அவர்கள் அகந்தை சம்பந்தப்பட்ட விஷயம். அதுவும் அது 3000 வயதான பழைய அகந்தை. மோசஸ் காலத்தில் இருந்தே நாங்கள் கடவுளால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் என்ற முட்டாள்தனமான எண்ணம் யூதர்களுக்கு இருந்திருக்கிறது.

இந்த சூழ்நிலையில் ஏசுநாதரைப் போல் ஒருவர் தோன்றி "முதலில் இருக்காதீர்கள். கடைசியில் இருங்கள்" என்று சொன்னால்...

நாம் தான் முதலில் இருக்க வேண்டும் என்று கடவுளே சொல்லிவிட்டார். ஏசுவோ 'பணிவுடன், பலவீனமாக இருங்கள்' என்று போதிக்கிறார். 'நாம் பணிவாக, பலவீனமாக இருந்தால் கடவுளால் தேர்ந்தெடுக்கப்படாத வேறு ஓர் இனம் முதல் இனமாகி விடும். நாம் பின் தங்கிவிடுவோம்' என்று நினைத்தார்கள் யூதர்கள்.

நீங்கள் கவனித்துப் பார்த்தீர்கள் என்றால் யூதர்கள் இந்த உலகை, புற உலகை அதிகம் நேசிப்பவர்கள் என்று தெரியும். செத்த பின்பு வரும் சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் அவர்கள் அதிகம் கவலைப்பட மாட்டார்கள். அவர்கள் லோகாயத மானவர்கள். உலகப்பற்று மிக்கவர்கள்.

'மறு உலகத்தைப் பற்றி யாருக்கு என்ன தெரியும்? வேறு வேலை இல்லாத ஏசு நாதர் சொல்கிறார், 'இந்த உலகத்தில் நீங்கள் கடைசியாக வந்தீர்கள் என்றால் என் சாம்ராஜ்ஜியத்தில் முதலில் இருப்பீர்கள்.' என்று. ஆனால் அவருடைய சாம்ராஜ்ஜியம் எங்கே இருக்கிறதாம்? அது கற்பனை. வெறும் கனவு.' என்பதுதான் யூதர்களின் கருத்து.

ஏசு நாதரைப் பார்த்தால் கனவு காண்பவராகத் தெரிகிறார். சில சமயங்களில் அவர் பேச்சில் கவிநயம் இருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் அவர் யூதர்களின் அஸ்திவாரத்தையே அழிக்க முற்படுகிறாரே! அதை எப்படி மன்னிப்பது?

அவர்கள் இன்னும் ஏசுநாதரை மன்னிக்கவில்லை. யூதர்கள் தாங்கள் மட்டுமே கடவுளின் விசேஷக் குழந்தைகள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த எண்ணம் அவர்களுக்கு இருந்ததால் இந்த உலக வாழ்க்கையில் மிகவும் துன்பப்பட்டார்கள். துன்பப்பட, துன்பப்பட அந்த எண்ணம் இன்னும் அவர்களுக்கு உறுதியாகிவிட்டது.

நீங்கள் துன்பத்தை எதிர்கொள்ள வேண்டுமென்றால் உங்கள் அகந்தை இன்னும் வலுப்பட வேண்டும். அது கல்லைப் போல் கடினமாக மாறிவிட வேண்டும். அப்போது தான் நீங்கள் போராட முடியும். அப்போதுதான் உங்களை நீங்கள் அழிவில் இருந்து காப்பாற்றிக் கொள்ள முடியும். அதனால் அவர்கள் தங்களை மூடி போட்டு மூடியதைப் போல் மூடிக் கொண்டுவிட்டார்கள்.

ஏசுநாதர் அந்த மூடியை அகற்றி அவர்களைத் திறந்து விட வேண்டும் என்று நினைத்தார். ஆனால் அவர்கள் ஏசு நாதரை அதைச் செய்யவிடாமல் தடுத்துவிட்டார்கள். திறந்த வெளிக்கு வாருங்கள் என்று ஏசு நாதர் அறைகூவல் விடுத்தார்.

'சாதாரணமாக இருங்களேன்! ஏன் இப்படி உங்களை நீங்களே விசேஷமானவர்கள் என்று கூறிக் கொண்டு திரிகிறீர்கள்?' என்று ஏசு நாதர் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தார். அவர்கள்

கேட்கவில்லை. அவர்கள் மட்டும் ஏசுநாதர் சொன்னதைக் கேட்டிருந்தால் யூதர்களின் வரலாறே மாறிப்போயிருக்கும்.

அவர்கள் இனத்தின் பெரும்பகுதி ஹிட்லரால் அழிக்கப்பட்டிருக்காது. ஆனால் ஏசு நாதர் சொன்னதை அவர்கள் கேட்கவில்லை.

இதே போல் இந்துக்கள் புத்தர் சொன்னதைக் கேட்கவில்லை. 'உலகத்திலேயே எங்களுடையதுதான் புனிதமான மதம். எங்கள் மக்கள்தான் உலகத்திலேயே புனிதமானவர்களாக்கும்!' என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். தேவர்கள் கூட இந்தியாவில் பிறப்பதற்காக தவம் இருப்பார்கள் என்று பீலா விட்டுக் கொண்டிருந்தார்கள்.

'இது சுத்த அபத்தம்' என்று புத்தர் ஆணித்தரமாக சொன்னார். எனவே அவர்கள் புத்தரை வெறுத்து ஒதுக்கினார்கள். புத்த மதம் இந்திய நாட்டிலிருந்தே தூக்கியெறியப்பட்டது. புத்தரைப் போல், ஏசுவைப் போல் உண்மையைச் சொல்லும் எந்த மனிதனையும் எந்தச் சமுதாயமும் ஏற்றுக் கொள்ளாது. ஏனென்றால் அவர்கள் சமுதாயத்தின் அடிப்படை அமைப்புக்கே உலை வைப்பவர்கள்.

இப்போது நேரம் வந்துவிட்டது. நாம் வேண்டுமளவிற்கு துன்பப்பட்டுவிட்டோம். உலகம் முழுவதும் பல வழிகளில் மனிதர்கள் மிகவும் துன்பப்பட்டுவிட்டார்கள். கடந்த கால வரலாற்றை ஆய்வு செய்ய வேண்டிய நேரம் வந்துவிட்டது. கடந்த காலத்தில் நடந்த முட்டாள்தனங்களைத் தவிர்க்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. அகந்தையை வளர்க்கும் இந்த மாதிரி சிந்தனைகளை அடியோடு தவிர்க்க வேண்டிய நேரம் வந்துவிட்டது.

சிறு குழந்தைகளைப் பாருங்கள். அவர்களுடைய அறிவுத்திறம் தெரியும். அதன்பின் இந்த மாதிரி கேள்விகளை என்னிடம் கேட்க மாட்டீர்கள். அவர்களுக்கு விஷய ஞானம் இல்லாமல் இருக்கலாம்.

விஷய ஞானத்தை வைத்து அவர்களது அறிவுத்திறத்தை எடைபோட்டால் அவர்கள் உங்கள் கண்களுக்கு முட்டாள்களாகத்தான் தோன்றுவார்கள். அவர்களுக்குத் தெரியாத செய்திகளைப் பற்றி அவர்களிடம் கேள்விகள் கேட்டால் அவர்கள் அறிவில்லாதவர்களைப் போல் காட்சியளிப்பார்கள்.

செய்தி, தகவல் சம்பந்தமில்லாத கேள்விகளைக் கேட்டுப் பாருங்கள். உடனடியாக விடை பகல வேண்டிய அறிவுத்திறம்

வாய்ந்த கேள்விகளைக் கேட்டுப்பாருங்கள். உங்களை விட அவர்கள் புத்திசாலிகளாக இருப்பது உங்களுக்குத் தெரியும்.

ஆனால் அதை ஏற்றுக் கொள்ள உங்கள் அகந்தை உங்களை அனுமதிக்காது. அதை உங்களால் ஏற்றுக் கொள்ள முடிந்தால் அது உங்கள் ஆன்மிக வளர்ச்சிக்கு பெரும் உதவியாக இருக்கும். உங்கள் குழந்தைகளுக்கும் அது உதவியாக இருக்கும். நீங்கள் அவர்களிடம் இருந்து நிறைய கற்றுக் கொள்ளலாம்.

ஹாசன் என்ற சூஃபி ஞானி மரணப்படுக்கையில் இருந்தார். அப்போது ஒருவன் அவரிடம் கேட்டான்.

"உங்கள் குரு யார் என்று நீங்கள் இதுவரை சொல்லவே யில்லையே? நாங்களும் பல முறை கேட்டுவிட்டோம். நீங்கள் பதில் சொல்லாமலேயே தப்பித்துவிட்டீர்கள். நீங்கள் இப்போது உலகத்தைவிட்டுப் போகப்போகிறீர்கள் இப்போதாவது சொல்லுங் களேன் உங்கள் குரு யார் என்று? எங்களுக்கு அறிய ஆவலாக இருக்கிறது."

"நான் இந்த கேள்விக்கு இதுவரை சரியாகப் பதில் சொல் லாததற்குக் காரணம் எனக்கு ஒரு குரு இல்லை, பல குருக்கள் இருக்கிறார்கள். நான் பலரிடம் இருந்து பாடம் பயின்றிருக்கிறேன். எனது முதல் குரு ஒரு சிறிய குழந்தை."

"அப்படியா? என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? நல்ல நினை வோடுதான் பேசுகிறீர்களா? இல்லை சாகும் தறுவாயில் நினைவு தப்பிவிட்டதா?"

"அதெல்லாம் இல்லை. நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். நான் ஒரு நகரத்துக்குப் போயிருந்தேன். அப்போது எனக்கு ஞானம் வந்திருக்கவில்லை. என்றாலும் உலக அறிவு மிக அதிகமாக இருந்தது. நான் மெத்தப் படித்த மேதாவியாக இருந்தேன். என் புகழ் நாடு முழுவதும் பரவியிருந்தது. நாட்டிற்கு வெளியே கூட என் புகழ் பரவியிருந்தது.

"எனக்கு எல்லாம் தெரியும் என்று மக்கள் என்னைத் தேடி வர ஆரம்பித்தார்கள். நானும் எனக்கு எல்லாம் தெரியும் என்று பாசாங்கு செய்ய ஆரம்பித்துவிட்டேன். நான் பாசாங்கு செய்கிறேன் என்பது கூட தெரியாமல் பாசாங்கு செய்துவந்தேன். நான் என் முழு உணர்வு நிலையில் இருந்து செயல்படவில்லை.

“எனக்கு எல்லாம் தெரியும் என்று மக்கள் நம்பியதால் நான் சொல்வது சரிதான் என்று அவர்கள் என்னையே நம்பவைத்தார்கள். 'எனக்கு உண்மையிலேயே எல்லாம் தெரியும் போலிருக்கிறது. இல்லாவிட்டால் இத்தனை பேர் எதற்காக என்னை நாடி வர வேண்டும்?' என்று நானும் யோசிக்க ஆரம்பித்தேன்.

“நான் அப்போது ஓர் ஆசானாகிவிட்டேன். உண்மை என்ன என்பதை தெரிந்து கொள்ளாமலேயே, ஞானத்தைப் பெறாமலேயே, பேருண்மையை அனுபவ ரீதியாக உணராமலேயே நான் ஆசானாகிவிட்டேன். பெரிய பெரிய விஷயங்களைப் பற்றி எல்லாம் அலட்சியமாகப் பேச ஆரம்பித்தேன். எனக்கு எல்லா சாத்திரங்களும் தெரியும். எல்லாப் புனித நூல்களும் மனப்பாடமாகத் தெரியும். நாக்கின் நுனியில் அவை இருந்தன. யாராவது ஏதாவது கேட்டால் உடனே நான் எடுத்துவிடுவேன். அவர்கள் பயந்து போய் நான் சொல்வதை அப்படியே ஏற்றுக் கொள்வார்கள்.

ஆனால் மூன்று நாட்கள் என்னைப் பற்றித் தெரியாத நாட்டில் நான் சுற்றிக் கொண்டிருந்தேன். யாராவது என்னை ஏதாவது கேட்கக்கூடாதா, அதையே சாக்காக வைத்துக் கொண்டு நான் என் அறிவை விளம்பரப் படுத்திக் கொள்ளலாமே என்று வாய்ப்பை தேடி அலைந்து கொண்டிருந்தேன்.”

அறிவு மிக்கவர்கள் அதை எப்படியாவது வெளியே காட்ட வேண்டும் என்று நினைப்பார்கள். அதுதான் அவர்களின் மகிழ்ச்சியே. அறிவு அதிகம் உள்ள மனிதன் வாய் பேசாமல் மௌனமாக இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அதை அவனால் தாங்கிக் கொள்ள முடியாது. தற்கொலை கூட செய்து கொள்வான். அறிவைப் பிரகடனப்படுத்திக் கொள்ள முடியாது என்றால் வாழ்ந்து என்ன பயன் என்று யோசிக்கத் தொடங்கி விடுவான்.

உண்மையான அறிவுத்திறம் உள்ளவனால்தான் மௌனமாக இருக்க முடியும். உண்மையான அறிவுத்திறம் உள்ளவனுக்கு பேசவே கஷ்டமாக இருக்கும். அவன் பேச வேண்டுமே என்பதற்காகத்தான் பேசுவான்.

வெறும் விஷய அறிவு உள்ளவனால் மௌனமாக இருக்க முடியாது. அவன் பேசிக் கொண்டேதானிருப்பான்.

உண்மையான அறிவுத்திறம் உள்ளவனுக்கும், வெறும் விஷய ஞானம் மட்டும் உள்ளவனுக்குமிடையே பெருத்த வேறுபாடு

இருக்கிறது. அதை உங்களால் வெளியில் இருந்து தெரிந்து கொள்ள முடியாது. வெளியில் இருந்து பார்க்க இருவகையினரும் ஒன்று போலத் தோன்றுவார்கள்..

புத்தர் பேசுகிறார், ஏசு பேசுகிறார், லா ட்சூ பேசுகிறார். அவர்கள் அழகான விஷயங்களை நமக்குச் சொல்கிறார்கள்.

சில சமயம் விஷய ஞானிகள் உண்மை ஞானிகளைவிட சமத்காரமாகப் பேசலாம். ஏனென்றால் உண்மையான ஞானிகள் பேசுவதில் முரண்பாடுகள் இருக்கும். ஆனால் விஷய ஞானிகள் எப்போதும் தர்க்க ரீதியாக காரண-காரியத்தோடுதான் பேசு வார்கள். விஷய ஞானிகளிடம் ஆதாரங்கள் இருக்கும், வாதங்கள் இருக்கும், பிடிவாதம் இருக்கும், சாத்திரங்கள் இருக்கும். உண்மை மட்டும் இருக்காது.

மூன்று நாட்கள் ஹாசன் பேச முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருந்ததைப் போலிருந்தது அவருக்கு. பேச வேண்டும் என்ற பசி அவரை உறுத்த ஆரம்பித்தது. ஆனால் அந்த நாட்டில் அவருக்குத் தெரிந்தவர்கள் யாருமே இல்லை. யாரிடம் பேசுவது?

அந்த நாட்டின் எல்லையில் உள்ள ஒரு நகரத்துக்குள் நுழைந்தார் ஹாசன். இருட்ட ஆரம்பித்திருந்த நேரம். சூரியன் அப்போதுதான் அஸ்தமனமாகியிருந்தது. ஓர் ஐந்து வயதுச் சிறுவன் ஒரு மண் விளக்கை எடுத்துக் கொண்டு எதிரில் வந்தான். ஹாசன் அந்த குழந்தையைப் பார்த்துக் கேட்டார்.

“குழந்தாய், நான் உன்னை ஒரு கேள்வி கேட்கலாமா?”

“ம்..”

“இந்த விளக்கை எங்கே எடுத்துக் கொண்டு போகிறாய்?”

“நான் கோயிலுக்குப் போகிறேன். என் தாய் இந்த விளக்கைக் கோயிலில் வைத்துவிட்டு வரச் சொன்னாள். ஏனென்றால் கோயிலில் வேறு விளக்கு இல்லை. மிகவும் இருட்டாக இருக்கும். என் தாய்க்கு தினமும் கோயிலில் விளக்கேற்றி வைக்கும் பழக்கம் உண்டு. கோயிலில் வாழும் இறைவன் இருட்டில் இருக்க வேண்டாமே என்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு.”

“நீ புத்திசாலிக் குழந்தை. இந்த விளக்கை நீ தான் ஏற்றினாயா?”

“ஆமாம்.”

“இதுதான் கடைசிக் கேள்வி. இந்த விளக்கை நீதான் ஏற்றினாய் என்றால் இந்த ஜோதி, இந்த ஒளி எங்கேயிருந்து இந்த விளக்குக்கு வந்தது என்று உன்னால் சொல்ல முடியுமா? எங்கிருந்தோ இந்த ஜோதி வருவதை நீ பார்த்திருப்பாயே?”

குழந்தை வாய்விட்டுச் சிரித்தது.

“நான் செய்வதைக் கவனியுங்கள்.” என்று சொல்லிவிட்டு தன் வாயால் அந்த விளக்கை ஊதி அணைத்தது.

“ஐயா பெரியவரே, உங்கள் முன்னால் தான் இந்த விளக்கு அணைந்து போனது. உங்கள் முன்னால் தான் இந்த ஜோதி வேறு எங்கோ போயிருக்கிறது. அது எங்கே போனது என்று உங்களால் சொல்ல முடியுமா? நீங்கள் அதை அவசியம் பார்த்திருக்க வேண்டுமே?”

ஹாசன் வாயடைத்துப் போனார். அவரால் பதில் பேச முடியவில்லை. அந்த குழந்தை மிக அழகாக ஹாசனின் கேள்வி முட்டாள்தனமானது என்பதை நிரூபித்துவிட்டது.

ஹாசன் குனிந்து அந்தக் குழந்தையின் கால்களைத் தொட்டு வணங்கினார்.

“அந்தக் குழந்தைதான் என்னுடைய முதல் குரு. அந்த குழந்தை சொன்னதைக் கேட்ட அந்த நொடியில் என் தத்துவம், வாதங்கள், நான் கண்ட ஆன்மிகம் எல்லாமே அர்த்தமற்றது என்பதை உணர்ந்தேன். உண்மையிலேயே எனக்கு எதுவுமே தெரியாது என்பதை அந்த குழந்தை எனக்கு அழகாக உணர்த்தியது.

“ஒரு விளக்கின் ஒளி எங்கிருந்து வருகிறது, அந்த விளக்கு அணைந்த பின் அது எங்கே போகிறது போன்ற சிறு விஷயங்களே அறியாத நான், உலகை படைத்தது யார், அது எப்படி படைக்கப்பட்டது, எப்போது படைக்கப்பட்டது போன்ற பெரிய விஷயங்கள் எல்லாம் அறிந்தது போல பாசாங்கு செய்து வந்திருக்கிறேன் என்பது தெரிந்தது.

“அந்த குழந்தையை என்னால் எப்போதும் மறக்க முடியாது. அந்த குழந்தை என்னை மறந்து போயிருக்கலாம். இப்போது என்னைப் பார்த்தால் யார் என்று கூட அதற்கு அடையாளம்

தெரியாது. ஆனால் என்னால் அந்த நிகழ்ச்சியை, அந்த குழந்தையை எந்நாளும் மறக்க முடியாது.

"அதன் பின் ஆயிரக்கணக்கானவர்கள் எனக்கு ஆசானாக இருந்து கற்பித்திருக்கிறார்கள். 'உங்கள் குரு யார்?' என்று நீங்கள் என்னிடம் அடிக்கடி கேட்ட கேள்வியை தான் தவிர்த்ததற்குக் காரணம், அதற்கு என்னால் ஒரு வரியால் பதில் சொல்ல முடியாததுதான்.

பலர் எனக்கு சொல்லித் தந்திருக்கிறார்கள். பலர் மூலம் நான் கற்றிருக்கிறேன். ஒவ்வொருவரிடமும் நான் கற்றுக் கொண்ட பாடத்தின் சாராம்சம் இது தான். "அனுபவத்தால் அறிந்து உணரும் அறிவைத் தவிர, வேறு எந்த அறிவும் வாழ்க்கைக்குப் பயன் படாது."

"அது வரை நான் படித்ததை, நான் அறிந்ததை, தகவலாக, செய்திகளாக நான் அறிந்த புற உலக அறிவை அப்போதே துறந்துவிட்டேன். நான் எழுதிய நூல்கள், சாத்திர நூல்கள் எல்லாவற்றையும் எரித்து விட்டேன். நான் அறிஞன் என்ற நினைப்பை உதறித் தள்ளி விட்டேன். என் புகழை மறந்தேன். ஒரு பிச்சைக் காரனைப் போல வாழ ஆரம்பித்தேன். கொஞ்சம் கொஞ்சமாக எனக்கு ஆழ்நிலை சிந்தனை வசப்பட்டது. அதன் பின் எனக்குள் இருக்கும் உண்மையான அறிவுத்திறத்தை உணர்ந்தேன்."

இந்த சமுதாயம் உங்கள் அறிவுத் திறத்தை அழிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறது. இதில் ஆறுதலான விஷயம் என்னவென்றால் எவ்வளவு முயன்றாலும் இந்த சமுதாயத்தால் உங்கள் அறிவுத்திறனை முழுவதுமாக அழிக்க முடியாது.

ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் சமுதாயம் உங்கள் அறிவுத் திறத்தை அழிப்பதில்லை. அதன் மேல் பல படிகங்களாக தகவல் களையும், செய்திகளையும் போட்டு அதை மறைத்து விடுகிறது.

ஆழ்நிலை சிந்தனை அல்லது தியானம் உங்களை அந்த படிகங்களை எல்லாம் ஊடுருவி உங்களுக்குள்ளே ஆழமாகப் போக வைக்கிறது. உங்களுக்குள்ளேயே அது ஆழமான கிணறைத் தோண்ட வைக்கிறது. உங்களுடைய உண்மையான அறிவுத் திறம் என்ற நல்ல நீரின் ஊற்றுக்கண் தட்டுப்படும் வரை நீங்கள் தோண்டிக் கொண்டேயிருக்க வேண்டும்.

நீங்கள் மீண்டும் பிறக்கும் போது, உங்களுக்குள் இருக்கும் அந்த குழந்தையைக் கண்டுபிடிக்கும் போது தான் 'குழந்தைகள்

புத்திசாலிகள்' என்று நான் சொல்வதன் முழு அர்த்தம் உங்களுக்குப் புரியும்.

குழந்தைகளைக் கவனியுங்கள். நீங்கள் ஏதாவது கேள்வி கேட்கும் போது அதற்கு அவர்கள் காண்பிக்கும் எதிர் உணர்ச்சியைக் கவனியுங்கள். அவர்கள் சொல்லும் பதில் முக்கியமில்லை. அந்த எதிர் உணர்ச்சிதான் முக்கியம். அவர்களிடம் முட்டாள் தனமான கேள்விகளைக் கேட்காதீர்கள். உடனே பதில் தேவைப் படும் அறிவார்ந்த கேள்விகளை, தகவல், செய்தி சம்பந்தப்படாத கேள்விகளைக் கேட்டுப் பாருங்க்ள். அவர்களுடைய எதிர் உணர்ச்சியை உற்றுப் பாருங்கள். அவர்களுடைய அறிவு புலப்படும்.

ஒரு தாயார் தனது பத்து வயது பையனை ஒரு பார்ட்டிக்கு அனுப்ப தயார் செய்து கொண்டிருந்தாள். அவனது தலையை வாரிவிட்டு, பவுடர் போட்டுவிட்டு, நேர்த்தியான உடைகளை அணிவித்து, அவன் வெளியே கிளம்பும் போது சொன்னாள்.

"ஜாக்ரதை ராம். இது நல்ல பார்ட்டி. சந்தோஷமாக இரு. கட்டுப்பாட்டுடன் இருந்து கொள்."

மகன் தாயை விநோதமாகப் பார்த்துவிட்டுச் சொன்னான்.

"ஏதாவது ஒன்றைச் சொல்லம்மா. நான் சந்தோஷமாக இருக்கவா இல்லை கட்டுப்பாட்டுடன் இருக்கவா? என்னால் இரண்டும் செய்ய முடியாது என்று உனக்குத் தெரியும் தானே?"

குழந்தையின் நுட்பத்தைப் பார்த்தீர்களா? யாராலும் தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டு சந்தோஷமாக இருக்க முடியாது. குழந்தையின் யதார்த்தமான பதிலில் ஓர் அரிய உண்மை பொதிந்து கிடக்கிறது. அதனால் தான் குழந்தை சொன்னது.

"நான் போவதற்குள் ஏதாவது ஒன்றைத் தீர்மானமாகச் சொல்லிவிடம்மா. நான் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்றால் கட்டுப்பாட்டுடன் இருக்க முடியாது. கட்டுப்பாடாக இருக்க வேண்டு மென்றால் அதில் சந்தோஷம் இருக்காது. இப்போது சொல் உனக்குத் தேவை - என் சந்தோஷமா இல்லை கட்டுப்பாடா?"

தாயின் கூற்றில் இருக்கும் முரண்பாடு குழந்தைக்கு அப்பட்டமாகத் தெரிகிறது. ஆனால் அது தாய்க்குத் தெரிந்ததா என்பது சந்தேகமே.

ஒரு வழிப்போக்கன் ஒரு சிறுவனைப் பார்த்துக் கேட்டான்.

“இப்போது மணி என்ன என்று சொல்ல முடியுமா?”

“நிச்சயமாக. ஆனால் எதற்காக நீங்கள் மணியைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறீர்கள். அது நொடிக்கு நொடி மாறிக் கொண்டேயிருக்கிறதே!”

இதிலும் நாம் உணர வேண்டிய ஓர் உண்மை மறைந்து கிடக்கிறது.

அந்த பள்ளியின் முன்னால் ஓர் எச்சரிக்கை பலகை தொங்கியது.

“கவனமாக வண்டி ஓட்டுங்கள். எங்கள் மாணவர்களைக் கொன்று விடாதீர்கள்.”

மறுநாள் காலை அந்தப் பலகையின் கீழே ஒரு குழந்தையின் கையெழுத்தில் கீழ்க்கண்டவாறு கிறுக்கப்பட்டிருந்தது.

“கவனமாக வண்டி ஓட்டுங்கள். எங்கள் மாணவர்களைக் கொன்று விடாதீர்கள். எங்கள் ஆசிரியர்களுக்காகக் காத்திருங்கள்.”

அந்த சிறுவன் பள்ளியிலிருந்து அப்போதுதான் வீடு திரும்பியிருந்தான். அவன் முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடிக் கொண்டிருந்ததை அவனது தாய் கவனித்து விட்டாள்.

“என்ன பிரேம், இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறாய்? உனக்கு பள்ளிக்கூடம் அவ்வளவு பிடித்தமானதாக இருக்கிறதா?”

“சும்மா பேத்தாதீர்கள் அம்மா. பள்ளிக்குப் போவதையும், பள்ளியில் இருந்து திரும்பி வருவதையும் நீங்கள் தேவையில்லாமல் போட்டுக் குழப்பிக் கொள்கிறீர்கள்.

ஒரு சிறுவன் பள்ளிக்கு நடந்து போய்க் கொண்டிருந்தான். கடவுளிடம் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான்.

“அன்புள்ள இறைவா, இன்று நான் பள்ளிக்குத் தாமதாகப் போய்விடக்கூடாது. நான் உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள் கிறேன். இன்று மட்டும் நான் நேரத்துக்குப் பள்ளிக்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டும். ப்ளீஸ்.. கடவுளே...”

அப்போது கீழே கிடந்த ஒரு வாழைப்பழத் தோலில் சறுக்கி பாதையில் கொஞ்ச தூரம் வழுக்கிக் கொண்டே போய்விட்டான்.

"போதும், போதும், அதற்காக நீ என்னைத் தள்ளிவிடத் தேவையில்லை. புரிகிறதா?" என்று கடவுளிடம் கோபமாகச் சொன்னான் அவன்.

ஒரு மனநல மருத்துவர் ஒரு சிறுவனைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார்.

"நீ பெரியவனானதும் என்னவாகப் போகிறாய்?"

"டாக்டராவேன். இல்லாவிட்டால் ஓவியனாவேன். அதுவும் இல்லாவிட்டால் உயரமான ஜன்னல்களைக் கழுவும் வேலை செய்வேன்."

மருத்துவருக்கு ஒன்றும் புரியவில்லை.

"ஒன்றுக்கு ஒன்று தொடர்பே இல்லாத மூன்று தொழில்களா? எங்கோ இடிக்கிறதே?"

"எங்கேயும் இடிக்கவில்லை. எனக்குப் பெண்களை நிர்வாண மாகப் பார்க்க வேண்டும் என்று ஆசை. இந்த மூன்று தொழில் களிலும்தான் அது முடியும்."

இரவுச் சாப்பாடு முடிந்ததும் தந்தை தன் மகனுக்கு குடும்பக்கதைகளை எல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"என் கொள்ளுத்தாத்தா அந்தக் காலத்திலேயே ஆங்கிலேயர் களை எதிர்த்து சண்டையிட்டார். என் தாத்தாவோ பிரான்ஸ் நாட்டில் புரட்சியாளர்களை எதிர்த்து சண்டை போட்டார்.

என் மாமா ஸ்பெயின் நாட்டவரோடு சண்டையிட்டார். என் தந்தை இரண்டாம் உலகப் போரில் ஜெர்மானியர்களுக்கு எதிராக போரிட்டார். இப்போது சொல் மகனே, நமது பரம்பரையைப் பற்றி என்ன நினைக்கிறாய்?"

"ஏம்ப்பா நம்ம பரம்பரையில் ஒருவருக்குமே அடுத்தவர் களோடு பழகத் தெரியாதா? நட்புறவோடு வாழத்தெரியாதா? மனநலம் குன்றியவர்களின் பரம்பரையிலா நான் வந்திருக்கிறேன்! சே!"

*இரண்டாவது கேள்வி:*

*ஓஷோ, நீங்கள் யார்?*

நான் ஒரு கண்ணாடி. நான் கூட்டியும் சொல்லவில்லை. குறைத்தும் சொல்லவில்லை. நான் ஒரு கண்ணாடி. அவ்வளவுதான். என் அருகில் வந்து என்னைப் பார்த்தால் என்னுள் உங்கள் முகம் தெரியும்.

பலர் என்னிடம் அசிங்கமான முகத்தைப் பார்த்து அதனால் என் மேல் கோபப்படுகிறார்கள். அவர்கள் அறியாதவர்கள். பாவம்! நான் அசிங்கமாக இருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டிருக்கும் அப்பாவிகள். அவர்களுடைய அசிங்கத்தைத்தான் பிரதிபலிக்கிறேன் என்ற அறிவு கூட இல்லாத பாமரர்கள்.

இன்னும் சிலர் என்னிடம் அழகான முகத்தைப் பார்த்து என் மேல் வேட்கை கொள்கிறார்கள். அந்த அழகு என்னிடம்தான் இருக்கிறது என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இரு சாரார் செய்வதும் தவறுதான்.

சில நாட்களுக்கு முன்னால் The Sunday Statesman என்ற ஆங்கிலப் பத்திரிகை என்னைப் பற்றி ஒரு கட்டுரையைப் பிரசுரித்திருந்தது. “ரஜனீஷ் - யோகியா இல்லை போகியா?” என்பதுதான் அதன் தலைப்பு. அதை எழுதியவர் பிரபல வங்க மொழி எழுத்தாளர். அவர் அரவிந்தரைப் பின்பற்றுபவர்.

பாவம் அவரால் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை. நான் அந்தக் கட்டுரையை ரசித்துப் படித்தேன். ஒரு சமயம் நான் பெரிய துறவி, யோகி, ஞானி என்று வானளாவப் புகழ்கிறார். அடுத்த நொடியிலேயே நான் ஒரு போகி, பாவி என்று என்னைச் சாடுகிறார்.

ஒரு சமயம் என்னிடம் தெய்விக அருள் இருப்பதாகச் சொல்கிறார். மறு சமயம் நான் சாத்தானின் பிரதிநிதி என்று துண்டைப் போட்டுத் தாண்டிச் சத்தியம் செய்கிறார். குழப்பத்தின் உச்சகட்டம் அந்தக் கட்டுரை.

அந்தக் கட்டுரை என்னைவிட அதனை எழுதியவரின் முகத்தையே தெளிவாகக் காட்டியது. பாவம், அவர் வாழ்க்கையே பெருங்குழப்பத்தில் இருக்க வேண்டும். என் புத்தகங்களைப்

படித்தவுடன் தான் அவருக்குக் குழப்பம் வந்திருக்க வேண்டும். அவர் வாழ் நாள் முழுவதும் சுவாமி அரவிந்தரின் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பார் போலிருக்கிறது.

அரவிந்தரின் தத்துவத்தில் நான் எந்த சிறப்பையும் உணரவில்லை. காரணம், அது வெறும் தத்துவம் மட்டும்தான். அரவிந்தர் பெரிய அறிஞர். மெத்தப் படித்தவர். ஆற்றல் மிக்கவர். மா மேதை. ஆனால் அவர் ஞானியில்லை. அவர் புத்தர் இல்லை. தர்க்க ரீதியாக மிக அழகாக அவர் எழுதியிருக்கிறார் என்பது உண்மைதான்.

அவரது அணுகுமுறை மெத்தப்படித்தவரின் அணுகுமுறை. காரண-காரிய அறிவுக்குட்பட்டது. இந்திய பாரம்பரியத்தில் ஒரு துறவி எப்படி இருக்க வேண்டும் என்று வகுக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே வாழ்ந்தவர் அவர். தன்னுள்ளே சிறந்த பண்புகளை வளர்த்துக் கொண்டார்.

ஆனால் அந்தப் பண்புகளில் தன்னுணர்வு இல்லை. தன்னுணர்வு இல்லாமல், அதே சமயம் மனசாட்சியுடன் வாழ்ந்தவர் அவர். (conscience without consciousness) இந்து மதத்தில் ஒரு ஞானிக்கு என்ன இலக்கணம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதை எழுத்துப் பிசகாமல் கடைப்பிடித்தவர் அவர்.

என்னைப் பற்றிப் பத்திரிகையில் எழுதினாரே, அந்த எழுத்தாளர், அரவிந்தரின் பக்தர், அவர் மனதில் ஒரு யோகி இப்படித்தான் இருக்க வேண்டும் என்று திட்டவட்டமான கருத்து இருந்தது. அவர் மனதில் இருந்த யோகி-போகி பாகுபாட்டில் என்னைச் சிறைப்படுத்த நினைத்தார் முடியவில்லை.

நான் எந்த பாகுபாட்டிலும் சிக்கிக் கொள்ளாதவன். இந்து, கிறிஸ்தவன், முகமதியன், சமணன், பௌத்தன் என்று எந்த வகையிலும் என்னை அடக்கி வைக்க முடியாது. நான் இறந்த காலத்தைச் சேர்ந்தவன் அல்லன், வருங்காலத்தைச் சேர்ந்தவன். நான் எனக்கென்று ஒரு தனி பாகுபாட்டை உருவாக்கிக் கொண்டால்தான் உண்டு.

அதைத்தான் இப்போது செய்து கொண்டிருக்கிறேன். வருங்காலத்தில் என் வகையைச் சேரந்தவர்கள் தோன்றுவார்கள். இது ஒரு புது நிகழ்வு என்பதால் இதற்கு வரலாறு கிடையாது. ஆனால் வருங்காலம் இருக்கிறது.

அந்த எழுத்தாளர் எவ்வளவோ பாடுபட்டும் என்னை இந்து மதத்தைச் சேர்ந்த யோகி என்ற பாகுபாட்டில் அடைக்க முடிய வில்லை. அவரது மனம் தர்க்க ரீதியாகவே சிந்திக்கும் பழக்கம் உடையது என நினைக்கிறேன்.

ஒன்று இப்படி இருக்க வேண்டும், இல்லாவிட்டால் அப்படி இருக்க வேண்டும். இரண்டும் இல்லாமல் இருந்தால் எப்படி..... அப்படி என்றால் இவர் சாத்தானின் அவதாரமாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டார் அவர். ஆனால் என்னை, சாத்தான் என்ற வகையிலும் வைக்க முடியவில்லை. என்னிடம் உள்ள சில குணங்கள் சாத்தானிடம் இல்லை. சாத்தானிடம் உள்ள சில குணங்கள் என்னிடம் இல்லை. பாவம் என்ன செய்வார் அவர்? மிகவும் குழம்பிப் போய்விட்டார்.

யோகி என்பது ஒரு துருவம் என்றால் சாத்தான் என்பது அதற்கு நேர் எதிர் துருவம். இந்த இரண்டு துருவங்களில் எதற்குள்ளும் என்னை வைக்கமுடியவில்லை அவருக்கு.

சற்றுக் கவனித்துப் பாருங்கள். யோகி, சாத்தான் என்ற இந்த இரண்டுமே கடந்த காலத்தைச் சேர்ந்தவை. நான் கடந்த காலத்தவன் கிடையாது. அதனால் தான் அந்த எழுத்தாளர் அங்கிருந்து இங்கும், இங்கிருந்து அங்குமாக தாவிக் கொண்டே யிருந்துவிட்டு கடைசியில் எந்த முடிவுக்கும் வரமுடியாமல் குழப்பநிலையிலேயே தனது கட்டுரையை முடித்துவிட்டார்.

அவர் மட்டும் இதில் உள்ள உண்மையை உணர முடிந்தால்.....

அவர் என்னில் பார்த்தது ஒரு கண்ணாடியை. அந்த கண்ணாடி அவரிடம் உள்ள முரண்பாடுகளை அப்படியே பிரதிபலித்துக் காட்டியது. கடந்த காலத்துக்கும் வருங்காலத்துக்கும் இடையே அவருக்கு இருந்த முரண்பாட்டைத்தான் அந்த கண்ணாடி காட்டியது. அவருடைய மேல் மனதுக்கும், ஆழ்மனதுக்கும் இடையே இருந்த முரண்பாட்டைத்தான் அந்த கண்ணாடி காட்டியது.

அவருடைய மனச்சாட்சிக்கும், தன்னுணர்வுக்கும் இடையே இருந்த முரண்பாடு, அவருடைய ஒழுக்கத்திற்கும், உண்மைக்கும் இடையே இருந்த முரண்பாடு - இவற்றைத்தான் அந்தக் கண்ணாடி காட்டியது. ஆனால் அது அவருக்குத் தெரியாது. அவர் என்னைப் பற்றிச் சிந்திப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்.

உண்மையிலேயே அவர் என்னில் தனது முகத்தைத்தான் பார்த்துக் கொண்டார்.

யார் நீ என்று என்னைப் பார்த்துக் கேட்கிறீர்கள்.

நான் உள்ளதைப் பிரதிபலிக்கும் சாதாரணக் கண்ணாடி என்பதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். ஏனென்றால் நீங்கள் இங்கேயே இருக்கிறீர்கள்.

என்னுடனேயே வாழ்கிறீர்கள். அதனால் நான் ஒரு கண்ணாடி என்பதை நீங்கள் எளிதில் புரிந்து கொள்ளலாம். சில சமயங்களில் உங்களுக்குக் கோபம் வரலாம். உங்கள் கோபம் உங்களோடு தொடர்புடையது. அதற்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. சில நேரங்களில் நீங்கள் சந்தோஷமாக, பரமானந்தமாக இருக்கலாம். அதுவும் உங்களுடைய உணர்வுதான்.

அதற்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. நீங்கள் பரமானந்தத்துடன் இருப்பதற்கு நான்தான் காரணம் போன்ற அபத்தமான கூற்றுகளை நான் மனதாலும் நினைத்ததில்லை. அதில் எனக்கு எந்த பெயரும் வேண்டாம். உங்களுக்கு ஞானம் கிடைத்து ஞானியாகிவிட்டீர்களா? அதுவும் உங்கள் பாடு. என்னால் எதுவும் நடக்கவில்லை. நீங்கள் என்னிடம் நன்றி யுணர்வோடு இருக்க வேண்டும் என்று கூட நான் சொல்ல மாட் டேன். வாய் வார்த்தையாக 'நன்றி'என்று கூட நீங்கள் சொல்லத் தேவையில்லை.

உங்களுக்கு ஞானம் உண்மையிலேயே கிடைத்துவிட்டால் நான் தான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். ஏனென்றால் உங்களுக்கு அதன் பின் இந்த கண்ணாடி தேவைப் படாது. அதை வேறு யாராவது பயன்படுத்திக் கொள்ளலாம். அது மட்டுமில்லை. நீங்களே ஒரு கண்ணாடியாக மாறிவிடுவீர்கள். மற்றவர்களின் முகங்களை, அவர்களது நிஜங்களை நீங்கள் பிரதிபலிக்கத் தொடங்குவீர்கள்.

என்னுடைய சந்நியாசிகள் எல்லாரும் நல்ல கண்ணாடிகளாக மாற வேண்டும் என்பது தான் என் நோக்கம். அப்போது தான் அவர்கள் இந்த உலகில் வாழும் கோடிக்கணக்கான மக்களுக்கு உதவி செய்ய முடியும். இதை நீங்கள் தெரிந்து கொண்டால் உங்கள் வாழ்வில் பல பெரிய விஷயங்கள் நடக்கும். இல்லா விட்டால் என்ன ஆகும்? நீங்கள் என்னைத் தொடர்ந்து சாடிக்

கொண்டேயிருப்பீர்கள். ஒவ்வொரு முறையும் நான் ஏதாவது ஒரு கருத்தை அழுத்தமாகச் சொன்னால் நீங்கள் அதனால் காயப்படுவீர்கள்.

உங்கள் மனதில் ஒரு கருத்தை நீங்கள் பல ஆண்டுகளாக வைத்திருக்கலாம். நான் அந்த கருத்து தவறு என்று அதைத் தாக்கும் போது உங்களுக்கு வலிக்கத்தான் செய்யும். உங்கள் மனதில் மண்டிக்கிடக்கும் அந்த பழைய கருத்துகளைத் தாக்குவது தான் என் வேலை.

உங்களிடம் ஏதாவது தவறு இருந்தால், உங்கள் முகம் வீங்கியிருந்தால், கண்கள் சிவந்திருந்தால், மூக்கின் மேல் அசிங்கமான ஒரு மச்சம் இருந்தால், உண்மையான கண்ணாடி அதை அப்படியே காட்டத்தான் செய்யும். அது கண்ணாடியின் குற்றம் இல்லை. அதற்காகக் கண்ணாடியை உடைக்காதீர்கள்.

என் மேல் கத்தியை எறிந்து கொல்ல பார்த்தானே அந்த ம்னிதன் அதைத் தான் செய்து கொண்டிருந்தான். அவனால் கண்ணாடியின் பிரதிபலிப்புகளைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவனால் அவனது நிஜ இயல்புகளைச் சகித்துக் கொள்ள முடியவில்லை.

மூன்று, நான்கு நாட்கள் தான் என் உரையை அவன் கேட் டிருப்பான். அதுவே அவன் அமைதியைக் குலைத்து அவனைக் கிளர்ந்தெழச் செய்துவிட்டது. நான் சொன்ன வார்த்தைகள் அவனது மதவெறியைப் பிரதிபலித்துக் காட்டின. அவனுடைய வெறித் தனமான இந்து மதப் பற்றுதலைக் காட்டின. அதை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

யூதர்களால் ஏசு பெருமானைத் தாங்கிக் கொள்ள முடிய வில்லை. காரணம், அவர் யூதர்களின் உண்மையான முகங்களைப் பிரதிபலித்துக் காட்டினார். அவர்களால் அதை ஏறெடுத்தும் பார்க்க முடியவில்லை.

மக்கள் அசிங்கமான முகங்களுடன் வாழ்ந்து கொண்டிருக் கிறார்கள். கண்ணாடி இல்லாமல் அவர்களால் அவர்களது முகத்தைப் பார்க்க முடியாது என்பதால் திருப்தி·புடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உங்கள் முகத்தைப் பார்க்க முடியாவிட்டால் நீங்கள் உங்களைப் பேரழகன் என்று நினைத்துக் கொள்ளலாம்.

உங்களைப் பார்க்கும் மக்கள் மரியாதை நிமித்தம் உங்களிடம் இருக்கும் அசிங்கத்தைப் பற்றிப் பேசாமல் இருக்கலாம். ஆனால்

நீங்கள் இல்லாத சமயத்தில் உங்களைப் பற்றிப் பேசுவார்கள். உங்கள் முதுகுக்குப் பின்னால் உங்கள் இயல்புகளை, அசிங்கங்களைப் புட்டுப் புட்டு வைப்பார்கள். உங்களைப் பற்றி வம்பளப்பார்கள். ஆனால் நீங்கள் இருக்கும் போது வம்பளக்க மாட்டார்கள். உங்களிடம் மற்றவர்களைப் பற்றி வம்பு பேசுவார்கள். மற்றவர்களிடம் உங்களைப் பற்றி வம்பு பேசுவார்கள். நீங்களும் அப்படித்தான் செய்கிறீர்கள்.

மனவியல் நிபுணர்கள் இதை அற்புதமாகச் சொல்கிறார்கள். இந்த உலகத்தில் உள்ள மனிதர்கள் எல்லாரும் சேர்ந்து இப்படி ஒரு தீர்மானம் எடுத்துக் கொள்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம்.

"அடுத்த 24 மணி நேரத்துக்கு நாங்கள் போலி மரியாதை காட்ட மாட்டோம், மரியாதை நிமித்தம் பொய் சொல்ல மாட்டோம். எந்தப் பொய்யையும் சொல்ல மாட்டோம். உள்ளதை உள்ளபடியே சொல்வோம். எங்களுக்கு தெரியும் உண்மைகளை தெரிந்த வகையில் சொல்வோம்."

என்ன ஆகும்? மனவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள், உலகத்தில் நட்பு என்பதே இல்லாமல் போய்விடும். கணவர்கள், மனைவிகள், காதலர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். எல்லா உறவுகளும் செத்துப் போய்விடும்.

நான் என் சந்நியாசிகளிடம் அடிக்கடி என்ன சொல்கிறேன் தெரியுமா? யாருடனாவது நீங்கள் நல்ல நட்புறவுடன் இருக்க வேண்டுமென்றால் அவரை விட்டுச் சற்று விலகியே இருங்கள்.

அவருடன் சேர்ந்து வாழாதீர்கள். சேர்ந்து வாழத் தொடங்கி விட்டால் பின் எவ்வளவு நாட்களுக்குத்தான் பொய் சொல்லிக் கொண்டிருக்க முடியும்? எவ்வளவு நாட்களுக்குத்தான் சம்பிரதாயமாக, மரியாதையாக வாழ முடியும்? சீக்கிரத்திலேயே உள்ளே அமுக்கி வைக்கப்பட்டிருக்கும் உண்மைகள் வெளியே வந்துவிடும்.

சில நாட்களுக்கு முன் கிருஷ்ண ப்ரேமுடன் சேர்ந்து வாழவேண்டும் என்று வசுமதி சொன்னாள். அவர்களிடையே இருந்த உறவு ஒன்றரை வருடம் நீடித்தது. இந்த கூட்டமைப்பின் வரலாற்றில் இதுவரை நடந்திராத அதிசயம். ஒன்றரை வருடம் ஓர் உறவு இங்கே நீடித்ததாக சரித்திரமே இல்லை.

அதற்கு என்ன காரணம்? இருவரும் எப்போதாவதுதான் சந்தித்துக் கொள்வார்கள். இந்த ஒன்றரை வருடங்களும் அவர்கள் ஒரே இடத்தில் வசிக்கவில்லை. அவர்களால் தினசரி ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ள முடியாது. வசுமதி வேறு சிலருடன் சேர்ந்து வசிக்கிறாள்.

கிருஷ்ண ப்ரேம் வேறு நபர்களுடன் சேர்ந்து வசிக்கிறான். அதனால் எப்போதாவது ஒரு முறைதான், அதிக பட்சமாக வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்று மணி நேரம்தான் அவர்கள் சந்தித்துக் கொள்வார்கள். இதனாலேயே அவர்களிடையேயான உறவு வெறும் காதல் என்ற அளவிலேயே இருந்தது. அது திருமணமாக இன்னும் மலரவில்லை. அவர்களுக்குத் திருமணம் ஆகியிருந்தால் அந்த உறவு எப்போதோ முடிந்து போயிருக்கும்.

இந்த நிலையில் விவேக் என்னிடம் வந்து, 'வசுமதி கிருஷ்ண ப்ரேமுடன் சேர்ந்து வாழ விரும்புகிறாள்' என்று சொன்னாள். நான் அவளிடம் சொன்னேன். இதைத்தான் ஒவ்வொரு பெண்ணும் விரும்புகிறாள்.

முதலில் காதல் கொள்வது. பின் கூடவே வாழ வேண்டும் என்று ஒற்றைக்காலில் நிற்பது. அதன்பின் அந்த உறவையே அழித்துவிடுவது - இதைத்தான் பெண்கள் காலகாலமாக செய்து வந்திருக்கிறார்கள். 'என்னுடன் சேர்ந்து வாழ்கிறாயா?' என்று ஒரு பெண் காதலனிடம் கேட்கும் போது அவன் அதை மறுக்க முடியாது. அப்படி மறுத்தால் அந்த நொடியிலேயே அந்த காதல், அந்த உறவு முடிந்துவிடும்.

"சரி, வசுமதி விரும்பினால் அதற்கான ஏற்பாடுகளைச் செய்வோம். இந்த கூட்டமைப்பில் முடியாதது என்று ஒன்றும் இல்லை." என்று விவேக்கிடம் சொன்னேன்.

வசுமதி-கிருஷ்ண ப்ரேம் உறவைப் பாதுகாக்க இன்னும் ஒரே ஒரு வாய்ப்பு இருந்தது. கிருஷ்ண ப்ரேமை அழைத்துப் பேசினேன். அவன் புத்திசாலித்தனமாக பிரச்சினையை எதிர் கொண்டான். எனக்கு அவன் கடிதம் எழுதியிருக்கிறான்.

"ஓஷோ, இந்த விஷயத்தில் நீங்களே முடிவு செய்யுங்கள். எது சரி என்று எனக்குத் தெரியாது. என் மனதில் இருக்கும் ஆசை 'அவளோடு சேர்ந்து வாழ்' என்று சொல்கிறது. ஆனால் என் தன்னுணர்வு இன்னும் முழுமையாக மலரவில்லை என்று எனக்குத் தெரியும்.

“அதனால் எனக்கு இதன் பின் விளைவுகள் தெரியவில்லை. வருங்காலத்தில் இந்த உறவு எப்படி இருக்கப் போகிறது என்று பார்க்க எனக்கு தீர்க்க தரிசனம் கிடையாது. அதனால் நீங்களே ஒரு முடிவைச் சொல்லுங்கள். அது எதுவாக இருந்தாலும் நான் ஏற்றுக் கொள்கிறேன்.”

அவர்கள் தனித் தனியாகவே வாழட்டும் என்று நான் முடிவெடுத்தேன். ஓர் அழகான காதல் உறவு தப்பிப் பிழைத்தது.

சில வாரங்களுக்கு முன் ராதா தனது காதலன் அமிட்டோவுடன் நான்கு வாரங்கள் இத்தாலியைச் சுற்றிப் பார்க்கப் போனாள். நான் விவேக்கிடம் சொன்னேன், “ராதா-அமிட்டோ உறவு இதோடு முடிந்தது.”

ஆனால் இதை வேறு யாரிடமும் சொல்ல வேண்டாம் என்றும் சொல்லி வைத்தேன். பாவம் காதல் பறவைகள் நான்கு வாரங்களாவது சந்தோஷமாக இருக்கட்டுமே என்று நினைத்தேன். ஆனால் ராதா-அமிட்டோ உறவுக்கு எதிர்காலம் இல்லை. இத்தாலியில் நான்கு வாரங்கள், தனியாக. அந்த உறவு அதோடு முடிந்துவிடும்.

உண்மையிலேயே அது தான் நடந்தது. சில நாட்களுக்கு முன் ராதா வந்து என்னைப் பார்த்தாள். அவளுக்கு இப்போது அசங் என்ற சந்நியாசியின் மேல் தான் காதலாம். அவனுடன் சேர்ந்து வாழலாமா என்று என்னைக் கேட்டாள். அவளுடன் நான்கு வாரங்கள் இத்தாலியில் சுற்றிய அமிட்டோவைப் பற்றி ஒரு பேச்சும் இல்லை.

இப்படித்தான் நடக்கும் என்று எனக்கு முன்னாலேயே தெரியும். வேறு எப்படியும் நடக்க வழியில்லை. ஏனென்றால் நீங்கள் 24 மணி நேரமும் ஒருவருடன் சேர்ந்து இருக்கும் போது, உங்களால் எப்போதும் முகமூடியோடு இருக்க முடியாது.

சில சமயங்களில் உங்கள் முகமூடிகளைக் கழற்றி வைத்துவிட்டு உங்கள் உண்மை முகங்களைக் காட்ட வேண்டும். நீங்கள் தூங்கும் போது, காலையில் எழுந்தவுடன் அசிங்கமான உங்கள் நிஜ முகத்தை உங்களால் மறைக்க முடியாது. இரண்டு, மூன்று நாட்களுக்கு உங்களால் தாக்குப்பிடிக்க முடியும்.

அதிக பட்சம் மூன்று, நான்கு நாட்களுக்கு நீங்கள் நல்லவராக, அழகானவராக, பண்புள்ளவராக, மென்மையானவராக வேஷம்

போடலாம். அதற்கு மேல் அது தாங்காது. வேஷம் போட்டுப் போட்டு உங்ககளுக்குச் சலிப்பு தட்டிவிடும். உங்களையும் மீறி உங்கள் உண்மையான சுபாவம் வெளிப்படத் தொடங்கும். அப்போதுதான் அந்த உறவு அழிந்து போக ஆரம்பிக்கும்.

வெறும் 24 மணி நேரத்துக்கு நாம் எல்லாரும் உண்மையாக இருப்போம், உண்மையையே பேசுவோம் என்று தீர்மானித்தால் உலகத்தில் உள்ள உறவுகள் எல்லாம் அழிந்துவிடும். மனவியல் நிபுணர்கள் சொல்லும் இந்த கூற்றில் பயங்கரமான உண்மை பொதிந்து கிடக்கிறது.

இன்று பலரும் பொய்யான வாழ்க்கைக்கு, பொய்யான வார்த்தைகளுக்கு, பொய்யான முகங்களுக்கு, பொய்யான தோற்றங்களுக்குத் தங்களைப் பழக்கிக் கொண்டுவிட்டார்கள். இந்த சூழ்நிலையில் வெகு சிலரைத் தவிர, யாராலும் உண்மையைத் தாங்கிக் கொள்ள முடியாது.

அதனால்தான் வம்பும், புறம் பேசுதலும், கிசுகிசுக்களும் இன்று மிகவும் அதிகமாகியிருக்கின்றன. ஏதாவது ஒரு வழியில் உண்மை வெளிப்பட வேண்டும் அல்லவா? அப்படி உண்மை வெளியே வராவிட்டால் அது நமக்குப் பெரிய பாரமாகிவிடும்.

யாரிடமாவது உண்மையைச் சொல்லிவிட்டால் மனதில் இருக்கும் பெரிய பாரம் குறைந்ததைப் போல் இருக்கிறது. உங்களுக்கு அது சுகமாக இருக்கிறது. அதே போல் அடுத்த மனிதரிடம் இருக்கும் உண்மையை அவர் உங்களிடம் இறக்கி வைக்கிறார். அதனால் அவர் மனம் லேசாகிறது. ஒவ்வொருவரும் அடுத்தவருக்கு ஒரு வகையில் மனநல மருத்துவராக இருக்கிறார்கள்.

மேலை நாடுகளில் மனநல மருத்துவர்களின் தேவை மிக அதிகமாக இருக்கிறது. இந்தியா போன்ற நாடுகளில் அவர்களின் தேவை அதிகமாக இல்லாததற்குக் காரணம், இங்கே இன்னும் மக்களுக்கு நேரம் இருக்கிறது. அடுத்தவர் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளும் பொறுமை இருக்கிறது. ஆறுதலாக நான்கு வார்த்தைகள் பேசும் அளவிற்கு அன்பு இருக்கிறது.

மேற்கில் அடுத்தவர் பேசுவதைக் கவனிக்கக்கூட யாருக்கும் நேரமில்லை. காசு கொடுத்தால் தான் கவனிப்பார்கள். அதனால் தான் அங்கே மனநல மருத்துவர்கள் கொடி கட்டிப் பறக்கிறார்கள். அவர்களின் தொழில் ரகசியம் என்னவென்று சொல்லட்டுமா?

நீங்கள் அவரிடம் பேசும போது உங்களைக் கவனிப்பது போல் நடிக்க வேண்டும். அவ்வளவுதான். அதற்காக உங்களிடமிருந்து ஆயிரக்கணக்கான டாலர்களைக் கறந்துவிடுவார்கள்.

மேலைநாட்டு மனநல மருத்துவர் ஒருவர் வளர்ப்பு பிராணிகள் விற்கும் கடை ஒன்றுக்குப் போனார்.

"எனக்குப் பேசாத கிளி வேண்டும்." என்று கடைக்காரரிடம் சொன்னார்.

"ஆச்சரியமாக இருக்கிறதே! இங்கே வருபவர்கள் எல்லாம் பேசுகின்ற கிளி வேண்டுமென்றுதான் கேட்பார்கள். பேசாத கிளி கேட்ட முதல் ஆள் நீங்கள் தான்."

"பேசுகின்ற கிளிகள் எனக்குச் சலித்துவிட்டன."

"உங்களிடம் எத்தனை பேசும் கிளிகள் இருக்கின்றன?"

"ஒன்று கூட இல்லை. ஆனால் பேசும் நோயாளிகள் இருக் கிறார்களே! அவர்களும் கிளிகளைப் போல் சொன்னதையே மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். கணவன் மனைவியைப் பற்றிப் பேசுகிறான்.

"மனைவி கணவனைப் பற்றிப் பேசுகிறாள். பெற்றோர்கள் பிள்ளைகளைப் பற்றிப் பேசுகிறார்கள். பிள்ளைகள் பெற்றோர்களைப் பற்றிப் பேசுகிறார்கள். எனக்கு சலித்துவிட்டது. இவர்கள் பேத்தலை நான் கவனமாகக் கேட்பது போல் நடித்துத் தொலைய வேண்டும். வேறு வழி? நான் பிழைக்க வேண்டுமே!"

மனநல மருத்துவம் இன்று மேலை நாடுகளில் மிகவும் லாபகரமான தொழில். அதறகு முதலீடு தேவையில்லை. சிறு படுக்கையைப் போன்ற ஒரு சாய்மானமான நாற்காலி மட்டுமே போதும். இந்த சிறுபடுக்கை போன்ற நாற்காலியைப் (couch) பயன்படுத்தியதில் தான் பெரிய புத்திசாலி என்று மனவியல் மேதை ஃப்ராய்டு (Freud) நிரூபித்து விட்டார்.

நாம் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதைப் போல் மனநல மருத்துவர் எதிரில் அவரது நோயாளிகள் உட்கார்ந்து பேசுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது மருத்துவரின் முகத்தில் இருக்கும் அசுவாரசியம், சலிப்பு இவை நோயாளிக்குத் தெரிந்துவிடும்.

நோயாளியின் அறுவை தாங்கமாட்டாமல் மருத்துவர் கொட்டாவி விட்டால் அதை நோயாளி பார்த்துவிட வாய்ப்பு இருக்கிறது. இந்த சாய்மான நாற்காலியில் நோயாளி உட்கார்ந்திருக்க, அவருக்குப் பின்னால் ஓர் உயரமான நாற்காலியில் மருத்துவர் அமர்ந்திருப்பார். மருத்துவரின் முகம் நோயாளிக்குத் தெரியாது. அதனால் நோயாளி சொல்வதை மருத்துவர் கவனிக்கிறாரா இல்லையா என்று நோயாளிக்குத் தெரியாது.

யாரால் தான் மன நோயாளிகள் பேசுவதை நாள் முழுவதும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருக்க முடியும்? தங்கள் வாழ்க்கையைப் பற்றி, தங்கள் ஆசைகளைப் பற்றி, தங்கள் மன வலிகளைப் பற்றி அவர்கள் பேசுவதை யாரால் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருக்க முடியும்? ஊரில் உள்ள நோயாளிகள் எல்லாம் ஒரேமாதிரியான கதைகளைத்தான் சொல்வார்கள். கதை ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். தன்னுணர்வு இல்லாதவர்களின் கதை வேறு எப்படி இருக்க முடியும்?

தன்னுணர்வு உள்ளவர்கள் தான் தனித்து விளங்குவார்கள். ஒரு ஞானி மற்றொரு ஞானியிலிருந்து முற்றிலும் மாறுபட்டவனாக இருப்பான். ஏசு நாதரின் கதை கௌதம புத்தரின் கதையிலிருந்து வேறு பட்டிருக்கும்.

புத்தரின் கதைக்கும், லா ட்சூவின் கதைக்கும் இடையே பெரும் வித்தியாசங்கள் இருக்கும். அவர்கள் தன்னிகரற்றவர்கள். தனித்தன்மை வாய்ந்தவர்கள்.

தன்னுணர்வு இல்லாதவர்களின் கதையில் என்ன பெரிய வித்தியாசம் இருந்துவிடப் போகிறது. அதே பாலுணர்வு, அதை அடக்கிவைத்தல், பேராசை, பெருங்கோபம், வெறுப்பு, அழிக்கும் தன்மை, தற்கொலை உணர்வு, எல்லாரையும் உடைமையாக்கிக் கொள்ளும் வேகம், பொறாமை - இவை தான் வெவ்வேறு வடிவங்களில் இருக்கும். ஆள் மாறலாமேயொழிய கதை மாறாது. அவர்களின் வாழ்க்கை மாறாது.

இரண்டு பெண்கள், ஓர் ஆண். அல்லது இரண்டு ஆண்கள், ஒரு பெண். அதே முக்கோணங்கள். யாருக்கும் எளிதில் அலுப்புத் தட்டிவிடும்.

இருபதாம் நூற்றாண்டின் சிறந்த கண்டுபிடிப்பு என்ன தெரியுமா? அது கம்ப்யூட்டரோ, காரோ இல்லை. ஃப்ராய்டு

கண்டுபிடித்த அந்த சிறு படுக்கை நாற்காலிதான். நோயாளி அதில் அமர்ந்து கொள்வார். மருத்துவர் அவருக்குப் பின்னால் அமர்ந்து கொள்வார்.

நோயாளியால் மருத்துவரின் முகத்தைப் பார்க்க முடியாது. நோயாளி வள வள என்று பேசிக் கொண்டிருக்கும் போது, மருத்துவர் புகைப் பிடிக்கலாம், புத்தகம் படிக்கலாம், கொட்டாவி விடலாம், ஏன் ஒரு சிறு தூக்கம் கூடப் போடலாம். தனது காது களில் பஞ்சை வைத்து அடைத்துக் கொள்ளலாம். நோயாளி சொல் வதைக் கேட்க வேண்டும் என்ற அவசியம் அவருக்கு இல்லை.

ஆனால் தானாகப் பேசிக் கொண்டிருப்பதாலேயே நோயாளிக்கு நல்ல நிவாரணம் கிடைத்துவிடுகிறது. மனதில் பூட்டி வைத்திருந்த விஷயங்களை எல்லாம் பட்டவர்த்தனமாகப் பேசுவதிலேயே பாதி மனநோய் குணமாகிவிடுகிறது.

ஒரு மணி நேரம் கழித்து அந்த சிறுபடுக்கையிலிருந்து நோயாளி எழும் போது, அவரிடம் ஒரு புத்துணர்ச்சி இருக்கிறது. அவர் மனதில் பாரம் இல்லை. தனது வயது குறைந்துவிட்டதாக, தனது கவலைகள் மறைந்துவிட்டதாக நம்புகிறார் அந்த நோயாளி.

உள்ளே அவர் பல அபத்தமான விஷயங்களைப் பற்றிப் பேசியிருப்பார். அந்த விஷயங்களை வெளியே வேறு யாரிடமும் பேச முடியாது. அப்படிப் பேசினால் அவருக்குப் பைத்தியம் என்று மற்றவர்கள் நினைத்துவிடுவார்கள். ஆனால் மனநல மருத்துவரிடம் நீங்கள் பைத்தியக்காரத்தனமாகப் பேசினாலும் அதனால் உங்களுக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை.

கிளி வாங்கப் போன மனநல மருத்துவர் சொன்னார், “எனக்குப் பேசாத கிளிதான் வேண்டும்.”

கடைக்காரருக்கு ஒரு சிக்கல். அவரிடம் பலவகையான கிளிகள் இருந்தன. ஆனால் எல்லாமே பேசும் கிளிகள் தான். பேசாத கிளி கேட்கும் முதல் வாடிக்கையாளர் மனநல மருத்துவர்தான். கடைக்காரர் வெளியே சென்று ஊமையான ஒரு காகத்தைப் பிடித்துக் கொண்டு வந்தார்.

அதைப் பார்த்ததும் மனநல மருத்துவர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

“இது கிளியா?”

"ஆமாம் கறுப்புக்கிளி. ஆப்பிரிக்காவில் காணப்படும் பறவையினம். கறுப்பர் இனத்தைச் சேர்ந்தது. இது ஒரு நீக்ரோ. இதற்கு சுத்தமாக ஆங்கிலம் தெரியாது. அதனால் இது பேச முடியாது."

"நல்லது. நான் இதை வாங்கிக் கொள்கிறேன். விலையைச் சொல்லுங்கள்."

மருத்துவர் அந்த காகத்தை வாங்கிக் கொண்டு போனார்.

ஒரு மாதம் கழிந்தது. ஒரு நாள் கடைக்காரர் மருத்துவரைப் பூங்காவில் பார்த்துக் கேட்டார்.

"உங்கள் கறுப்புக் கிளி எப்படி இருக்கிறது?"

"பிரமாதமாக இருக்கிறது. நீங்கள் எனக்கு அருமையான கிளியைக் கொடுத்திருக்கிறீர்கள். அது ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. நான் பேசினால் அதை மிகவும் கவனமாகக் கேட்கிறது. நான் மணிக்கணக்கில் அதனுடன் பேசிக் கொண்டிருக்கிறேன். இப்போது என் மனமே லேசாகிவிட்டது போல் உணர்கிறேன். எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. தினமும் மாலையில் நான் அதனுடன் இரண்டு மணி நேரம் பேசிக் கொண்டிருக்கிறேன். எப்போது மாலை வரப் போகிறது என்று நாள் முழுவதும் காத்துக் கொண்டிருக்கிறேன்.

"பலர் இதைக் கிளி என்று ஒத்துக் கொள்ள மறுக்கிறார்கள். 'நீங்கள் வடிகட்டிய முட்டாள். காக்காயைப் போய் கிளி என்று வாங்கி வந்திருக்கிறீர்களே' என்று என் மனைவி என்னைத் திட்டுகிறாள். அது கிளியோ, காக்காயோ, அது எனக்குத் தேவையில்லை. அது என் பேச்சைக் கவனித்துக் கேட்கிறது. அது போதும் எனக்கு."

கடைக்காரர் மயங்கி விழுந்தார்.

கீழை நாடுகளில் மனநல மருத்துவம் இன்னும் பெரிய அளவில் வளரவில்லை. அதற்கு இன்னும் கொஞ்சம் காலம் ஆகும் என்று நினைக்கிறேன்.

காரணம், ஒவ்வொருவரும் அடுத்தவருக்கு மனநல மருத்துவராகச் செயல்படுகிறார்கள். பல மணி நேரம் உட்கார்ந்து பேசி தங்கள் மன பாரத்தை இறக்கி வைக்கிறார்கள். மேலை நாடுகளில் அதற்கு நேரம் இல்லை. யாருக்கும் உங்கள் பேச்சைக் கவனித்துக்

கேட்க நேரம் இல்லை. அதற்கு நீங்கள் மனநல மருத்துவரிடம் ஆயிரக்கணக்கான டாலர் அழ வேண்டும்.

ஓர் ஆச்சாரியன் மன நல மருத்துவன் அல்லன். அவன் ஒரு கண்ணாடி. அவன் உங்களை, உங்கள் உணர்வுகளை, பாரங் களை, கவலைகளை, வலிகளை, ரணங்களை, துயரங்களை, பிரச்சினைகளை அப்படியே பிரதிபலிக்கிறான். அதைப் பார்க்கும் போது உங்களுக்குக் கோபம் வருகிறது.

ஒரு சந்நியாசி எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறான், *"ஓஷோ, நீங்கள் ஆண்-பெண் வேறுபாட்டைப் பற்றிப் பேசும் போது எனக்கு அப்படியே பற்றிக் கொண்டு வருகிறது."*

உங்களுக்கு ஏன் பற்றிக் கொண்டு வர வேண்டும்? ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் வேறுபாடு இருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? ரோஜாவுக்கும் மல்லிகைக்கும் வித்தியாசங்கள் இருக்கின்றன.

இதற்கெல்லாம் யாருக்காவது பற்றிக் கொண்டு வந்தால் அவருடைய மனதிற்குள் ஏதோ தவறு இருக்கிறது என்று தான் அர்த்தம். ஏதோ உணர்வுகள் அமுக்கப்பட்டிருக்கின்றன. அவை துடித்துக் கொண்டு வெளியில் வரப் பார்க்கின்றன.

ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசமே இல்லை என்ற தவறான கருத்தை உங்கள் மனதிற்குள் தாங்கிக் கொண்டிருக்கலாம். இந்த கருத்து உங்களுக்குள் இறுகிப் போய் அதை மாற்றிக் கொள்ள முடியாமல் நீங்கள் தவிக்கலாம்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடு இல்லை என்று பலரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களிடம் போய் வேறு பாடுகள் இருக்கின்றன என்று சொன்னால் நம்மோடு சண்டைக்கு வருவார்கள். வேறுபாடுகள் இல்லை என்பதற்கு ஆயிரத்தியோரு காரணங்கள் சொல்வார்கள்.

மக்களிடையே இருக்கும் மனக்கட்டுத்திட்டங்களால் தான் உங்களுக்கு ஆண்-பெண் வேறுபாடு தெரிகிறது. அந்த மனக்கட்டுத் திட்டங்களை அகற்றிவிட்டால் ஆணுக்கும் பெண்ணுக்கும் எந்த வேறுபாடும் இருக்காது என்று அவர்கள் வாதம் செய்வார்கள்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நிச்சயம் வேறுபாடுகள் உண்டு. மனக்கட்டுத் திட்டங்கள் இந்த வேறுபாட்டைக் குறைத்துக்

காண்பிக்கலாம், இல்லை மிகைப்படுத்திக் காண்பிக்கலாம். ஆனால் அவை வேறுபாடுகளை அழித்துவிட முடியாது.

இப்போது இருபாலாருக்கும் இடையே வெளிப்படையாக உள்ள வித்தியாசங்களைக் குறைத்துக் கொண்டே வருகிறார்கள். ஆணும் பெண்ணும் ஒரே மாதிரியான ஆடைகளை அணி கிறார்கள். ஒரே மாதிரி தோற்றமளிக்கிறார்கள். மனவியல் ரீதியாக நீங்கள் ஒன்றை நினைத்துவிட்டால் அதே நினைப்பு உடலியல் ரீதியாகவும் பிரதிபலிக்கும். வித்தியாசமில்லை என்ற மனக் கட்டுத்திட்டத்தின் வெளிப்பாடு தான் இந்த ஒரே மாதிரியான உடை, ஒரே மாதிரியான தோற்றம் எல்லாம்.

கீழை நாடுகளில் ஆண்-பெண் வேறுபாடுகள் ஏற்றுக் கொள்ளப் பட்டன. அது மட்டுமில்லாமல் அவை மேலும் வலுப்படுத்தப்பட்டன. அதிலே ஒரு பெரிய புத்திசாலித்தனம் இருக்கிறது ஆணும் பெண்ணும் எவ்வளவு தூரம் விலகி இருக்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்களுக்கிடையே கவர்ச்சி அதிகமாக இருக்கும்.

ஒரே மாதிரியாக உடையணிந்து, ஒரே மாதிரி காட்சியளித்தால் கவர்ச்சி குறைந்துதான் போகும். இதுதான் இப்போது மேற்கில் நடந்து கொண்டிருக்கிறது. மனித வரலாற்றிலேயே முதன் முறையாக இனக்கவர்ச்சி குறைந்திருக்கிறது. செக்சுக்கு மவுசு குறைந்து வருகிறது. இனக்கவர்ச்சி குறைந்துவிட்டால் அடுத்து நாம் என்ன செய்வது? எங்கே போவது?

செக்ஸ் என்பது ஓர் இயற்கையான நிகழ்வு. ஆழ்நிலை சிந்தனை என்றால் என்ன என்று அது கோடி காட்டுகிறது. செக்சில் இருந்து நீங்கள் நேரடியாக தியானத்துக்குப் போகலாம். ஆனால் செக்சின் மேலேயே உங்களுக்கு நாட்டம் இல்லை என்றால் உங்களால் தியானநிலைக்குப் போகவே முடியாது. அந்த கதவுகள் நிரந்தரமாகச் சாத்தப்பட்டுவிடும்.

செக்சில் நீங்கள் உச்சகட்டத்துக்குப் போகும் போது நீங்கள் உருகி, ஒருவரோடு ஒருவர் கலந்து தான் என்பதே இல்லாத ஒரு பரமானந்தமான நிலையை அடைகிறீர்கள். உங்களையே மறக்க வைக்கும், உங்களை அடுத்தவரோடு இரண்டற கலக்க வைக்கும் அந்த செக்ஸ் அனுபவம்தான் நிரந்தரமாக இறைவனோடு கலப்பது எப்படி இருக்கும் என்று உங்களுக்குக் கோடிகாட்டும்.

செக்ஸ் என்பது அமுதத்தின் சிறு துளிகள்தான். புத்த பெருமானிடம் உள்ளது போன்ற கடலளவு அமுதத்தை அடைவது

எப்படி என்று அந்த சிறுதுளிகள் தான் உங்களுக்கு உணர்த்த வேண்டும். செக்சின் கவர்ச்சி போய்விட்டதென்றால் அந்த சிறு துளிகள் கிடைக்கவே வாய்ப்பில்லாமல் போய்விடும். அமுதத்தின் சிறு துளியைக் கூட சுவைக்காத ஒருவனால் கடலனைய அமுதத்தை நினைத்துக்கூட பார்க்க முடியாது. புத்தரின் ஞான அனுபவம் அவனுக்குக் கட்டுக்கதையாகத்தான் தோன்றும்.

என் அணுகுமுறையைப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் செக்சைத்தாண்டி முன்னேறி வர வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆனால் அந்த முன்னேற்ற வழி செக்சின் மூலமாகத்தான் இருக்க வேண்டும். அப்படித்தான் இருக்க முடியும். செக்சை வெறுத்து ஒதுக்குவதாலோ, அதன் மேல் ஈடுபாடு இல்லா மல் இருப்பதாலோ அதனைக் கடந்து மேலே செல்ல முடியாது.

கீழைநாடுகளில் ஆண்-பெண் வேறுபாட்டை அழுத்தமாக வைத்திருந்தார்கள். ஏனென்றால் செக்சில் உச்சகட்டத்தை அடையும் அந்த அனுபவத்தின் பயனைப் பற்றி அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அது உங்களுக்குள் தியானத்தின் விதைகளை விதைக்கிறது.

செக்சில் இருந்து நீங்கள் நேரடியாக தியான நிலைக்குப் பயணிக்கலாம். போகும் பாதையில் உள்ள படிக்கட்டாக மட்டுமே செக்ஸ் இருக்கும். அடைய வேண்டிய லட்சியமாக அது இருக்காது.

ஆனால் மேலை நாடுகளில் செக்ஸ் கவர்ச்சி குறைந்து வரு கிறது. அதற்குக் காரணம் அங்கே ஆண்-பெண் வேறுபாடு குறைந்து கொண்டே வருகிறது. மனவியல் ரீதியாக மட்டும் இல்லாமல் உடற்கூறு ரீதியாகவும் ஆணும் பெண்ணும் ஒரே மாதிரியாகத் தோன்றத் தொடங்கிவிட்டாரகள்.

கீழை நாடுகளில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இன்னும் உடலமைப்பில் அழுத்தமான வித்தியாசங்கள் இருக்கின்றன. மேலை நாட்டுப் பெண்களின் மார்பகங்கள் சிறிதாகிக் கொண்டே வருகின்றன.

சில ஆண்டுகளில் மார்பகங்களே இல்லாமல் போனாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. கீழை நாட்டுப் பெண்களின் மார்பகங்கள் மேலை நாட்டுப் பெண்களுடையதை விட பெரிதாக, முனைப்பாக இருக்கின்றன.

மேலை நாட்டுப் பெண்களின் பின்னழகும் மாறிக்கொண்டு வருகிறது. அவர்களின் பின்புறம் எந்த வளைவும் இல்லாமல்

நேராக, ஆண்களுடையதைப் போல ஆகிக்கொண்டு வருகிறது. வளைவுகள் விரைவாக மறைந்து கொண்டிருக்கின்றன. இந்த லட்சணத்தில் ஆண்கள் அணியும் ஆடைகளையே அவர்களும் அணிய ஆரம்பித்தால் கதை கந்தல் தான்.

சில சமயங்களில் இது எனக்கே கஷ்டமாக இருக்கிறது. ஒவ்வொரு நாள் மாலையும் நான் என்ன எழுதியிருக்கிறேன் என்று முக்தா சரி பார்க்க வேண்டியிருக்கிறது. அவள் பல முறை என்னைத் திருத்தியிருக்கிறாள். யார் ஆண் சந்நியாசி, யார் பெண் சந்நியாசி என்று சட்டென்று எனக்குத் தெரிவதில்லை. ஆண் சந்நியாசிகளை நான் ஸ்வாமி என்று அழைப்பேன். பெண்களை மா என்று அழைப்பேன்.

"ஓஷோ, இது மா இல்லை, ஸ்வாமி." "இது ஸ்வாமி இல்லை மா." என்று முக்தா என்னை பல முறை திருத்தியிருக்கிறாள்.

எனக்கு முன்னால் இருந்த எந்த புத்தனுக்கும் இந்த பிரச்சினை இருந்திருக்காது என்று நினைக்கிறேன். மனித குல வரலாற்றிலேயே முதன் முறையாக எனக்குத்தான் இந்த மாதிரி பிரச்சினைகள் ஏற்பட்டிருக்கின்றன.

பல சமயங்களில் இவை எனக்குப் புரியாத புதிர்களாகவே இருக்கின்றன. இந்த பிரச்சினைக்கு எனது உள்பார்வையோ, ஞானமோ உதவி செய்யாது. நான் முழுக்க முழுக்க முக்தாவையே நம்பியிருக்கிறேன். அவளும் கவனிக்கத் தவறிவிட்டால் அவ்வளவுதான். மா ஸ்வாமி ஆகிவிடுவாள். ஸ்வாமி மா ஆகிவிடுவார். அப்படி தினம் ஒரு முறையாவது நடந்து விடுகிறது.

ஆனால் பாருங்கள் இந்த சந்நியாசி எழுதுகிறார். *"ஓஷோ, நீங்கள் ஆண்-பெண் வேறுபாட்டைப் பற்றிப் பேசும் போது எனக்கு அப்படியே பற்றிக் கொண்டு வருகிறது."*

ஆணும் பெண்ணும் சமம் இல்லை என்று நான் சொன்னால் ஏன் உங்களுக்குப் பற்றிக் கொண்டு வரவேண்டும். அவர்கள் சமம் இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆண் உயர்ந்தவன், பெண் தாழ்ந்தவள் போன்ற அபத்தங்களை நான் ஒரு போதும் சொல்ல மாட்டேன். அவர்கள் இருவரும் சமம்தான்.

ஆனால் இயல்பில், தன்மையில் வேறுபட்டவர்கள். சமமாக இருப்பது என்பது வேறு, ஒரே மாதிரியாக இருப்பது என்பது வேறு. இரண்டையும் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். ஆண்-

பெண் சரி நிகர் சமானம் என்பதில் இரண்டாவது கருத்துக்கே இடமில்லை. ஆனால் அவர்கள் முற்றிலும் வேறு பட்டவர்கள். அதுதான் படைப்பின் அழகு. ஒன்றாக இருப்பதுதான் சமமாக இருப்பது என்று நீங்கள் நினைத்தால் உங்களுக்குப் பற்றிக் கொண்டுதான் வரும்.

நான் வெறும் கண்ணாடிதான். என்னிடம் கோபம் கொள்வதில் அர்த்தம் இல்லை. 90 சதவிகித நேரம் நீங்கள் என் மேல் கோபம் கொள்வீர்கள். காரணம், நான் உங்களுக்குள் பல ஆண்டுகளாக, பல பிறவிகளாக கட்டியிருக்கும் சீழை வெளியே கொண்டு வர முய்றசி செய்து கொண்டிருக்கிறேன்.

உங்கள் உள் காயங்களைக் கீறினால் தான் சீழ் வரும். நீங்கள் அந்தக் காயங்களை மறந்து போயிருக்கலாம். அந்த மாதிரி காயங்களே இல்லை என்று கூட நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். அந்த காயங்களைக் கீறி உங்களுக்கே நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்று காட்ட வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறது.

நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்பது தெரியாமல் உங்களால் முன்னேற்றப் பாதையில் ஓர் அங்குலம் கூட நகரமுடியாது. உங்களால் வளர முடியாது. நீங்கள் இருக்கும் இடத்தில் இருந்துதான் உங்களால் வளர முடியும்.

10 சதவிகித நேரம் எனது முன்னிலையில் நீங்கள் பரவச நிலையை எய்தலாம். நான் தான் அதற்குக் காரணம் என்று நினைக்காதீர்கள். வெளியில் இருந்து யாரும் உங்களுக்கு உண்மையைத் தர முடியாது. நான் உங்களுக்கு உற்சாகத்தைக் கொடுக்கலாம், ஊக்கத்தைக் கொடுக்கலாம். உங்களுக்குச் சவால் விடலாம். இந்த பாதைக்கு வாருங்கள் என்று அழைப்பு விடலாம்.

உங்களை மயக்கி என்னோடு பயணிக்க வைக்கலாம். ஆனால் என்னால் உங்களுக்கு உண்மையைத் தரமுடியாது. அதை நீங்கள் தான் கண்டுபிடிக்க வேண்டும். நான் உங்கள் முகத்தை மட்டுமே பிரதிபலிக்க முடியும். நான் ஒரு கண்ணாடி மட்டும்தான்.

ஓர் ஆப்பிரிக்க நாட்டின் சர்வாதிகாரி இந்தியாவில் உள்ள ஓவியக் கண்காட்சிக் கூடத்துக்கு அவர் அழைத்துச் செல்லப் பட்டார். சர்வாதிகாரிக்கு ஓவியங்களைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஆனால் சில ஓவியர்களின் பெயர்கள் மட்டும் தெரியும். அதை

வைத்துக் கொண்டு கலைக்கூடத்தின் தலைவரை அசர வைக்க வேண்டும் என்று தீர்மானித்தார் சர்வாதிகாரி.

முதலில் ஓர் ஓவியத்தின் முன் நின்றார்கள்.

"ரவி வர்மா?" என்று கேட்டார் சர்வாதிகாரி.

"இல்லை, எம்.எஃப். ஹுசேன்."

அடுத்த ஓவியத்தின் முன் நின்றார்கள்.

"ரெனாய்ர்?" என்று கேட்டார் சர்வாதிகரி.

"இல்லை, பிக்காசோ." என்று பதில் சொன்னார் அதிகாரி.

அந்த பிக்காசோ ஓவியத்தை நன்றாகப் பார்த்துக் கொண்டார் சர்வாதிகாரி. அடுத்த ஓவியத்தின் முன்னால் நின்றபோது அதில் பிகாசோ சாயல் நிறையவே தெரிந்தது அவருக்கு. இந்த முறை எப்படியாவது சரியாகச் சொல்லிவிட வேண்டும் என்று நினைத்தார் சர்வாதிகாரி.

"இது அநேகமாக பிக்காசோவாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். சரியா?"

"மன்னிக்க வேண்டும், மேன்மை தாங்கிய சர்வாதிகாரி அவர்களே. இது முகம் பார்க்கும் கண்ணாடி."

இங்கே வந்திருப்பது தங்கள் நிஜ முகங்களைக் கண்டுபிடிப் பதற்காகத்தான் என்பதை என் சந்நியாசிகள் உணர வேண்டும். ஒரு நல்ல ஆச்சாரியன் உங்களுடைய இப்போதைய முகமூடியை மட்டும் பிரதிபலிப்பதில்லை. உங்களுடைய நிஜ முகத்தையும் பிரதிபலிக்கிறான்.

ஆனால் முதலில் அவன் உங்கள் முக மூடியை மட்டும் தான் பிரதிபலிக்கிறான். அது உங்களுக்கு பயங்கர வேதனையைத் தரும். நீங்கள் அணிந்திருப்பது முகமூடி என்பதை உணரும் போது உங்களுக்கு சொல்லவொணாத் துன்பம் உண்டாகும். நீங்கள் பல முகமூடிகளை அணிந்திருக்கிறீர்கள்.

ஒன்றன் மேல் ஒன்று என்று நூற்றுக்கணக்கான முகமூடிகள் உங்கள் நிஜ முகத்தை மறைத்துக் கொண்டிருக்கின்றன. வெங்காயத்தின் தோலை உரிப்பது போல் அந்த முகமூடிகளை உரித்தெறிய வேண்டும். அது உங்களுக்கு ரணவேதனையாக

இருக்கும். ஆனால் உங்கள் நிஜ முகத்தை நீங்கள் கண்டுபிடிக்கும் வரை நான் என் பணியைத் தொடங்க முடியாது. கடவுள் உங்கள் நிஜ முகத்தை வைத்துத்தான் உங்களை அடையாளம் கண்டு கொள்வார். உங்களுடைய முகமூடிகளை வைத்து அல்ல.

இங்கிலாந்தின் கேம்ப்ரிட்ஜ் பல்கலைக் கழகம். வெயில் காலம். மூன்று மாணவர்கள் ஆற்று ஓரமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். யாருமே இல்லாத ஓர் இடத்துக்கு வந்தார்கள். அவர்களுக்கு ஆற்றில் குளிக்க வேண்டும் என்று ஆசை வந்தது. ஆனால் அதற்கான ஆடைகளை அவர்களிடம் இல்லை. சுற்றி முற்றிப் பார்த்தார்கள். யாரும் இல்லை. அணிந்திருக்கும் ஆடைகளைக் களைந்து விட்டு அப்படியே நிர்வாணமாகக் நீராடத் தீர்மானித்தார்கள்.

ஆசை தீரக் குளித்துவிட்டு தண்ணீரை விட்டு வெளியே வரும் சமயத்தில் ஒரு பெரிய மாணவிகளின் கும்பல் வருவதைப் பார்த்தார்கள். என்ன செய்வது என்று தெரியவில்லை. குளித்த மூவரில் இரண்டு பேர் கையில் கிடைத்த ஆடைகளை எடுத்து இடுப்புப் பகுதியை மறைத்துக் கொண்டார்கள். மூன்றாவது ஆளோ ஆடைகளால் தனது முகத்தை மறைத்துக் கொண்டான்.

மாணவிகள் சிரித்து விட்டு அவர்கள் வழியே சென்று விட்டார்கள். அவர்கள் போனவுடன் அந்த இருவரும் மூன்றாவது மாணவனைக் கேலியாகப் பார்த்தார்கள்.

"உன் மானத்தை மறைக்காமல் ஏன் அப்படி முட்டாள்தனமாக உன் முகத்தை மறைத்துக் கொண்டாய்?"

அவனோ கிராமத்தில் இருந்து வந்த மாணவன்.

"எங்கள் ஊர் பக்கமெல்லாம் முகத்தை வைத்துத்தான் ஆளை அடையாளம் கண்டு கொள்வார்கள்."

கடவுள் உங்களுடைய நிஜ முகத்தை மட்டுமே பார்ப்பார். அவருடைய உலகத்தில் வேறு எதுவும் செல்லுபடியாகாது. நீங்கள் வாங்கிய பட்டங்கள், ஈட்டிய செல்வம், அடைந்த புகழ், பெற்ற அதிகாரம், உங்கள் அந்தஸ்து -எதுவும் அங்கே எடுபடாது. கடவுள் உங்கள் நிஜ முகத்தை மட்டுமே பார்ப்பார். அவர் முன்னால் நீங்கள் ஆடையில்லாமல், அணிகலன் இல்லாமல், முகமூடியில் லாமல், எதுவும் இல்லாமல் நிர்வாணமாக நிற்க வேண்டும்.

உங்கள் ஆச்சாரியன் கடவுளின் பிரதிநிதி. உங்களுடைய ஆச்சாரியனின் முன்னிலையில் போலி முகமூடிகள் எதுவும் இல்லாமல் நிர்வாணமாக நிற்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

அப்போதுதான் உங்களால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள், இந்த பிறவியிலோ, இல்லை இன்னும் நூறு பிறவிகள் கழித்தோ கடவுள் முன்னால் நிர்வாணமாக நிற்க முடியும். உங்கள் ஆச்சாரியனின் முன்னால் நீங்கள் நிர்வாணமாக நிற்க முடிந்தால் நிச்சயமாக உங்களால் இறைவன் முன் நிர்வாணமாக இருக்க முடியும்.

*மூன்றாவது கேள்வி:*

*தியானம் செய்வது என்றால் என்ன?*

திருப்பியுமா? அன்றுதானே தியானத்தைப் பற்றி விரிவாகச் சொன்னேன். அப்போது நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்? அன்று நான் உரையாற்றும் போது நன்றாகத் தூங்கிவிட்டீர்கள் என்று நினைக்கிறேன். நான் தியானத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாலே இங்குள்ள பலர் தூங்கிவிடுகிறார்கள். இதில் கூத்து என்னவென்றால் அப்படித் தூங்குபவர்கள் தாங்கள் தியானத்தில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

பின்னர் நான் ஜோக் சொல்லும் போதுதான் அவர்களுடைய தூக்கம் கலைகிறது. நான் ஜோக் சொல்லும் போது மட்டும் ஒருவர் கூட தூங்குவதில்லை.

சரி இப்போது மீண்டும் தியானத்தைப் பற்றிப் பேசி உங்களை நான் தூங்க வைக்கப் போவதில்லை. இதோ உங்களுக்குப் பிடித்த சில ஜோக் ஒன்று.

மதுக்கடை. ஆண்களும் பெண்களும் வந்து போய்க் கொண் டிருந்தார்கள். பெண்களை மயக்கி, மடக்கிப் போடுவதில் வல்ல வனான ஒருவனின் பக்கத்தில் ஒரு குடிகாரன் அமர்ந்திருந்தான். எல்லாப் பெண்களையும் எப்படி இவனால் வீழ்த்த முடிகிறது என்று அந்த போதையிலும் ஆச்சரியப்பட்டான் குடிகாரன். அவனிடமே வாய்விட்டுக் கேட்டுவிட்டான்.

"அது ஒன்றும் பெரிய விஷயமில்லை. அவர்கள் அதிர்ச்சியடையும் வகையில் ஏதாவது பேச வேண்டியது. அதைக் கேட்டுக் கோபமாக வருவார்கள். அப்போது பேச்சை மாற்றி அவர்களை மடக்கிப் போட்டுவிட வேண்டியது."

"புரியவில்லையே?"

"இதோ ஒரு செய்முறை விளக்கம் தருகிறேன் பார்."

நல்ல முன்னழகு கொண்ட ஒரு பெண் அவர்களைக் கடந்து போனாள்.

"உன் மார்பு இருக்கிறதே......." என்று சொன்னான் வல்லவன்.

கோபத்தோடு அவனிடம் கேட்டாள் அந்த பெண். "என்ன சொன்னாய்?"

"ஒன்றுமில்லை, உன் பார்வையில் இருக்கும் ஆர்வம் எனக்குப் பிடித்திருக்கிறது என்று சொன்னேன். அது போகட்டும் உனக்காக ஒரு கோப்பை மது ஆர்டர் செய்யட்டுமா?"

அதில் குளிர்ந்து போன அந்தப் பெண் அங்கேயே உட்கார்ந்து பேசி, மது அருந்திவிட்டுப் போனாள். போகும் போது அவளுடைய செல்போன் நம்பரை வல்லவனிடம் கொடுத்துவிட்டுப் போனாள்.

அவள் போன உடன் குடிகாரனிடம் சொன்னான் வல்லவன்.

"இப்போது புரிகிறதா? அதோ பார் இன்னொரு பெண் வருகிறாள். அவளிடம் நான் கற்றுக் கொடுத்த பாடத்தைக் காட்டு."

அப்போது பின்னழகு மிகுந்த ஒருத்தி அந்த வழியே போனாள்.

குடிகாரன் வாய் குழறியபடி சொன்னான்.

"உன் பின்னழகில் தீயை வைக்க."

"என்ன சொன்னாய்?" என்று கோபத்துடன் செருப்பைத் தூக்கினாள் அந்த பெண்.

குடிகாரன் உடனே மிருதுவான குரலில் சொன்னான்.

"இல்லை, உன் பின்னழகு அப்படியே தீப்பிடித்து எரிந்தால் பார்க்க எவ்வளவு அழகாக இருக்கும் என்று நினைத்தேன். அது சரி, ஒரு விஸ்கி சாப்பிடேன்."

அவள் கையில் இருந்த செருப்பு அவன் கன்னத்தில் பதிந்தது.

அந்த குடிகாரனைப் போலத்தான் நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கையில் எல்லாமே தலைகீழாகவே இருக்கிறது. எல்லாமே குழப்பமாகவே இருக்கிறது. நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், அதை ஏன் செய்கிறீர்கள் என்று உங்களுக்குக் கொஞ்சம் கூடப் புரியவில்லை. இங்கே ஏன் வந்திருக்கிறீர்கள் என்று கூட உங்களுக்குத் தெரியாது.

நான் இங்கே ஏன் இருக்கிறேன், என்ன செய்து கொண்டிருக் கிறேன் என்று எனக்கு நன்றாகத் தெரியும். உங்களைத் தூக்கத் திலிருந்து எழுப்ப நான் படாத பாடு பட்டுக் கொண்டிருக்கிறேன்.

ஒன்றை மட்டும் நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் தூக்கநிலையில் இருக்கிறீர்கள் என்பதை நல்ல விழிப்புணர்வோடு புரிந்து கொள்ளுங்கள்.

சில சமயங்களில் ஒரு முக்கியமான சூத்திரத்தைவிட ஒரு சிறிய ஜோக் உங்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட்டுவிடும். சூத்திரங்கள் சில சமயம் உங்கள் தூக்கத்தை இன்னும் அதிகப் படுத்திவிடும். சூத்திரங்கள் மிகவும் கனமாக இருப்பதால் அது உங்களுக்கு விழிப்பைக் கொடுக்காமல் போய்விடலாம். ஆனால் ஒரு ஜோக் என்பது மிகவும் லேசாக இருப்பதால் அது விழிப்பைக் கொடுக்கலாம். நான் சொல்லும் ஜோக்குகளைத் தவறவிட்டுவிடக் கூடாது என்பதற்காக நீங்கள் அதை விழிப்புணர்வுடன் கேட்பீர்கள்.

ஜோக்குகளுக்கு இடையே நான் சில சமயம் ஆபத்தான விஷயங்களை உங்கள் தலையில் போடுவேன். சிறிய அவை எல்லாம் அணுகுண்டுகள். ஜோக்குகளுக்கு நடுவில் அவை உங்கள் மேல் வந்து விழும். நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை.

நான் சொல்லும் ஜோக்கை சீரியசாக எடுத்துக்கொள்ளுங்கள். அது போதும். மிச்சத்தை நான் பார்த்துக் கொள்கிறேன். ஒரு ஜோக்குக்கும் அடுத்த ஜோக்குக்கும் இடைப்பட்ட அந்த நேரத்தில் நீங்கள் அதீத விழிப்புணர்வோடு இருக்கும் போது நான் சத்தமில் லாமல் உங்கள் மண்டைக்குள் ஒரு குண்டை வைத்துவிடுவேன்.

குறிப்பிட்ட நேரத்தில் அது உங்களுக்குள் வெடிக்கும். வெடிப்பது கொஞ்சம் தாமதமாகலாமே தவிர, எந்த குண்டும் வெடிக்காமல் போகாது. குண்டு வெடித்தவுடன்....... நீங்கள் தொலைந்தீர்கள்....

○

## 8. இங்கு, இப்போது...

*கேள்வி:*

*ஓஷோ, நான் ஒரு நீதிபதி. நான் நிர்வாண நிலையை அடைய வாயப்ப்பு இருக்கிறதா? என்னால் அடைய முடியாதென்று நீங்கள் நினைத்தால் அதற்காக, நான் தொழிலை மாற்றிக் கொள்ளவும் சித்தமாக இருக்கிறேன். எனக்கு ஹோமியோபதி தெரியும். அதனால் நான் டாக்டராகவும் தொழில் செய்யலாம்.*

**இ**து வரை ஒரு நீதிபதி நிர்வாண நிலை அடைந்ததாக வரலாறே இல்லை. உங்களுக்காக நேற்று முழுவதும் ஆகாஷிக் ஆவணங்களைத் தேடினேன். அவற்றில் இந்த ஜோக்கை மட்டும்தான் கண்டேன்.

நரகத்தின் அதிபதியான சாத்தானும், சொர்க்க லோகத்தின் அதிபதியான புனித பீட்டரும் ஒரு கால்பந்தாட்டப் போட்டிக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். சொர்க்கத்துக்கும், நரகத்துக்கும் இடையேதான் போட்டி.

ஏற்பாடுகள் முடிந்து போட்டி தொடங்கும் சமயம் புனித பீட்டர் சாத்தானிடம் சொன்னார்.

“இங்கே பார், உன்னை ஏமாற்ற எனக்கு மனம் இல்லை. உன் கட்சி வெல்வதற்கு வாய்ப்பேயில்லை. எல்லாக் கால்பந்தாட்ட வீரர்களும் எளிமையானவர்கள், நேர்மையானவர்கள்.

“அதனால் அவர்கள் இறந்தவுடன் இங்கே சொர்க்கத்துக்கு வந்துவிட்டார்கள். அதனால் இப்போது எங்களிடம் உலகின் தலை சிறந்த கால்பந்தாட்ட வீரர்கள் அனைவரும் இருக்கிறார்கள். நீ ஜெயிப்பது என்பது நடக்காத காரியம்.”

“பீட்டரே, உங்கள் நேர்மையை நான் பாராட்டுகிறேன். ஆனால் போட்டி நடக்கட்டும். எங்களைக் காத்துக் கொள்வது எப்படி என்று எங்களுக்குத் தெரியும்.”

புனித பீட்டர் சென்றவுடன் சாத்தானின் பி.ஏ. அதன் காதில் கிசுகிசுத்தார். “ஐயா, புனித பீட்டர் சொல்வது சரிதான். நாம் ஜெயிக்க வாய்ப்பேயில்லை.”

“போடா முட்டாளே, வீரர்கள் வேண்டுமானால் அவர்கள் பக்கம் இருக்கலாம். நடுவர்களும், நீதிபதிகளும் எங்கே இருக்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். எல்லாரும் நமது எண்ணெய்க் கொப்பரையில் கொதித்துக் கொண்டிருக்கிறாரக்ள். அவர்களைத் தயார்படுத்து. “

நீங்கள் உங்கள் தொழிலை மாற்றிக் கொள்வதால் ஒன்றும் பயனில்லை. அதற்கும் ஆகாஷிக் ஆவணங்களில் ஒரு செய்தி இருக்கிறது.

ஒரு டாக்டர் இறந்தவுடன் சொர்க்கத்தின் கதவுகளைத் தட்டினார். புனித பீட்டர் அவரைப் பார்த்தார், பூலோகத்தில் அவரது தொழில் என்ன என்று தெரிந்து கொண்டார். பின் கனிவாகச் சொன்னார். “மகனே, நீ தவறான கதவைத் தட்டுகிறாய். தயவு செய்து நரகத்துக்குப் போய்விடு. அங்கே உனக்காக ஓர் இடம் காத்திருக்கிறது.”

“இல்லை, முதலில் அங்கேதான் தட்டினேன். அவர்கள் தான் ‘அடுத்த கதவைத் தட்டு.’ என்று சொன்னார்கள். அதனால் தான் உங்கள் கதவைத் தட்டினேன்.”

“இல்லை மகனே, அவர்கள் அடுத்த கதவு என்று சொன்னது அவர்களின் பின் பக்கக் கதவை. உன்னைப் போல் மரணத்தின் வியாபாரிகளுக்கு அவர்கள் பிரத்தியேக வழி அமைத்திருக்கிறார்கள். நீ சாமானியர்கள் செல்லும் பாதையில் நரகத்துக்குப் போக வேண்டாம். சிறப்பு வழியில் சீக்கிரமாகப் போய்விடலாம்.”

நீங்கள் டாக்டராக உங்கள் தொழிலை மாற்றிக் கொள்வதால் எந்தப் பயனும் இல்லை. அது சரி, நீங்கள் சந்நியாசியானால் என்ன? அதன் பின் நிர்வாணத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நிர்வாண நிலை உங்களுக்கு உடனே கைகூடிவிடும். இங்கே நாளை என்ற கேள்விக்கே இடம் இல்லை.

என் சந்நியாசிகளைப் பாருங்கள். யாரும் நிர்வாண நிலை அடைவதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஏனென்றால் அவர்கள் ஏற்கனவே அந்த நிலையில் தான் இருக்கிறார்கள். சந்நியாசியாக இருப்பதுதான் உண்மையான நிர்வாணநிலை.

ஒரு சந்நியாசி நிர்வாண நிலையை அடைய வேண்டும் என்ற அவசியம் இல்லை. நிர்வாண நிலை அவனை அடைகிறது. அவன் இருக்கும் இடத்தில் நிர்வாண நிலையும் இருக்கிறது. அவனை நரகத்தில் தூக்கி எறியுங்கள். அங்கேயும் அவன் நிர்வாண நிலையிலேயே இருப்பான். உங்களுடைய நிர்வாண நிலைக்கு குறிப்பிட்ட வெளிப்புற சூழ்நிலை தேவைப்பட்டால் அது நிர்வாண நிலையே இல்லை.

வருவதை நிபந்தனையின்றி எதிர்கொள்வதுதான் நிர்வாணநிலை. நீங்கள் சொர்க்கத்தில் இருந்தாலும் சரி, நரகத்தில் இருந்தாலும் சரி, உங்கள் வாழ்க்கையை முழுமையாக ஏற்றுக் கொண்டால், அதனை மகிழ்ச்சியுடன், நன்றியுணர்வுடன் ஏற்றுக் கொண்டால் நிர்வாண நிலை ஒரு பிரச்சினையே இல்லை.

உங்கள் வாழ்க்கையை நீங்கள் ஏற்றுக் கொள்ள மறுக்கும் போதுதான் பிரச்சினையே தொடங்குகிறது. உங்கள் வாழ்க்கையை மறுக்கும் போது, வெறுத்து ஒதுக்கும் போது, நீங்கள் வேறு ஒரு வாழ்க்கையைத் தேடத் தொடங்குகிறீர்கள். அந்த வாழ்க்கை ஏற்கனவே இருந்த வாழ்க்கையை விட நன்றாக இருக்குமா இருக்காதா என்று கவலைப்படத் தொடங்குகிறீர்கள்.

அது ஏற்கனவே இருந்த வாழ்க்கையை விட பலமடங்கு மோசமாக இருக்கும் வாய்ப்பு இருக்கிறது. அதுதான் நரகம். இப்போது இருப்பதைவிட வாழ்க்கை இன்னும் மோசமாகிவிடுமோ என்ற அச்சம் தான் அசல் நரகம். இந்த வாழ்க்கையை விட இன்னும் சிறந்த வாழ்க்கை வேண்டும் என்ற பேராசை தான் நிர்வாண நிலை.

ஆனால் உங்களுக்கு இருக்கும் வாழ்க்கையை விட வேறு வாழ்க்கை கிடையாது. சொர்க்கம், நரகம் இவை எல்லாம் வேலையில்லாத முட்டாள்களின் அகராதியில் மட்டுமே புழக்கத்தில் இருக்கும் வார்த்தைகள்.

நீங்கள் இந்தியனாக இருப்பதால் வானத்துக்கு மேலே சொர்க்கம் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். பூமிக்குக்

கீழே நரகம் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். மேலே, கீழே என்று ஒன்றும் இல்லை. பிரபஞ்ச இருப்புநிலை வரையறையற்றது. எல்லைகள் இல்லாதது. அதற்கு மேல், கீழ் என்று எப்படி இருக்க முடியும்?

நாம் இப்போது புத்தர் அரங்கில் அமர்ந்திருக்கிறோம். இதற்கு மேல் ஏதாவது இருக்க வாய்ப்பு இருக்கிறதா? இருக்கிறது. இப்போது மேலே பறந்து கொண்டிருக்கும் விமானம். நீங்கள் இப் போது மேற்கூரைக்குக் கீழே உட்கார்ந்திருக்கிறீர்கள். உங்களுக்குக் கீழே தரை இருக்கிறது. தரைக்குக் கீழே பூமி இருக்கிறது.

ஆனால் பிரபஞ்ச இருப்புநிலைக்கு மேற்கூரை கிடையாது. கீழே ஒன்றும் கிடையாது எல்லாட் பக்கங்களிலும் அது எல்லை யில்லாமல் விரிந்து கிடக்கிறது.

இந்தியாவின் புனித நூல்கள் நரகத்தைப் பற்றிப்பேசும் போது அது அமெரிக்காவையே குறிக்கும். இப்போது இந்தியாவில் நீங்கள் இருக்கும் இடத்தில் தோண்ட ஆரம்பித்தால், அப்படியே தோண்டிக் கொண்டே போனால் நீங்கள் அமெரிக்காவில்தான் வெளியே வருவீர்கள்.

ஏனென்றால் உலகம் உருண்டையாக இருக்கிறது. இந்தியாவின் பாதாள லோகம், நரகம் அமெரிக்காதான். அதே போல் அமெரிக்வாவின் பாதாள லோகம் இந்தியா தான். அமெரிக்கர்கள் அவர்கள் இருக்கும் இடத்தில் குழி தோண்ட ஆரம்பித்தால் அது இந்தியாவில் வந்துதான் முடியும்.

அவர்கள் நரகத்தில் இருக்கிறார்கள் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் நரகத்தில் இருக்கிறீர்கள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். என் சந்நியாசிகள் மட்டும் நடக்கும் கூத்தைப் பார்த்து வாய் விட்டுச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள். யார் மேலே இருக்கிறார்கள்? யார் கீழே இருக்கிறார்கள்?

சொர்க்கம், நரகம் போன்ற கோட்பாடுகள் பூகோளம் சம்பந்தப் பட்டவை அல்ல. அவை காலந்தோடு தொடர்புடையவையும் அல்ல.

*நாளைக்கு நீ நரகம் போகப்போகிறாய். இறந்த பின்னால் உனக்குச் சொர்க்கம் கிடைக்கும். நாளையே நீ சொர்க்கத்துக்குப் போகலாம் போன்ற* கூற்றுக்கள் அபத்தமானவை. அர்த்தமற்றவை.

நாளை, இறந்த பின், போன்ற கூற்றுகளில் சொர்க்கம், நரகத்தை விளக்க முடியாது. ஏனென்றால் அவற்றை இடம், காலத்தால் ஒருக்காலும் விளக்க முடியாது. அவை புரிந்து கொள்ளுதல் பற்றியவை. ஆழ்நிலை சிந்தனை பற்றியவை. அதன் மூலம் கிடைக்கும் அபரிமிதமான அமைதியைப் பற்றியவை.

இந்த இடத்தைத் தவிர வேறு எந்த இடமும் இல்லை. இந்த காலத்தைத் தவிர வேறு எந்த காலமும் உண்மை இல்லை. பிரபஞ்ச இருப்புநிலையை இந்த இரண்டே வார்த்தைகள் விளக்கிவிடும்: 'இங்கு', 'இப்போது'

சுவாமி ராமதீர்த்தர் ஓர் அழகான கதை சொல்வார்.

ஓர் ஊரில் ஒரு பெரிய தத்துவ மேதை இருந்தார். அவர் பயங்கரமான நாத்திகர். கடவுள் இல்லவே இல்லை என்று வாதிடுவதே அவரது முழு நேர வேலை. கடவுளைப் பற்றிய எல்லாவற்றையும் அழித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு வாதம் செய்து கொண்டிருந்தார். அவரிடம் வாதம் புரிய யார் வந்தாலும் அவர்களை எப்படியாவது தன் கருத்தை ஏற்றுக் கொள்ள வைத்துவிடுவார்.

அவருடைய வீட்டின் வரவேற்பறையில் கொட்டை எழுத்துகளில் "கடவுள் எங்கும் இல்லை" என்று பொருள்பட God Is Nowhere என்று எழுதி வைத்திருந்தார். அவர் வீட்டிற்கு யார் வந்தாலும் அந்த வாசகத்தைக் கவனிக்க தவற மாட்டார்கள்.

"என்ன இவ்வளவு பெரிதாக எழுதி வைத்திருக்கிறீர்கள்? நீங்கள் என்ன நாத்திகரா?" என்று வந்தவர் கேட்பார். உடனே இவர் அதையே பிடித்துக் கொண்டு வாதம் செய்ய ஆரம்பிப்பார். இவரது அபரிமிதமான வாதத்திறமையால் வந்தவரை தன் கூற்றை ஏற்றுக்கொள்ள வைத்துவிடுவார்.

வாதம் புரிவது என்று வந்துவிட்டால் எப்போதுமே நாத்திகர்களின் கை ஓங்கியே இருக்கும். நாத்திகர்களிடம் இருக்கும் வாதத்திறமை பொதுவாக ஆத்திகர்களிடம் இருக்காது. ஆத்திகர்கள் நம்புபவர்கள்.

அவர்கள் யார் சொல்வதையும் எளிதில் ஏற்றுக் கொள்ளும் தன்மை உடையவர்கள். நாத்திகர்களோ வாதமே வாழ்க்கை என்று வாழ்பவர்கள். அவர்களுக்கு தர்க்க சாஸ்திரம் அத்துப்படி. தர்க்கத்தை வைத்து ஒன்றை மறுப்பது என்பது மிகவும் எளிது.

எதையாவது மறுத்துப் பேச வேண்டுமென்றால் தர்க்கத்தை விட வலுவான ஆயுதம் வேறு ஒன்றும் இல்லை. தர்க்கம் தெரிந்தவனுக்கு எதையும் ஒப்புக் கொள்ளவே தெரியாது. எல்லாவற்றையும் மறுத்துப் பேசுவதே அவன் குணம். அதுவே அவன் பலம்.

சில வருடங்கள் கழித்து அந்த தத்துவ மேதைக்கு ஒரு குழந்தை பிறந்தது. அந்த குழந்தை அப்போது தான் மொழியைக் கற்றுக் கொள்ள ஆரம்பித்திருந்தது. வரவேற்பறையில் கொட்டை எழுத்துகளில் எழுதப்பட்டிருந்த அந்த வாக்கியத்தை அது படிக்க முயற்சி செய்தது. அந்தக் குழந்தையால் nowhere என்ற வார்த்தையை ஒரே மூச்சில் படிக்க முடியவில்லை. அதுவரை அந்தக் குழந்தை அந்த வார்த்தையைப் பார்த்ததே இல்லை.

ஒரு நாள் அந்தக் குழந்தை God is nowhere என்ற வாக்கியத்தைப் படிக்க முயற்சி செய்து கொண்டிருந்தது. nowhere என்ற வார்த்தை பெரிதாக இருந்ததால் அதனால் அதை உச்சரிக்க முடியவில்லை. ஒரு குழந்தைக்கேயுரிய மனோபாவத்துடன் அந்த வார்த்தையை அது இரண்டாக உடைத்தது.

இப்போது அந்தக் குழந்தை வாக்கியத்தை இப்படிப் படித்தது. "God is now here." அதாவது 'கடவுள் இப்போது இங்கு இருக்கிறார்' என்ற பொருள் வரும் படியாக அந்தக் குழந்தை படித்தது. அந்த குழந்தை படித்ததை பக்கத்தில் இருந்த தத்துவ மேதை கேட்டார். அவருள்ளே ஒரு சிலிர்ப்பு எழுந்து அடங்கியது. அந்த சமயத்தில் அந்த மேதை ஓர் அற்புதமான அமைதி நிலையில் இருந்திருக்க வேண்டும். இப்போது, இங்கே பற்றி ஆழமாகச் சிந்திக்க முற்பட்டார் மேதை.

'இப்போது என்றால் என்ன? இங்கே என்றால் என்ன? இந்த வார்த்தைகளின் உண்மையான பொருள் என்ன?' அவர் இதுவரை 'இப்போது' என்பதையும் 'இங்கே' என்பதையும் முழுமையாக அனுபவித்ததேயில்லை.

இன்று உலகில் உள்ள கோடிக்கணக்கான மக்களின் பிரச்சினையும் அதுதான். அவர்கள் 'நேற்று' என்பதைப் பற்றி சிந்திக்கிறார்கள். 'நாளை' என்பதைப் பற்றிக் கவலைப் படுகிறார்கள். ஆனால் இப்போது என்பதை அவர்கள் அனுபவிப்பதேயில்லை. உலகில் உள்ள எல்லா இடங்களையும் பற்றி யோசிக்கிறார்கள். ஆனால் அவர்கள் இந்த சமயத்தில் இருக்கும் இடத்தைப் பற்றி

அவர்கள் யோசிப்பதும் இல்லை. அதனை அனுபவிப்பதும் இல்லை.

அந்த சிறு குழந்தை வாழ்க்கையின் பெரிய பொக்கிஷத்தைப் பூட்டி வைத்திருந்த அறையின் கதவை அகஸ்மாத்தாகத் திறந்து விட்டது. அந்த தத்துவ மேதை கடவுளை மறந்து விட்டார். கடவுள் இல்லை என்று வாதம் செய்வதை மறந்துவிட்டார். அவரது கவனமெல்லாம் இங்கு, இப்போது என்பதிலேயே இருந்தது.

'இங்கு' 'இப்போது' என்பனவற்றைத் தெரிந்து கொள்ள ஒரே வழிதான் இருக்கிறது. அதுதான் தியானம். அல்லது ஆழ்நிலை சிந்தனை. ஆழ்நிலை சிந்தனை கைகூட வேண்டுமென்றால் மனதின் எண்ண ஓட்டங்கள் பரிபூரணமாக நின்றுவிட வேண்டும். மனம் எப்போதும் ஓடிக் கொண்டேயிருக்கிறது. ஒன்று அது பின்னோக்கி ஓடுகிறது - நேற்றைய நினைவுகளை நோக்கி, இறந்த கால நினைவுகளை நோக்கி ஓடுகிறது. இல்லாவிட்டால் முன்னோக்கி ஓடுகிறது -

நாளைய கனவுகளைப் நோக்கி, வருங்காலத்தின் நம்பிக்கை, கவலைகளை நோக்கி ஓடுகிறது. மனம் எப்போதும் ஓர் இடத்தில் நிற்பதில்லை. ஏனென்றால் அப்படி மனம் ஓர் இடத்தில் நின்று விட்டால் அது மனத்தின் மரணத்தைத்தான் குறிக்கும். அதனால் தான் மனம் நிகழ்காலத்தைப் பார்த்து பயத்தால் நடுங்குகிறது. இறந்த காலத்திலோ அல்லது வருங்காலத்திலோதான் தழைத்து மனம் வளரமுடியும்.

தான் தொடர்ந்து செய்த தியானத்தின் மூலம் இந்த உண்மைக்ளை எல்லாம் கண்கூடாகப் பார்த்தார் அந்த தத்துவ மேதை. பல வருடங்களுக்குப் பின் ஒரு நாள் அவரால் முழுமையாக 'இங்கு' 'இப்போது' இருக்க முடிந்தது. அன்று தான் அவர் கடவுளைக் கண்டார். இறைநிலையை முழுவதுமாக அனுபவித்தார் என்று கதையை முடிக்கிறார் ஸ்வாமி ராமதீர்த்தர்.

நான் உங்களுக்குச் சொல்லும் ஆலோசனை இதுதான். நிர்வாண நிலையைப் பற்றி மறந்துவிடுங்கள். நிர்வாண நிலை என்பது இந்த வாழ்க்கைக்கு பிறகு நீங்கள் அடையப் போகும் நிலை. அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.

இந்த நொடியைப் பற்றி உங்களுடைய 'இப்பொழுதை'ப் பற்றி மட்டுமே யோசியுங்கள். அதைப் பற்றி யோசிக்கக்கூட முடியாது

உங்களுக்கு. ஏனென்றால் நீங்கள் யோசிக்கத் தொடங்கும் போது அது கடந்த காலம் ஆகிவிடும்.

நிகழ்காலத்தில் வாழுங்கள். நீங்கள் நிகழ்காலத்தில் நுழைவது தான் நிர்வாணநிலை. அதுதான் மகாநிர்வாணம். அதை நீங்கள் கண்டுபிடித்துவிட்டால் பின் அதை உங்களிடமிருந்து யாராலும் பறிக்க முடியாது.

அதன் பின் நீங்கள் நீதிபதியாக இருக்கலாம், டாக்டராக இருக்கலாம், செருப்பு தைப்பவராக இருக்கலாம். அது பிரச்சினை யில்லை.

சீன ஞானி லா ட்சூ தனது சீடர்களை ஒரு கசாப்புக் கடைக்காரனிடம் அனுப்புவார்.

''அவனிடம் தான் நீங்கள் உண்மையான தியானத்தைப் பற்றிக் கற்றுக் கொள்ள முடியும்.'' என்று அடிக்கடி சொல்வார். சீடர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. போயும் போயும் ஒரு கசாப்புக் கடைக் காரனிடம் தியானம் கற்றுக் கொள்ளவா நாம் நமது குடும்பத்தை எல்லாம் விட்டு விட்டு வந்திருக்கிறோம் என்று நொந்து கொள்வார்கள்.

அவர்களது மனங்களை அறிந்த லா ட்சூ புன்னகையுடன் சொல்வார்.

“நீங்கள் போய்ப் பாருங்கள். ஒரு ஞானி எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறான் அவன். அவன் எப்போதும் 'இங்கு-இப்போது' என்ற நிலையில் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் என்ன தொழில் செய்கிறான் என்பது முக்கியமில்லை. அவன் செய்பவன் அல்லன். அவன் வெறும் சாட்சிதான். அவன் தொழில் என்பது அவனுக்கு உலக நாடகத்தில் கொடுக்கப்பட்ட ஒரு பாகம். அதைத் திறம்பட நடித்துக் கொண்டிருக்கிறான் அவன்.''

அந்த கசாப்புக்கடைக்காரனும் சாதாரணமானவன் இல்லை. சீனச் சக்கரவர்த்தியே அவனது திறமையைப் பார்த்து அவனைத் தன்னிடம் வேலைக்கு அமர்த்திக் கொண்டார்.

ஒரு நாள் சீனச் சக்கரவர்த்தி லா ட்சூவிடம் வந்தார்.

“குருவே, நீங்கள் அடிக்கடி 'இங்கு-இப்போது' என்பது பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள். 'இங்கு-இப்போது' நிலையில்

இருப்பது என்றால் என்ன? அதைக் கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்களேன்.''

“மன்னா, அதைச் சொல்ல நான் தேவையில்லை. அதை நீ உன் கசாப்புக்காரனிடமே கற்றுக் கொள்ளலாம். சமயத்தில் நான் என் சீடர்களையே அவனிடம் தான் அனுப்புகிறேன்.'' மன்னனுக்கு அதிர்ச்சி.

“எனக்குத் தெரியாத ஒன்று ஆடு மாடு வெட்டுபவனுக்குத் தெரியுமா? அபத்தமாக இருக்கிறது, குருவே.''

“பேச்சு வேண்டாம். அவன் வேலை செய்வதைச் சிறிது நேரம் கவனித்துப் பார். உன் மனதில் உள்ள சந்தேகங்கள் எல்லாம் ஓடிவிடும்.''

மறுநாள் அதிகாலையிலேயே மன்னன் கசாப்புக்காரன் முன் அமர்ந்து அவன் செய்வதை உன்னிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தான். அப்படி பார்ப்பதே ஒரு பெரிய அனுபவமாக இருந்தது மன்னனுக்கு. அவன் வைத்திருந்த கத்தி மிகவும் கூர்மையாக இருந்தது. புத்தம் புது கத்தியைப் போல் பளபளத்துக் கொண் டிருந்தது அது. இன்றுதான் அந்த புதுக் கத்தியை அவன் பயன்படுத்துகிறான் என்று நினைத்தான் மன்னவன்.

மன்னன் என்பதால் அவனுக்கு இயற்கையிலேயே ஆயுதங்களின் மேல் ஆர்வம் அதிகமாக இருந்தது.

“கத்தி அருமையாக இருக்கிறது. எங்கிருந்து வாங்கினாய்?''

“இதை நான் வாங்கவில்லை மன்னா. இது என் தந்தையார் பயன்படுத்தியது. அவர் இறந்து போய் நாற்பது வருடம் ஆகிவிட்டன. இந்த நாற்பது வருடங்களாக இந்தக் கத்தியால்தான் நான் மாமிசத்தை அறுத்துக் கொண்டிருக்கிறேன்.''

“நாற்பது வருடங்களா? நம்பவே முடியவில்லை. நேற்று வாங்கியதைப் போல் புத்தம் புதிதாக இருக்கிறதே!''

“மன்னா, இதில் ஒரு பெரிய கலையே அடங்கியிருக்கிறது. நீங்கள் எதையும் கவனத்துடன், அதீத விழிப்புணர்வுடன், தன்னுணர் வுடன் செய்யும் போது உங்கள் ஆயுதங்களில் துருப்பிடிக்காது. உங்கள் ஆயுதங்களில் மட்டும் அல்ல உங்கள் மனதிலும் துருப் பிடிக்காது. பளபளப்பும் போகாது. நான் புத்துணர்வுடன இருக்கிறேன்.

"அதே போல் எனது கத்தியும் அதே புத்துணர்வுடன் இருக்கிறது. நானும் இளமையாக இருக்கிறேன். என் கத்திக்கும் இளமை போகவில்லை. என்னைப் பொறுத்த மட்டில் மாமிசத்தை வெட்டுவதற்கும், தியானம் செய்வதற்கும் பெரிய வேறுபாடு ஒன்றும் இல்லை. இதையும் நான் செய்வதாக நினைக்கவில்லை. எனக்குத் தரப்பட்ட பாகத்தை நான் நடித்துக் கொண்டிருக்கிறேன். அவ்வளவு தான்.

இதே போல் ஒரு ஜென் துறவி திருடனாக இருந்து ஞானியான ஒரு ஜென் துறவியைப் பற்றிச் சொல்வார்.

நீதிபதியாக இருப்பது பற்றியோ, டாக்டராக இருப்பது பற்றியோ கவலைப்படாதீர்கள். ஒரு திருடனுக்கே ஞானம் கிடைக்கும் போது உங்களுக்குக் கிடைக்காமல் போய்விடுமா என்ன?

நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது முக்கியமல்ல. நீங்கள் அதை எப்படிச் செய்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். கேள்வி செயலைப் பற்றியதல்ல. செயல் செய்யும் போது உங்களிடம் இருக்கும் விழிப்பணர்வு பற்றியது.

இது ஒரு புகழ் பெற்ற ஜென் கதை. எனக்கு மிகவும் பிடித்த கதை. இதைக் கவனியுங்கள்.

அவன் சாதாரணக் கள்ளன் இல்லை அவன் திருடர்களில் தலை சிறந்தவன். அந்த நாட்டு மன்னனுக்கே அவனிடம் மரியாதை இருந்தது. ஏனென்றால் அவன் அதுவரை யாரிடமும் பிடிபட்டதேயில்லை. அந்த நாட்டிலேயே அவன் தான் பெரிய திருடன் என்று எல்லாருக்கும் தெரியும்.

அவன் புகழ் நாலாபக்கமும் பரவியிருந்தது. அவனால் திருடப்படுவதையே கௌரவமாக நினைத்தார்கள் மக்கள்.

"நேற்று எங்கள் வீட்டுக்கு பலே திருடன் வந்தானாக்கும்" என்று பெருமையடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள். தங்கள் பொருள்கள் திருடு போவதைப் பற்றிக் கூட கவலைப்படாமல் அந்தத் திருடனின் கைவண்ணத்தைப் பாராட்டுவதிலேயே மக்கள் குறியாக இருந்தார்கள்.

அது மட்டுமில்லை. அந்த பலே திருடன் ஒரு வீட்டுக்கு வருகை புரிந்தான் என்றால் அவன் அந்த ஊரிலேயே பெரிய பணக்காரன் என்று பொருள். சாதாரணமானவர்கள் வீட்டுக்கு அவன் போவதில்லை. மன்னர்கள், அமைச்சர்கள், பெரிய

செல்வந்தர்கள் வீட்டுக்கு மட்டும் தான் அவன் போவான். ஆகவே பலே திருடனின் வருகை அந்தஸ்தின் அடையாளமாகப் போய்விட்டது.

அந்த திருடனுக்கு வயதாகிவிட்டது. அவனது மகன் அவனைக் கேட்டான். "அப்பா, உங்களுக்கோ வயதாகிவிட்டது. இன்னும் எத்தனை நாளைக்குத்தான் நீங்கள் கஷ்டப்படப் போகிறீர்கள்? எனக்கு தொழிலைக் கற்றுக் கொடுங்கள். நீங்கள் ஓய்வெடுங்கள்."

"அதைத்தானடா யோசித்துக் கொண்டிருக்கிறேன். மகனே, திருடுவது கலையில்லை. அது ஓர் உத்தி. அதை நான் உனக்குச் சொல்லித் தர முடியாது. ஆனால் நீ புத்திசாலியாக இருந்தால் நான் சொல்லாமலேயே உன்னால் அதை என்னிடம் இருந்து கற்றுக் கொள்ள முடியும்."

ஆன்மிகமும் அப்படித்தான். அதை சொல்லித்தர முடியாது. கொஞ்சம் அறிவும் விவேகமும் இருந்தால் அடுத்தவரிடம் இருந்து 'பிடித்துக்' கொள்ளலாம். அதுதான் ஆசிரியனுக்கும், ஆச்சாரியனுக்கும் உள்ள வேறுபாடு. ஆசிரியன் சொல்லித்தருவான். ஆனால் ஆச்சாரியனோ சீடன் தன்னிடம் இருந்து அதைப் 'பிடித்துக்' கொள்ள வழிவகை செய்வான். ஆச்சாரியனுடைய வார்த்தைகளை மட்டும் கேட்டுக் கொண்டிருந்தால் போதாது. அவரிடம் இருக்கும் ஆன்மிக மதுவை ருசிக்கத் தெரிந்திருக்க வேண்டும்.

பலே திருடன் தனது மகனிடம் சொன்னதை நினைவில் கொள்ளுங்கள்.

"திருடுதல் என்பது ஓர் உத்தி. நான் உனக்கு உதவத் தயாராக இருக்கிறேன். ஆனால் நீதான் அதைப் 'பிடித்துக்' கொள்ள வேண்டும். நீ அதைப் பிடித்துக் கொள்ள என்னாலானதைச் செய்கிறேன். திருடுவது, கவிதை எழுதுவது இதெல்லாம் அடுத்தவர் சொல்லிக் கொடுத்து வராது. தானாக வரவேண்டும். உனக்கு அது வருமா வராதா என்று இப்போது சொல்ல முடியாது. நீ முயற்சி செய்து பார். இன்று இரவு தொழிலுக்குப் போகும் போது நீ என்னுடன் வா."

அன்று தந்தையுடன் தொழிலுக்குச் சென்றான் மகன். மகன் இளைஞன். நல்ல திடகாத்திரமாக இருந்தான். தந்தைக்கோ எழுபது வயதுக்கு மேல் ஆகியிருந்தது.

அவர்கள் இருவரும் ஒரு பெரிய செல்வந்தரின் வீட்டுக்குப் போனார்கள். பலே திருடன் சுவரை உடைத்தான். அவன் உடைக்கும் அழகை உடல் நடுங்க வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் மகன். அது நல்ல குளிர் காலம் என்றாலும் மகனுக்கு வியர்த்துக் கொட்டியது. அவனுக்கு பயமாக இருந்தது. அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். யாராவது அவர்களைப் பார்த்துவிட்டால்...

“அப்பாவின் தொழில் நேர்த்தியே நேர்த்தி! ஏதோ தனது சொந்த வீட்டுச் சுவரை உடைப்பது போல் பதற்றப்படாமல் அமைதியாக உடைத்துக் கொண்டிருக்கிறாரே! அவருக்குக் கொஞ்சம் கூட பயம் இருக்காதா?”

தந்தை ஒரு முறை கூட அக்கம் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. சுவரை உடைத்து முடிந்தவுடன் அனாயாசமாக வீட்டுக்குள் நுழைந்தான் தந்தை. மகனைப் பின் தொடர்ந்து வருமாறு சைகை காட்டினான்.

மகன் இப்போது தலையோடு கால் நடுங்கிக் கொண்டிருந்தான். குளித்துவிட்டு வந்தது போல் வியர்த்துக் கொட்டியது மகனுக்கு. நல்ல வெயில் காலத்தில் கூட, பகல் வேளையில் இந்த அளவு அவனுக்கு வியர்த்ததில்லை. உறைய வைக்கும் அந்த குளிரில் அவ்வளவு வியர்த்தது என்றால், எந்த அளவுக்கு அவன் பயப்பட்டிருக்க வேண்டும்?

ஆனால் தந்தையோ இருட்டில் அந்த வீட்டில் வசிப்பவனைப் போல் உள்ளே நடமாடிக் கொண்டிருந்தான். எதன் மேலும் தடுமாறி விழவில்லை. எந்த சத்தமும் எழுப்பவில்லை.

வீட்டிற்குள்ளே இருந்த ஓர் அறைக்குச் சென்றார்கள் அவர்கள். அங்கே இருந்த ஆளுயர அலமாரிக்குள் தன் மகனை நுழையுமாறு சொன்னான். மகன் உள்ளே நுழைந்தான். அடுத்து மகன் கற்பனையிலும் எதிர்பார்க்காத ஒரு செயலைச் செய்தான் தந்தை.

அந்த அலமாரியை வெளியில் இருந்து பூட்டினான். உள்ளே மகன் இருந்தான். “திருடன் திருடன்” என்று பெரிதாகக் கத்தியபடி வீட்டை விட்டு ஓடிவிட்டான் தந்தை.

வீட்டில் இருந்தவர்கள் எழுந்துவிட்டார்கள். அண்டை வீட்டுக்காரர்கள் எல்லாருமே எழுந்துவிட்டார்கள். எல்லா விளக்குகளையும் ஏற்றித் திருடனை வீடு முழுவதும் தேட ஆரம்பித்தார்கள்.

மகனின் நிலையைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

“அவ்வளவுதான். தொலைந்தோம். என் அப்பன் ஒரு பைத்தியக்காரன். தொழில் கற்றுக் கொடு என்று நான் அவரைக் கேட்டிருக்கக்கூடாது. இது எனக்கான தொழிலே அல்ல. அந்த ஆள் சொல்வது சரிதான். திருடர்கள் பிறக்கிறாரக்ள், உருவாக்கப் படுவதில்லை.

“இப்படியா ஒரு மனுஷன் சொல்லித் தருவான்? நான் மட்டும் இவர்களிடமிருந்து பிழைத்தால் என் அப்பனைத் தேடிப் பிடித்துக் கொலை செய்வேன். வீட்டிற்குப் போய் அவன் தலையை அறுத்துக் கொல்வேன்.”

அவனுக்கு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. யாருக்கும் அந்த சூழ்நிலையில் கோபம் வரத்தானே செய்யும்? ஆனால் இப்போது கோபப்பட நேரம் இல்லை. ஏதாவது செய்து இவர்களிடம் இருந்து தப்பிச் செல்ல வேண்டும். என்ன செய்வது என்று பரியவில்லை. அவன் மனம் சிந்திக்க மறுத்தது.

அதுதான் உண்மையான தியான நிலை. மனம் செயலற்று, சிந்தனையற்று இருப்பதுதான் உண்மையான தியானம். அடுத்து என்ன செய்வது என்று மனதிற்கு சத்தியமாகத் தெரியாது. ஏனென்றால் மனத்திற்கு தெரிந்த விஷயங்கள் இந்த சூழ்நிலைக்குப் பயன்படாது.

அவனுடைய மனம் இப்படி ஓர் இக்கட்டான சூழ்நிலையை இதுவரை சந்தித்ததேயில்லை. குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டுவது போல் மனம் தெரிந்ததைத்தான் சுற்றிச் சுற்றி வரும். தெரியாதது எதையாவது பார்க்க நேர்ந்தால் மனம் அப்படியே ஸ்தம்பித்துப் போய்விடுகிறது. மனம் ஓர் இயந்திரம். சரியான செய்திகளை மனதிற்கு நீங்கள் கொடுக்கவில்லையென்றால் அதனால் இயங்க முடியாது.

இது ஒரு புதிய சூழ்நிலை. பலே திருடனின் மகனுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அவன் செய்வதற்கு ஒன்றும் இல்லை. அப்போது அந்த வீட்டின் வேலைக்காரி கையில் ஏற்றிய மெழுகுவர்த்தியோடு அந்த அறைக்குள் நுழைந்தாள். எப்படியும் திருடன் வீட்டுக்குள்தான் இருக்க வேண்டும். சுவர் உடைக்கப்பட்டிருக்கிறது,

கதவுகள் எல்லாம் திறந்திருந்தன. அப்படியென்றால் திருடன் எப்படியும் உள்ளே இருக்கும் இந்த அறைக்குத்தான் வந்திருக்க

வேண்டும். இங்கே தான் எங்கோ அவன் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தாள் அவள்.

மகன் பதுங்கியிருந்த ஆளுயர அலமாரியைத் திறந்தாள் அவள். சாதாரணமாக அவள் அலமாரியைத் திறந்திருக்க மாட்டாள். ஆனால் அலமாரிக்குள் இருந்து விநோதமான சத்தங்கள் வந்தன. எலி ஓடுவது போல் சத்தம் கேட்டது அவளுக்கு. அதனால் தான் அவள் அலமாரியைத் திறந்தாள்.

உள்ளே இருந்த திருடனின் மகன் தனது கையால் அலமாரியைச் சுரண்டிக் கொண்டிருந்தான். அந்த செயலை அவன் தன்னிச்சையாகச் செய்து கொண்டிருந்தான். மனதால் திட்டமிட்டுச் செய்யவில்லை.

அலமாரி கதவுகளின் இடுக்கு வழியாக யாரோ விளக்குடன் அறைக்குள் நுழைவதைப் பார்த்தான். காலடி ஓசையைக் கேட்டான். இப்போது அறையில் அவ்வளவாக இருட்டு இல்லை. கதவைத் திறக்க வேண்டுமென்றால் ஏதாவது செய்தே ஆக வேண்டும். என்ன செய்வது?

எலியைப் போல் பிறாண்ட ஆரம்பித்தான். சத்தம் கேட்டு அந்த வேலைக்காரி கதவைத் திறந்தாள். திறந்து உள்ளே யார் இருக்கிறாரக்ள் என்று மெழுகுவர்த்தியால் பார்க்க முயன்றாள். மீண்டும் தன்னிச்சையாக, மனதால் சிந்திக்காமல் அவன் அந்த மெழுகுவர்த்தியை ஊதி அணைத்துவிட்டு அந்தப் பெண்ணைத் தள்ளிவிட்டுவிட்டு ஓட ஆரம்பித்தான்.

விளக்குகளையும் வேல் கம்புகளையும் எடுத்துக் கொண்டு பத்து பேர் அவனைப் பின் தொடர்ந்து ஓட ஆரம்பித்தார்கள். அவன் எப்படியும் பிடிபட்டுவிடுவான் என்று அவர்கள் நினைத் தார்கள். அப்போது வழியில் ஒரு பாழுங் கிணற்றைப் பார்த்தான். பக்கத்தில் இருந்த ஒரு பெரிய பாறாங்கல்லைத் தூக்கி அந்த கிணற்றில் போட்டான். அது பெரிய சத்தத்துடன் உள்ளே விழுந்தது. அருகில் இருந்த மரத்துக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு அங்கே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கத் தொடங்கினான்.

அவனைத் துரத்தி வந்தவர்கள் அவன் கிணற்றில் குதித்துவிட்டான் என்று நினைத்தார்கள்.

“இனிமேல் அவனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவன் கிணற்றில் குதித்துவிட்டான். காலையில் வருவோம்.

அவனை வெளியில் எடுப்போம். உயிருடன் இருந்தால் காவலர் களுக்குச் சொல்லியனுப்பி அவனைச் சிறையில் அடைப்போம். அவன் செத்திருந்தால் அவனுக்கு ஏற்கனவே தண்டனை கிடைத்துவிட்டது என்று நினைத்துக் கொள்ளலாம். வாருங்கள் போகலாம்.''

மகன் வீடு திரும்பினான். அவனுடைய தந்தை கம்பளியைப் போர்த்திக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தான். கோபத்தில் கம்பளியை உருவிப் போட்டான் மகன்.

''உங்களுக்கு என்ன பைத்தியமா பிடித்துவிட்டது? ஏன் அப்படிச் செய்தீர்கள்?''

''அப்....பா. நீ திரும்பி வந்துவிட்டாயா? அது போதும். நீ பிறவிக் கள்ளன் தான் என்பதை இப்போது ஒத்துக் கொள்கிறேன். நாளை முதல் நீ தனியாகத் தொழில் செய்யத் தொடங்கலாம். இந்தத் தொழிலின் சூட்சுமத்தைப் புரிந்து கொண்டுவிட்டாய்.

''எனக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை மகனே! நான் உன்னை வைத்துச் சூதாடினேன். இந்த சூதில் நான் தோற்றால் உன் கதை முடிந்திருக்கும். நீ உயிருடன் திரும்பிவிட்டாய் என்றால் நான் சூதில் ஜெயித்துவிட்டேன் என்று அர்த்தம்.

''இப்போது நீ வந்துவிட்டாய். நான் ஜெயித்துவிட்டேன். இப்போது என்னைத் தொந்தரவு செய்யாமல் போய்த் தூங்கு. நாளை காலை நீ எப்படி தப்பித்தாய் என்று எனக்குச் சொல்ல வேண்டும் என்று தோன்றினால் சொல்லு.

''ஆனால் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியும். விவரங்கள் தெரியாதேயொழிய சாரம் தெரியும். அதுவே எனக்குப் போதும். இதுதான் என் தொழில். இதுதான் என் கலை. நீ இதில் கைதேர்ந்துவிட்டாய். நாளையே நான் செத்தாலும் சந்தோஷமாகச் சாவேன்.

''என் கலை என் வாரிசிடமும் இருக்கிறது என்று நிம்மதியாகச் சாவேன். இப்படித்தான் என் தந்தை எனக்கு தொழில் கற்றுக் கொடுத் தார். இந்தத் தொழிலைக் கற்றுக் கொள்ள இந்த ஒரு வழிதான் இருக்கிறது. ஆபத்துக்களை நேரில் சந்திப்பதுதான் அந்த வழி.

திருடன் கூட ஞானியாகலாம். திருடன் கூட இந்த தருணத்தில் வாழலாம். திருடன் கூட மனம் என்னும் சுமையை உதறித் தள்ளிவிட்டு ஞானியாகிவிடலாம்.

அதனால்தான் நான் நீங்கள் என்ன தொழில் செய்கிறீர்கள் என்பது பற்றி அதிகம் கவலைப்படுவதில்லை. நான் யாரையும், "என்ன தொழில் செய்கிறீர்கள்?" என்று கூட கேட்பதில்லை. தீட்சை வேண்டும் என்று என்னைத் தேடி வருபவர்களுக்கெல்லாம் நான் தீட்சை தருகிறேன்.

அவர்கள் என்ன தொழில் புரிகிறார்கள் என்று ஒரு போதும் நான் கேட்டதேயில்லை. வருபவர்களில் சிலர் அவர்களாகவே, "ஓஷோ, நான் குடிகாரன். அதனால் பரவாயில்லையா?" என்று கேட்பார்கள். இன்னும் சிலர் தங்களைத் திருடர்கள் என்று சொல்லிக் கொள்வார்கள்.

நான் கொலைகாரன் என்று சொல்லிக் கொண்டு வந்தவர்கள் கூட என்னிடம் தீட்சை பெற்றிருக்கிறார்கள். 'நான் இப்போது தான் ஜெயிலில் இருந்து விடுதலையானேன் என்று சொல்லிக் கொண்டு வருபவர்களும் இருக்கிறார்கள்.

அவர்களிடம் நான் இதைத்தான் சொல்வேன்.

"எனக்கு விவரங்கள் தேவையில்லை. நீங்கள் இதுவரை ஒரு மாதிரியான தூக்க நிலையில்தான் வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். அந்த நிலையில் நீங்கள் செய்த செயல்களில் பெரிய வேறுபாடு ஒன்றும் இல்லை. நீங்கள் பாவியாக இருந்தாலும் சரி, பரோபகாரி யாக இருந்தாலும் சரி, நீங்கள் புனிதராக வாழந்திருந்தாலும் சரி, சாத்தானின் பிரதிநிதியாக இருந்தாலும் சரி, எனக்கு எல்லாம் ஒன்றுதான்."

தன்னுணர்வு இல்லாமல் செய்த செயல்களில் என்ன பெரிதாக வித்தியாசம் இருந்துவிடப் போகிறது? ஒருவன் தான் பாவங்கள் செய்ததாக கனவு கண்டிருக்கலாம். மற்றொருவன் கொலை செய்வதாகக் கனவு கண்டிருக்கலாம்.

இன்னும் ஒருவன் தான் தூயவனாக வாழ்ந்ததாக கனவு க்ண்டிருக்கலாம். தூக்கம் கலைந்தவுடன், காலையில் விழிப்பு வந்த வுடன் எல்லாரும் ஒன்றுதான். கனவில் கொலை செய்தவனுக்குத் தண்டனையும் கிடைக்கப்போவதில்லை. தூய்மையான வாழ்க்கைக்குப் பரிசும் கிடைக்கப்போவதில்லை.

அதே போல் தான் உங்கள் உலக வாழ்க்கையும் இருந்திருக் கிறது. அதனால் அந்த விவரங்களை என்னிடம் சொல்லாதீர்கள்.

அது மட்டுமில்லை, சிறையில் இருக்கும் சிலர் கூட எனது சந்நியாசிகளாகி இருக்கிறார்கள்.

'நாங்கள் சாகும் வரை சிறையில் இருக்கப்போகிறோம். நாங்கள் சந்நியாசம் வாங்கிக் கொள்ளலாமா?' என்று எனக்கு ஆயுள் தண்டனைக் கைதிகள் கடிதம் எழுதுவார்கள்.

'ஏன் வாங்கிக் கொள்ளக்கூடாது? ஒருவகையில் எல்லா மக்களும் வாழ்க்கைச் சிறையில் அடைபட்டவர்கள் தான். சம்சாரம் என்னும் சிறையில் சிக்கிக் கொண்டவர்கள்தான். சிலர் உள்ளே சிறைப்பட்டிருக்கிறார்கள். பலர் வெளியே சிறைப்பட்டிருக்கிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம். நீங்கள் சிறிய சிறையில் இருக்கிறீர்கள். அவர்கள் சற்றே பெரிய சிறையில் இருக்கிறார்கள். அதனால் பாதகமில்லை.

ஆனால் நீங்கள் சந்நியாசிகளாக வேண்டுமென்றால் இங்கு இப்போது என்ற நிலையில் வாழப் பழகிக் கொள்ள வேண்டும்.

பல நாடுகளைச் சேர்ந்த சிறைக்கைதிகள் சந்நியாசம் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களால் நாம் அணிவது போன்ற காவி ஆடை அணிய முடியாது. 'சிறையின் விதிகள் அப்படி. நாங்கள் கைதிகளின் சீருடையைத்தான் அணிய முடியும்' என்று அவர்கள் சொல்வார்கள்.

'அதைப் பற்றிக் கவலைப் பட வேண்டாம்.' என்று நான் அவர்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.

ஜெர்மனியின் சிறையில் இருந்து ஒரு கைதி எழுதியிருந்தார். "என்னால் அதிகபட்சமாக காவி நிறத்தில் ஒரு கைக்குட்டை வைத்திருக்க முடியும். நீங்கள் ஆசீர்வதித்துக் கொடுத்த ஜெபமாலையை நான் என் சட்டைப் பையில் வைத்திருக்கிறேன். அதை அணிய எனக்கு அனுமதி கிடைக்கவில்லை."

என்னால் அவரது ஆர்வத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. அதனால் பரவாயில்லை என்று பதில் எழுதச் சொன்னேன்.

அந்த கைதி மேலும் எழுதுகிறார். "ஆனால் என்னால் தியானம் செய்ய முடிகிறது. தினமும் தியானம் செய்கிறேன்."

அவர் சொல்வது உண்மைதான். கடந்த இரண்டு வருடங்களாக நாள் தவறாமல் அவர் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார். எனக்கு அவர் மீண்டும் மீண்டும் எழுதுவது இதுதான்.

"நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நான் சிறையில் இருப்பதையே பெரிய வரப்பிரசாதமாக்க் கருதுகிறேன். நான் சிறையில் இல்லாவிட்டால் உங்கள் சந்நியாசியாகியிருக்க மாட்டேன். சிறையில் இருக்கும் நூலகத்தில் தான் நீங்கள் எழுதிய புத்தகங்களை முதன் முதலில் பார்த்தேன். "

இப்போது பாருங்கள் அந்த சிறை நிர்வாணநிலையின் வாயிலாக அமைந்துவிட்டது.

அதனால் நீதிபதி அவர்களே, எதற்கும் கவலைப்படாதீர்கள். ஆகாஷிக் ஆவணங்கள் என்று நான் சொன்னதெல்லாம் வெறும் ஜோக்குதான். அதைப் பெரிதாக நினைத்துக் கொண்டு கவலைப் படாதீர்கள். உங்கள் தொழிலை மாற்ற வேண்டிய அவசியமேயில்லை.

உங்கள் தொழிலை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றினால் தாராளமாக மாற்றிக் கொள்ளுங்கள். அந்த மாற்றத்துக்காக ஏதாவது நொண்டிச் சாக்கைத் தேடாதீர்கள். உங்களுக்கு எந்த தொழில் பிடித்திருக்கிறதோ அதையே செய்யுங்கள். டாக்டராக வேண்டும் போல் தோன்றினால் டாக்டராகுங்கள். அது பெரிய விஷயமில்லை. அதைப் பெரிதுபடுத்தி தேவையில்லாமல் உங்கள் அகங்காரத்தை வளர்த்துக் கொள்ளாதீர்கள். தியானம் செய்யத் தொடங்குங்கள்.

உங்களால் என்னிடம் சந்நியாசம் வாங்கிக் கொள்ள முடிந்தால நீங்கள் ஒரு தைரியமான ஆசாமி என்பதை நான் ஒத்துக் கொள்வேன். அப்படிச் செய்தால் இந்த நொடியில் நீங்கள் நிர்வாண நிலையை அடைந்து விடுவீர்கள். நிர்வாண நிலையை இந்த நொடியிலேயே அடையாவிட்டால் நீங்கள் அதை எப்போதும் அடையமுடியாது.

*இரண்டாவது கேள்வி:*

*ஓஷோ, எதையும் நம்ப வேண்டாம் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அகந்தையே இல்லாத வாழ்க்கை, அகந்தையோடு கூடிய வாழ்க்கையை விடச் சிறந்தது என்று நான் நம்பாமல் எப்படி அகந்தையைக் கைவிடுவது?*

*எனவே நான் அகந்தையை உதறித் தள்ளுவதற்கு முன்னால், அகந்தை இல்லாத வாழ்க்கை அகந்தையோடு கூடிய வாழ்க்கையை விடச் சிறந்தது என்று நம்ப வேண்டும்.*

*ஆனால், ஓஷோ, எத்தனை முயன்றும் அதை என்னால் நம்ப முடியவில்லை. அகந்தையில்லாத வாழ்க்கையில் மனதிட்பமே இருக்காது. என் மனதிட்பத்தைக் கைவிட எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. யாரும் இதைச் செய்ய முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஏனென்றால் நம்மிடம் இருப்பதெல்லாம் இந்த அகந்தை மட்டும்தான். இதைப் பற்றிக் கொஞ்சம் பேசுங்களேன்.*

எப்போதும் நான் ஒன்று பேசுகிறேன், நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்கிறீர்கள். காரணம், நான் மனமின்மை என்ற நிலையில் இருந்து பேசுவதை நீங்கள் மனதை வைத்துக் கொண்டு புரிந்து கொள்ள முயற்சி செய்கிறீர்கள். விழித்துக் கொண்டிருப்பவன் தூக்கத்தில் இருப்பவனிடம் பேசுவது போல் இருக்கிறது இது.

தூக்கத்தில் கூட நீங்கள் அடுத்தவர்கள் பேசுவதைக் கேட்க முடியும். சில வார்த்தைகளின் சில பகுதிகளை, சில சமயம் சில வாக்கியங்களின் பகுதிகளைக் கூட கேட்கலாம். ஆனால் அடுத்தவர் சொல்ல வரும் கருத்தை உங்களால் நிச்சயமாகப் புரிந்து கொள்ள முடியாது. நீங்கள் நிச்சயம் அவர் பேசுவதைத் தவறாகத்தான் புரிந்து கொள்வீர்கள்.

வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டதைப் புரிந்து கொண்ட எல்லாருக்குமே இந்த பிரச்சினை இருக்கிறது. அதை எப்படி புரியாதவர்களுக்கு விளக்குவது? வார்த்தைகளுக்கு அப்பாற் பட்டதை வார்த்தைகளால் விளக்க முடியாது. நீங்கள் அனுபவித் ததைத்தான் உங்களால் புரிந்து கொள்ள முடியும். பச்சை நிறத்துக்கும் சிவப்பு நிறத்துக்கும் உள்ள வித்தியாசத்தை நீங்கள் எப்படி பிறவிக் குருடனுக்கு விளக்குவீர்கள்?

உங்கள் அகந்தையைக் கடாசிவிடுங்கள் என்று நான் சொல்லவில்லை. அது நடக்காத காரியம். நீங்கள் அப்படிச் செய்ய வேண்டும் என்று நினைத்தாலும் செய்ய முடியாது. ஏனென்றால்

அகந்தை என்ற ஒன்றே இல்லை. இல்லாத ஒன்றை எப்படி தூக்கியெறிய முடியும்? இருப்பதைத்தான் கடாச முடியும். அகந்தை என்பதே பொய். மாயை. கானல்நீர். அதை யாராலும் அகற்ற முடியாது.

அகந்தையில்லாமல் இருப்பது என்று நான் சொல்வதன் அர்த்தம் என்ன? அகந்தையை விட வேண்டும் என்பது அதற்குப் பொருள் அல்ல. அதன் தன்மையைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான் பொருள். இதில் நம்பிக்கை என்ற கேள்விக்கே இடமில்லை.

நான் சொன்னதை நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டதால் தான் இந்த கேள்வியே பிறந்திருக்கிறது. ஆனால் அதை அழகான வார்த்தைகளால் காரண-காரியத்துடன் வெளிப்படுத்தியிருக்கிறீர்கள். வெளியில் இருந்து உங்கள் கேள்வியைக் கேட்பவர்கள், "அவர் சொல்வது சரி தான். அகந்தையே இல்லாத வாழ்க்கை, அகந்தை யோடு கூடிய வாழ்க்கையை விடச் சிறந்தது என்று நான் நம்பாமல் எப்படி அகந்தையைக் கைவிடுவது?" என்று தான் யோசிப்பார்கள்.

எதையும் நம்பாதீர்கள். மீண்டும் சொல்கிறேன். எதையும் நம்பாதீர்கள். என் மேல் நம்பிக்கை வைத்து நீங்கள் அகந்தையைத் தொலைக்க வேண்டும் என்று நான் ஒரு போதும் சொன்னதில்லை. நான் உங்களோடு என் அனுபவத்தைத்தான் பகிர்ந்து கொள்கிறேன். அகந்தையை அறிய வேண்டும் என்று நான் முயலும் போது அது இருப்புநிலையற்றது என்ற உண்மையைப் புரிந்து கொண்டேன். அந்த புரிந்து கொள்ளுதலை உங்களுக்கு உணர்த்த விரும்புகிறேன். அவ்வளவுதான். அகந்தையைப் பற்றிய என் உணர்வு முழுமை பெற்றவுடன் அகந்தை மறைந்துவிட்டது.

அகந்தை தானாகவே மறைந்துவிடுகிறது. நீங்கள் அதை அகற்ற முயலாதீர்கள். நீங்கள் அதை அகற்றுகிறேன் பேர்வழி என்று செயல்பட்டால், அந்தச் செயலைச் செய்பவர் யார்? அதைச் செய்வதும் அகந்தைதான். ஓர் அகந்தை இன்னோர் அகந்தையை அகற்றும்.

அகற்றிய அகந்தை அப்போது உங்களிடம் இன்னும் வலுவாக இருக்கும். அதன்பின் அதை அகற்ற அதைவிட வலுவான அகந்தையை வளர்த்துக் கொள்வீர்கள். ஸ்தூலமான அகந்தை போய் சூட்சுமமான அகந்தை மிஞ்சும். ஸ்தூல அகந்தையைவிட சூட்சும அகந்தை ஆபத்தானது. அதன் பின் உங்கள் அகந்தை

பயபக்தியுடன் இருக்கும். அது ஆன்மிக அகந்தையாக இருக்கும். பணிவுள்ள அகந்தையாக இருக்கும். மேலும் மேலும் முரண் பாடுகளுக்குள் சிக்கிக் கொள்வீரக்ள். அதன் பின் அகந்தையின் பிடியில் இருந்து உங்களால் வெளியில் வரவே முடியாது.

நான் சொல்வது மிகவும் எளிமையானது. இந்த அகந்தை எப்படிப்பட்டது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அதனைக் கவனியுங்கள். அதன் செயலைக் கவனியுங்கள். அதன் நுட்பமான செயல்பாடுகளை உணருங்கள். சில கணங்களில் அந்த அகந்தை இல்லாமல் இருக்கும் அந்த கணங்களையும் கூர்ந்து நோக்குங்கள். அத்தகைய கணங்கள் எல்லாருக்கும் இருக்கும்.

அகந்தை சைக்கிளைப் போன்றது. பெடலை அழுத்திக் கொண்டேயிருந்தால்தான் அது போகும். பெடலை அழுத்துவதை நிறுத்திவிட்டால் அகந்தையால் அதிக தூரம் போக முடியாது. அதிக பட்சம் நூறு அடி அல்லது இருநூறு அடி போகும். அதன் பின் அப்படியே கீழே விழுந்துவிடும்.

தொடர்ந்து போஷாக்கு கிடைத்தால் தான் அகந்தையால் உயிர் வாழ முடியும். சில நேரங்களில் அந்த போஷாக்கைக் கொடுக்க நீங்கள் மறக்கும் போது அது மறைந்துவிடுகிறது. உதாரணமாக ஓர் அழகான சூரிய அஸ்தமனத்தை நீங்கள் பார்க்கும் அந்த நொடியில் உங்கள் அகந்தை மறைந்து விடுகிறது. அந்த சூரிய அஸ்தமனம் உங்களுக்குள் நிறைந்து உங்களையே ஆட்டிப் படைக்கிறது. அப்போது அகந்தைக்கு இடமில்லாமல் போய்விடுகிறது.

அந்த சூரிய அஸ்தமனம் அவ்வளவு அழகாக, அவ்வளவு கம்பீரமாக, அவ்வளவு ஆச்சரியம் மிக்கதாக, அவ்வளவு அசாதாரணமாக இருக்கிறது - அதனால் நீங்கள் யார் என்பதையே ஒரு கணம் மறந்துவிடுகிறீர்கள்.

அந்த இடத்தில் நீங்களே இல்லை. அந்த சூரிய அஸ்தமனம் மட்டுமே இருக்கிறது. வண்ணங்கள் அள்ளித் தெளிக்கப்பட்ட வானம் மட்டுமே இருக்கிறது. தங்கள் கூடுகளை நோக்கிப் பறந்து வரும் பறவைக் கூட்டம் மட்டுமே இருக்கிறது, நாள் முடிந்து இரவுக்குள் நுழையும் அந்த அமைதியான கால ஓட்டம் மட்டுமே இருக்கிறது. தொடுவானத்தில் சூரியன் மறையும் போது உங்களுக்குள் ஏதோ ஒன்று நின்று போய்விடுகிறது.

இந்த அனுபவம் ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு ஏற்பட்டது. அகந்தை அகன்ற அனுபவம் அவருக்குக் கிடைக்கும் போது அவரது வயது பதின்மூன்று. அவர் வயலில் இருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். அவர் தந்தை ஏழை. அவர்கள் கிராமத்தில் ஒரு சிறிய வீட்டில் தான் குடியிருந்தார்கள்.

அன்று வீட்டுக்குத் திரும்பி வரும் போது, ஒரு பெரிய குளத்தின் வழியாக வந்தார் அவர். அது ஓர் அமைதியான மாலைப் பொழுது. குளத்தில் யாரும் இல்லை. ராமகிருஷ்ணர் மட்டும் தனியாக நடந்து வந்து கொண்டிருந்தார். குளக்கரையில் கொக்குகள் கூட்டமாக அமர்ந்திருந்தன.

திடீரென்று எல்லாக் கொக்குகளும் ஒரு சேர அந்த இடத்தை விட்டுப் பறக்க ஆரம்பித்தன. சூரியன் மறைந்து கொண்டிருந்தது. கறுப்பு நிற வானம் வெல்வெட்டாகப் பளபளத்துக் கொண்டிருந்தது. அதன் பின்னணியில் வெள்ளி மின்னலைப் போல் பறக்கும் வெள்ளைக் கொக்குகள். அது ஓர் உன்னதமான நொடி.

ராமகிருஷ்ணர் தரையில் விழுந்தார். அந்த அழகு அவரை அப்படியே ஆட்கொண்டு விட்டது. அவர் தன்னுணர்வை இழந்தார் .

ஒரு மணி நேரம் கழித்து அந்த வழியே போனவர்கள் அவர் குளக்கரையில் மயங்கிக் கிடப்பதைப் பார்த்தார்கள். அவரை அவர் வீட்டுக்குத் தூக்கிக் கொண்டு போனார்கள். ஆறு மணி நேரம் கழித்துத்தான் அவருக்கு உணர்வு திரும்பியது.

உணர்வு திரும்பியவுடன் ராமகிருஷ்ணர் அழ ஆரம்பித்தார்.

“அதுதான் உணர்வு திரும்பிவிட்டதே? இப்போது ஏன் அழுகிறீர்கள்?” என்று சுற்றியிருந்தவர்கள் கேட்டார்கள்.

“நான் இந்த சாதாரண உலகத்துக்குத் திரும்பி வந்துவிட்டேனே என்று அழுகிறேன். நான் என் உணர்வை எப்போதும் இழக்கவில்லை. சாதாரண உணர்வுநிலையை விட மேம்பட்ட உணர்வுநிலையில் இருந்தேன். அது ஒரு புது உலகம். அது என்னவென்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. அங்கே நான் என்ற உணர்வே எழவில்லை. என்றாலும் பெரிய மகிழ்ச்சி இருந்தது. அப்படி ஒரு மகிழ்ச்சியை நான் ஒரு போதும் வாழ்க்கையில் அனுபவித்ததிலை.”

அது தான் அவருடைய முதல் அனுபவம். ஜென் மதத்தில் வரும் சடோரி என்னும் நிலை அதுதான். அகந்தையற்ற நிலை. அதன்பின் ராமகிருஷ்ணர் அப்படி ஓர் அனுபவத்தைத் தானாகவே தேட ஆரம்பித்தார். அதே குளத்துக்கு காலையில் போவார், மாலையில் போவார், இரவில் போவார். ஒவ்வொரு முறை போகும் போதும் அதே அனுபவம் அவருக்கு கிட்டியது. அந்த அனுபவம் உங்களுக்கும் கிடைக்கும். அது எல்லாருக்கும் கிடைக்கும். கடவுள் எல்லாருக்கும் சொந்தம். கடவுள் எல்லாரிடமும் வருவார்.

நீங்கள் கடவுளை மறந்திருக்கலாம். ஆனால் அவர் ஒரு போதும் உங்களை மறக்க மாட்டார். அவரால் உங்களை மறக்க முடியாது. நீங்கள் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள் என்றால் அவரும் உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்.

உங்கள் அகந்தையை உதறித் தள்ளிவிடுங்கள் என்று நான் சொல்லவில்லை. அதைப் புரிந்து கொள்ளுங்கள் என்றுதான் சொல்கிறேன். அதைப் புரிந்து கொள்ளும் போது அது தானாகவே மறைந்துவிடுகிறது. அகந்தை தானாகவே மறையும் தருணங்களைக் கூர்ந்து கவனியுங்கள். அந்த சில நொடிகளில் அதீத விழிப்புணர்வுடன் இருங்கள்.

காதல் கொள்ளும் போது அகந்தை மறைந்துவிடுகிறது. உடலுறவு கொள்ளும் போது அகந்தை அங்கேயிருப்பதில்லை. உடலுறவில் உச்சத்தை எட்டும் போது அங்கே அகந்தை நிச்சயம் இருக்காது. அந்த மாதிரி சமயங்களில் நீங்கள் உருகி, பிரபஞ்ச இருப்புநிலையுடன் இரண்டறக் கலக்கிறீர்கள். கடலில் இருந்து தனியாகக் கிளம்பிய அலை மீண்டும் கடலுக்குள் சங்கமமாகிவிடுகிறது.

ஒரு நொடிப் பொழுதுக்கும் குறைவாகத்தான் அந்த நிலை நீடிக்கும். தன்னுணர்வுடன் இருந்தால் அந்த நொடியின் அழகை நீங்கள் அனுபவித்து உணரலாம். அகந்தையற்றுப் போகும் கணங்களின் அழகை உங்களால் காணமுடிந்தால், அகந்தை எவ்வளவு அசிங்கமானது என்பதையும் உங்களால் உணரமுடியும். அகந்தையினால் வரும் துயரங்களையும் புரிந்து கொள்ள முடியும்.

நீங்கள் என்னை நம்ப வேண்டியதில்லை. இந்த அனுபவத்தில் பங்கு கொள்ள உங்களுக்கு நான் அழைப்பு விடுக்கிறேன். நான் நம்பிக்கைக்கு எதிரானவன். நம்பிக்கைதான் இந்த உலகத்தில்

உண்மையான மதம் அழியக் காரணமாக இருந்திருக்கிறது. நம்பிக்கைதான் போலி மதங்கள் வளரக் காரணமாக இருந்திருக்கிறது.

இப்போது மீண்டும் உங்கள் கேள்வியைக் கவனியுங்கள்.

*ஓஷோ, எதையும் நம்ப வேண்டாம் என்று நீங்கள் சொல்கிறீர்கள்.*

முற்றிலும் உண்மை

'நான் ஏன் என் அகந்தையை விட வேண்டும்?' இதைச் சொன்னது யார்? இதை நீங்கள் வேறு எங்கேயோ கேட்டிருக்க வேண்டும். அது எனக்குப் புரிகிறது. நான் இதைச் சொல்லவில்லை.

ஓர் இளைஞன் செக்ஸ் வைத்தியரிடம் போனான்.

''ஐயா, உடலுறவு கொள்ளும் போது என்னால் அதிக நேரம் தாக்குப்பிடிக்க முடியவில்லை. விந்து விரைவாக வெளியேறி விடுகிறது. அப்படி வெளியேறாமல் இருக்க, அதிக நேரம் தாக்குப் பிடித்து என் காதலிக்கு அதிக இன்பம் கொடுக்க என்ன வழி?'

''விரைவாக விந்து வெளியேறும் பிரச்சினை இன்று பல இளைஞர்களுக்கு இருக்கிறது. உடலுறவின் மேல் உள்ள அளவில்லாத ஆர்வமும், உறவு கொள்ளும் போது ஏற்படும் உணர்ச்சிப் பெருக்கமும் தான் இதற்குக் காரணம். இந்த குறையை நிவர்த்தி செய்ய நல்ல வழி ஒன்று இருக்கிறது.''

''உடனே சொல்லுங்கள், டாக்டர்.''

''பார்த்தீர்களா, இந்த அவசரம்தானே கூடாது என்கிறேன். இதே அவசரத்தை செக்சிலும் காட்டுகிறீர்கள். அதனால் தான் விந்து உடனே வெளியேறிவிடுகிறது.

''அடுத்த முறை ஒரு பெண்ணுடன் உறவு கொள்ளும் போது பெரிய நட்சத்திர உணவு விடுதியில் உணவு அருந்துவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். முதலில் சூப்பில் இருந்து ஆரம்பித்து முடியும் போது சாப்பிடும் ஐஸ்க்ரீம், குடிக்கும் காபி வரை, எதையும் ருசித்துச் சாப்பிடுங்கள். ஆற அமர அனுபவித்து ரசியுங்கள்.

''முதலில் சூப் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அதற்குரிய கிண்ணத்தில் அது ஆவிபறக்கச் சூடாக இருக்கிறது. அதற்குத் தேவையான மிளகு பொடியையும் உப்பையும்

போட்டுவிட்டீர்கள். பின் மெதுவாக ஒரு ஸ்பூன் சூப்பை அருந்துகிறீர்கள். அப்...பா! என்ன சுகம்!

"அதன் பின் மதுக் கிண்ணத்தில் ஒயின் (wine) வருகிறது. பளபளக்கும் அந்த கிண்ணத்தை முதலில் நன்றாக உற்றுப் பாருங்கள். அதன் பின் அந்த மதுவின் வாசனையை நுகருங்கள். பின் கொஞ்சம் போல் அதைக் குடியுங்கள். அதன் இனிய சுவை தொண்டைக்குழி வழியாக இறங்குவதை ரசித்துக் குடியுங்கள்.

"அதன் பின் உணவு வகைகள் வருகின்றன. சூடான சாம்பார் இட்லி நெய்யில் மிதந்து கொண்டு வருகிறது. அதில் ஒரு விள்ளலை எடுத்து மல்லிச் சட்னியில் தோய்ந்துச் சாப்பிடுகிறீர்கள். அதன்பின் பிரியாணி வருகிறது. அதனை கொஞ்சம் கொஞ்சமாக அதன் சுவையை அனுபவித்துச் சாப்பிடுகிறீர்கள்.

"கடைசியாக பழவகைகளுடன் கூடிய ஐஸ் க்ரீம் வருகிறது. அதனை மென்மையாக ருசித்து, ரசித்துச் சாப்பிடுகிறீர்கள். அதன் பின் சூடான ஃபில்டர் காபி வருகிறது. அதனை கொஞ்சம் கொஞ்சமாக ரசித்து அருந்துகிறீர்கள்.

இப்படியாக க்றபனையில் ஒரு விருந்து உண்பது போல் கற்பனை செய்து கொள்ளுங்கள். உங்கள் பிரச்சினை ஓடிவிடும். அதன் பின் உங்களுக்கு உடலுறவில் உச்சத்தை எய்துவது எளிதாக இருக்கும். உங்களோடு இருக்கும் பெண்ணுக்குள் இன்பம் கொடுப்பீர்கள். புரிகிறதா?"

"மிக்க நன்றி. இதை இன்றே செயல் படுத்துகிறேன்." என்று சொன்ன இளைஞன் மருத்துவர் கேட்ட ஃபீசைக் கொடுத்துவிட்டுத் தன் காதலியைத் தேடிக் கொண்டு போனான்.

அன்று இரவு தனது காதலியோடு உறவு கொள்ளும் போது டாக்டர் சொன்னதை ஞாபகப்படுத்திப் பார்த்தான். விலாவாரியாக வகைவகயாகச் சாப்பிடும் வரை அவனால் விந்து வெளியேறாமல் தாக்குப்பிடிக்க முடியும் என்று தோன்றவில்லை. அதே சமயா் டாக்டர் சொன்னதைச் செய்து பார்த்துவிட வேண்டும் என்று நினைத்தான்.

டாக்டர் சொன்னது போல் ஒரு நட்சத்திர ஹோட்டலில் இருப்பதாக நினைத்துக் கொண்டான். சர்வரைக் கூப்பிட்டான்.

“இந்தாப்பா, என்னால் அதிக நேரம் இருக்க முடியாது. ஓடிப் போய் ஒரு தக்காளி சூப்பும், ஒரு கப் காப்பியும் கொண்டா பார்க்கலாம்.” என்று சொன்னான்.

நான் அகந்தையை விடுவதற்கு முன்னால் அகந்தையில்லாத வாழ்க்கை எப்படி இருக்கும் என்று உணர வேண்டும் என்று சொல்கிறீர்கள். நீங்கள் அகந்தையில்லாத வாழ்க்கையைப் பலமுறை அனுபவித்திருக்கிறீரக்ள்.

அந்த வாழ்க்கை தெரியாத அளவுக்கு யாரும் ஏழையாக வாழ்வதில்லை. அந்த அபூர்வ கணங்களை உணர்ந்தறியாத மனிதனை நான் இதுவரை பார்த்ததேயில்லை. கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொண்டு பாருங்கள்.

அந்த மாதிரி ஞாபகங்கள் இல்லையென்றால் பரவாயில்லை.. இனிமேலாவது உங்கள் வாழ்க்கையைக் கவனத்துடன் பாருங்கள். ஒவ்வொரு நாளும் அந்தக் கணம் வருகிறதா என்று கவனித்துப் பாருங்கள். நிச்சயம் அப்படி சில கணங்களாவது இருந்தே தீரும்.

இந்த நொடியில் கூட நீங்கள் உங்கள் கேள்வியைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படவில்லை என்றால் இந்த நொடியில் அகந்தையற்ற அந்த நிலையை உங்களால் உணர முடியும். இது உங்களுக்கு மட்டுமில்லை, உலகத்தில் உள்ள அனைத்து மனிதர் களுக்கும் பொருந்தும். யாராலும் இந்த நொடியில் கூட அகந்தையற்ற நிலையை அறிய முடியும்.

ஆனால் இப்போது உங்களுக்கு அது கொஞ்சம் கஷ்டமாக இருக்கும். உங்களுடைய தர்க்கரீதியான கேள்வியை நான் என் பதிலால் தகர்க்கிறேன் என்பதை ஜீரணிக்க உங்களுக்குக் கஷ்டமாக இருக்கும்.

அதனால் இப்போது உங்களால் அகந்தையில்லாத நிலையை அனுபவிக்க முடியாது. நான் உங்களுடைய கேள்வியைத் தவிர்க் கிறேன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நான் தர்க்கரீதியாக, காரண-காரிய விளக்கங்களுடன் அதற்குப் பதில் சொல்லவில்லை என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

வேண்டுமென்றேதான் நான் அதற்கு தர்க்கரீதியாகப் பதில் சொல்லவில்லை. நான் சொல்வது தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது.

இந்த கேள்வியை நீங்கள் கேட்கவில்லை. வேறு யாரோ ஒரு முட்டாள் கேட்டிருக்கிறான் என்று உங்களால் நினைத்துக்

கொள்ள முடிந்தால் இந்த நொடியில் உங்கள் அகந்தை உங்களை விட்டு அகன்றுவிடும். இந்தக் கணமே அழகு பெற்றுவிடும். அகந்தையற்ற நிலையையும், சாதாரண நிலையையும் உங்களால் ஒப்பிட்டுப் பார்க்க முடியும். அந்த இரண்டில் எது உயரந்த்து என்று நீங்களே தீர்மானிக்கலாம். உங்களுக்காகத் தீர்மானிக்க நான் யார்? நான் யாருக்காகவும் தீர்மானிக்க மாட்டேன்.

*மூன்றாவது கேள்வி*

*ஓஷோ, நான் மீண்டும் மேலைநாட்டுக்குச் செல்லப் போகிறேன். மனவியல் வல்லுனர்களைப் பற்றிச் சில ஜோக்குகள் சொல்லுங்களேன்.*

(அந்த சமயத்தில் ஓஷோ பேசிக் கொண்டிருக்கும் புத்தர் அரங்கில் மின்சாரம் தடைப்படுகிறது. விளக்குகள் அணைந்து விடுகின்றன)

இது இரவு நேரம். எப்படி அற்புதங்கள் நிகழ்கின்றன என்பதைப் பார்த்தீர்களா?

ஒரு மனவியல் நிபுணர் சாலை வழியே நடந்து போய்க் கொண்டிருந்தார். எதிரே ஒரு பூக்காரி வந்தாள். அவள் கையில் கூடையில் அன்றலர்ந்த ரோஜா மலர்கள் இருந்தன.

“ஐயா, புத்தம் புது ரோஜாக்கள் வைத்திருக்கிறேன். வாங்கிக் கொள்கிறீர்களா?”

“எனக்கு வேண்டாம்.”

“நீங்கள் நேசிக்கும் பெண்ணுக்கு பூ வாங்கிக் கொடுக்க மாட்டீர்களா?”

“நான் யாரையும் நேசிக்கவில்லை. எனக்குத் திருமணம் ஆகிவிட்டது. மனைவி வீட்டில் இருக்கிறாள். பூ வேண்டாம்” என்று சொல்லி நடையைக் கட்டினார் அந்த நிபுணர்.

ஒரு வயதான மனவியல் நிபுணர் தனது நண்பரான மற்றொரு நிபுணரைப் பார்க்கப் போனார்.

“என் பிரச்சினையை நீங்கள் தான் தீர்க்க வேண்டும். எனக்கு எண்பது வயதாகிவிட்டது. இன்னமும் இளம் பெண்களைக் கண்டால் அவர்கள் பின்னால் போக ஆரம்பித்துவிடுகிறேன். அவர்களைத் துரத்தித் துரத்திச் செல்கிறேன்.”

"அது பெரிய பிரச்சினை இல்லை. உங்கள் வயதில் இருக்கும் பலரும் அதையேதான் செய்கிறார்கள். கவலைப்படாதீர்கள்."

"பிரச்சினை அது இல்லை. அந்தப் பெண்கள் பின்னால் போய், அவர்களைத் துரத்திப் பிடித்ததும், ஏன் அவர்களைப் பின் தொடர்ந்தேன் என்பதே மறந்து போய்விடுகிறது. அந்த ஞாபக மறதிக்கு ஏதாவது சிகிச்சை செய்யுங்களேன். ப்ளீஸ்..."

ஒரு வயதான மனவியல் நிபுணர் ஒரு விலைமகளைத் தேடி வந்தார். அவளிடம் இன்பம் துய்க்க எவ்வளவு பணம் தர வேண்டும் என்ற பேரம் படிந்ததும், நிபுணர் தன் ஆடைகளைக் களைய ஆரம்பித்தார்.

தனது கோட்டைக் கழற்றி ஜன்னல் வழியாகத் தெருவில் விட்டெறிந்தார். பின் தனது டை, மேல் சட்டை எல்லாவற்றையும் கழற்றி வெளியில் எறிந்தார். கடைசியாக அவரது கால் சட்டையைக் கழற்றி வெளியே எறியும் போது விலைமகள் அவரது கைகளைப் பிடித்து நிறுத்தினாள்.

"உங்களுக்கு அறிவு இருக்கிறதா இல்லையா? இப்படி எல்லாவற்றையும் கழற்றி எறிந்துவிட்டால் எல்லாம் முடிந்ததும் நீங்கள் தெருவில் நிர்வாணமாகத்தான் நடக்க வேண்டியிருக்கும்."

"அது தெரியும் பெண்ணே. ஆனால் உடலுறவில் நான் உச்சத்தைத் தொடுவதற்குள் ஆடைகளின் ஃபேஷன் முற்றிலுமாக மாறிவிடும். அதனால் இந்த ஆடைகளால் எனக்குப் பயனில்லை."

*அடுத்த கேள்வி:*

*ஓஷோ, முதலில் இந்த ஜோக்கைக் கேளுங்கள்.*

*இரண்டு பைத்தியங்கள் ஒரு மதுக்கடைக்குள் நுழைந்தன. அவர்கள் உட்கார இடத்தைத் தேடிக் கொண்டிருந்தார்கள். எதிர்ப் பக்கம் பெரிய கண்ணாடி இருக்கும் இடத்தில் அவர்கள் அமர இடம் கிடைத்தது.*

*கண்ணாடியைப் பார்த்த முதல் பைத்தியம் சொன்னது,*

*"அங்கே அமர்ந்திருக்கும் அந்த இரண்டு பேரைப் பார். அவர்களைப் பார்த்தால் தெரிந்தவர்கள் போல் தெரிகிறது. வா, போய் ஒரு வணக்கம் சொல்லிவிட்டு வருவோம்."*

*இருவரும் நகர ஆரம்பித்ததும், இரண்டாவது பைத்தியம் கண்ணாடியைப் பார்த்துவிட்டுச் சொன்னது,*

*"அவர்களும் நம்மைப் பார்க்க வந்து கொண்டிருக் கிறார்கள். வா, நாம் போய் நமது இடத்தில் அமர்ந்து கொள்வோம்."*

*நான் இங்கே வந்து இரண்டு மாதங்கள் ஆகிறது.*

*நான் இங்கே வந்ததில் இருந்து என் மனதில் எழும் உணர்வுகளை இந்த ஜோக் அப்படியே பிரதி பலிக்கிறது. நான் உங்களை நெருங்க நெருங்க நான் என்னையே நெருங்குவது போலத் தோன்றுகிறது. நான் என்னையே நெருங்க நெருங்க உங்களை நெருங்குவது போல் தோன்றுகிறது. அதே சமயத்தில் மனதில் ஓர் இனம் புரியாத பயமும் இருக்கிறது. நான் அன்பைப் பார்த்து அஞ்சுகிறேனா? கொஞ்சம் விளக்குங்களேன்.*

அன்பு எப்போதும் உங்கள் மனதில் அச்சத்தை உருவாக்கும். காரணம் நமது வளர்ப்பு முறை. நமக்கு வெறுப்பை உமிழச் சொல்லித் தந்தார்களே தவிர, அன்பைக் காட்டச் சொல்லித் தரவில்லை. நமக்கு உருவேற்றப்பட்ட மனக்கட்டுத்திட்டங்கள் அன்புக்கு எதிரானவை. ஆனால் அவர்களின் சூழ்ச்சி மிகவும் நுட்பமானது. ஆயிரத்தில் ஒருவருக்குத்தான் அந்த சூழ்ச்சி புரியும். நமக்கு வெறுப்பைக் காட்டத்தான் சொல்லிக்கொடுக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வது கடினம்.

இந்து முகமதியனை வெறுக்கிறான். முகமதியன் கிறிஸ்துவனை வெறுக்கிறான். கிறிஸ்தவனோ யூதனை வெறுக்கிறான். ஒவ்வொரு மதமும் மற்ற மதங்களை வெறுக்கிறது. ஆத்திகன் நாத்திகனை வெறுக்கிறான். நாத்திகன் ஆத்திகனை வெறுக்கிறான். அரசியல் கொள்கைகள் எல்லாம் வெறுப்பின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன.

கம்யூனிஸ்டுகள் ஃபாசிஸ்டுகளை வெறுக்கிறார்கள். ஃபாசிஸ்டுகள் சோஷலிசவாதிகளை எதிர்க்கிறார்கள். எல்லா நாடுகளும் வெறுப்பின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு நாடும் மற்ற நாடுகளை வெறுக்கிறது. உலகம் முழுவதும் வெறுப்பு நிறைந்திருக்கிறது.

உங்கள் இரத்தம், உங்கள் எலும்பு, அதனுள் இருக்கும் மஜ்ஜை வரையிலும் இந்த வெறுப்பு பரவியிருக்கிறது. சில நேரங்களில் நீங்கள் ஒற்றுமையாக இருப்பது போல் தோன்றினாலும் எதையாவது எதிர்த்துத்தான் ஒற்றுமையாக இருக்கிறீர்கள். இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள், இந்துக்கள், கிறிஸ்துவர்கள் எல்லாம் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்றால் பாகிஸ்தான் இந்தியாவின் மீது படையெடுக்க வேண்டும்.

பாகிஸ்தானுக்கு எதிராக இந்தியர்கள் ஒன்று சேருவார்கள். நமது ஒற்றுமைக்குக்கூட ஒரு பொது எதிரி தேவை. அதனால் அந்த சேர்க்கை அன்பின் அடிப்படையில் விளைந்தது அல்ல. ஒரு பொது எதிரியின் மேல் உள்ள வெறுப்பின் அடிப்படையில் விளைந்தது.

இந்த மனதத்துவம் ஹிட்லருக்கு நன்றாகத் தெரியும். அவன் தனது சுயசரிதையில் எழுதுகிறான். 'அன்பால் மக்கள் ஒன்று சேர்ந்து வாழ்வதில்லை. அன்புக்கு அந்த சக்தி கிடையாது. வெறுப்புணர்வுதான் சக்தி மிக்கது. வெறுப்பை உண்டாக்குங்கள் மக்கள் ஒன்று சேர்வார்கள்.

என்னால் ஹிட்லரின் அறிவைப் புரிந்து கொள்ள முடிகிறது. அவன் பைத்தியக்காரனாக இருந்திருக்கலாம். சில சமயம் பைத்தியக்காரர்களுக்கு அதீதமான உட்பார்வை இருப்பதுண்டு. ஒரு கூட்டத்தின் மனப்பாங்கு எப்படி இருக்கும் என்பதை ஹிட்லர் புட்டுப் புட்டு வைத்துவிட்டான்.

தனது சுயசரிதையில் மற்றோர் இடத்தில் ஹிட்லர் சொல்கிறான்,

"உங்கள் நாட்டை எப்போதும் தயார்நிலையில் விழிப்புணர்வுடன் வைத்திருக்க வேண்டுமென்றால் மக்களிடம் பயத்தை விதையுங்கள். போர் மூளப் போகிறது, பகைவன் நம் மீது படையெடுக்கப் போகிறான் என்று பயமுறுத்திக் கொண்டேயிருங்கள்.

"உங்கள் நாட்டைச் சுற்றி இருக்கும் நாடுகள் எல்லாம் உங்கள் பகைவர்கள் என்று அவர்களுக்கு உருவேற்றுங்கள். அவர்கள் உண்மையிலேயே உங்கள் பகைவர்களா இல்லையா என்பது பற்றிக் கவலையில்லை.

"அவர்கள் உண்மையிலேயே உங்கள் பகைவர்கள் என்றால், நல்லதாகப் போயிற்று. அப்படி இல்லை என்றால் அவர்கள் மேல்

அபாண்டமாகப் பழி சுமத்துங்கள். பொய்ப் பிரசாரம் செய்யுங்கள். அவர்கள் உங்கள் பகைவர்கள்தான் என்று மக்களை நம்ப வையுங்கள். அதன் பின் உங்கள் நாடு எப்போதும் ஒற்றுமையாக,. தயார் நிலையில் இருக்கும்.''

முகமதியர்கள் தாக்குவார்கள் என்ற பயம் இருந்தால் இந்துக்கள் ஒன்று சேர்வார்கள். இந்துக்கள் மேல் பயம் இருந்தால்தான் முகமதியர்கள் ஒற்றுமையாக இருப்பார்கள். பாகிஸ்தான் படையெடுக்கப் போகிறது என்று செய்தி வந்தால்தான் இந்திய மக்கள் ஒற்றுமையாக இருப்பார்கள்.

அந்தக்காலத்தில் ரஷியா அணுகுண்டுகளையும், ஹைட்ரஜன் குண்டுகளையும் செய்து குவித்துக் கொண்டிருந்தது - காரணம் அமெரிக்கா தன்னைத் தாக்குமோ என்ற பயம்தான். அதே போல் ரஷியாவின் மேல் ஏற்பட்ட பயத்தால் அமெரிக்கா அழிவு ஆயுதங்களை சேகரித்துக் கொண்டிருந்தது. மொத்த உலகமுமே பயத்திலும், வெறுப்பிலும் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

அன்பை ஒட்டுமொத்தமாக அழித்துவிட்டார்கள். பல நூற்றாண்டுகளாக, பல ஆயிரம் வருடங்களாக உங்கள் அன்பில் விஷத்தைச் செலுத்திவிட்டார்கள். அதனைச் செயலிழக்கச் செய்துவிட்டார்கள். அதனால் எப்போதெல்லாம் உங்கள் மனதில் அன்பு தோன்றுகிறதோ அப்போது உங்களிடம் உள்ள மனக்கட்டுத்திட்டம அதனை மூர்க்கமாக எதிர்க்கிறது.

அந்த மனக்கட்டுத்திட்டம்தான் உங்களுக்குள் ஒரு நடுக்கத்தை ஏற்படுத்துகிறது, பயத்தை ஏற்படுத்துகிறது. அது போலியான அன்பு என்றால் அவ்வளவு பயம் வராது. போலியான அன்பை எளிதாகச் சமாளித்துவிடலாம். ஆனால் அந்த அன்பு நிஜம் என்றால், அது நிஜமான ஒரு மனிதரிடமிருந்து வருகிறதென்றால், நீங்கள் அதற்கு அஞ்சி நடுங்குவீர்கள்.. தீயில் விழுந்ததைப் போல் துடிப்பீர்கள்.

மனிதனுக்கு ஏதோ விபரீதம் நிகழ்ந்துவிட்டது என்று நினைக்கிறேன். அன்புதான் மனிதனின் அடிப்படைக் குணம். அன்பில்லாமல் யாரும் வளர முடியாது, மலர முடியாது, நிறைவு காண முடியாது, திருப்தியுடன் வாழ முடியாது. அன்பில்லாமல் கடவுளே இல்லை. அன்பின் அனுபவத்தின் உச்சகட்டம்தான் கடவுள்.

உங்கள் அன்பு போலியாக இருப்பதால் - உங்களால் போலியான அன்பைத்தான் சமாளிக்க முடியும் என்பதால்

(போலியான அன்பில் பயம் இருக்காதே!) - உங்கள் கடவுளும் ஒரு போலிதான். கிறிஸ்தவர்களின் கடவுள், இந்துக்களின் கடவுள், யூதர்களின் கடவுள் - எல்லாருமே போலிகள் தான்.

கடவுள் எப்படி இந்துவாக, கிறிஸ்துவனாக, முகமதியராக, யூதராக இருக்க முடியும்? அன்புக்கு மதச்சாயம் பூச முடியுமா? அன்பிலே, இந்து-அன்பு, முகமதிய-அன்பு, யூத-அன்பு, கிறிஸ்தவ-அன்பு என்ற பாகுபாடுகள் இருக்க முடியுமா என்ன? ஆனால் 'கிறிஸதவ-அன்பு' என்பதைப் பற்றி பல புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. வேடிக்கை மனிதர்கள்!

இந்த பூமியே ஒரு பெரிய திறந்த வெளி பைத்தியக்கார ஆஸ்பத்திரியைப் போல் செயல்படுகிறது. விரைவில் கிறிஸ்தவ ரோஜாக்கள், இந்து மல்லிகை, முகமதிய கனகாம்பரம், பௌத்த தாமரை பற்றியெல்லாம் புத்தகங்கள் வெளிவரும்.

அன்பில் கிறிஸ்தவ அன்பு இருக்கும் போது, ரோஜாக்களில் கிறிஸ்துவ ரோஜா இருக்கக்கூடாதா என்ன? போலியாக இருக்கும் எதையும் சமாளிப்பது எளிது. திருமணத்தைச் சமாளித்துவிடலாம். உண்மையான அன்பை, காதலை சமாளிக்க முடியாது.

எல்லாமே உங்கள் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைத்தால், 'எனக்குப் பயமே வரக்கூடாது' என்று நீங்கள் நினைத்தால் இந்த பொம்மைகளையும் போலிகளையும் வைத்துக் கொண்டு காலம் முழுவதும் விளையாடிக் கொண்டிருங்கள். மெய்யான அன்பும், மெய்யான கடவுளும் உங்களுக்குரியன அல்ல.

ஆனால் நீங்கள் இங்கே என்னிடம் வரும் போது இந்த பொம்மைகளையும், போலிகளையும் தூக்கியெறிய வேண்டும். என்னுடையே வேலையே இதுதான். எல்லா பொம்மைகளையும் அழிப்பது. நீங்கள் உங்கள் வாழ்நாளில் இது வரை பொம்மை களுடன் விளையாடிக் கொண்டிருந்தீர்கள் என்பதை உங்களுக்கு உணரவைப்பது.

உங்களுக்கு இன்னும் பக்குவம் வரவில்லை. இன்னும் மனதளவில் குழந்தையாகவே இருக்கிறீர்கள் என்பதை உங்களுக்குப் புரிய வைப்பது. வளர்ந்தபின் குழந்தைக்குரிய அறிவுடன் செயல்படுவதைப் போன்ற அசிங்கம் வேறு எதுவும் இல்லை. குழந்தையைப் போல் வெகுளித்தனமாக இருப்பது என்பது வேறு. குழந்தையைப் போல் பக்குவமில்லாமல், குழந்தை-அறிவுடன்

இருப்பது என்பது வேறு. முன்னது ஒரு வரப்பிரசாதம். பின்னது ஓர் ஊனம். முப்பது வயதில் நீங்கள் காகிதக் கப்பல்களுடனும், யானைப் பொம்மையுடனும் விளையாடிக் கொண்டிருந்தால் பார்க்க நன்றாகவா இருக்கும்?

ஒருவர் நல்ல விழிப்பு நிலையில் ஒருமைப்பாடுடன் பிரிவினை இல்லாமல் இருக்கும் போது அவரிடம் குழந்தையிடம் இருக்கும் வெகுளித்தனம் இருக்கிறது. அப்போது பிரபஞ்ச இருப்புநிலையின் மொத்த அழகையும் உணரும் வல்லமை பெறுகிறார். மென்மையாக இருக்கும் அவரது உணர்வுகளின் காரணமாக அவரது வாழ்க்கையே பெருக்கெடுத்து ஓடும் அன்பின் வெள்ளமாக அமைந்துவிடுகிறது.

மிகவும் அழகான பிரபஞ்ச இருப்புநிலை உங்களை நாலாபக்கங்களிலும் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அந்த அழகு உங்களை இருந்த இடத்திலேயே நடனம் ஆட வைக்கவில்லை என்றால் உங்கள் வாழ்க்கைக்கே அர்த்தமில்லாமல் போய்விடும். நீங்கள் இறந்தவருக்குச் சமமாகி விடுவீர்கள். நீங்கள் ஏற்கனவே இறந்திருக்க வேண்டும். கல்லறையில் இருக்க வேண்டிய ஆசாமி தவறுதலாக வெளியே இருக்கிறீர்கள். அவ்வளவுதான்.

நான் உங்கள் கல்லறையில் இருந்து உங்களை வெளியே இழுக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். ஏசு நாதர் இறந்தவனை உயிர்ப்பித்தாரே அதைப் போல் நான், “லாசரஸ், உன் கல்லறையில் இருந்து வெளியே வா.” என்று கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறேன். என் கூச்சல் செத்தவன் செவியில் விழுமா?

நீங்கள் கல்லறைக்குள்ளேயே வாழப் பழகிவிட்டால், அதன் பின் அதைவிட சுகமான இடம் ஒன்றை உங்களால் பார்க்க முடியாது. கல்லறைகள் வசதியான இருப்பிடங்கள். அதைவிட வசதியான வீடு இந்த பூமியில் வேறு எங்கும் இல்லை.

கல்லறையில் ஒன்றுமே நிகழ்வதில்லை. அங்கே பயம் இல்லை. குறிப்பாக மரண பயம் இல்லை. ஏற்கனவே செத்துப் போனவர்கள் மீண்டும் சாக முடியாதே! அதனால் அங்கே மரணம் குறித்த பயம் இல்லை. நோய் இல்லை, வலி இல்லை, முதுமை இல்லை, ஒன்றும் இல்லை. அங்கே யாரும் உங்களை ஏமாற்ற முடியாது. உங்களிடம் யாரும் கொள்ளையடிக்க முடியாது. அங்கே நீங்கள் திவாலாக முடியாது. அங்கே நீங்கள் பத்திரமாக, பாதுகாப்பாக இருப்பீர்கள்.

ஆனால் வாழ்க்கை பாதுகாப்பற்றது. ஆபத்தானது. ஆபத்தான வாழ்க்கை எப்படி வாழ்வது என்பதைத்தான் நான் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறேன். வாழ்வதற்கு ஒரே வழி அதுதான். ஆபத்தில்லாத வாழ்க்கை வாழ்க்கையேயில்லை.

நீங்கள் வசதியாக, பத்திரமாக, ஆபத்தில்லாமல், பாதுகாப்பாக வாழ வேண்டும் என்று நினைத்தால், நீங்கள் சாவை நாடிவிட்டீர்கள் என்று அர்த்தம். நீங்கள் தற்கொலை செய்து கொள்ளவும் துணிந்து விட்டீர்கள் என்று பொருள். நீங்கள் ஒரு கோழை.

உங்கள் பயம் உண்மையானது தான். உங்கள் வாழ்க்கையில் மிக முக்கியமான நிகழ்வு ஒன்று இப்போது நிகழ்ந்து கொண் டிருக்கிறது. இப்போது பின் வாங்காதீர்கள்.

*நான் உங்களை நெருங்க நெருங்க நான் என்னையே நெருங்குவது போலத் தோன்றுகிறது. நான் என்னையே நெருங்க நெருங்க உங்களை நெருங்குவது போல் தோன்றுகிறது. அதே சமயத்தில் மனதில் ஓர் இனம் புரியாத பயமும் இருக்கிறது. நான் அன்பைப் பார்த்து அஞ்சுகிறேனா?*

அந்த பயம் வரட்டும். அதுதான் வாழ்க்கையின் ஆரம்பம். அதை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். அதனை அனுபவியுங் கள். அது உங்களுக்கு தீங்கு விளைவிக்காது. அது உங்களுக்கு உதவி செய்யும். அது உங்களை மேலும் வலு உள்ளவராக ஆக்கும். நிறைந்த தன்னுணர்வோடு அந்த பயத்தை உங்களால் அனுபவிக்க முடிந்தால் அந்த பயம் விரைவில் மறைந்துவிடும். தீக்குள் சென்று திரும்பும் தங்கத்தைப் போல் இன்னும் பரிசுத்தமாக, இன்னும் அதிக ஒளியோடு நீங்கள் வெளியே வருவீர்க்ள.

அன்பு என்பது அகந்தையின் சாவு மணி. அதனால்தான் உங்களுக்கு அந்த பயம் ஏற்படுகிறது. அன்பைப் பார்த்து அகந்தை பயந்து நடுங்குகிறது. அகந்தை அன்பு காட்டுவது போல் பாசாங்கு செய்யலாம். ஆனால் அதனால் உண்மையாக அன்பு காட்ட முடியாது. ஓர் எல்லை வரை தான் அகந்தை போக முடியும். அதன் பின் அகந்தை பயத்தில் நடுங்க ஆரம்பித்துவிடும். அதன் அது தனக்குள்ளேயே சுருங்கிக் கொள்ளும். வந்த வழியே திரும்பு வதற்கு முயற்சி செய்யும். அன்பு வயப்பட்ட எல்லாருக்கும் இது தெரியும்.

என்னிடம் இருக்கும் அன்பு சாதாரணமாக மக்கள் காட்டும் அன்பை விட பலமடங்கு ஆழமானது. ஓர் ஆச்சாரியனுக்கும்,

அவனுடைய சீடனுக்கும் இருக்கும் அன்புதான் இந்த பிரபஞ்ச இருப்புநிலையிலேயே மிகவும் ஆழமான அன்பு. அது நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்தது. நம்பிக்கை என்பது இங்கே மூடநம்பிக்கையைக் குறிக்காது. தெரியாத விஷயங்களின் மேல் குருவின் மேல் உள்ள பக்தி காரணமாக ஏற்படும் அபரிமிதமான நம்பிக்கை அது.

பைத்தியக்காரனுடன் ஓட்டைப் படகில் கடலுக்குள் இறங்கும் செயலுக்குச் சமமானது அந்த நம்பிக்கை. பாதுகாப்பையும், பத்திரத்தையும், ஜாக்கிரதை உணர்வையும் கரையில் விட்டுவிட்டு ஆபத்துக்களை மட்டும் துணையாகக் கொண்டு தெரியாத வழியில் அது வரை போகாத ஊருக்குப் போகும் அற்புத, ஆன்மிகப் பயணம் அது. ஆச்சாரியனுடன் அன்புறவு ஏற்படுவது என்பது உலகத்தின் கண்களில் பைத்தியம் பிடிப்பதற்குச் சமமாகும்.

ஒரு நாள் அதிகாலை நேரம். ஏசு நாதர் ஓர் ஏரிக்கு வந்தார். சூரியன் தொடுவானத்தில் தனது செங்கதிர்களைக் காட்டிக் கொண்டிருந்தான். ஒரு மீனவன் அப்போது தான் தன் வலையை வீசியிருந்தான். அது ஓர் அழகான காலை. பறவைகளின் ஆனந்தப் பாட்டு, ஏரியின் ஆழமான அமைதி எல்லாமாகச் சேர்ந்து கிறங்கடித்துக் கொண்டிருந்தன.

ஏசு நாதர் அந்த மீனவனின் தோளின் மேல் தனது கைகளை மென்மையாக வைத்தார். அவன் திரும்பிப் பார்த்தான். சில நொடிகளுக்கு இருவருமே பேசவில்லை. ஏசு நாதர் அவன் கண் களுக்குள் பார்த்தார். அவரது அன்பில் வீழ்ந்தான் அந்த மீனவன். அங்கு ஏதோ ஓர் அற்புதமான நிகழ்வு நடந்தேறி யிருந்தது.

"எத்தனை நாளைக்குத்தான் நீ இப்படி மீன் பிடித்துக் கொண்டிருக்கப் போகிறாய்? என்னுடன் வா. அன்பு வலையை வீசி, கடவுளை எப்படி அதில் பிடிப்பது என்று உனக்குச் சொல்லித் தருகிறேன்."

அந்த மீனவனின் மனதில் அசாத்திய துணிச்சல் இருந்திருக்க வேண்டும். கையில் இருந்த வலையை ஏரியில் கடாசினான். எந்தக் கேள்வியும் கேட்காமல் ஏசு நாதரைப் பின் தொடர்ந்தான். "யார் நீங்கள்? என்னை எங்கே அழைத்துச் செல்கிறீர்கள்?" போன்ற கேள்விகளை அவன் கேட்கவில்லை.

மனவியல் நிபுணர்கள், ஏசு நாதர் அவனை வசியம் செய்து விட்டார் என்று சொல்வார்கள். சத்தியமாக அது வசிய வேலை

இல்லை. அது வசியம் என்றால் மிகச் சில அதிர்ஷ்டக்காரர்களுக்கு மட்டுமே அத்தகைய பாக்கியம் கிடைத்திருக்க வேண்டும். அது வசியம் இல்லை. வசியத்திற்கு ஆங்கிலத்தில் hypnosis என்று சொல் வார்கள். அந்த வார்த்தையின் மூலத்தை ஆராய்ந்து பார்த்தால், அது தூக்கம் என்ற வார்த்தையில் இருந்து வந்த சொல் என்று நமக்குப் புரியும்.

அந்த மீனவன் தூக்கத்தில் இல்லை. உள்ளதைச் சொல்ல வேண்டுமென்றால் அதுவரை தூக்க நிலையில் வாழ்ந்தவன் அப்போதுதான் முழுமையாக விழித்துக் கொண்டு ஏசுநாதரைத் தொடர்ந்து சென்றான்.

அது வரை அவனது மொத்த வாழ்க்கையுமே மீன்பிடிப்பதில் தான் கழிந்தது. அது தான் தூக்கம். இப்போது கடவுளைப் பிடிக்க ஏசு நாதரைத் தொடர்ந்து போகிறானே, அது தான் உண்மையான விழிப்பு. இப்போது ஏசு நாதர் அவன் மனதில் ஒரு புதிய ஏக்கத்தை விதைத்திருந்தார். ஒரு புது ஆசையை ஊட்டியிருந்தார். அவன் இதயத்தில் ஒரு புதிய நம்பிக்கை நட்சத்திரம் உதயமாகி யிருந்தது. ஏசு நாதரைப் பின் தொடர வேண்டும் என்று நினைத் தான் அந்த மீனவன். நினைத்ததை உடனே செயல்படுத்தினான்.

அவர்கள் இருவரும் நகரத்துக்கு வெளியே போய்க் கொண்டிருந்த போது, இன்னொரு மனிதன் அவர்களை நோக்கி ஓடி வந்தான். ஓடி வந்தவன் அந்த மீனவனைப் பார்த்து பதைபதைப்புடன் கேட்டான்,

"நீ எங்கே போகிறாய்? இந்த ஆசாமிக்குத்தான் கிறுக்குப் பிடித்திருக்கிறது என்றால் உனக்கு என்ன ஆயிற்று? உனக்குமா புத்தி மழுங்கி விட்டது? உடனே என்னுடன் வீட்டுக்கு வா. நோய் வாய்ப்பட்டிருந்த உன் தந்தை காலமாகிவிட்டார். அவரது ஈமச் சடங்கை நாம் நல்லபடியாக நடத்த வேண்டும். உடனே என்னுடன் வா."

முதன் முறையாக அந்த மீனவன் ஏசு நாதரைப் பார்த்துப் பேசினான்.

"இறந்த என் தந்தைக்கு ஒரு மகனாக நான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து முடித்துவிட்டு வர மூன்று நாட்கள் அவகாசம் தர முடியுமா?"

ஏசுநாதர் புன்முறுவலுடன் சொன்னார்.

“கவலைப் படாதே. நகரத்தில் செத்தவர்கள் அதிகம் பேர் இருக்கிறார்கள். அவர்கள் பார்த்துக் கொள்வார்கள். இறந்தவர்கள் இறந்தவர்களைப் புதைக்கட்டும். நீ என்னுடன் வா. நீ என்னுடன் வந்தால் அதன் பின் திரும்பிச் செல்ல முடியாது. என்னைத் தேர்ந்தெடுத்தால் நீ இதுவரை வாழ்ந்த வாழ்க்கையை உதறித் தள்ளிவிட வேண்டும். வா, என்னுடன்.”

அந்த மீனவன் ஏசு நாதரைப் பின் தொடர்ந்தான். செய்தி சொல்ல வந்தவன் திகைத்து நின்றான். “இங்கே என்ன நடக்கிறது? அவனுடைய அப்பா அங்கே இறந்து கிடக்கிறார். இவன் யாரோ ஒரு பைத்தியக்காரன் பின்னால் போய்க் கொண்டிருக்கிறான்.”

ஏசுநாதர் ஒரு பைத்தியம் என்று தான் அந்த ஊரில் இருந்தவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். புத்தர், மகாவீரர் எல்லாருமே அவர்கள் காலத்தில் பைத்தியங்களாகத்தான் கருதப்பட்டார்கள். அவர்கள் வாழும் வாழ்க்கை சாதாரண உலக வாழ்க்கைக்கு நேர்மாறாக இருப்பதால் மற்றவர்கள் கண்களுக்கு அவர்கள் பைத்தியங்களாகத்தான் தெரிவார்கள்.

நானும் ஒரு பைத்தியக்காரன்தான். என் மேல் அன்பு கொண்டு நீங்கள் என்னுடன் வந்துவிட்டீர்கள். நீங்கள் பயப்படுகிறீர்களோ, இல்லையோ, இனிமேல் நீங்கள் பின்வாங்க முடியாது.

தைரியமாக இருங்கள். நீங்கள் என்னுடன் வந்தேயாக வேண்டும். நமது பயணம் தொடங்கிவிட்டது. நீங்கள் கரையை விட்டுவிட்டு வெகு தூரம் கடலில் வந்து விட்டீர்கள். இனி நீங்கள் மீண்டும் கரைக்குத் திரும்பினாலும், அதே கரையைப் பார்க்க முடியாது. அது இப்போது அடியோடு மாறியிருக்கும். அப்படியே திரும்பிப் போனாலும் நீங்கள் இதுவரை வைத்து விளையாடிக் கொண்டிருந்த போலிகளும், பொம்மைகளும் இனிப் பயன்படாது.

இப்போது அவை எல்லாம் பொம்மைகள் என்று உங்களுக்குத் தெரிந்து விட்டது. இந்த அறிவு வந்தபின் அந்த பொம்மைகளை வைத்துக் கொண்டு உங்களால் விளையாட முடியாது.

இப்போது நீங்கள் உண்மையைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். நிஜமானவற்றைத் தேட வேண்டும். அநத உண்மையும், நிஜமும் வெகு தூரத்தில் இல்லை. பக்கத்திலேயே இருக்கிறது. உங்களுக்குள்ளேயே இருக்கிறது.

ஆச்சாரியன் மேல் அன்பு கொள்வது என்பது உங்களுடைய நிஜமான ஆத்மாவுடன் அன்பு கொள்வதற்குச் சமம். தாவோவுடன்

அன்பு கொள்வதற்குச் சமம். அதனால் தான் நீங்கள் சொன்ன அந்த நகைச்சுவைத் துணுக்கு மிகவும் அழகாக இருக்கிறது.

*இரண்டு பைத்தியங்கள் ஒரு மதுக்கடைக்குள் நுழைந்தன. அவர்கள் உட்கார இடத்தைத் தேடிக் கொண்டிருந்தார்கள். எதிர்ப் பக்கம் பெரிய கண்ணாடி இருக்கும் இடத்தில் அவர்கள் அமர இடம் கிடைத்தது.*

*கண்ணாடியைப் பார்த்த முதல் பைத்தியம் சொன்னது,*

*"அங்கே அமர்ந்திருக்கும் அந்த இரண்டு பேரைப் பார். அவர்களைப் பார்த்தால் தெரிந்தவர்கள் போல் தெரிகிறது. வா, போய் ஒரு வணக்கம் சொல்லிவிட்டு வருவோம்."*

*இருவரும் நகர ஆரம்பித்ததும், இரண்டாவது பைத்தியம் கண்ணாடியைப் பார்த்துவிட்டுச் சொன்னது,*

*"அவர்களும் நம்மைப் பார்க்க வந்து கொண்டிருக்கிறார்கள். வா, நாம் போய் நமது இடத்தில் அமர்ந்து கொள்வோம்."*

என்னை நெருங்க நெருங்க நீங்கள் உங்களையே நெருங்கிக் கொண்டிருக்கிறீர்க்ள் என்று தான் பொருள். என்று என்னுடன் கலந்துவிடுகிறீர்களோ, அன்று உங்களுடன், உங்களுடைய நிஜமான ஆத்மாவுடன் இரண்டறக் கலந்து விடுவீர்கள். அப்போது நான் மறைந்துவிடுவேன். நான் ஒரு கருவி. நீங்கள் உங்களோடு கலக்க நான் ஒரு சாக்கு, அவ்வளவுதான். திடீரென்று நீங்கள் உங்களுடைய நிஜத்தைக் கண்டு கொள்வீர்கள்.

ஓர் உண்மையான ஆச்சாரியனின் பணி என்ன தெரியுமா? நீங்கள் உங்களைக் கண்டுபிடிக்க உதவுவது. நீங்கள் நீங்களாக இருக்க உங்களுக்கு உதவுவது. நீங்கள் நீங்களாக இருந்தாலொழிய, உங்களுக்குப் பரிபூர்ண சுதந்திரம் இருந்தாலொழிய உங்களால் உண்மையை, ஆனந்தத்தை, இறைவனைக் காணவே முடியாது.

*கடைசிக் கேள்வி:*

*ஓஷோ,*
*ஓர் ஆச்சாரியன்*
*பறவைகளிடம் சரண்ன*
*அற்புதமான பாடம்!*

மனிதர்களை விட பறவைகள் அறிவு வாய்ந்தவை. பறவை களிடம் முட்டாள்தனம் கிடையாது. இருக்க முடியாது, ஏனென்றால் பறவைகள் உலகத்தில் பள்ளிக்கூடங்கள் கிடையாது, கல்லூரிகள் கிடையாது, பல்கலைக்கழகங்கள் கிடையாது.

பறவைகளில மந்தமான பறவைகள், இரண்டுங் கெட்டான் பறவைகள் என்று எதுவும் கிடையாது. அப்படி இருக்கவும் முடியாது. ஏனென்றால் பறவைகள் உலகத்தில் கோயில், சர்ச், பள்ளிவாசல், மதம், பிரிவினை, மூடநம்பிக்கை எதுவும் கிடையாது. பறவைகளிடம் முட்டாள்தனம் இல்லை. அவை மென்மையானவை. மனிதன் மட்டும் தான் தாவோவிலிருந்து கீழே விழுந்து விட்டான்.

பறவைகள் எதற்காகவும் கவலைப்படுவதில்லை. அவை கவலைப்பட முடியாது. ஏனென்றால் அவை தாவோவுக்கு எதிராகச் செயல்படுவதில்லை. பறவைகளுக்கு அகந்தை இல்லை. அவை எளிமையாக வாழ்கின்றன. அந்த எளிமையில் தாவோவைப் பின்பற்றி வாழ்கின்றன. ஆனால் பறவைகளால் தாவோவைப் புரிந்து கொள்ள முடியாது. தாவோ பற்றிய தன்னுணர்வு பறவை களுக்குக் கிடையாது. அவை ஆனந்தமாக இருந்தாலும், ஆனந்த மாக இருக்கிறோம் என்ற தன்னுணர்வு அவற்றிடம் இல்லை.

மனிதனிடம் அந்த தன்னுணர்வு இருக்கிறது. அதனால் மனிதனால் கவலையின் உச்சத்திலும் இருந்து தவிக்க முடியும், ஆனந்தத்தின் உச்சத்தில் இருந்து அதை அனுபவிக்கவும் முடியும். மனிதன் வடிகட்டின முட்டாளாகலாம். இல்லை ஞானம் முற்றிய புத்தனாகலாம். இந்த இரண்டில் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் அதிக காலம் உங்களால் இருக்க முடியாது.

“ஏன், என்னால் பறவையைப் போல், மலரைப் போல், ஓடுகின்ற ஆற்றைப் போல், நிற்கின்ற நெடுமலையைப் போல் இருக்க முடியதா?” என்று நீங்கள் கேட்கலாம்.

அப்படி உங்களால் இருக்க முடியாது. உங்களுக்கு இரண்டு வழிகள் தான் இருக்கின்றன. ஒன்று முட்டாளின் வழி, மற்றொன்று ஞான புத்தனின் வழி. இயல்புநிலைக்குக் கீழே விழுந்து அதே நிலையில் முட்டாளாக வாழலாம். இல்லை, இயல்புநிலைக்கு மேலே சென்று புத்தனாக வாழலாம்.

பறவைகள் ஓர் அழகான வெளியிடத்தில் இருக்கின்றன. உங்களாலும் அதே வெளியிடத்தில் இருக்க முடியும். பறவைகளை

விட நன்றாக, இன்னும் ஆழமாக, நிறைந்த தன்னுணர்வுடன் இருக்க முடியும.

இயற்கையிடம் சரண்டையுங்கள். அதுதான் நான் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் பாடம். இயற்கையில் சரணடைவது என்பது தாவோவிடம் சரண்டவைதைப் போல்.

உங்களை புத்தர் என்று நீங்கள் நினைத்துக் கொள்ளமுடியாது. அவ்வளவு முட்டாள்தனமான, மூர்க்கத்தனமான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். ஏசு நாதரின் தாய்-தந்தையால் கூட அவரது மேன்மையைப் புரிந்து கொள்ள முடியவில்லை. புத்தருடைய ஞானத்தை அவருடைய தந்தை, அவருடைய மனைவி இவர்கள் கூட ஏற்றுக் கொள்ளவில்லை.

மகாவீரர் ஒரு பெரிய ஞானி என்பதை அவருடைய மனைவி, சகோதரர், மகள் இவர்கள் கூட ஏற்றுக் கொள்ளவில்லை. அப்படி இருக்கும் போது முட்டாள்தனங்களுக்கு இடையில் முட்டாளாக வாழ்ந்து கொண்டிருக்கும் நீங்கள் ஞானம் பெற்றுவிட்டீர்கள் என்று எப்படி யோசிக்க முடியும்?

1912ஆம் ஆண்டு. அமெரிக்கக் குடியரசுத் தலைவரான உட்ரோ வில்சன் வயதான, காது கேளாத தனது அத்தையைப் பார்க்கப் போனார். பாவம், அந்த அத்தைக்கு உலக நடப்புகள் அவ்வளவாகத் தெரியாது.

“இப்போது என்ன வேலையில் இருக்கிறாய், உட்ரோ?” என்று கேட்டார் அந்த செவிட்டு அத்தை.

“நான் இப்போது தலைவராக இருக்கிறேன்.”

“எதற்கு?”

“ஐயோ, அத்தை நான் இப்போது குடியரசுத் தலைவன். ஜனாதிபதி. ஐக்கிய அமெரிக்க நாட்டின் தலைவன்.”

“போ, உட்ரோ, உனக்கு எப்போதும் குறும்புதான். முட்டாள்தனமாக எதையாவது பேத்தாதே. உண்மையைச் சொல்.”

தனது மருமகன் அமெரிக்காவின் ஜனாதிபதி ஆகக்கூடும் என்று அந்த மூதாட்டியால் நம்ப முடியவில்லை. ஆனால் அமெரிக்க ஜனாதிபதியாவது அப்படி ஒன்றும் கம்ப சூத்திரம் இல்லை. யார் வேண்டுமானாலும் ஆகலாம். அதற்குப் பதிலாக உட்ரோ வில்சன், “ நான் ஏசு நாதராகிவிட்டேன்” என்று

சொல்லியிருந்தால், அந்த மூதாட்டி உண்மையிலேயே வாய்விட்டுச் சிரித்திருப்பாள்.

'முட்டாள்தனமாக எதையாவது பேத்தாதே' என்று சொன்ன தோடு நிற்காமல், 'உட்ரோ, உனக்கு பைத்தியம் முற்றிவிட்டது. முதல் காரியமாக ஒரு நல்ல மன நல மருத்துவரைப் போய்ப் பார். இல்லை பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்ந்து கொள். ஏன் இப்படி கிறுக்குத்தனமாக உளறுகிறாய்?' என்று அறிவுரை சொல்லியிருப்பாள்.

பறவைகளுக்கு அறிவு அதிகம். அதுவும் இங்கே வசிக்கும் பறவைகள் இந்த புத்தர் அரங்கில் இருக்கும் நல்ல அதிர்வுகளை உள்வாங்கிக் கொள்கின்றன. சில சமயம் நீங்கள் கூட அந்த அதிர்வுகளை உள்வாங்கிக் கொள்வதில்லை. ஆனால் பறவைகள் நல்ல விஷயங்கள் எதையும் தவறவிடுவதில்லை. பறவைகளுக்கு தன்னுணர்வு இல்லையே தவிர, இங்கு இருக்கும் அமிர்தமாகிய நல்ல விஷயங்களை அப்படியே உறிஞ்சிவிடுகின்றன.

ஒரு குடும்பம் வீடு மாறிப் போய்க் கொண்டிருந்தது. அவர்களுடைய சாமான் செட்டு ஒரு மாட்டு வண்டியில் ஏற்றப்பட்டிருந்தது. தளவாட சாமான்கள் ஒன்றன் மேல் ஒன்றாக குவித்து வைக்கப்பட்டிருந்தன. அவை கீழே விழாமல் இருக்க கயிறால் கட்டப்பட்டிருந்தன. அவற்றின் மேல் அவர்கள் வளர்த்துக் கொண்டிருந்த கிளி ஒரு கூண்டுக்குள் இருந்தது.

சாலை குண்டும் குழியுமாக இருந்தது. வண்டி ஏதாவது குழியில் இறங்கி ஏறும் போது, அந்த அதிர்ச்சியில் மேலே இருந்த கிளிக் கூண்டு கீழே விழுந்துவிடும். அதன் பின் யாராவது அதைத் தூக்கி மீண்டும் அதே இடத்தில் வைப்பார்கள். அடுத்த பள்ளத்தில் வண்டி இறங்கும் போது மீண்டும் அந்த கூண்டு கீழே விழும். அதை யாராவது எடுத்து வைப்பார்கள். இப்படியே ஐந்து முறை கீழே விழுந்து விட்டது அந்தக் கிளி.

அடுத்த முறை கீழே விழும் போது வெறுப்பில் கத்தியது அந்தக் கிளி.

"அந்தப் பாழாப் போன புது விலாசத்த என்கிட்ட கொடுத்தா நான் பாட்டுக்கு சிவனேன்னு நடந்தே போயிருவேன்ல? ஏன்யா இப்படி சித்திரவதை பண்றீங்க?"

○

## 9. தாவோ பார்த்துக் கொள்ளும்!

வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:

மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து அப்பால் செல்லும் வலிமையை மனிதன் பெறும் போது, அமைதியிலும் தூய்மையிலும் அவன் நிறைந்திருக்கும் போது, அந்த மனிதனுக்குள் வானும் மண்ணும் இணைந்து இருக்கும்.

மனிதனின் ஆன்மா தூய்மையையே விரும்புகிறது. ஆனால் மனிதனின் மனம் கொஞ்சம் கலகம் செய்து பார்க்கிறது. மனிதனின் நெஞ்சம் அமைதியையே விரும்புகிறது. என்றாலும் அவனது ஆசைகள் அவனை செயல்கள் செய்யத் தூண்டுகின்றன.

எப்போது ஒரு மனிதனால் தனது ஆசைகளை நிரந்தரமாகக் கட்டுப்படுத்த முடிகிறதோ, அப்போது அவன் தானாகவே அமைதியடைகிறான். மனதில் உள்ள மேகங்கள் விலகும் போது, ஆன்மா தூய்மையானதாக விளங்கும்.

அதன் பின் நிச்சயமாக ஆறுவிதமான ஆசைகள் எழாமலே போய்விடும். மூன்று வகையான விஷயங்கள் முற்றிலுமாக முறியடிக்கப்படும்.

மனிதனுக்கு இந்த சக்தி இல்லாததற்குக் காரணம் அவன் மனம் தெளிவில்லாமல் இருப்பதுதான். அவனது ஆசைகள் கட்டுக்கு அடங்காமல் இருப்பது தான்.

ஆசைகளைக் கடந்து செல்லும் வல்லமை படைத்த ஒருவன் தனக்குள்ளே பார்த்து மனதைப் பற்றி

*நினைக்கும் போது, தன் மனதிற்குள் மனம் இல்லை என்பதை உணர்ந்துவிடுகிறான். வெளியே பார்த்து, வெளியே தெரியும் வடிவங்களைப் பற்றி விசாரம் செய்யும் போது, அந்த வடிவத்திற்குள் வடிவம் இல்லை என்பதை அறிந்து கொள்கிறான்.*

*இன்னும் தூரத்தில் இருப்பனவற்றைப் பார்க்கும் போது, பருப்பொருளைப் பற்றி விசாரம் செய்யும் போது, பருப்பொருளிற்குள், பருப்பொருள் இல்லை என்பதை உணர்ந்து கொள்கிறான்.*

**தா**வோ தன்னிச்சையான செயல்பாட்டைத்தான் நம்புகிறது. கஷ்டப்பட்டு நல்ல குணங்களை வளர்த்துக் கொள்வதை தாவோ நம்பவில்லை. பாடுபட்டு உருவாக்கும் நற்பண்புகளை தாவோ பெரிதாக நினைப்பதில்லை. மனச்சாட்சிக்குக் கூட தாவோ அதிகம் மதிப்பு கொடுப்பதில்லை.

அவை எல்லாம் அகந்தையின் வெளிப்பாடுகள். தாவோ அகந்தைக்கு எதிரானது. கையில் எதையும் பிடித்து வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் விட்டுவிடும் நிலையைத்தான் தாவோ நமக்குக் கற்றுத் தருகிறது. பிரபஞ்ச இருப்புநிலையுடன் பரிபூர்ணமாக ஒன்றி இருக்கும் நிலையைத்தான் தாவோ கொண்டாடுகிறது.

அந்த நிலையில் நமக்கும் பிரபஞ்ச இருப்புநிலைக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. நீங்கள் அதன் பகுதியில்லை. நீங்கள்தான் பிரபஞ்ச இருப்புநிலையே என்னும் அளவிற்கு தாவோ உங்களை உயர்த்துகிறது. நீங்கள் அலைகள் இல்லை. நீங்கள் தான் கடல். அதனால் தான் நீங்கள் செய்வதற்கு ஒன்றும் இல்லை என்று தாவோ திட்டவட்டமாகக் கூறுகிறது. தாவோ செய்வது பற்றிய விஞ்ஞானம் அல்ல. அது இருப்புநிலை பற்றிய மெய்ஞ்ஞானம்.

எல்லா மதங்களும் செயல்பாடுகளையே வலியுறுத்துகின்றன. அவை கட்டளைகளைத்தான் நம்புகின்றன. 'இதைச் செய். அதைச் செய்யாதே' என்று அவை தொடர்ந்து ஆணைகள் இட்டுக் கொண்டேயிருக்கின்றன. பௌத்த மத நூல்களைப் பார்க்கும் போது துறவிகளுக்கு 33000 விதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன என்பது தெரிகிறது. அத்தனை விதிகளை நினைவில் வைத்துக் கொள்வதே இயலாத காரியம்.

மக்களால் பைபிள் சொல்லும் பத்து கட்டளைகளையே சரியாக நினைவில் வைத்துக் கொள்ள முடியவில்லை. 33000 விதிகளை எப்படி மறந்து போகாமல் மனதில் வைத்திருப்பதாம்? அப்படியே நினைவு வைத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தாலும் அவர்களது மொத்த வாழ்நாளும் அதற்கே சரியாகிவிடும்.

நினைவில் வைத்துக் கொள்ளவே ஒரு வாழ்நாள் வேண்டும் என்றால் அவற்றைக் கடைப்பிடிக்க..... அப்பா.. நினைக்கவே நடுக்கமாக இருக்கிறது. அவற்றை முழுவதுமாக கடைப்பிடிக்க பல கோடி ஜென்மங்கள் எடுக்க வேண்டும்.

இதனால் தான் ஒரு வேளை கீழை நாடுகளில் மறுபிறவியின் மேல் நம்பிக்கை உண்டாயிற்றோ? தெரியவில்லை. இந்த மாதிரி ஆயிரக்கணக்கான விதிகள் இருந்தால் அவற்றை எல்லாம் கடைப் பிடிக்க சத்தியமாக ஒரு வாழ்நாள் போதாது. ஆயிரம் வாழ்நாள் கூட போதாது. லட்சக்கணக்கான ஜென்மங்கள், கோடிக்கணக்கான ஜென்மங்கள் வேண்டும்.

இப்படி ஒரு நிலை இருந்தால் எதையும் தள்ளிப் போடும் மனப்பாங்கு தான் வளரும். நாளை என்பது பெரிதாகிக் கொண்டே போகும். ஒரு காலகட்டத்தில் நாளை என்பது கருத்து வரம்பு கடந்த ஒன்றாகி விடும். அதன் பக்கத்தில் இன்று என்பது மிகச் சிறிய துளியாகத் தோன்றும்.

“இன்று நான் எப்படி இருக்கிறேனோ அப்படியே இருந்துவிடுகிறேன். நாளையில் இருந்து நான் மாறப் பார்க்கிறேன். எப்படியும் இன்று என்பது கடலில் கரைத்த பெருங்காயமான ஒரு சிறு துளிதானே! அந்தத் சிறு துளி காலத்தில் என்ன செய்ய முடியும்? நான் நாளையில் இருந்து தொடங்குகிறேன்.”

நாளை வந்தவுடன் மீண்டும் இதே வசனத்தைப் பேசலாம். சொல்லப் போனால் அந்த ‘நாளை’ என்பதே வராமலேயே போய்விடும்.

தாவோ இந்த கணத்தை மட்டுமே நம்புகிறது. தாவோவுக்கு வருங்காலம் என்றால என்னவென்றே தெரியாது. இந்த கணத்தை நீங்கள் தூய்மையாக, அமைதியாக தன்னிச்சையாக கழிக்க முடியும் என்றால் அதன் பின் உங்கள் வாழ்க்கையே மாறிவிடும்.

அந்த மாற்றத்தை நீங்கள் கொண்டுவரவில்லை. நீங்கள் உங்கள் முயற்சியால் மாறவில்லை. தாவோ உங்களை

மாற்றிவிடுகிறது. கடலை நோக்கி செல்லும் ஆறு உங்களையும் அந்த பயணத்தில் சேர்த்துக் கொள்ள அனுமதியுங்கள் அது போது. ஆற்று நீரை கடலை நோக்கி நீங்கள் தள்ளிவிட வேண்டியதில்லை.

ஆனால் இவ்வளவு மகத்தான உண்மைகளை மொழியின் மூலமாக விளக்கத் தலைப்படும் போது பல பிரச்சினைகள் எழுகின்றன. மொழி என்பது நாம் கண்டுபிடித்தது. மொழியைக் கண்டுபிடித்தவர்கள் ஞானிகள் அல்லர். லா ட்சூ, சுவாங் சூ கோ ஹ்சுவான் போன்றவர்கள் மொழியைக் கண்டுபிடிக்கவில்லை.

மொழியைக் கண்டுபிடித்தது, சராசரியான, சாதாரணமான, இரண்டுங்கெட்டான் மக்கள். இந்த உலகம் முழுவதும் அத்தகைய மக்கள் தான் நிறைந்து இருக்கிறார்கள். அவர்களுடைய படைப்புத்தான் மொழி. அதனால்தான் மொழி அவர்களது ஆசைகளை, அவர்களது மனப்பாங்கை, அணுகுமுறையை தாங்கி நிற்கிறது. அதனால் இவ்வளவு மகத்தான உண்மைகளை எந்த மொழியில் எந்த வார்த்தையில் எப்படிச் சொன்னாலும் சரி, அது சரியான அர்த்தத்தைக் கொடுப்பதில்லை. அது மட்டுமல்ல, ஆழமாகப் பார்த்தால் அடிப்படை தவறுகள் கூட அதில் இருக்கும்.

அதுவும் இந்த சூத்திரங்களைப் பற்றி இன்னொரு விஷயத்தையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். இவை முதன் முதலில் சீன மொழியில் எழுதப்பட்டவை. மற்ற மொழிகளுக்கும் சீன மொழிக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. உலகத்திலேயே கடினமான மொழி சீன மொழிதான். அதில் எழுத்துகளே இல்லை. எல்லாம் படவடிவங்கள் தான். படவடிவத்தில் இருக்கும் மொழிகள் மிகவும் தொன்மையானவை.

மனிதனின் உணர்வு நிலை தோன்றிய காலத்திலேயே அந்த படவடிவ மொழிகள் தோன்றியிருக்க வேண்டும். ஏனென்றால் மனிதன் குழந்தையாக இருக்கும் போது படங்களின் மூலமாகத்தான் சிந்திக்கிறான். அவனால் சொற்களில், எழுத்துகளில் சிந்திக்க முடியாது. மனிதனின் குழந்தைப்பருவ மொழி படங்கள்தான். அதனால் தான் குழந்தையின் புத்தகங்களில் படங்கள் அதிகமாக இருக்கின்றன. எழுத்துகள் கொஞ்சமாகவும் படங்கள் அதிகமாகவும் இருக்கின்றன.

குழந்தைகளுக்கு எழுத்துக்களின் மேல் அவ்வளவாக ஆர்வம் இருக்காது. படங்கள் தான் குழந்தைகளுக்குப் பிடித்த பாஷை. ஓர் அழகான, மஞ்சள் வண்ண மாம்பழத்தின் படத்தைப்

பார்த்தவுடன், ஒரு குழந்தைக்கு அதன் பெயர், அதை எப்படி எழுதுவது, அதன் சுவை எப்படி இருக்கும் போன்ற விஷயங்களில் ஆர்வம் ஏற்படும். படத்தின் கீழே சில வார்த்தைகள் எழுதப்பட்டிருந்தால் குழந்தை அதைப் படிக்கலாம்.

ஆனால் வார்த்தைகள் கொஞ்சமாகத்தான் இருக்க வேண்டும். போகப் போக படங்களில் உள்ள ஆர்வம் குறைந்து எழுத்துகளில், வார்த்தைகளில் வாக்கியங்களில் ஆர்வம் ஏற்படும். பட்டப்படிப்பு படிக்கும் போது படங்கள் முழுவதுமாக மறைந்து விடுகின்றன.

ஒரு நூல் எவ்வளவு அறிவார்ந்ததாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு படங்கள் குறைவாக இருக்கும். எல்லாமே மொழிதான். நீங்கள் கனவு காணும் போது அது காட்சிகளாக, வண்ணப்படங்களாகத்தான் உங்கள் நினைவில் விரிகிறது. வார்த்தைகளிலும் வாக்கியங்களிலும் யாரும் கனவு காண்பதில்லை. ஏனென்றால் கனவு காணும் போது நீங்கள் மீண்டும் குழந்தையாகி விடுகிறீர்கள்.

சீன மொழி கனவு மொழி. கனவுகளில் உள்ள கஷ்டங்கள் நமக்குத் தெரியும. மிக விரிவான கனவு ஒன்றை இரவில் கண்டிருப் பீர்கள். ஆனால் காலையில் அந்த கனவு சரியாக நினைவுக்கு வராது. அந்த கனவு உண்டாக்கிய உணர்வு மட்டும் தான் நினைவில் இருக்கும். அது நல்ல கனவா, கெட்ட கனவா என்பதை மட்டும்தான் சொல்ல முடியும். கனவை அப்படியே விளக்குவது கொஞ்சம் கடினம்தான்.

அப்படியே விவரிக்க முடிந்தாலும் அந்த கனவின் அர்த்தத்தைப் புரிந்து கொள்வதற்கு ஒரு வல்லுனர் தேவை. அந்த வல்லுனர்கள் நேர் எதிரிடையாக அர்த்தம் கொள்வார்கள். கன்னிப் பெண்களின் கனவில் பாம்பு வந்தால் அவளுக்கு விரைவில் திருமணம் நடக்கப் போகிறது என்னும் ரீதியில் விளக்கம் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

அதுவும் ஒரு வல்லுனர் சொல்வதை மற்றொரு வல்லுனர் ஏற்றுக் கொள்ள மாட்டார். ஃப்ராய்டு (Freud) வழி வந்தவர்கள் ஒரு மாதிரியாக அர்த்தம் சொல்வார்கள். யூங் (Yung) வழி வந்தவர்கள் வேறு மாதிரியாக அர்த்தம் சொல்வார்கள். இப்போது பலதரப் பட்ட வல்லுனர்கள் இருக்கிறார்கள். பல புதிய முறைகள், படிவங்கள் கோட்பாடுகள் வந்துவிட்டன. ஆளாளுக்கு விளக்கம் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

யாருடைய கருத்தைப் படித்தாலும் அது சரி என்றே உங்களுக்குத் தோன்றும். ஏனென்றால் அவர்கள் எல்லாருமே தங்கள் கோட்பாடுகளை தர்க்கரீதியாக காரண-காரிய விளக்கங்களுடன் சொல்லியிருப்பார்கள். கனவு கண்டது நீங்கள். ஆனால் அதன் அர்த்தம் என்னவென்று உங்களுக்கே புரியவில்லை. ஏனென்றால் ஒரு கனவுக்குப் பல பரிமாணங்கள் உண்டு. பல அர்த்தங்கள் உண்டு.

சீன மொழியும் கனவுகளைப் போன்றதுதான். அது கனவுகளின் மொழி. படங்கள் வாயிலாக பொருளுணர்த்தும் அபூர்வ மொழி. ஒரு படத்துக்குப் பல அர்த்தங்கள் இருக்கும். அதனால் தான் சீன நூல்களுக்கு பலவிதமான மொழி பெயர்ப்புகள் இருக்கின்றன.

ஒரே நூலின் எந்த இரண்டு மொழிபெயர்ப்புகளும் ஒரே மாதிரியாக இருக்காது. ஏனென்றால் ஒரே படத்தை பலர் பலவிதமாகப் பார்த்துப் பொருள் கொள்ளலாம். சீன மொழி குறியீட்டு வகையைச் சேர்ந்தது. அது கவித்துவம் வாய்ந்தது. அது தேங்காய் உடைத்ததைப் போன்ற கணக்கு வகையைச் சேர்ந்தது இல்லை சீன மொழி.

இதைப் புரிந்து கொள்ளாமல் பல அறிஞர்கள் மொழி பெயர்க்கிறேன் பேர்வழி என்று பொறியில் மாட்டிக் கொண்டார்கள். இந்த முன்னுரையுடன் நாம் தாவோ நூலை அணுகினால் நமக்கு மொழிபெயர்க்கப்பட்ட வார்த்தைகளைப் புரிந்து கொள்வதில் சிரமம் இருக்காது.

இந்த சூத்திரங்கள் எழுத்து வடிவங்களால் ஆன மொழியில் எழுதப்படவில்லை. அதனால் தான் சொல்கிறேன, இதில் சொல்லப் பட்டவை எல்லாம் பொருள் விளக்கம் தான். பொழிப்புரைதான். சில இடங்களில் அந்த விளக்கங்களை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

நான் அதை மொழி பெயர்த்திருந்தால் நிச்சயம் வேறு மாதிரியாக சொல்லியிருப்பேன். எங்கே என் கருத்து வேறுபடுகிறது, அது ஏன் வேறு படுகிறது என்பதை பின்னர் விளக்குகிறேன்.

*வணக்கத்திற்குரிய ஆச்சாரியன் சொல்கிறான்:*

*மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து அப்பால் செல்லும் சக்தியை மனிதன் பெறும் போது, அமைதியிலும் தூயமையிலும் அவன் நிறைந்திருக்கும் போது, அந்த மனிதனுக்குள் வானும் மண்ணும் இணைந்து இருக்கும்.*

ஞானம் எனபது நாம் அடையக்கூடிய ஒன்று என்பது அடிப் படைத் தவறு. நீங்கள் எதையாவது அடைய வேண்டும், அல்லது உங்களால் எதையாவது அடைய முடியும் என்று தாவோ நம்பவில்லை. நீங்கள் எதை அடைய வேண்டும் என்று நினைக் கிறீர்களோ, ஏற்கனவே அதுவாகத்தான் இருக்கிறீர்கள்.

இனிமேல் அடைவதற்கு ஒன்றும் இல்லை. அடைவது, செய்வது, சாதனை என்பதெல்லாம் தாவோவிற்கு எதிரானவை. அடைவதற்கும், சாதிப்தற்கும் அங்கே ஒன்றும் இல்லை. அடைவது, சாதிப்பது இதெல்லாம் அகந்தை சம்பந்தபட்டவை. அகந்தை பேராசையில் வேரூன்றியிருக்கிறது. எதையாவது செய்ய வேண்டுமே, எதையாவது அடைய வேண்டுமே, எதையாவது சாதிக்க வேண்டுமே என்ற தவிப்பை அகந்தை உண்டாக்குகிறது.

ஒன்று, பொன்னையும், பொருளையும், செல்வத்தையும் அடைய வேண்டும். இல்லை, சித்திகள், தியானம், ஞானம் என்ற எதையாவது அடைய வேண்டும். வாழ்க்கை என்பது எதையாவது அடைய முயற்சி செய்து கொண்டேயிருப்பதுதான். அடைவது என்ற அடிப்படையில் தான் அகந்தை இயங்குகிறது.

அந்த அகந்தையைக் கரைத்துவிட வேண்டும் என்று தாவோ சொல்கிறது. நீங்கள் பேராசையுடன் இருக்கும் போது , தாவோவை அணுக முடியாது. தாவோ ஆசைகளுக்கு எதிரானது. ஆசையற்ற நிலையை தாவோ வலியுறுத்துகிறது. நீங்க்ள் நீங்களாக இருக்க வேண்டும் என்பதையே தாவோ அடிக்கடி சொல்கிறது.

நீங்கள் ஏற்கனவே நிறைவாகத்தான் இருக்கிறீர்கள். உங்கள் நிறைவுநிலையை விட்டு நீங்கள் ஒரு நொடி கூட விலகியிருந்தது இல்லை. நீங்கள் ஏற்கனவே தாவோவில் தான் இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் தாவோவைத் தொலைத்துவிட்டதாக, அதை விட்டு விலகியிருப்பதாக கனவு கண்டு கொண்டு இருக்கிறீர்கள். அந்த கனவு கலைவதே ஞானம்.

நீங்கள் தூங்கும் போது உங்கள் படுக்கையில் இருந்த படியே கனவுலகத்தில் தொலைதூர இடங்களுக்குச் செல்கிறீர்கள். படுக்கையில் இருந்தபடியே சந்திர மண்டலத்திற்கும், செவ்வாயக் கிரகத்துக்கும், நட்சத்திரங்களுக்கும் உங்களால் பயணிக்க முடிகிறது.

ஆனால் காலையில் எழுந்தவுடன் நீங்கள் உங்கள் படுக்கையை விட்டு ஓர் அங்குலம் கூட விலகியிருக்கவில்லை என்பது தெரியும்.

அதே போல் தான் நீங்கள் தாவோவை விட்டு நிஜமாக விலகுவதில்லை. ஆனால் விலகிவிட்டதைப் போல் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள்.

உங்கள் தன்னுணர்வு மேம்படும் போது வெற்றி, தோல்வி, சாதனை, வேதனை, போன்றவற்றின் அபத்தம் உங்களுக்கு விளங்கும். எதையாவது சாதிக்க வேண்டும் என்ற எண்ணம்தான் தோல்வியையும், சலிப்பையும் தருகிறது. சாதிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வெற்றி பெற்றால் அது உங்களுக்குள் வலுவான அகந்தையைத் தோற்றுவிக்கிறது.

அகந்தை என்பது துன்பத்தின் மறுபெயர். உங்கள் அகந்தை அதிகமாக அதிமாக நீங்கள் பூரணநிலையில் இருந்து அதிக தூரம் விலகிப் போகிறீரக்ள். நீங்கள் தனிச்சிறப்புப் பெற்றவர் என்ற எண்ணம் உங்களுக்குள் எழுந்துவிடுகிறது. நீங்கள் தனித் தன்மை வாய்ந்தவர், மற்றவர்களைவிட மேலானவர், புனிதமானவர் போன்ற எண்ணங்கள் உங்கள் மனதில் தோன்றுகின்றன.

உங்கள் சாதனை முயற்சியில் நீங்கள் தோற்றுவிட்டால் அதனால் வலி, பயம், வேதனை, சலிப்பு எல்லாமே உண்டாகிறது. வெற்றியோ, தோல்வியோ எதுவாக இருந்தாலும் நீங்கள் துன்பப்படுவது நிச்சயம்.

அகந்தை தான் துன்பங்களுக்கு எல்லாம் காரணம். நீங்கள் அடையும் வெற்றி, தோல்விகள் இந்த நிலையை மாற்றாது. அதனால் தாவோவில் அடைதல், சாதித்தல் போன்றவற்றுக்கு இடமேயில்லை என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

தாவோவின் மொழிபெயர்ப்பாளர் கூறுகிறார்.

*மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து அப்பால் செல்லும்* ***வலிமையை*** *மனிதன் பெறும் போது* இதில் வலிமை என்ற வார்த்தையில் எனக்கு அவ்வளவாக உடன்பாடு இல்லை. தாவோ வலிமையை நம்பவில்லை. வலிமையற்ற நிலையைத்தான் அது வலியுறுத்துகிறது. ஏனென்றால் நீங்கள் வலிமையுடன் இருக்கும் போது முழுமையை எதிர்த்துப் போர் புரிகிறீர்கள்.

ஹிட்லர் வலிமை மிக்கவன். மகா அலெக்ஸாண்டர் வலிமை மிக்கவன். ரஷியக் கொடுங்கோலன் ஐவன் வலிமை நிறைந்தவன். ஜெங்கிஸ்கான், தாமர்லேன் போன்றவர்கள் எல்லாம் வலிமை

மிக்கவர்கள்தான். அவர்கள் இயற்கைக்கு எதிராக, தன்னிச்சை நிலைமைக்கு எதிராகப் போரிட்டார்கள்.

ஏசுநாதர் வலிமை இல்லாதவர். பலவீனமானவர். அவரை சிலுவையில் அறையும் போது அவருடைய சீடர்கள் பொறுமை யில்லாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். "இதோ இப்போது ஏசு பிரான் தனது சக்தியைக் காணபிக்கப் போகிறார். ஓர் அதிசயத்தை நிகழ்த்தப் போகிறார். கடவுள் பெற்றெடுத்த ஒரே பிள்ளை என்பதை உலகுக்குக் காட்டப் போகிறார்" என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஏசுநாதர் எதையும் காட்டவில்லை. தான் யார் என்பதையும் நிரூபிக்கவில்லை. தன்னோடு சேர்ந்து சிலுவையில் அறையப்பட்ட மற்ற இரண்டு திருடர்களைப் போல் ஏசுநாதரும் சாதாரணமாக இறந்து போனார். ஏசுநாதர் நடுவில் இருந்த சிலுவையில் அறையப் பட்டார். அவருக் இரண்டு பக்கங்களிலும் இருந்த சிலுவைகளில் திருடர்கள்தான் அறையப்பட்டிருந்தார்கள்.

ஒன்றுமே நடக்கவில்லை என்பதால் ஏசுவின் பகைவர்களே ஏமாற்றமடைந்தார்கள். நண்பர்களின் ஏமாற்றம் இன்னும் அதிகமாக இருந்தது. என்ன நடந்தது? ஏசு நாதரின் வலிமை எங்கே?

அதிசயங்களை நிகழ்த்திக் காட்டிய அவருடைய சக்தி எங்கே? தன்னை தேவ சுதன், கடவுளின் பிள்ளை என்று சொல்லிக் கொண்டிருந்தாரே, ஏசுநாதர்? அது அவ்வளவுதானா?

ஆமாம். அவ்வளவுதான். கடவுளின் பிள்ளை என்றால் எந்த சக்தியும் இல்லாமல் இருப்பதுதான். எந்த வலிமையும் இல்லாமல் இருப்பதுதான் என்பதைத்தான் ஏசுநாதர் இந்த நிகழ்ச்சி மூலம் நமக்குச் சொல்கிறார்.

ஏசுநாதர், லா ட்சூ, கோ ஹ்சுவான் போன்ற ஞானிகளை நாம் தொடர்ந்து தவறாகவே புரிந்து கொண்டு வந்திருக்கிறோம். அவர்களைப் பற்றிய நமது அறியாமை வரையறையற்றது. ஏசு நாதர் இறைவனிடம் முழுமையாகச் சரண்டைந்து விட்டார். தன்னிடம் மக்கள் எதை எதிர்பார்க்கிறார்கள் என்று அவருக்குத் தெரியும். அந்த இடத்தில் ஏறக்குறைய ஒரு லட்சம் பேர் கூடியிருந்தார்கள். அவர்களில் ஏசுவின் நண்பர்கள் மிகச் சிலரே.

மக்கள் கண்களில் இருந்த எதிர்பார்ப்புகளை ஏசுநாதர் உணர்ந்து கொண்டார். அங்கே ஏதோ ஓர் அதிசயம் நிகழப் போகிறது

என்று அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். அம்மாதிரி நிகழ்வுகள் ஆயிரம் வருடங்களுக்கு ஒரு முறைதான் நிகழும்.

எல்லா மக்களும் தன்னையே கவனிக்கிறாரக்ள், தன்னிடம் பிரம்மாண்டமாக எதையோ எதிர்பார்க்கிறார்கள் என்ற எண்ணம் சில நொடிகளுக்கு ஏசுநாதரை வசியப் படுத்தியது என்னவோ உண்மைதான். அந்த இடத்தில் அந்த சூழ்நிலையில் எல்லார் மனதிலும் ஒரே ஓர் ஆசைதான் வலுப் பெற்றிருந்தது. ஏசுநாதரின் வலிமையை, அவரது சக்தியைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசைதான் அது.

அப்போது ஏசுநாதர் கடவுளைப் பார்த்துக் கேட்டார், "இறைவா, என்னைக் கைவிட்டுவிட்டாயா?" ஆனால் கேள்வியைக் கேட்டவுடன் தனது உதட்டைக் கடித்துக் கொண்டார் அவர்.

'ஆகா, தவறாகக் கேட்டுவிட்டோமே' என்று ஆதங்கப் பட்டார். ஏசு நாதர் மகா புத்திசாலி. தான் செய்த தவறை உடனே புரிந்து கொண்டார். தான் அப்படிக் கேட்டது தவறு என்பதை உடனே புரிந்து கொண்டார் அவர். கடவுள் எப்படி அவரைக் கைவிட முடியும்? கடவுள் அவரைக் கைவிட்டு விட்டார் என்ற கூற்று எதிர்மறையானது. அசிங்கமானது. அது அவருடைய நம்பிக்கையின்மையைத்தான் காட்டுகிறது.

கடவுள் அதிசயங்களை நிகழ்த்திக் காட்டினால் அவரை நம்புவது மிகவும் எளிது. கடவுள் உங்களுடைய வலிமையை நிரூபித்தால் அவரை நம்புவது மிகவும் சுலபம். யார் வேண்டு மானாலும் அதைச் செய்ய முடியும். அந்த சமயத்தில் கடவுளை நம்புவதற்கு பெரிய அறிவு தேவைப் படாது. புரிந்து கொள்ளும் திறமையும் தேவைப்படாது. அந்த மாதிரியான சூழ்நிலையில் ஒரு முட்டாள் கூட கடவுளைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும்.

ஆனால் அந்த சமயத்தில் ஒன்றுமே நடக்கவில்லை. கடைசி நிமிடமும் வந்தது. ஏசு நாதர் உடனே புரிந்து கொண்டார். இறைவன் மேல் அவருக்கிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையை வெளிப்படுத்த அதுவே சரியான தருணம் என்பதையும் தெரிந்து கொண்டார். இறைவனிடம் பரிபூரணமாகச் சரண்டைந்தார்.

'இறைவா, உன் ராஜ்ஜியம் மலரட்டும். நீ நினைத்தது நடக்கட்டும். நான் நினைத்தது எதுவும் நடக்க வேண்டாம். என்னைக்

கவனிக்காதே. நீ செய்ய வேண்டியதைச் செய்து கொண்டிரு. அது போதும். உனக்கு ஆலோசனை கூற நான் யார். நான் உன்னில் முழுவதுமாக சரணடைந்து விட்டபடியால், நான் என்பதே இங்கு இல்லை.

இதுதான் உண்மையான சக்தியற்ற நிலை. இதுதான் தாவோ. கோ ஹ்சுவானுக்கு இது நன்றாகப் புரியும். ஆனால் பாவம் யூதர்களுக்கு இந்த வலிமையற்ற நிலையின் வலிமை புரியவில்லை. அங்கே இருந்தவர்கள் எல்லாரும் யூதர்கள்தான். சிலர் ஏசுநாதரின் நண்பர்கள், பலர் அவருடைய பகைவர்கள். ஆனால் எல்லாரும் யூதர்கள்தான்.

யூதர்களின் மனம் எப்போதுமே சாதிப்பதில், சக்தியில், வலிமையில், அதிகாரத்தில் தான் லயித்திருக்கும். யூதர்களின் தீர்க்கதரிசிகள் எல்லாருமே அற்புதங்களை நிகழ்த்திக் காட்டிய வர்கள்தான். யூதர்களுக்கு ஏசுநாதரின் மேல் இருந்த கோபத்திற்குக் காரணமே அவர் மற்ற யூத சாமியார்களைப்போல் அற்புதங்களை நிகழ்த்திக் காட்டாததுதான்.

ஏசு நாதர் எந்த அற்புதங்களையும் நிகழ்த்தவில்லை என்பது தான் என் கருத்து. உண்மையிலேயே அவர் அற்புதங்களை நிகழ்த்தியிருந்தால் யூதர்கள் லட்சக்கணக்கில் அவருடைய மதத்திற்கு மாறியிருப்பார்கள். யூதர்கள் அவரைச் சிலுவையில் அறைந்திருக்க மாட்டார்கள். ஏசு நாதர் அற்புதங்கள் எதுவும் நிகழ்த்தவில்லை என்பதற்கு இதைவிட வலுவான ஆதாரம் இருக்க முடியாது.

ஏசு நாதரின் வாழ்வில் நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் அற்புதங்கள் எல்லாம் பிற்காலத்திய கிறிஸ்தவர்களின் வளமான கற்பனையே தவிர உண்மையில்லை. அற்புதங்களைக் காணத் தவித்த யூதர்களைப் போலத்தான் கிறிஸ்தவர்களும் இருந்தார்கள். அவர்களுக்கும் அதே பேராசை, சாதிக்க வேண்டும் என்ற வெறி எல்லாமே இருந்தது.

"அது எப்படி நமது கடவுளான ஏசு பிரான் அற்புதங்கள் நிகழ்த்தாமல் இருந்திருக்க முடியும்? சாதாரண மகான்களின் வாழ்க்கையிலேயே குறைந்த பட்சம் அரை டஜன் அற்புதங்கள் இருக்கும் போது, ஏசு நாதர் போன்ற வரலாறு படைத்த மகானின் வாழ்க்கையில் அற்புதங்கள் இல்லாமலா இருக்கும்?"

இப்படித்தான் பிற்காலத்திய கிறிஸ்தவர்கள் யோசித்திருக்க வேண்டும். அதன் விளைவாக அவர்கள் கற்பனையில் உதித்த சில அற்புதங்களை ஏசு நாதரின் வாழ்க்கைக்கதையில் அவர்கள் திணித்திருக்க வேண்டும். மற்ற மகான்கள் செய்து காட்டிய அற்புதங்களை விட பெரிய அற்புதங்களாகக் கண்டுபிடித்து ஏசுநாதரின் வாழ்க்கையைப் புனைந்தார்கள் அவர்கள்.

ஆனால் ஏசுநாதர் உண்மையிலேயே ஒரு தாவோ மனிதர். அவர் தான் உண்மையான சமயவாதி என்று எனக்குத் தோன்று கிறது.

நான் ஓர் அழகான கதையைக் கேட்டிருக்கிறேன். இந்த கதை எந்த ஆவணத்திலும் இல்லை. பைபிளிலோ, வேறு எந்த புத்தகத்திலோ இது பதிவு செய்யப்படவில்லை. இது ஒரு குருவிடமிருந்து மற்றொரு குருவுக்கு செவி வழிச்செய்தியாகப் போயிருக்க வேண்டும்.

மோசஸ், ஆபிரகாம், இசக்கியேல் ஆகிய மூன்று பழம் பெரும் தீர்க்கதரிசிகள் சொர்க்கத்தில் ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்து பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந் தார்கள். பைபிளின் பழைய ஆகமத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது ஆபிரகாம் சொன்னார்,

“நமக்குத்தான் பழைய ஆகமத்தைப் பற்றி நன்றாகத் தெரியுமே! இந்த நேரத்தில் நம்முடன் ஏசுநாதர் இருந்திருந்தால் புதிய ஆகமத்தைப் பற்றி அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருக் கலாம்.”

அதைக் கேட்ட மோசஸ் வாய்விட்டுச் சிரித்தார். மரத்தின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பாலகனைக் கூப்பிட்டார்.

“ஜீசஸ், எங்களுக்கு சூடாக மூன்று கப் காபி கொண்டா.” என்று ஆணையிட்டார்.

ஆபிரகாமுக்கு அதிர்ச்சி. இவ்வளவு நேரம் அவர்கள் பக்கத்தில் அறியாச் சிறுவனைப் போல் அமர்ந்திருந்தது ஏசுநாதரா?

ஆனால் ஏசுநாதர் எதைப் பற்றியும் கவலைப்படாமல் மோசஸ் கேட்டபடி காபி கொண்டு வந்து கொடுத்தார்.

இந்தக் கதையில் என்ன இருக்கிறது என்று கேட்கிறீர்களா? இது எனக்கு மிகவும் பிடித்த, மிகவும் அழகான கதை. ஏசுநாதர்

ஒருவர் தான் அப்படிச் செய்ய முடியும். அந்த மகான்கள் முன் னால் அவர் முற்றிலும் சக்தியில்லாதவராக, வலுவில்லாத்வராக, ஒரு பலவீனமான பாலகனாக, காபி கொண்டு வந்து கொடுக்கும் ஏவலாளாக நடந்து கொண்டார்.

பலவீனமாக வலுவிழந்து நின்றதுதான் ஏசுநாதர் நிகழ்த்திக் காட்டிய உண்மையான அற்புதம். அவர் தனது அகந்தையை முற்றிலுமாக அகற்றிவிட்டிருந்ததுதான் நிஜமான அதிசயம். அவர்கள் பக்கத்தில் ஏசுநாதர் உட்கார்ந்திருந்தது கூட அவர் களுக்குத தெரியவில்லை. அந்த அளவுக்கு சாதாரணமாக இருந்திருக்கிறார் ஏசுநாதர். அப்படி இருக்க அவரால் மட்டுமே முடியும். ஏசுநாதர் ஒரு வார்த்தை பேசவில்லை.

“நான் யார் தெரியுமா? ஏசு பிரான். இறைவன் பெற்றெடுத்த ஒரே புதல்வன். உங்கள் மனதில் என்ன நினைத்துக் கொண் டிருக்கிறீர்கள்? உங்களுக்குக் காபி கொண்டு வர நான் தான் கிடைத்தேனா?

“போங்கள், நீங்களே போய் காபியை எடுத்துக் கொள்ளுங்கள். இவ்வளவு பெரிய தீர்க்கதரிசிகளாக இருந்து என்ன பயன்? கடவுளின் மகனிடம் எப்படி பேச வேண்டும் என்று தெரியவில்லையே உங்களுக்கு?”

இப்படி எல்லாம் ஏசுநாதர் எதிர் பேச்சு பேசியிருப்பார் என்று தான் நாம் நினைத்திருப்போம். ஆனால் ஒரு வார்த்தை பேசாமல் சொன்னதைச் செய்தார் அவர்.

அப்படிச் செய்ய ஏசு நாதரால் மட்டுமே முடியும். லா ட்சு, கோ ஹ்சுவான், போதிதர்மர் போன்றவர்களால் மட்டுமே அப்படிச் செய்ய முடியும். இவர்கள் எல்லாம் உண்மையான மகான்கள். தங்களுடைய அகந்தையை தங்கள் ஞானத்தில் எரித்துச் சாம்பலாக்கிய தீர்க்கதரிசிகள்.

எனக்கு என்னவோ அந்த மொழிபெயர்ப்பாளர் சொல்வது போல் கோ ஹ்சுவான் சொல்லியிருக்க மாட்டார் என்று தோன்றுகிறது.

*மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து அப்பால் செல்லும் வலிமையை மனிதன் பெறும் போது..... ........ ..*

இது மொழி பெயர்ப்பாளரின் கூற்று

கோ ஹ்சுவான் எப்படிச் சொல்லியிருப்பார்? அவர் சொன்னதை நான் மொழி பெயர்த்திருந்தால் எப்படிச் சொல்லியிருப்பேன்? எனக்கு சீன மொழி சுத்தமாகத் தெரியாது. ஆனால் அது பிரச் சினையில்லை. எனக்கு தாவோவின் உள்ளே இருக்கும் சாரம் தெரியும். அதை வைத்துச் சொல்கிறேன். கோ ஹ்சுவானின் வார்த்தை கள் எப்படி மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும் தெரியுமா?

*எப்போது மனிதன் தாவோவில் முழுமையாகச் சரண் அடைகிறானோ, அப்போது மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து செல்கிறான்*

எப்போது ஒரு மனிதன் தான் ஒரு தனி ஆள் என்ற வகையில் இருக்கும் வலிமையை எல்லாம் இழக்கிறானோ, அப்போது அவன் மாறுகின்ற தன்மையுடையனவற்றை எல்லாம் கடந்து செல்கிறான்.

அதன் பின் அவன் தூய்மையிலும் அமைதியிலும் நிலை பெற்றிருக்கிறான். அப்போது அவனிடம் இருக்கும் தூய்மை அவனாகப் பழகிக் கொண்டது அல்ல. அந்த தூய்மையை அவன் வற்புறுத்தி வரவழைத்துக் கொள்ளவில்லை. அது இயல்பாகவே அமைந்து விடுகிறது.

அந்த தூய்மை நீங்கள் தொடர்ந்து பராமரிக்க வேண்டிய ஒரு பொருள் இல்லை. அதை தொடர்ந்து காப்பாற்றாவிட்டால் அது தொலைந்து விடும் என்ற நிலையில் இருக்கும் தூய்மை இல்லை அது.

நீங்கள் வழிபடும் மகான்கள் எப்போதும் அந்த தூய்மையைக் காத்துக் கொள்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். ஒரு நொடிப் பொழுது கொஞ்சம் தளர்ந்தாலும் சரி அந்த தூய்மை தங்களைவிட்டு விலகி வெகு தூரம் போய்விடும் என்று அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

அவர்கள் அந்த தூய்மையில் நிலைபெற்றிருக்கவில்லை. அது அவர்களுக்கு இயல்பாக அமையவில்லை. அது செயற்கையானது. வெளியில் இருந்து வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டது. அது அவர்களாகவே தங்கள் மேல் திணித்துக் கொண்ட ஒரு செயற்கைத் தூய்மை.

'ஐயோ, நான் இப்போது சுவாசித்தேயாக வேண்டும். இல்லா விட்டால் செத்துவிடுவேன்.' என்று யாருமே கவலைப்படுவதில்லை.

நீங்கள் உங்களை வற்புறுத்திக் கொண்டு சுவாசிக்க வேண்டும் என்ற தேவையில்லை. எப்படி சுவாசிக்க வேண்டும் என்று ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம். இல்லை.

அப்படி ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும் என்றால், நடுவே நீங்கள் ஒரு முறை சுவாசிக்க மறந்தாலும் போதும், உங்கள் கதை முடிந்திருக்கும். எப்போது நீங்கள் மூச்சிழுத்து விட மறந்தாலும் சரி - வழியே மிக அழகான ஒரு பெண்ணைப் பார்த்து திகைத்து நீங்கள் மூச்சுவிட மறந்தாலும் சரி - அடுத்த நொடியே நீங்கள் பிணமாகியிருப்பீர்கள்.

உங்களால் மீண்டும் மூச்சை உள்ளேயிழுத்து விட முடியாமல் போயிருக்குமே! ஆனால் நீங்கள் மூச்சுவிடுவது என்பது நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் போதும் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தாலும் சரி, ஏன் கோமாவில் இருந்தாலும் சரி, மூச்சுவிடுவது மட்டும் நிற்கவே நிற்காமல் நடந்து கொண்டிருக்கும். நீங்கள் மூச்சு விடுவது என்பது உங்களை நம்பி நடக்கும் செயல் இல்லை. உங்களையும் மீறித் தன்னிச்சையாக நடக்கும் செயல்.

ஒரு முறை நான் ஒரு பெண்ணைப் பார்க்கப் போயிருந்தேன். அவளுடைய கணவனுக்கு என்னை மிகவும் பிடிக்கும். ஒரு நாள் அவன் அழுது சிவந்த கண்களுடன் என்னைப் பார்க்க வந்தான்.

"ஓஷோ, என் மனைவி உங்களைப் பார்க்க விரும்பினாள். இதுதான் அவளுடைய கடைசி விருப்பம். ஆனால் கடந்த 9 மாதங்களாக அவள் பேச்சு மூச்சின்றிக் கோமாவில் கிடக்கிறாள். இனிமேல் அவள் விழித்தெழுவதற்கு வாய்ப்பேயில்லை என்று மருத்துவர்கள் சொல்லிவிட்டார்கள். அதனால் தயவு செய்து என்னுடன் வந்து அவளைப் பாருங்கள். அவளுடைய கடைசி விருப்பத்தை நிறைவேற்றுங்கள்."

அந்தப் பெண்ணைப் பார்க்க போனேன். 9 மாதங்களாக அசைவின்றிக் கோமாவில் கிடக்கும் அவளால் நன்றாக, துல்லியமாக, ஒரே சீராக மூச்சுவிடமுடிகிறது. கோமா என்பது ஏறக்குறைய சாவைப் போலத்தான். மூன்று மாதங்களுக்குப் பிறகு அவள் இறந்துவிட்டாள். ஆனால் அவள் கோமாவில் இருந்த ஒரு வருடமும் தொடர்ந்து மூச்சு விட்டுக் கொண்டிருந்தாள். அவள் சுவாசம் துல்லியமாக, எந்த வித பாதிப்பும் இன்றி இருந்தது.

தாவோ உங்கள் சுவாசத்தைக் கவனித்துக் கொள்கிறது. அது இயல்பான ஒரு நிகழ்வு. உங்கள் இரத்தம் சதா உங்கள் உடம்பிற்குள் ஓடிக் கொண்டேயிருக்கிறது. பல நூற்றாண்டுகளாக இரத்தம் உள்ள ஓடவில்லை, வாளியில் தண்ணீர் இருப்பது போல் நமது உடலில் தேங்கி நிற்கிறது என்று மனிதன் நினைத்துக் கொண்டிருந்தான்.

முந்நூறு வருடங்களுக்கு முன்னால்தான் இரத்தம் உடலுக்குள் தேங்கி நிற்பதில்லை, அது உடல் முழுவதும் நல்ல வேகத்தில் ஓடிக் கொண்டேயிருக்கிறது என்ற உண்மையை மனிதன் கண்டுபிடித்தான். அந்த இரத்த ஓட்டம் தான் நமது உடலின் உள்புறத்தை உயிர்ப்புடன், வலிமையுடன், நோய் நொடியின்றி வைத்திருக்கிறது.

அது சரி, உங்கள் இரத்தத்தை ஒரு சீராக உடல் முழுவதும் ஓட்டுவது யார்? நிச்சயமாக நீங்கள் இல்லை. நீங்கள் உங்கள் இரத்தத்தை ஓட்டினீர்கள் என்றால் எப்போதாவது நீங்கள் அதை ஓட்ட மறந்துவிட்டால் இரத்தம் ஓர் இடத்தில் உறைந்து உங்களைக் கொன்றுவிடும்.

நீங்கள் உண்ட உணவைச் செரிமானம் செய்வது யார்? நிச்சயம் நீங்கள் இல்லை. உண்மையைச் சொல்லப் போனால் நீங்கள் செரிமானத்தின் மேல் உங்கள் கவனத்தைச் செலுத்தினீர்கள் என்றால், உணவு ஜீரணமாவதைப் பற்றி சதா யோசித்துக் கொண்டிருந்தீர்கள் என்றால் அதனால் உங்கள் செரிமானம் பாதிக்கப்படும்.

அடுத்த 24 மணி நேரத்துக்கு ஓர் எளிய சோதனையைச் செய்து பாருங்கள். நீங்கள் உண்ணும் போது உணவு உங்கள் உடலுக்குள் செல்வதைப் பற்றி எண்ணிப் பாருங்கள். உள்ளே சென்ற உணவை இப்போது நீங்க்ள ஜீரணிக்க வேண்டும். இப்போது தான் பிரச்சினையே தொடங்குகிறது.

உணவு உங்களுக்கு ஒரு பாரமாக இருக்கும். வயிறு கனமாக இருக்கும். அடுத்து என்ன செய்வது என்று உங்களுக்குத் தெரியாது. உணவு உங்கள் வயிற்றுக்குள் இருக்கிறது அதை இப்போது செரிக்க வேண்டும் என்ற தன்னுணர்வுடன் இருங்கள். உங்களால் அந்த உணவைச் ஜீரணம் செய்யவே முடியாது. யோகாசனம் செய்யுங்கள். தலை கீழே நில்லுங்கள். ஓடுங்கள். குதியுங்கள். உணவைச் செரிக்க என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்.

24 மணி நேரத்தில் உங்களுக்கு வயிற்று உபாதை வந்துவிடும். இப்போது உங்களுக்குள் நடக்க இருந்த செரிமானம் என்னும் தன்னிச்சையான நிகழ்வை உங்கள் எண்ணமும் செயலும் பாதித்துவிட்டது. உணவை ஜீரணிப்பதற்கு நீங்கள் தேவையில்லை. உணவு தொண்டைக்குழியை விட்டு இறங்கியபின் அதைப் பற்றி நீங்கள் கவலைப் பட வேண்டியதில்லை. தாவோ அதனைப் பார்த்துக் கொள்கிறது.

உயிர் வாழ எவையெல்லாம் அத்தியாவசியத் தேவையோ அவை எல்லாம் இயல்பாகவே நிகழ்கின்றன. அந்த இயல்பின் வழியே முழுமையாக வாழ்வதுதான் தாவோ காட்டும் வழி. தாவோ வலிமையின்மையைக் காட்டுகின்றது.

ஆனால் அந்த வலிமையின்மையில் அதீத வலிமை அடங்கியிருக்கிறது. கடவுளின் வலிமை, பூரணத்துவத்தின் வலிமை - இவை அந்த வலிமையின்மையினுள்ளே இருக்கிறது. என் வலிமையோ, உங்கள் வலிமையோ, இல்லை வேறு எந்த மனிதரின் வலிமையோ அதில் இல்லை.

அப்படி வாழும் போது உங்களுக்குள்ளே ஒரு தூய்மை எழுகிறது. அந்த தூய்மையை உண்டாக்கியவர் நீங்கள் அல்ல. நீங்கள் அதைச் செதுக்கி வடிவமைக்கவில்லை. நீங்கள் அதை பார்க்கிறீர்கள். ஒரு சாட்சியாக பக்கத்தில் இருந்து பார்க்கிறீர்கள். அவ்வளவுதான்.

அந்த வாழ்க்கையில் ஓர் அதீத அமைதி எழுகிறது. அது மதத் தலைவர்கள் வெளியில் இருந்து திணிக்க முயற்சி செய்யும் தூய்மையையும், அமைதியையும் போன்றதில்லை.

ஆனால் உங்கள் மேல் தூய்மை திணிக்கப்படும் போது அது முழுத் தூய்மையாக இருப்பதில்லை. தூய்மை இயல்பாக இல்லாமல் ஒரு பழக்கமாக, வற்புறுத்தலின் பேரில் ஏற்பட்ட ஓர் ஏற்பாடாக இருக்கும் போது அது தன் தன்மையை இழந்து விடுகிறது. அது உணர்வுகளை அடக்கி வைக்கும் சித்திரவதையே தவிர இயல்பான தூய்மை இல்லை. அப்படி அடக்கிவைக்கும் போது அது அசிங்கமாகிவிடுகிறது. அது உங்களுக்குள் ஒரு பிரிவினையை உண்டாக்கிவிடுகிறது. அந்த பிரிவினை முற்றும் போது உங்களுக் மனச்சிதைவு ஏற்படவும் வாய்ப்பு இருக்கிறது.

ஒரு பாதிரியார் மற்றொரு பாதிரியாரை தனது வீட்டுக்கு விருந்துண்ண அழைத்தார். விருந்து முடிந்தவுடன் வந்த பாதிரியார்,

வீட்டு வேலைக்காரி பேரழகியாக இருப்பதைப் பார்த்துவிட்டார். விருந்திற்கு முன் சற்று அதிகமாகக் குடித்துவிட்டதால் அவர் மனதில் எந்த தயக்கமும், பயமும் இல்லை.

போதை தெளியாமலேயே அவர் மற்ற பாதிரியாரைப் பார்த்து வெளிப்படையாகக் கேட்டார்.

"நீ என்னுடைய பழைய நண்பன். இந்த வேலைக்காரி இவ்வளவு அழகாக இருக்கிறாளே, உனக்கும் இவளுக்கும் ... ஏதாவது கசமுசா.... "

"அடப்பாவி, சண்டாளா! உனக்கு நாக்கில் நரம்பேயில் லையா? கடவுளுக்காக தன்னை அர்ப்பணித்துக் கொண்டவனின் வீட்டில் இப்படிப் பேசலாமா? என் கோபம் அதிகமாவதற்குள் இடத்தைக் காலி பண்ணு."

வந்த பாதிரியார் ஒன்றும் பேசாமல் போய்விட்டார். அப் போது தான் தன்னுடைய வெள்ளிக் கரண்டி ஒன்றைக் காண வில்லை என்பதை விருந்துக்கு அழைத்த பாதிரியார் கவனித்தார்.

இதைச் சாமர்த்தியமாகக் கையாள்வது எப்படி என்று யோசித்தபடி அன்று முழுவதும் தூங்காமலேயே இருந்தார் அவர்.

மறுநாள் காலை அழகாக ஒரு கடிதம் எழுதினார்.

"வணக்கத்திற்குரிய நண்பரே, உங்களைத் திருடர் என்று சொல்ல எனக்கு மனம் வரவில்லை. ஆனால் எனது வெள்ளிக்கரண்டியை எங்காவது பார்த்தீர்களென்றால் உடனே அதை எனக்கு அனுப்பி வையுங்கள்."

உடனே அந்த பாதிரியாரிடமிருந்து பதில் வந்தது.

"வணக்கத்திற்குரிய என் இனிய நண்பரே, நீங்கள் பொய் சொன்னீர்கள் என்று நான் சொல்லவில்லை. ஆனால் நேற்று இரவு உங்கள் படுக்கையில் படுத்திருந்தீர்கள் என்றால் அந்த வெள்ளிக்கரண்டி அங்கே இருப்பதைப் பார்த்திருப்பீர்கள்."

வெளியில் இருந்து திணிக்கப்படும், பழக்கத்தில் வரும் செயற்கையான தூய்மை உங்களை ஆஷாடபூதியாக்குகிறது. உங்களை இரண்டு மனிதர்களாகப் பிரித்துப் போட்டுவிடுகிறது.

நீங்கள் தூய்மையின் தன்மையைப் புரிந்து கொள்ளவில்லை. எதையோ வலுவாக மறுக்கிறீர்கள். நீங்கள் மறுக்கும் எதுவும்

அழிந்துவிடாது. ஏதாவது ஒரு மூலையில் மறைந்து கொண்டு இருக்கும். உங்களைப் பழிவாங்க சரியான வாய்ப்பை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருக்கும்.

அது தன் வழியைக் கண்டுபிடித்துக் கொண்டு மீண்டும் உங்கள் மனதிற்குள் நுழைந்துவிடும். உங்கள் மனதின் பின் கதவுகள் வழியாக வந்துவிடும். நீங்கள் முன் வாசல் வழியாக வர அனு மதிக்கவில்லை என்றால், அது பின் வாசல் வழியாக எப்படியாவது வந்துவிடும்.

தாவோ திணிக்கப்படும், பழக்கப்படுத்திக் கொள்ளும் தூய்மையை வலியுறுத்தவில்லை. அது இயல்பான ஒரு தூய்மையையே வலியுறுத்துகிறது. இயல்பான அமைதியையே விளக்கிக் காட்டுகிறது. நீங்கள் அமைதியாக இருக்க வேண்டும் என்று விரும்பி ஓர் இடத்தில் பேச்சு மூச்சு இல்லாமல் உட்கார்ந் திருந்தால், இந்த உலகமே உங்களைத் தொந்தரவு செய்ய முனைப்பாக இருப்பதை உணர்ந்து கொள்ளலாம்.

எங்கேயோ ஒரு நாய் குரைக்கும். அந்த நாய்க்கு நீங்கள் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறீர்கள் என்பது சுத்தமாகத் தெரியாது. அந்த நாய் தியானத்தின் எதிரி அல்ல. அது உங்களுடைய பழைய எதிரியும் இல்லை. உங்களுடைய பழைய கர்மங்களுக்காகப் பழி வாங்கும் முயற்சியல்ல, அந்த குரைப்புச் சத்தம்.

அந்த நாய் குரைக்க விரும்புகிறது. அதைப் பொறுத்தமட்டில் குரைத்தல் என்பதுதான் அதன் தியானம். ஒரு வேளை அந்த நாய் செயல் முறை தியானத்தில் (Dynamic Meditation) ஈடுபட்டிருக் கிறதோ என்னவோ? யாருக்குத் தெரியும்? அந்த நாய்க்கு உங்களை விட அதிகம் விஷயங்கள் தெரிந்திருக்கலாம். நீங்கள் இன்னும் விபாசனா தியான முறையிலேயே லயித்து இருக்கலாம்.

நாய் உங்களைவிட ஒரு படி மேலே போய் செயல் முறை தியானத்தில் ஆழ்ந்திருக்கலாம். ஆனால் அந்த நாயின் குரைப்பு உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கிறது. இதில் வேடிக்கையைப் பாருங்கள். நீங்கள் செய்யும் விபாசனா தியானம் நாய்க்கு இடைஞ்சலாக இல்லை. ஆனால் அந்த நாய் செய்யும் செயல்முறை தியானம் உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கிறது.

காரணம், நாயின் தியானம் இயல்பாக இருக்கிறது. ஆனால் உங்கள் விபாசனா ஒரு வற்புறுத்தலாக, ஒரு திணிப்பாக இருக்கிறது. உங்கள் தியானம் இயல்பானது இல்லை. ஒரு மெல்லிய அமைதிப்

படிவத்தை உங்கள் மேலே நீங்களே அழுத்தமாக வரைந்து கொண்டிருக்கிறீர்கள்.

உங்களுக்குள்ளே ஆயிரக்கணக்கான நாய்கள் குரைத்துக் கொண்டிருக்கின்றன. அவை வெளியில் இந்தது நாய் குரைப்பதை அடையாளம் கண்டு கொண்டு தாமும் குரைக்க வேண்டும் என்று விரும்புகின்றன.

உங்களுடைய இடையூறு உங்களுக்கு வெளியே இருக்கும் அந்த ஒற்றை நாய் குரைப்பதால் வரவில்லை. உங்களுக்குள் ளேயே இருக்கும் ஆயிரம் நாய்களின் குரைப்பால்தான் வருகிறது.

உங்களுடைய அமைதி இயல்பானதாக இருந்தால், நாயின் குரைப்பு அதனைப் பாதிக்காது. சொல்லப்போனால் உங்கள் அமைதியை அது இன்னும் ஆழமாக்கும். உங்கள் அமைதிக்கு நல்ல பின்னணியாக அது அமையும்.

இரவில் ஆயிரக்கணக்கான அழகான நட்சத்திரங்களைப் பார்க்கிறீர்கள். அவை பகல் வேளையில் என்ன ஆகின்றன என்று உங்களுக்குத் தெரியுமா? அவை எங்கும் போக முடியாது? அவை போக வேறு இடம் என்ன இருக்கிறது? அவை அங்கேயேதான் இருக்கின்றன. ஆனால் அவற்றின் பின்னணியாக இருண்ட வானம் இல்லாததால் உங்களால் அவற்றைப் பார்க்க முடியவில்லை.

இரவில் அந்த இருண்ட வானப் பின்னணி இருப்பதால்தான் நம்மால் நட்சத்திரங்களைப் பார்க்க முடிகிறது. இரவு இன்னும் இருட்டாக இருக்க இருக்க, அந்த வின் மீன்களிலிருந்து வரும் ஒளி இன்னும் பிரகாசமானதாக இருக்கும்.

பௌர்ணமியன்று இரவு விண்மீன்கள் அவ்வளவு பிரகாச மானவையாக இருப்பதில்லை. சந்திரன் வானத்தில் தோன்றாத நாட்களில் விண்மீன்கள் பிரமாதமாக, மிக அழகாகத் தோன்று கின்றன.

நட்சத்திரங்களைப் பற்றிய இந்த கூற்று அமைதிக்கும் பொருந்தும். அமைதிக்கு இடைஞ்சலாக இருக்கும் அத்தனையும் பின்னணியாக மாறி அமைதிக்கு ஒரு புது பரிமாணத்தைக் கொடுக் கின்றன. நாய் குரைக்கும் சத்தம், போக்குவரத்து உண்டாக்கும் ஊமை இரைச்சல், மனைவி சமையல் செய்யும் சத்தம் - இவை எல்லாமே பின்னணியாக மாறி உங்கள் அமைதியை இன்னும் ஆழமாக்கிவிடுகின்றன.

ஏனென்றால் நீங்கள் உங்கள் மனதை ஒருமுகப்படுத்தவில்லை. நீங்கள் எதையும் வற்புறுத்தவில்லை. நீங்கள் ஓய்வாக, தளர்வாக இருக்கிறீர்கள். உங்களைச் சுற்றி நிகழ்வுகள் நடந்து கொண்டேயிருக்கின்றன. ஆனால் நீங்கள் அவற்றால் பாதிக்கப்படாமல் இருக்கிறீர்கள். நீங்கள் எந்த முயற்சியும் இன்றி வலுவாக மையம் கொண்டிருக்கிறீர்கள்.

இதை மட்டும் மறந்துவிடாதீர்கள்: தாவோ உங்களுக்கு ஓர் இயல்புத் தன்மையைக் கற்றுத் தருகிறது. கடும் முயற்சியினால் வரும் தன்மையல்லது. யோகாசனத்தைப் போல் அது முயற்சியையோ, உடல் உழைப்பையோ நம்புவதில்லை. யோகாசனப் பயிற்சியும், தாவோவும் நேரெதிர் துருவங்கள். அதனால் தான் யோகா உலகம் முழுவதும் பரவினாலும் அதனால் சீன நாட்டில் வேரூன்ற முடியவில்லை.

சீன நாட்டு மக்களை புத்தர் பெருமான் பெரிதும் கவர்ந்தார். காரணம், அவரும் இயல்பாக இருப்பதன் முக்கியத்துவத்தை வலியுறுத்தியதுதான். உங்கள் தியானநிலை உங்கள் முயற்சியின் அடிப்படையில் அமையக்கூடாது என்பதில் அவர் குறியாக இருந்தார். அது வெளியில் இருந்து திணிக்கப்பட்டுவிடக்கூடாது என்பதிலும் அவர் கண்டிப்பாக இருந்தார்.

அது உங்களுக்குள்ளிருந்து, உங்களின் அடி ஆழத்திலிருந்து வர வேண்டும் என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தார். அது சாதாரண காகித மலராக இருக்காமல், இயற்கையாக மலருகின்ற ரோஜாவாக இருக்க வேண்டும் என்பது தான் புத்தரின் கருத்து.

*மாறுகின்ற தன்மையுடையனவற்றைக் கடந்து அப்பால் செல்லும் வலிமையை மனிதன் பெறும் போது, அமைதியிலும் தூயமையிலும் அவன் நிறைந்திருக்கும் போது, அந்த மனிதனுக்குள் வானும் மண்ணும் இணைந்து இருக்கும்.*

இதுதான் கிழக்கும் மேற்கும் சந்திக்கும் இடம். லோகாயதமும் ஆன்மிகமும் நேருக்கு நேர் பார்த்துக் கொள்ளும் இடம். இந்த உலகமும், அந்த உலகமும் கை கோர்த்துக் கொள்ளும் இடம். நான் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறேனே - புத்தனாக மலர்ந்துவிட்ட ஜோர்பா என்று - இது தான் அவனுடைய நிலை. *அந்த மனிதனுக்குள் வானும் மண்ணும் இணைந்து இருக்கும்.*

சமண மதத்தைப் போல் தாவோ மறு உலகத்தை மட்டும் பார்க்கவில்லை. அதே சமயம் சார்வாகத்தைப் போல அது இந்த உலகத்தை மட்டுமே பார்க்கவில்லை. அது பிரபஞ்ச இருப்பு நிலையின் ஒருமைப்பாட்டை வலியுறுத்துகிறது. அது பிரபஞ்ச இருப்புநிலையைப் பிரித்துப் பார்க்கவில்லை. அது பரிபூரணமான முழுமையை, இயல்பாக மலரும் முழுமையை மட்டுமே பார்க்கிறது.

வானும் மண்ணும் ஒன்று தான். அவை இரண்டும் உங்களுக்குள் சந்தித்துக் கொள்கின்றன. உங்கள் உடல் மண்ணைச் சேர்ந்தது. உங்கள் ஆன்மா சொர்க்கத்தைச் சேர்ந்தது. வானைச் சேர்ந்தது. விண்ணும் மண்ணும் சந்திப்பது என்பது ஏற்கனவே நிகழ்ந்துவிட்ட ஒன்று. ஆனால் அது குறித்த விழிப்புணர்வு உங்களிடம் இல்லை.

நீங்கள் உங்கள் இறுக்கத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொண் டால், உங்களை இன்னும் அதிகமாக நெகிழ்த்திக் கொண்டால் அந்த சந்திப்பை நீங்கள் உணரமுடியும். அந்த சந்திப்பில் இருக்கும் மகத்தான அழகை உங்களால் அனுபவிக்க முடியும். வெறும் பூமியை மட்டும் வைத்துப் பார்த்தால், அது செத்துப் போன பொருள்.

அதனால் தான் லோகாயதமான எந்த தத்துவமும் வாழ்க்கை அர்த்தமற்றது என்ற கோட்பாட்டுக்கு விரைவிலேயே வந்துவிடுகிறது.

மேற்கே அதுதான் நடந்திருக்கிறது. மேலை நாடுகளில் உள்ள எல்லா தத்துவவாதிகளையும் பாதித்த ஒரே கேள்வி இதுதான். 'வாழ்க்கைக்கு ஓர் அர்த்தம் இருக்கிறதா? இருந்தால் அது என்ன?'

வாழ்க்கை அர்த்தமற்றது என்று ஏறக்குறைய எல்லாருமே ஏற்றுக் கொண்டுவிட்டார்கள்.

தாஸ்தோவுஸ்கி *கரமசாவ் சகோதரர்கள்* என்ற நாவலை எழுதினார். இன்று உலகின் தலை சிறந்த பத்து நாவல்களைப் பட்டியலிட்டால் அதில் இந்த நாவல் நிச்சயம் இடம் பெற்றிருக்கும். ஏன், அந்த பத்திலே எது சிறந்தது என்ற கேள்வி வந்தால் சந்தேகமில்லாமல் இந்த நாவல் தான் என்று எல்லாரும் ஒத்துக் கொள்வார்கள். மனிதனின் படைப்புக்களில் மகத்தானது *கரமசாவ் சகோதரர்கள்* என்ற நாவல்.

அந்த நாவலில் ஒரு பாத்திரம் கடவுளைப் பார்த்துச் சொல்கிறது.

"கடவுளே, நீ எங்கே இருக்கிறாய்? நான் உன்னைச் சந்திக்க விரும்புகிறேன். நான் உன்னைச் சந்திக்க நினைப்பது உன் மேல் உள்ள அன்பால் அல்ல. உன்னைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலால் அல்ல. இந்த உலகிற்கு வர நீ எனக்குக் கொடுத்த பயணச்சீட்டை உனக்குத் திரும்பித்தர வேண்டும். தயவு செய்து அதை என்னிடம் இருந்து வாங்கிக் கொள். இந்த உலகம் அர்த்தமற்றது."

மார்செல் என்ற அறிஞர் ஓர் இடத்தில் மிக அழகாக, ஆணித்தரமாகச் சொல்கிறார். தற்கொலை தான் மிக முக்கியமான தத்துவ ஆராய்ச்சி. தற்கொலை செய்து கொள்வதா வேண்டாமா என்பது தான் மனித இனத்தின் மிகப்பெரிய குழப்பம். ஏன் வாழ்ந்து கொண்டேயிருக்க வேண்டும்?

கடந்த காலத்தில் கோழைகள் தான் தற்கொலை செய்து கொள்கிறாரக்ள் என்று மக்கள் நினைத்தார்கள். இப்போது நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. இந்த உலகமே மெய் என்று வாழும் லோகாயதவாதிகளால் வாழ்க்கையின் அர்த்தத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. வாழ்க்கை அர்த்தமற்றது என்பதை எல்லாருமே ஏற்றுக் கொள்கிறார்கள்.

வாழ்க்கை அர்த்தமற்றது என்று தெரிந்த பின்னும் வாழ்ந்து கொண்டிருப்பது கோழைகள் தான் என்று நினைக்க ஆரம் பித்துவிட்டார்கள். தைரியசாலிகளும், வீரர்களும்தான் துணிச்சலாகத் தற்கொலை செய்து கொள்ளும் முடிவை எடுக்கிறார்கள் என்று அவர்கள் கருதுசிறார்கள். வாழ்க்கைக்கு அர்த்தமில்லை என்றால் ஏன் தொடர்ந்து வாழ்ந்து கெண்டேயிருக்க வேண்டும்?

இந்த குழப்பம் ஏன் வந்தது தெரியுமா? மனிதன் பூமியை மட்டுமே ஏற்றுக் கொண்டான். வானத்தை, சொர்க்கத்தை அவன் உண்மையென்று ஏற்றுக் கொள்ளவில்லை. வானம் இல்லாவிட்டால் பூமிக்கு அர்த்தமில்லை. வாழ்க்கைக்கும் அர்த்தம் இல்லை. வானம் இல்லை என்றால் ஆன்மாவே இல்லை என்று ஆகிவிடுகிறது. அதன்பின் உங்களுக்கும் செத்த பிணத்துக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது?

பிணத்துக்கு என்ன அர்த்தம் தெரியும்? எப்போது ஆன்மா உடலைவிட்டு வெளியேறுகிறதோ அப்போதே உடல் அர்த்தமற்றதாகிவிடுகிறது:. நீங்கள் ஆன்மா இருப்பதை நம்பவில்லை என்றால் சீக்கிரத்திலேயே இந்த உலக வாழ்க்கை அர்த்தமற்றது

என்ற தீர்மானத்துக்கு நீங்கள் வந்துவிடுவீர்கள். மேலை நாடுகள் இந்த அர்த்தமற்ற தன்மையை நன்றாக உணர்ந்துவிட்டன.

கீழை நாடுகள் நேர் எதிர் திசையில் இருக்கின்றன. கிழக்கே வானத்தை, ஆன்மாவை, சொர்க்கத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் பூமியை, இந்த உலக யதார்த்தத்தை ஏற்றுக் கொள்ள வில்லை. ஆனால் ஆன்மா, வானம் என்பது யதார்த்தம் இல்லை. ஆன்மா என்பது ஒரு மனக்கண் தோற்றம்தான். இந்த உடல் ஸ்தூல வடிவம். நிஜ உருவம். தொட்டு உணரக்கூடிய யதார்த்தம். ஆனால் ஆனமா என்பது வெறும் மனக்கண் வடிவம்தான். அது சூட்சும வடிவம். அதை நமது புலனறிவால் அறிந்து கொள்ள முடியாது.

நிஜங்களை விட்டுவிட்டு மனக்கண் தோற்றங்களையும், சூட்சும வடிவங்களையும் நோக்கி ஓட ஆரம்பித்தால் உங்கள் யதார்த்தமான வாழ்க்கையை நீங்கள் இழக்கிறீர்கள்.

அதனால் தான் கீழை நாடுகளில் வறுமை தலைவிரித்தாடு கிறது. நோய், பசி, பஞ்சம், பட்டினி போன்ற ஆயிரக்கணக்கான அன்றாடப் பிரச்சினைகள் கிழக்கின் முதுகெலும்பை நசுக்கிக் கொண்டிருக்கின்றன. இந்த பிரச்சினைகளைத் தீர்க்க நமக்கு வழி தெரியவில்லை. காரணம் பல ஆயிரம் ஆண்டுகளாக கீழை நாடு களில் நாம் பூமியைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்து விட்டோம். வானத்தைப் பார்த்தபடியே நாம் காலத்தை ஓட்டி விட்டோம்.

இது ஒரு பழைய கிரேக்கக் கதை.

ஒரு பிரபலமான ஜோதிடர் இரவு நேரத்தில் வானத்தில் தெரியும் விண்மீன்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். கீழே பூமியைப் பார்த்து நடக்காததால் வழி தவறி எங்கோ போய் விட்டார். வழியில் இருந்த பாழும் கிணற்றைப் பார்க்காததால் அதனுள் தவறி விழுந்து விட்டார். "காப்பாற்றுங்கள். காப்பாற் றுங்கள். ஆபத்து. ஆபத்து" என்று கத்த ஆரம்பித்தார் ஜோதிடர். அந்த கிணறு ஒரு கிராமத்திற்கு வெளியே இருந்தது.

பக்கத்தில் இருந்த குடிசையில் இருந்த ஒரு முதியவள் எப்படியோ கஷ்டப்பட்டு அந்த ஜோதிடரைக் காப்பாற்றிவிட்டாள்.

"அம்மா, உங்களுக்கு இந்த இருட்டில் என்னைச் சரியாகத் தெரியாமல் இருக்கலாம். நான் யார் தெரியுமா? இந்த நாட்டு மன்னனின் அரசவை ஜோதிடனாக்கும். என்னை யாரும்

அவ்வளவு எளிதில் பார்த்துவிட முடியாது. ஆனால் நீங்கள் என்னைக் காப்பாற்றிய நன்றிக் கடனுக்காக உங்கள் வருங் காலத்தை இப்போது சொல்கிறேன். கவனமாகக் கேட்டுக் கொள்ளுங்கள்.''

முதியவள் வாய்விட்டுச் சிரித்தாள்.

''முட்டாளே! உனக்கு எங்கே கிணறு இருக்கிறது, எங்கே சாலை இருக்கிறது என்றே தெரியவில்லை. நீ என் வருங்காலத்தைப் பற்றிச் சொல்லப் போகிறாயாக்கும்! ''

கிழக்கே இந்த கதைதான் நடந்தது. வானத்தையே பார்த்துக் கொண்டு வாழ்ந்த மக்கள் இந்த உலக வாழ்க்கையைக் கோட்டை விட்டுவிட்டார்கள். பாதை தெரியாமல் பாழுங்கிணற்றில் விழுந்து விட்டார்கள்.

தாவோ ஒன்று தான் வானத்தையும் பூமியையும் இணைக்கும் உன்னதமான பார்வை. அது பூமியையும் மறுப்பதில்லை. வானத்தையும் மறுப்பதில்லை. இரண்டையும் ஏற்றுக் கொள்கிறது. இரண்டின் ஒருமைப்பாட்டையும் ஏற்றுக் கொள்கிறது. தாவோ சொல்கிறது: இயல்பாக விளையும் தூய்மையையும், அமைதியையும் உணர்ந்த மனிதனிடம் வானமும், பூமியும் இணைகிறது.

முழுமையாக இருக்கும் மனிதனிடம், சகஜமாக இறுக்க மில்லாமல் இருக்கும் மனிதனிடம் எல்லாச் சட்டங்களுக்கும் உச்ச மான சட்டத்தை அறிந்த மனிதனிடம் விண்ணும் மண்ணும் இணைகிறது.

சந்நியாசத்தைப் பற்றிய என்னுடைய கோட்பாடும் அதுதான். உங்களுக்குள் இந்த வானம்-பூமி சந்திப்பு நிகழ வேண்டும் என்பது தான் என் ஆசை. உங்களை உலக மக்கள் எல்லாருமே தவறாகப் புரிந்து கொள்வார்கள்.

கீழை நாடுகளில் உள்ளவர்கள் நீங்கள் இந்த உலகத்தின் மேல் அதிகப் பற்றுள்ளவர்களாக இருப்பதாக உங்களைப் பழிப்பார்கள்.

மேலைநாடுகளில் இருப்பவர்களோ நீங்கள் பூமியை விட்டுவிட்டு வானத்தில் பறக்க ஆசைப்படுவதாக உங்களை வசை பாடுவார்கள். உங்களுக்குக் கிறுக்கு பிடித்துவிட்டது. நீங்கள் பினாத்த ஆரம்பித்துவிட்டீர்கள் என்று மேற்கே உள்ளவர்கள் கதை கட்டிவிடுவார்கள். அவர்கள் உங்களைப் பார்த்து, '' இந்த முட்டாள்

தனத்தைக் கொஞ்சம் நிறுத்துகிறீர்களா? இந்த யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்'' என்று சொல்வார்கள்.

உலகம் முழுவதிலும் உங்களைத் தவறாகவே புரிந்து கொள்வார்கள். ஏனென்றால் உண்மையின்

ஒரு பாதியை கிழக்கு புரிந்து கொண்டது. மறுபாதியை மேற்கு புரிந்து கொண்டது.

நான் முழுமையையே நம்புகிறேன். முழுமையை நம்புவதே புனிதமாக இருப்பதற்கு வழி என்று நான் நினைக்கிறேன். முழுமையை நம்புவதே முழுமையாக இருப்பதற்கு வழி என்று நினைப்பவன் நான். நீங்கள் முழுமை பெறும் போது வாழ்க்கை ஆனந்தமாக இருக்கிறது. வாழ்க்கை ஒரு வரப்பிரசாதமாகத் திகழ்கிறது. வாழ்க்கையே ஒரு கொண்டாட்டமாக மாறிவிடுகிறது.

*மனிதனின் ஆன்மா தூய்மையையே விரும்புகிறது. ஆனால் மனிதனின் மனம் கொஞ்சம் கலகம் செய்து பார்க்கிறது. மனிதனின் நெஞ்சம் அமைதியையே விரும்புகிறது. என்றாலும் அவனது ஆசைகள் அவனை செயல்கள் செய்யத் தூண்டுகின்றன.*

மனிதனுக்கும் மூன்று அடுக்குகள் இருக்கின்றன. மனிதனைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் இந்த மூன்று அடுக்குகளையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். உள்ளே, மிக ஆழமாக இருப்பது ஆன்மா என்னும் அடுக்கு. அது தான் உங்கள் இருப்புநிலையின் மையம். எல்லாவற்றிற்கும் வெளியே சுற்றுப்புறத்தில் இருப்பது மனிதனின் ஆசைகள்.

ஆன்மாவுக்கும் ஆசைகளுக்கும் நடுவே ஓர் அடுக்கு இருக்கிறது. அதை உள்ளடுக்கு என்றும் சொல்ல முடியாது. வெளியடுக்கு என்றும் சொல்ல முடியாது. அந்த அடுக்குக்குப் பெயர்தான் மனம்.

*மனிதனின் ஆன்மா தூய்மையையே விரும்புகிறது.*

இங்கே கோ ஷ்சுவான் தூய்மை என்று சொல்வது வெகுளித் தனத்தைத்தான். குழந்தை போன்ற அந்த மனப்பாங்கைத்தான். இந்த இடத்தில் தூய்மையை நல்லொழுக்கமாக, ஒழுக்க ரீதியாகப் புரிந்து கொண்டால் குழப்பம்தான். ஏனென்றால் தாவோ ஒழுக்கத்தையோ, ஒழுங்கீனத்தையோ நம்பவில்லை. குழந்தையுடையதைப் போன்ற வெகுளித்தனத்தையே தாவோ நம்புகிறது.

ஒரு குழந்தையிடம் ஏன் அப்பழுக்கில்லாத வெகுளித்தனம் இருக்கிறது?

அது பிறக்கும் போது அந்த மூன்றடுக்குகளில் உள் அடுக்கான ஆன்மா மட்டுமே இருக்கிறது. மற்ற அடுக்குகள் அப்போது உருவாகியிருக்காது. அதனால் தான் ஒவ்வொரு குழந்தையும் பார்க்க அவ்வளவு அழகாக இருக்கிறது. அசிங்கமான குழந்தையை எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா?

அது சரி அந்த அழகான குழந்தைகள் எங்கே போனார்கள்? எல்லாக் குழந்தைகளும் அழகாக இருக்கிறார்கள் என்றால் மக்கள் அனைவரும் அழகாக இருக்க வேண்டுமே! அதே அழகுக் குழந்தைகள் தானே வளர்ந்து பெரிய மனிதர்கள் ஆகின்றார்கள்? பின் ஏன் பெரிய மனிதர்களில் அழகு அபூர்வமாக இருக்கிறது?

குழந்தைகள் வளரும் போது, அந்த வளர்ச்சிப் பாதையில் எங்கேயோ அவர்களது அழகு தொலைந்து போய்விடுகிறது. அந்த அழகுக்குப் பதிலாக அசிங்கமாக ஏதோ ஒன்று அவர்களிடம் வந்து உட்கார்ந்து கொள்கிறது.

நாம் நமது குழந்தைகளுக்கு தவறான வெளியடுக்குகளைத் தருகிறோம். தவறான ஆசைகளைக் கொடுக்கிறோம். தவறான மனங்களைக் கொடுக்கிறோம். அவர்களுக்குள் நாம் தோற்றுவிக்கும் பிரிவினைகளால் அவர்களிடம் இருக்கும் ஒருமைப்பாடு குலைந்து போய்விடுகிறது.

ஒருமைப்பாடுள்ள ஒரு முழு மனிதனாக வளர்வதற்குப் பதிலாக, ஒரு கூட்டமாக, பல மனிதர்களின் கலவையாக அசிங்க மாக வளர்கிறார்கள் நமது குழந்தைகள். அந்த பிரிவினைகள் எல்லாமே அசிங்கம்தான். ஏனென்றால் அவற்றுள் இசைவு இல்லை. இசைவு இல்லாவிட்டால் அந்த இடத்தில் அழகு இருக்காது. அருளும் இருக்காது.

*மனிதனின் ஆன்மா தூய்மையையே விரும்புகிறது.*

உங்களுடைய அடி ஆழத்தில் போய்ப் பார்த்தீர்கள் என்றால் உங்களுக்குள் அந்த வெகுளித்தனம் மலர்வது கண்கூடாகத் தெரியும். அது ரோஜா மலர்களைப் போல் அழகாக மலர்ந்து உங்களுக்குள்ளே மணம் பரப்பும்.

*ஆனால் மனிதனின் மனம் கொஞ்சம் கலகம் செய்து பார்க்கிறது.*

ஆனால் இந்த மனதுக்கு வெகுளித்தனம் பிடிப்பதில்லை. உங்கள் வெகுளித்தனம் சொல்கிறது. 'ஆமாம். இதை நம்ப வேண்டும்.' உடனே உங்கள் மனம் கூச்சல் போடுகிறது. 'இல்லை. இது பொய். இதைச் சந்தேகப்பட வேண்டும். நம்பவே கூடாது.'

மனம் எப்போதும் 'இல்லை' என்ற தத்துவத்திலேயே வாழ்கிறது. மனம் எப்போதுமே எதிர்மறையானது.

ஆன்மாவுக்கு இல்லை என்று சொல்லவே தெரியாது. மனதிற்கு ஆம் என்று சொல்லவே தெரியாது. மனம் எப்போதாவது ஆமாம் என்று சொல்ல வேண்டுமென்றாலும் அதை வேண்டா வெறுப்பாகவேச் சொல்கிறது.

இதை நீங்களே கவனிக்கலாம். எப்போதாவது இல்லை என்று சொல்ல வழி ஒன்றும் இல்லை என்றால் மனம் அரை மனதுடன் வேண்டா வெறுப்பாக ஆமாம் என்று சொல்லும். ஆம் என்ற பதில் மனதிற்குத் தன்னிச்சையாக வருவதில்லை. இல்லை என்ற சொல்லே தன்னிச்சையாக வருகிறது.

இந்த வாக்கியத்தில் பொதிந்துள்ள உண்மையைக் கூர்ந்து கவனியுங்கள். இவை தேற்றங்கள் இல்லை. கோட்பாடுகள் இல்லை. நிதரிசனமான உண்மைகள். எளிமையான உண்மைகள். உங்களுக்குள்ளேயே இவற்றை நீங்கள் கவனிக்கலாம். உங்கள் மனதில் ஏற்படும் முதல் நிகழ்வு 'இல்லை' என்பதுதான். இல்லை என்று சொல்வதற்குக் காரணம் ஒன்றும் இல்லாவிட்டாலும் அது இல்லை என்று சொல்வதையே விரும்புகிறது.

அன்று எனது சந்நியாசி ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது.

"ஓஷோ, அன்று நீங்கள் சமீபத்தில் இறந்த பிரேம் சின்மயாவைப் பற்றிப் பேசினீர்கள். பிரேம் சின்மயா மீண்டும் நம்மிடையே பிறப்பான் என்று சொன்னீர்கள். அவன் தனது ஆறாவது மையத்திலிருந்து உயிரை விட்டதால் அவன் இன்னும் ஒரு பிறவி எடுத்தால் போதும் என்று சொன்னீர்கள். என்னால் உங்களை நம்ப முடியவில்லை."

உங்களுக்கு மறுபிறவி பற்றி ஒன்றுமே தெரியாமல் இருக்கலாம். "எனக்கு மறுபிறவியைப் பற்றி ஒன்றும் தெரியாது. நான் எப்படி இதை நம்புவது இல்லை நம்பாமல் இருப்பது?" என்று கேட்டிருக்கலாம்.

திறந்த மனதுடன் இந்த கூற்றை நீங்கள் அணுகியிருக்கலாம். ஆனால் இல்லை என்று சொல்ல கிடைக்கும் வாய்ப்பை நழுவ்விட உங்களுக்கு மனம் இல்லை. ஏதாவது ஒன்றுக்காவது நான் இல்லை என்று சொல்லிவிட வேண்டும் என்று இந்த சந்நியாசி காத்துக் கொண்டிருந்திருப்பார் போல் தோன்றுகிறது.

ஆறாவது மையத்தில் இருந்து சாவது என்றால் என்னவென்று தெரியுமா உங்களுக்கு? மனிதனின் உட்ற்கூறைப் பற்றிக் கொஞ்சமாவது தெரியுமா உங்களுக்கு?

பூஜாவையும், ஷீலாவையும் கேளுங்கள். பிரம் சின்மயா இறந்த போது என்ன நடந்தது என்று அவர்களிடம் கேளுங்கள். அவர்களுக்கு ஆச்சரியம். அவர்கள் கண்களை அவர்களால் நம்பமுடியவில்லை.

சின்மயாவின் உடல் திடீரென்று குளிர்ந்து போனது. அவனது தலை மிகவும் சூடாகிப் போனது. தனக்குள் விநோதமாக ஏதோ நடந்து கொண்டிருக்கிறது என்று பிரேம் சொன்னானாம். "என்னுடைய சக்தியெல்லாம் என் தலைக்கு வந்துவிட்டதைப் போல் தோன்றுகிறது. எனது உடல் குளிர்ச்சியாக, அமைதியாக இருக்கிறது. ஆனால் என் தலை தீக்குள் இருப்பதைப் போல் தோன்றுகிறது. அது பற்றி எரிந்து கொண்டிருக்கிறது."

உயிர் உடலை விட்டுப் பிரியும் போது அது எந்த மையம் வழியாகப் பிரிகிறதோ, அந்த மையம் மட்டும் கொதிக்க ஆரம்பிக்கும். இது இயல்பாக நடக்கக்கூடியதுதான். உயிர் என்பதே அபரிமிதமான ஒரு சக்திதானே! அந்த சக்தி ஒரு மையத்தில் போய்க் குவியும் போது அந்த இடத்தில் அது வெப்பமாக வெளிப்படுகிறது. நமது உடல் முழுவதும் விரவி நிற்கும் அந்த சக்தி ஒரே இடத்தில் குவியத் தொடங்குகிறது. அந்த இடம் நெருப்பில் இருப்பதைப் போல் கொதிக்க ஆரம்பிக்கும்.

உங்களுக்கு இந்த மனவியலைப் பற்றி ஒன்றும் தெரியாது. உங்களுக்குத் தெரியாததை நம்ப வேண்டும் என்று நான் வற்புறுத்தவில்லை. நம்பிக்கை வேண்டும் என்று கேட்டுப் பெறும் கடைசி ஆளாகத்தான் நான் இருப்பேன். நம்பிக்கை தேவையில்லை என்பது தான் என் வாழ்க்கைத் தத்துவம்.

அதே சமயத்தில் உங்களுக்குத் தெரியாத விஷயத்தை மூடத்தனமாக மறுப்பது கூட ஒரு வகையில் மூடநம்பிக்கைதான்.

பிரேம் சின்மயா சாகும் போது அடைந்த அனுபவத்தை நீங்கள் மூர்க்கத்தனமாக எதிர்க்கத் தேவையில்லை. இதைத் திறந்த மனதுடன் அணுகுங்கள். 'இது எனக்குத் தெரியாத விஷயம். நான் இறக்கும் போது இது உண்மையா இல்லையா என்று பார்த்துக் கொள்கிறேன்.' என்று சொல்லுங்கள். அது அறிவு.

அதன் பின் அந்தக் கடிதத்தில் அந்த சந்நியாசி சொல்கிறார், "நான் உங்களை நம்பவில்லை. உங்கள் மேல் எனக்கு கொஞ்சம் கூட நம்பிக்கை வரவில்லை. பரவாயில்லையா?"

எனக்குப் பரவாயில்லை. ஆனால் உங்களுக்கு? உங்கள் நம்பிக்கையின்மையால் எனக்கு எந்தவித நஷ்டமும் இல்லை. உங்கள் நம்பிக்கையைச் சார்ந்து என் வாழ்க்கையில்லை. அதனால் எனக்குப் பரவாயில்லை.

அதற்காக நான் சொல்வதற்கெல்லாம் வலுக்கட்டாயமாக ஆமாம் போட வேண்டும் என்று நான் சொல்லவில்லை. வலுக்கட்டாயமாக ஆமாம் போடுவது என்பதும் நம்பிக்கையின்மையின் அடையாளம்தான். வலுக்கட்டாயமான ஆமாம் என்பது மறைமுகமான இல்லைக்குச் சமானம். திறந்த மனதுடன் இருங்கள் என்பதுதான் என் வேண்டுகோள்.

ஆமாம், இல்லை என்று எதுவுமே நீங்கள் சொல்ல வேண்டியதில்லை. 'எனக்குத் தெரியாது.' என்று சொல்லுங்கள். அது போதும். தெரியவில்லை என்ற நிலையில் இருந்து செயல் படுங்கள். அப்போது தான் நீங்கள் அனுபவத்துக்கு, பரிசோதனைக்கு உங்களைத் தயார் நிலையில் வைத்திருக்க முடியும்.

இல்லை என்று நீங்கள் முதலிலேயே சொல்லிவிட்டால் அந்த அனுபவமே வேண்டாம் என்று முதலிலேயே மறுத்து விடுகிறீர்கள். உங்களுக்கு அந்த அனுபவம் கிடைத்த பின், அந்த உண்மையை அனுபவபூர்வமாக உணர்ந்த பின் ஆமாம் சொல்லுங்கள்.

இதை நம்ப வேண்டும் என்று நான் உங்களிடம் சொல்லவில்லை. அதே சமயத்தில் சோதித்துப் பார்க்காமல் இது தவறு என்று சொல்லிவிடாதீர்கள் என்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இதிலே நம்பிக்கைக்கோ, நம்பிக்கையின்மைக்கோ கொஞ்சம் கூட இடமில்லை. ஆனால் இந்த சந்நியாசியின் மனம் எதையாவது மறுப்பதற்கு வாய்ப்பைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறது என்று தான் தோன்றுகிறது.

இம்மாதிரி நிகழ்வது இங்கே அபூர்வம். நம்பக் கஷ்டமான விஷயங்களைப் பற்றி இங்கே நான் பொதுவாகப் பேச மாட்டேன். உங்கள் புரிந்து கொள்ளுதலுக்கு அப்பாற்பட்ட விஷயங்களைப் பற்றி நான் பேச மாட்டேன். அதே சமயத்தில் என்றாவது ஒரு நாள் அத்தகைய விஷயங்களைச் சந்திக்க உங்களை தயார்ப் படுத்துவேன். ஆனால் சில சமயம் என்னையும் மீறி சில நிகழ்வுகள் நடந்துவிடுகின்றன.

உதாரணமாக பிரேம் சின்மயாவின் மரணம் அத்தகைய ஒரு நிகழ்வு. அந்த சமயத்தில் நான் மரணத்தைப் பற்றிப் பேசத்தான் வேண்டும். எந்த மையத்தில் இருந்து அவன் உயிர் பிரிந்தது என்பதைப் பற்றி நான் பேசத்தான் வேண்டும். அவன் மீண்டும் இந்த உலகுக்குத் திரும்பி வருவான் என்று நான் சொல்லத்தான் வேண்டும். நீங்கள் ஆழ்நிலை சிந்தனையில் இருந்தால், தியானத் தில் ஆழ்ந்திருந்தால் இதையெல்லாம் உங்களால் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். அப்படி இல்லையென்றால் இதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது.

உங்கள் மனம் எப்போதும் இல்லை என்று சொல்லவே விரும்புகிறது. உங்கள் மனம் சொல்வதைக் கவனித்தால் உங்கள் ஆச்சாரியன் சொல்வதை உங்களால் கவனிக்க முடியாது.

உங்கள் ஆச்சாரியன் சொல்வதைக் கவனிக்க வேண்டும் என்று நினைத்தால் நீங்கள் எப்போதும் திறந்த மனத்துடன் இருக்க வேண்டும். அப்போது தான் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் 'ஆமாம்' என்ற பதிலை உங்கள் மனம் சொல்ல முடியும். உங்களைப் பொறுத்த மட்டில் அது மிகப் பெரிய ஆன்மிக முன்னேற்றம்.

இங்கே இருந்து கொண்டு நான் சொல்வதற்கு இல்லை என்று சொல்வது எதைக் காட்டுகிறது? உங்கள் உடல் மட்டும்தான் இங்கே இருக்கிறது, உங்கள் ஆன்மிக மையம் இங்கே இல்லை. அது வேறு எங்கோ இருக்கிறது என்பதை தான் உங்கள் இல்லை உணர்த்துகிறது. அப்படி இருந்தால் நீங்கள் இங்கே இருப்பது வீண். இதற்குப் பதில் வெளியே போய் வேறு ஏதாவது உருப்படி யாகச் செய்யுங்கள்.

இந்த உரையின் நோக்கமே உங்களை உங்கள் மனங்களைக் கடந்து செல்ல வைப்பதுதான். இல்லை என்ற பதிலைத் தாண்டிச் செல்ல வைப்பதுதான்.

கோ ஹ்சுவானின் சூத்திரம் என்ன சொல்கிறது?

*மனிதனின் ஆன்மா தூய்மையையே விரும்புகிறது. ஆனால் மனிதனின் மனம் கொஞ்சம் கலகம் செய்து பார்க்கிறது. மனிதனின் மனம் அமைதியையே விரும்புகிறது. என்றாலும் அவனது ஆசைகள் அவனை செயல்கள் செய்யத் தூண்டுகின்றன.*

ஆன்மா தூய்மையை, வெகுளித்தனத்தை விரும்புகிறது. அது இயற்கையான மகிழ்ச்சி. மனதைப் பொறுத்த மட்டில் அதற்கு தூய்மை, வெகுளித்தனம் இவையெல்லாம் ஒரு பொருட்டல்ல. ஏனென்றால் வெகுளித்தனத்துக்கு ஆமாம் என்ற பதில் தேவை.

ஆனால் மனமோ எப்போதும் இல்லை என்ற பதிலில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. தொடர்ந்து இல்லை என்று மறுத்துக் கொண்டிருப்பதால் மனம் பெரும் சித்திரவதைக்கு உள்ளாகிறது. அப்படித் தவிக்கும் அந்த மனதிற்கு அமைதி தேவை. அது பேச்சில்லாமல், செயலில்லாமல் அமைதியாக இருக்க வேண்டும்.

*மனம் அமைதியை விரும்புகிறது.*

ஆனால் உங்களைச் சுற்றி இன்னொரு வெளிவட்டம் இருக்கிறது. அதில் ஆசைகள் சூழந்திருக்கின்றன. அது உங்களை அமைதியாக இருக்க விடுவதில்லை. அது உங்களைத் தொடர்ந்து செயல்களுக்குள் இழுத்துக் கொண்டிருக்கிறது. மனம் உங்களை எதிர்மறை எண்ணங்களுக்குள் இழுத்துச் செல்கிறது. அது உங்கள் தூய்மையைப் பாதிக்கிறது. ஆம், என்பது உங்கள் வெகுளித் தனத்தைக் குறிக்கிறது. இல்லை என்பது நீங்கள் அந்த வெகுளித் தனத்தைத் தொலைத்துவிட்டதற்கு அடையாளம்.

அவையோடு சேர்ந்து ஆசைகள் இருக்கின்றன. அந்த ஆசைகள் மனதைவிட்டு விலகாமல் இருக்கின்றன. அவை செயல்களுக்கு உங்களை இழுத்துச் செல்கின்றன. அங்கே உங்கள் மனம் சொல்லும் இல்லை செல்லுபடியாகாது.

அந்த ஆசைகள் உங்களை ஆயிரக்கணக்கான செயல் களுக்குள் இழுத்துச் செல்கின்றன. சீன மொழியில் சொல்வார்கள், 'பத்தாயிரம் விஷயங்களுக்குள் அந்த ஆசை உங்களை இழுத்துச் செல்கிறது.'

பணம், அந்தஸ்து, அதிகாரம் என்று இவை சதா உங்களை அலைக்கழித்துக் கொண்டேயிருக்கின்றன.

"இதைச் செய்யுங்கள். இதைச் சாதியுங்கள். இதை அடையுங்கள். இந்த சாதனையைச் செய்யாவிட்டால் நீங்கள் மனிதனே இல்லை. நீங்கள் பெரிய மனிதர் என்பதை நிரூபித்துக் காண்பியுங்கள். உங்கள் அதிகாரத்தை நிலைநிறுத்துங்கள்." என்று சமுதாயம் உங்கள் காதுக்குள் கூச்சல் போட்டுக் கொண்டேயிருக்கிறது.

அதை நிரூபிப்பதற்காக நீங்கள் பைத்தியக்காரத்தனமாகச் செயல் பட வேண்டியிருக்கிறது. அது தான் அரசியல்.

அரசியல் என்பது உண்மையான மதத்திற்கு நேர் எதிர் துருவம். உண்மையான சமயம் உங்களை உங்களுடைய இருப்புநிலையின் சாரத்துக்கு அழைத்துச் செல்கிறது. அரசியலோ ஆசைகள் என்னும் விபத்துகள் நிறைந்த பகுதிக்கு உங்களை இழுத்துச் செல்கிறது. உங்கள் ஆசைகள் உங்களை இந்த உலகத்து விஷயங்களுக்குள், தேவையில்லாத விஷயங்களுக்குள் அழுத்தி வைக்கிறது.

அப்படி அழுத்தி வைப்பதால் நீங்கள் மெய்யுணர்வை, எது உங்கள் வாழ்க்கையில் விலைமதிப்பில்லாததோ அதை, எது உங்களுடைய இருப்பின் சாரமோ அதை மறந்து விடுகிறீர்கள்.

உங்களுக்குள் இருக்கும் பொக்கிஷத்தை நீங்கள் கவனிக்காமல் விட்டுவிடுகிறீர்கள். அதிகாரத்தின் பின்னால் ஓடும் நீங்கள், இருப்பதிலேயே உச்சமான தாவோவின் சக்தியை மறந்து விடுகிறீர்கள். பெயருக்கும், புகழுக்கும் பின்னால் ஓடிக் கொண்டிருக்கும் நீங்கள், அந்த பெயரும் புகழும் நிலையற்றது என்பதை மறந்து விடுகிறீர்கள்.

ஆனால் சமுதாயத்தில் உள்ளவர்கள் உங்களை உசுப்பேத்தி விட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். ஒரு நொடிப் பொழுது கூட அவர்கள் உங்களைச் சும்மா இருக்க விடமாட்டார்கள். இரவில் உங்கள் ஆசைகளைப்பற்றிய கனவுகளைக் காண்பீர்கள். பகலில் அந்த ஆசைகளின் பின்னால் ஓடிக் கொண்டிருப்பீர்கள். எல்லா ஆசைகளும் கானல் நீரைப் போலத்தான். தொடுவானத்தைப் போலத்தான்.

தொடுவானம் மிகவும் பக்கத்தில் இருப்பது போல் ஒரு மாயத் தோற்றத்தைக் காட்டும். ஒரு மணி நேரம் வேகமாக ஓடினால் தொடுவானத்தைத் தொட்டுவிடலாம் என்று எண்ணி வேகமாக

ஓட ஆரம்பிப்பீர்கள். ஆனால் ஒரு மணி நேரம் ஓடிய பின்னாலும் அது அதே தூரத்தில் தான் இருக்கும். உங்களல் தொடுவானத்தை அடையவே முடியாது. ஏனென்றால் அது உண்மையில்லை.

நீங்கள் எல்லாவற்றையும் மறந்து கொண்டேயிருக்கிறீர்கள். உங்கள் ஆன்மாவை மறக்கிறீரக்ள். சொர்க்கத்தை மறக்கிறீர்கள். உங்கள் உடலை, இந்த பூமியைக்கூட நீங்கள் சில சமயங்களில் மறந்து போகிறீர்கள். பைத்தியக்காரனைப் போல் வாழ்கிறீரக்ள். உங்கள் அரசியல்வாதிகள் உண்மையிலேயே பைத்தியக்காரர்கள் தான்.

பணத்தின் பின்னால் ஓடுபவர்கள் பைத்தியக்காரர்கள். பெயருக்கும், புகழுக்கும் ஆலாய்ப் பறந்து கொண்டிருப்பவர்கள் பைத்தியக்காரர்கள் தான். ஆனால் பெரும்பான்மையான மக்கள் பைத்தியக்காரர்களாக இருப்பதால் அவர்கள் புத்தி சுவாதீனம் உள்ளவர்களாகத் தோன்றுகிறார்கள்.

இன்றைய உலகத்தில் பெயர் புகழின் மேல் ஆசையில்லாமல் இருப்பவன், அதிகாரம் அந்தஸ்து இவற்றை பெரிதாக மதிக்காதவன்தான் பைத்தியக்காரனைப் போல் காட்சியளிக்கிறான். 'என்ன ஆயிற்று இவனுக்கு?' என்று எல்லாரும் அவனைப் பார்த்துக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த போட்டி, பொறாமையில் இருந்து கொஞ்சமாவது விலகியிருக்கலாம் என்று பார்த்தால், உங்களை மக்கள் மீண்டும் மீண்டும் கேள்விகள் கேட்டுக் கொண்டேயிருப்பார்கள்.

"என்ன ஆயிற்று உங்களுக்கு? நீங்கள் ஏன் இப்படி மேலும் மேலும் பணம் சேர்த்து வைத்துக் கொள்ளாமல் இருக்கிறீர்கள்? ஒரே இடத்தில் மௌனமாக உட்கார்ந்து உங்களுக்குள்ளேயே பார்த்துக் கொண்டிருப்பதால் என்ன லாபம்?"

வெளியுலக ஈடுபாடு உள்ளவர்கள் தான் உலகில் நிறையப் பேர் இருக்கிறார்கள் என்பதால் அவர்கள் உங்களை பழித்துப் பேசுவார்கள். நீங்கள் உள்ளுலகத்திலேயே உழன்று கொண்டிருக்கிறீர்கள் என்று கேலி செய்வார்கள். உள்ளுலகத்தில் ஆழ்ந்து இருப்பவன் வக்கிரம் பிடித்தவன் என்று உங்கள் காதுபடப் பேசுவார்கள்.

நீங்கள் சுயநலம் நிறைந்தவர் என்று உங்களைப் பழிப்பார்கள். உங்கள் மகிழ்ச்சியே முக்கியம், அடுத்தவர்கள் எக்கேடு கெட்டாலும் பரவாயில்லை என்று வாழ்வதாக உங்கள் மேல் பழி

சுமத்துவார்கள். நீங்களும் மற்றவர்களைப் போல் வாழ வேண்டும், கூட்டத்தோடு கூட்டமாக வாழவேண்டும் என்று உங்களை நச்சரிப்பார்கள். இந்த உலகத்தில் அவர்கள் கூட்டம் தான் அதிகம். உங்களுக்காகப் பரிந்து கொண்டு யாரும் வர மாட்டார்கள். நீங்கள் தனியாக வாழப் பழகிக் கொள்ள வேண்டும்.

மதப்பிரசாரத்துக்குக் கிளம்பத் தயாராக இருந்த தனது சீடர்களைப் பார்த்து ஏசு நாதர் சொன்னார்.

"நான் உங்களை ஓநாய்களுக்கு நடுவே பிரச்சாரம் செய்ய அனுப்புகிறேன்."

அவர் எந்த அர்த்தத்தில் அப்படிச் சொன்னார் என்று எனக்குப் புரிகிறது. உங்களை நான் வெளியுலகத்திற்கு அனுப்பும் போது உங்களை ஓநாய்களுக்கு இடையே பணி செய்ய அனுப்புகிறேன் என்று எனக்குத் தெரியும். நீங்கள் அமைதியாக, வெகுளியாக, குழந்தைத்தனமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். ஆனால் உலகம் உங்களுக்கு நேர் எதிராக இருக்கிறது.

*எப்போது ஒரு மனிதனால் தனது ஆசைகளை நிரந்தரமாகக் கட்டுப்படுத்த முடிகிறதோ, அப்போது அவன் தானாகவே அமைதியடைகிறான்.*

மொழிபெயர்ப்பாளர் தவறான வார்த்தைகளைப் பிரயோகித் திருக்கிறார் என்றே தோன்றுகிறது.

*எப்போது ஒரு மனிதனால் தனது ஆசைகளை நிரந்தரமாகக் கட்டுப்படுத்த முடிகிறதோ*

கோ ஹ்சுவான் ஆசைகளைக் கட்டுப்படுத்த முடிகிறதோ என்ற பிரயோகத்தைக் கையாண்டிருக்க மாட்டார் என்றே தோன்று கிறது. அவர் என்ன சொல்லியிருக்க வேண்டும்

*எப்போது ஒரு மனிதனால் தனது ஆசைகளைப் புரிந்து கொள்ள முடிகிறதோ...*

இங்கே புரிந்து கொள்ளுதல் மட்டுமே தேவை. வேறு எதுவும் பயன் தராது. ஓர் ஆசையை நீங்கள் ஆழமாகப் புரிந்து கொள்ளும் போது, அந்த ஆசை மறைந்து விடுகிறது. ஆசைகள் இருளைப் போன்றவை. ஒளியைக் கொண்டுவந்தவுடன் இருள் தானாகவே மறைவது போல், புரிந்து கொள்ளும் அறிவைக் கொண்டு வந்தவுடன் ஆசை தாமாகவே மறைந்துவிடும்.

நீங்கள் இருட்டை வெளியே தூக்கியெறிய முடியாது. அதனை அமுக்கி, அடக்கிவைக்க முடியாது. கதவைப் பூட்டிவைத்தால் இருட்டு வராமல் இருக்காது. சுருக்கமாகச் சொன்னால் உங்களால் இருட்டை ஒன்றுமே செய்ய முடியாது. நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் ஒளியைக் கொண்டுவருவது மட்டும்தான்.

ஒரு சிறிய மெழுகுவர்த்தியின் தீபம் போதும். அந்த இருட்டு எவ்வளவு ஆழமாக இருந்தாலும், எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக அது நீடித்திருந்தாலும், அந்த சிறு தீபத்தின் ஒளிக்கு முன்னால் நிற்க திராணியற்று அந்த இருட்டு ஓடிவிடும்.

அதே போல் ஒரு சிறிய புரிந்து கொள்ளுதல் போதும். பல பிறவிகளாக உங்கள் மனதில் மண்டிக் கிடக்கும் ஆசைகள் மறையத் தொடங்கிவிடும். அதன்பின் தன்னிச்சையான அமைதிநிலை பிறக்கும்.

இங்கே தன்னிச்சை என்ற வார்த்தையைக் கூர்ந்து கவனியுங்கள். தாவோவைப் பொறுத்தமட்டில் அது மிக முக்கியமான வார்த்தை.

*மனதில் உள்ள மேகங்கள் விலகும் போது, ஆன்மா தூய்மையானதாக விளங்கும்.*

ஆசைகள் இல்லாவிட்டால் எண்ணங்கள் தாமாகவே விலகிக் கொண்டுவிடும். ஏனென்றால் எண்ணங்கள் ஆசையின் வேலைக்காரர்கள். உங்கள் மனதில் ஆசைகள் நிறைந்து இருக்கும் போது, அதற்கேற்றாற்போல் எண்ணங்களும் மிகுந்து காணப்படும்.

ஆசைகள் நிறைந்த மனத்தில் எண்ணங்கள், திட்டங்கள், என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும். எப்படி ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் போன்றவை நிறைந்து இருக்கின்றன.

ஆசைகள் மறையும் போது நீங்கள் மரத்தை வேருடன் அறுக்கிறீர்கள். அதன் மரத்தின் கிளைகள், இலைகள் எல்லாம் தாமாகவே மறைந்து விடும். ஆசைகள் தான் மரத்தின் வேர். எண்ணங்கள் தான் கிளைகள், இலைகள் போன்றவை. ஆசை என்னும் வேரை அழித்துவிட்டால் சிறிது நேரத்தில் அந்த மரமே தானாக அழிந்து விடுகிறது. அப்படி அந்த மரம் அழியும் போது மனதில் இருக்கும் மேக மூட்டம் விலகி மனம் நிர்மலமாகிவிடுகிறது. அந்த மேகங்கள் இல்லாத தெளிவில், எண்ணங்கள் இல்லாத

மனதில் உங்களால் உங்கள் உள்ளே இருக்கும் ஆன்மாவின் தூய்மையை உணர முடியும்.

*அதன் பின் நிச்சயமாக ஆறுவிதமான ஆசைகள் எழாமலே போய்விடும். மூன்று வகையான விஷம் முற்றிலுமாக அகற்றப் படும்.*

இதை நீங்கள் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆசைகள் எப்போதும் புலன்களின் வழியாகத்தான் பிறக்கின்றன. எனவே ஐந்து புலன்கள் இருந்தால் ஆசைகளும் ஐந்து வகையானதாகத்தான் இருக்க வேண்டும். அப்படித்தான் எல்லா மதங்களும் சொல்கின்றன.

ஆனால் தாவோ மட்டும் தான் ஆறுவிதமான ஆசைகளைப் பற்றிப்ப பேசுகிறது. இதில் ஒரு மகத்தான உண்மை அடங்கி யிருக்கிறது. ஏனென்றால் சமீபத்தில் தான், இருபதாம் நூற்றாண்டில் தான், விஞ்ஞானம் அந்த ஆறாவது புலன் உணர்வைக் கண்டுபிடித்தது. இதுவரை அந்த ஆறாவது புலன்றிவு நம்மால் அறியப்படாமலேயே இருந்தது.

உங்கள் காதுகளுக்கு இரண்டுவகையான புலனுணர்வு உண்டு. ஒன்று ஒலியைக் கேட்பது. அது வெளியே இருப்பது. காதுக்குள் மற்றொரு புலனறிவு இருக்கிறது. அது நீங்கள நடக்கும் போது உங்களைச் சமச்சீர் நிலையில் வைத்திருப்பது. இந்த புலனறிவு இல்லையென்றால் நாம் சரியாக நடக்க முடியாமல் கீழே விழுந்துவிடுவோம்.

ஒரு குடிகாரன் நடந்து செல்வதைக் கவனித்திருக்கிறீர்க...? நேர் பாதையில் செல்லாமல் பாம்பைப் போல் வளைந்து வளைந்து செல்வான். அவன் எடுத்து வைக்கும் அடி இசைவாக இல்லை.

காரணம், அவன் குடித்த மது அவனது ஆறாவது அறிவைப் பாதித்துவிட்டது. உடலைச் சமச்சீராக வைத்திருக்கும் அந்த புலன்றிவு பாதிக்கப்பட்டதால் தான் அவன் வளைந்து வளைந்து செல்கிறான். போதை முற்றிப் போனால் நிறக முடியாமல் தள்ளாடிக் கடைசியில் கீழே விழுந்து விடுகிறான்.

மனிதனுக்கு ஆறு வகையான புலனறிவு உண்டு என்று தாவோ 5000 ஆண்டுகளுக்கு முன்னாலேயே கண்டுபிடித்து சொல்லிவிட்டது. கண்களின் மூலமாக அழகானவற்றைக் காண வேண்டும் என்ற ஆசை எழுகிறது. காதுகளின் மூலமாக இசையை

அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. மூக்கின் மூலமாக நல்ல வாசனையை நுகர வேண்டும் என்ற ஆசை உருவாகிறது.

நாக்கின் மூலமாக நல்ல உணவை ருசிக்க வேண்டும் என்ற ஆசை எழுகிறது. தோலின் மூலமாகத் தொட வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. - இவை எல்லாம் நாம் வழக்கமாகச் சொல்லிக் கொண்டிருக்கும் ஐந்து புலனகள்.

ஆறாவது புலன்றிவின் மூலமாக நாம் சமச்சீர் நிலையுடன், கீழவே விழுந்துவிடாமல் கட்டுப்பாட்டுடன் நிற்க வேண்டும் என்ற ஆசை எழுகிறது. கட்டுப்பாடு நம் கைக்குள் இருக்க வேண்டும் என்ற ஆசை ஆறாம் புலனறிவின் காரணமாக உண்டாகிறது. உங்கள் காதுகளை யாராவது பலமாக அடித்தால் உங்களுக்குத் தலைசுற்றத் தொடங்குகிறது. பகல் நேரத்திலேயே உங்கள் கண்கள் நட்சத்திரங்களைப் பார்க்கத் தொடங்குகிறது.

தாவோ சொல்கிறது, இந்த ஆறுவிதமான ஆசைகளும் எழாது. கண்கள் குருடாகிவிடும் என்று இதற்குப் பொருள் கொள்ளக்கூடாது. ஞானம் வந்தபின்தான் கண்கள் தெளிவாக அழகைப் பார்த்து உணர முடியும். ஆனால் ஆசைகள் இல்லை என்றால் அந்த அழகைச் சொந்தமாக்கிக்கொள்ள வேண்டும் என்ற துடிப்பு இருக்காது.

ஞானம் வந்துவிட்டால் உங்களுக்கு இசை பிடிக்காமல் போய்விடும் என்று பொருள் இல்லை. நல்ல இசை உங்களுக்குப் பிடிக்கும். ஆனால் எதையும் நமது சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற பேராசை உங்களை விட்டு விலகிவிடும்.

உங்கள் புலன்கள் மூலமாக நீங்கள் அனுபவிக்கும் இன்பம் இன்னும் ஆழமானதாக, அர்த்தமுள்ளதாக இருக்கும். ஏனென்றால் உங்களுக்குள் அடைத்துவைக்கப்பட்டிருந்த சக்தி விடுதலைப் பெற்றுவிடுகிறது. உங்கள் புலன்கள் இன்னும் தெளிவாக, ஒளி புகக்கூடிய அளவிற்கு லேசாகிவிடுகின்றன.

புத்தரை விடத் தெளியாக யாரும் அழகைப் பார்க்க முடியாது. லா ட்சூவை விட ஆழமாக யாரும் இசையை ரசிக்க முடியாது. ஏசு நாதரை விட சிறப்பாக யாராலும் ருசி பார்க்க முடியாது. அவர்களுடைய புலன்கள் இன்னும் கூர்மையாகி விடுகின்றன. உங்களுடைய புலன்கள் மழுங்கலாக இருக்கின்றன.

நீங்கள் வாழும் சமுதாயம் உங்கள் புலன்கள் மழுங்கலாக இருப்பதையே விரும்புகிறது. உங்கள் புலன்கள் இன்னும் கூர்மையாகத் தெளிவாக இருந்தால் இந்த சமுதாயத்துக்கு ஆபத்து. ஏனென்றால் உங்களுக்கு அனுபவிக்கும் எதையும் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையும் மிகுந்திருக்கும். அந்த ஆசையும், கூர்மையான புலன்களும் சேர்ந்தால் நீங்கள் ஆபத்தான மனிதராகிவிடுவீர்கள்.

உங்கள் புலன்கள் படு கூர்மையாக இருக்கின்றன. அழகான ஒரு பெண்ணைப் பார்க்கிறீர்கள். அவளோ மாற்றான் மனைவி. உங்கள் கண்கள் அவளது அழகைப் பார்க்க நேர்ந்தால், அவளைச் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற உங்கள் ஆசையை நீங்கள் செயல்படுத்த முற்பட்டால்... நீங்கள் அவள் கையைப் பிடித்து இழுப்பீர்கள். அவளோடு கூட ஓடிப் போகத் திட்டம் போடுவீர்கள். அவளைக் கற்பழிக்கவும் துணிவீர்கள். ஏதாவது ஒரு தப்பு நடக்கும்.

புலனறிவால் நுகர்வதை எல்லாம் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட்டால் தான் இயற்கை உங்கள் புலனறிவைக் கூர்மையாக்கும். அதன் பின் நீங்கள் பாறைகளைத் தொட்டாலும் வெல்வெட் மெத்தையைத் தொடுவது போலத்தோன்றும். எல்லாப் பொருள்களுக்கும் இயல்பாக இருக்கும் தெய்விக குணம் உங்களுக்குத் தெரிய ஆரம்பிக்கும். உலகமே மாறிப் போயிருக்கும்.

*மூன்று வகையான விஷங்கள் முற்றிலுமாக முறியடிக்கப்படும்*

மூன்று விதமான விஷங்கள் என்ன? முதல் விஷம் காமம். காமம் என்பது உடலுறவு கொள்வது அல்ல. காமம் வேறு, செக்ஸ் வேறு. செக்ஸ் இயல்பானது. மனிதனுக்கு இறைவன் கொடுத்த வரப்பிரசாதம் செக்ஸ். தாவோ செக்சை எதிர்க்கவில்லை.

இந்த உலகத்திலேயே செக்சை எதிர்க்காத ஒரே மதம் தாவோ தான். செக்சை ஆதரிக்கும் ஒரே மதம், அதை விடுதலைக்கான ஓர் உபாயமாகச் சித்திரிக்கும் ஒரே மதம் தாவோதான். தாவோ மதத்தில் அதற்கேயுரித்தான செக்ஸ் சாஸ்திரம் இருக்கிறது. தாவோவின் தந்திர சாஸ்திரம் இந்திய தந்திர சாஸ்திரத்தை விட ஆழமானது.

அதனால் தாவோ செக்சையோ, உடலுறவு கொள்வதையோ, இயல்பான ஆண்-பெண் உறவையோ எதிர்க்கவில்லை. அது

காமத்தை மட்டுமே எதிர்க்கிறது. செக்சின் வக்கிரமான படிவம்தான் காமம். செக்ஸ் சக்தியின் வக்கிரமான வெளிப்போக்குதான் காம இச்சை. காம உணர்வு. அது தான் இங்கே விஷமாகச் சித்திரிக்கப் படுகிறது.

இரண்டாவது விஷம் கோபம். மூன்றாவது, பேராசை. காமம், கோபம், பேராசை - இந்த மூன்று விஷங்களும் உங்களுக்குள் கலக்கும் போது, இந்த அழிவின் மும்மூர்த்திகள் உங்களுக்குள் சங்கமிக்கும் போது உங்களுடைய அகந்தையின் ஜனனம் ஏற்படுகிறது. இந்த மூன்று விஷங்களையும் கரைத்துவிடலாம். அழித்துவிடலாம் என்ற நம்பிக்கையையும் தருகிறது தாவோ.

காமம் அகன்று விட்டால் கோபம் தானாகவே அகன்றுவிடும். உங்கள் காம இச்சைகள் தடைபடும் போதுதான் உங்களுக்கு கோபம் உருவாகிறது. உங்கள் காமத்தைத் தடுக்கும் யாரும் உங்களுக்குள் கோபத்தை உருவாக்குகிறார்கள். அவர்களைத்தான் நீங்கள் உங்கள் பகைவர்களாகக் கருதுகிறீர்கள்.

காமம் தான் உங்களுக்குள் பேராசையையும் தோற்றுவிக்கிறது. பேராசை என்பது காமத்தின் இன்னொரு வக்கிரமான பரிமாணம். அவ்வளவுதான். உங்களால் வேறு எதையும் காதலிக்க முடியாத போது பணத்தைக் காதலிக்கத் தொடங்குகிறீர்கள்.

நீங்கள் பணத்தை, அதிகாரத்தைக் காதலித்தால் இந்த சமுதாயம் உங்களை எதிர்க்காது. ஆனால் உண்மையாகவே ஒரு பெண்ணைக் காதலித்தால் சமுதாயம் உங்களைச் சும்மாவிடாது. இயல்பாக உங்களுக்கு ஏற்படும் காதலை பணத்தின் மீதும், அதி காரத்தின் மீதும் திருப்பி விடுகிறது இந்த கேடுகெட்ட சமுதாயம்.

முதலில் உங்கள் காதலைக் காமமாக மாற்றுகிறது இந்த சமூகம். செக்ஸ் என்பது இயற்கையான ஒரு நிகழ்வு. இனப்பெருக்கத்துக்காக இயற்கை உங்களுக்குக் கொடுத்த ஓர் உணர்வு. ஆனால் காமம் என்பது 24 மணி நேரமும் செக்சைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பது.

அது இயற்கையான விஷயம் இல்லை. பிறப்புறுக்களிய் மையம் கொண்டிருக்க வேண்டிய செக்ஸ் உணர்வு உங்கள் தலையில், உங்கள் மூளையில மையம் கொள்ள ஆரம்பிக்கும் போது அது காமமாக, வக்கிரமாக மாறுகிறது. இப்போது நீங்கள் இரவும் பகலும் செக்சைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒரு மணி நேரத்துக்கு எத்தனை முறை செக்சைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். ஒரு மணி நேரத்தில் எவ்வளவு முறை செக்ஸ் சிந்தனை வருகிறது என்பதைக் கவனித்துப் பார்த்தால் நீங்கள் பிரமித்துப் போவீர்கள் என்று மனவியல் வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

ஒரு பெண் எத்தனை முறை சிந்திக்கிறாளோ அதைவிட இரண்டு மடங்கு அதிகமாக ஓர் ஆண் சிந்திக்கிறான். ஆண்-பெண் முரண்பாடுகள் வர இதுவும் ஒரு முக்கிய காரணம். இருவரின் செக்ஸ் ஆசைகளும் முற்றிலும் வேறுபட்டு இருக்கின்றன.

ஆணின் செக்ஸ் உணர்வுகள் இன்னும் அழுத்தமாக அமுக்கி வைக்கப்படுகின்றன. ஏனென்றால் ஆணுக்கு வேறு ஆசைகள் நிறைய இருக்கின்றன - பணம் சம்பாதிக்க வேண்டும், புகழ் பெற வேண்டும், முதலமைச்சராக வேண்டும், அரசியலில் லாபம் ஈட்ட வேண்டும் என்று பல ஆசைகள்.

இந்த ஆசைகள் எல்லாம் நிறைவேற சக்தி வேண்டும் அல்லவா? அந்த சக்தி எங்கிருந்து வருகிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களிடம் பலதரப்பட்ட சக்திகள் இல்லை. பணம் சம்பாதிக்க ஒரு சக்தி, புகழ் பெற வேண்டுமென்றால் மற்றொரு சக்தி, அரசியலில் ஆதாயம் தேட வேண்டுமென்றால் இன்னுமொரு சக்தி என்று பலதரப்பட்ட சக்திகள் உங்களிடம் இல்லை. உங்களிடம் இருப்பதெல்லாம் ஒரே ஒரு சக்திதான்.

அதற்கு என்ன பெயர் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். அதை abc என்று அழையுங்கள், இல்லை xyz என்று அழையுங்கள். இங்கே பெயர் முக்கியமில்லை. ஒரே ஒரு சக்தி தான் உங்களிடம் இருக்கிறது என்பதுதான் முக்கியம்.

ஃப்ராய்டு இந்த சக்திக்கு libido அல்லது பாலுணர்ச்சியின் உந்துதல் என்று பெயரிட்டார். ஆனால் அதன் உட்பொருள் செக்ஸ் தான். இப்போது நீங்கள் பணம் ஈட்ட வேண்டுமென்றால், புகழ் பெற வேண்டுமென்றால், ஒரு நாட்டுக்கு தலைவராக வேண்டுமென்றால் உங்கள் செக்ஸ் சக்தியை எடுத்து அதை அந்த வழிகளில் செலவிட வேண்டும். இது தான் சூட்சுமம்.

அமெரிக்க அதிபராக இருந்த ஜிம்மி கார்ட்டரும், ரஷிய அதிபராக இருந்த பிரஷ்னேவும் முக்கியமான ஒரு கருத்தாலோசனைக் கூட்டத்தில் ஆழ்ந்திருந்தனர். அவர்களுடைய

மனைவிமார்கள் கூட்டம் நடந்த இடத்துக்கு வெளியே இருந்த ஓர் அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

பல மணி நேரங்களாகியும் கூட்டம் முடிந்தபாடில்லை. தலைவர்களின் மனைவிகளின் பேச்சு அந்தரங்க விஷயங்களை நோக்கித் திரும்பியது.

ஜிம்மி கார்ட்டரின் மனைவி ரோசலின் அலுப்புடன் சொன்னார்.

"இப்போதெல்லாம் அவருக்கு செக்சின் மேல் நாட்டமே இல்லாமல் போய்விட்டது. அவர் படுக்கையறைக்கு வரும் போது நள்ளிரவுக்கு மேல் ஆகிவிடுகிறது. அலுத்துச் சலித்து வரும் அவர் அப்படியே படுத்துத் தூங்கிப் போய்விடுகிறார். அவர் என்னைச் சரியாகப் பார்த்தே பல வருடங்கள் ஆகிவிட்டன."

"என் கதையும் அதே தான். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை." என்று ரஷிய அதிபரின் மனைவி அலுத்துக் கொண்டார்.

ரோசலின் தொடர்ந்தார்.

"அன்று இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்று தீர்மானித்தேன். ஜிம்மியை எப்படியாவது உடலுறவில் ஈடுபட வைக்க வேண்டும் என்று நினைத்தேன். இரவு நன்றாகக் குளித்து அவருக்குப் பிடித்த கருப்பு நிறத்தில் உள்ளூறுப்புக்கள் தெரியும் மெல்லிய ஆடையை அணிந்து கொண்டேன்.

"நல்ல வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டேன். படுக்கையில் மலர்கள் தூவி அலங்காரம் செய்தேன். அவர் அறைக்குள் நுழைந்ததும் அவரைப் படுக்கையில் முரட்டுத்தனமாகத் தள்ளி, அவர் மேல் படுத்துக் கொண்டு என் ஆடையை விலக்கி என் மார்பகங்களைக் காட்டினேன்.

"இதைப் பார்க்கும் போது உங்களுக்கு ஏதாவது ஞாபகம் வருகிறதா என்று காதல் பொங்கக் கேட்டேன்.

"நிச்சயமாக, இஸ்ரேல் நாட்டுப் பிரதமரிடம் ஒரு முக்கிய விஷயம் பேச வேண்டும். அதை மறந்து விட்டேன். இப்போது தான் நினைவுக்கு வருகிறது. நாளை எப்படியும் பேசிவிட வேண்டும். குட் நைட். என்று சொல்லித் திரும்பிப் படுத்துக் கொண்டு தூங்கி விட்டார்."

“என் கதையும் அப்படித்தான். நீங்கள் செய்ததைத்தான் நானும் செய்தேன்.” என்று தொடங்கினார் ரஷிய அதிபரின் மனைவி.

“நீங்கள் செய்ததைப் போலவே நானும் செய்தேன். நான் ஒரு படி மேலே போனேன். பிரஷ்னேவ் அறைக்குள் வந்தபோது என் உடம்பில் ஒரு பொட்டுத் துணி கூட இல்லை. அவர் படுக்கையில் படுத்தவுடன் நான் அவர் மேல் குதித்து என் பிறப்புறுப்பை அவர் முகத்துக்கு முன்னால் வைத்தேன். “இதைப் பாருங்கள். இப்போது உங்களுக்கு ஏதாவது தோன்றுகிறதா?” என்று கேட்டேன்.

“ஐயையோ, நான் கியூபா நாட்டு அதிபர் ஃபிடல் கேஸ்ட்ரோவைக் கூப்பிட்டுப் பேச வேண்டும் என்று நினைத்தேன். மறந்துவிட்டேன். இதைப் பார்க்கும் போது அது தான் நினைவுக்கு வருகிறது.”

இப்படித்தான் நடக்கும். உங்கள் செக்ஸ் சக்தியை வைத்துத் தான் நீங்கள் பணம் ஈட்டுவது, அரசியலில் ஆதாயம் தேடுவது, புகழ் பெறுவது போன்ற செயல்களைச் செய்கிறீர்கள். அவை எல்லாம் உங்களுக்கு செக்ஸ் பொருள்களாக மாறிவிடுகின்றன.

இந்த மனிதர்கள் செக்ஸ் ஆசையை எப்படிக் கட்டுப்படுத்துவது என்று மற்றவர்களுக்கு எளிதாக உபதேசம் செய்யலாம். இவர்கள் செக்சே இல்லாமல் வாழப் பழகிக் கொண்டுவிட்டார்கள். செக்ஸ் சக்தியை இவர்கள் வக்கிரமாக மாற்றி பணம் ஈட்டுவதிலும், அரசியலில் சாதனைகள் செய்வதிலும் செலவிட்டுவிட்டார்களே! இந்த மாதிரி மனிதர்களிடம் வன்முறை மிக அதிகமாக இருக்கும். இவர்களால் தான் இந்த உலகம் எப்போதும் எங்காவது ஓர் இடத்தில் போர்முனையில் இருக்கிறது.

செக்ஸ் வக்கிரமாக மாறும் போது, காதல் வெறுப்பாக மாறுகிறது. செக்சில் எந்த தப்பும் இல்லை. ஆனால் வக்கிரம், காமம் இவை முழுக்க முழுக்க தப்புதான். செக்சை அதன் போக்கில் இயல்பாக விட்டுவிட வேண்டும். அப்படி விட்டுவிட்டால் ஒரு நாள் இல்லாவிட்டால்

ஒரு நாள் நீங்கள் அதைத் தாண்டி அப்பால் செல்லலாம். ஆனால் அது இயற்கையாக, தன்னிச்சையாக நடக்க வேண்டும். கஷ்டப்பட்டு நீங்கள் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதால் எந்த பயனும் இல்லை. செக்ஸ் ஒரு கொண்டாட்டமாக இருக்கிறது என்றால், அதனை விட்டு அதனைத் தாண்டி செல்லும் அந்த

நிலை அதைவிடப் பெரிய ஆனந்தக் கொண்டாட்டமாக இருக்க வேண்டும்.

உங்களுக்கு 14வது வயதில் இருந்து செக்ஸ் ஆசைகள் தோன்ற ஆரம்பிக்கின்றன. அதை இயல்பாக அனுபவித்தால், வக்கிரங்கள் எதுவும் இல்லாமல், செயற்கையான கட்டுப்பாடுகள் இல்லாமல் அதை அனுபவித்து வந்தால் சரியாக 42வது வயதில் உங்கள் செக்ஸ் ஆசைகள் தாமாகவே ஒடுங்கிவிடும்.

ஆனால் இந்த உலகம் வக்கிரம் பிடித்த உலகமாக இருக்கிறது. பத்து வயது குழந்தைகளுக்குக் கூட வக்கிரமான செக்ஸ் ஆசைகள் இருக்கின்றன. பாலுணர்வைத் தூண்டும் திரைப்படங்கள், புத்தகங்கள், பத்திரிகைகள் மூலமாக நாம் அவர்கள் மனதில் விஷத்தை ஏற்றியிருக்கிறோம். சிறுவர்கள் கூட காம உணர்வுக்கு ஆட்பட்டு செக்சைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஓர் இத்தாலியன் நாட்டின் கோடியில் இருந்த ஒரு கிராமத்துக்கு வந்தான். வயலில் உழுது கொண்டிருந்த ஒரு விவசாயியைப் பார்த்துக் கேட்டான்,

“குழந்தைகள் எங்கிருந்து வருகிறார்கள் என்று உனக்குத் தெரியுமா?”

“ஓ, தெரியுமே! முட்டைக் கோஸ் செடியிலிருந்துதான் குழந்தைகள் தோன்றுகிறார்கள்.”

சிறிது தூரம் நடந்து சென்ற இத்தாலியன் அங்கே இருந்த ஒரு பால்காரனைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டான்.

“ஓ, தெரியுமே! இரவு நேரத்தில் கொக்கு குழந்தைகளைக் கொண்டு வந்து வீட்டில் போட்டுவிடும்.”

தலையில் அடித்துக் கொண்டான் இத்தாலியன். சரி ஊரில் இருக்கும் தேவாலயத்தின் பாதிரியாரைக் கேட்போம் என்று அவரைத் தேடிப் போனான்.

அவர் சொன்னார்,

“இதில் என்ன சந்தேகம் மகனே, கடவுள் சொர்கத்திலிருந்து குழந்தைகளை நம்மிடம் அனுப்புகிறார்.”

“சே, என்ன ஊர்டா சாமி, இந்த கிராமத்தில் இருக்கும் யாருமே செக்ஸ் வைத்துக் கொண்டதில்லையா?”

இப்போது பாருங்கள் சிறுவர்கள் வயதுக்கு வருவதற்கு முன்னாலேயே அவர்களிடம் காம உணர்வு வந்துவிடுகிறது. 80 வயதுக் கிழவர்கள் இன்னமும் பெண்கள் பின்னால் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். இந்த இருதரப்பினருமே இயற்கையாக வாழவில்லை.

தாவோ இயல்பான, இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே சொல்லித்தருகிறது. அது செக்சை எதிர்க்கவில்லை. காமத்தை மட்டுமே எதிர்க்கிறது.

காமம் உங்களுக்குள் நுழையவில்லையென்றால், செக்சுக்கு எதிராக இந்த சமூகம் பிரச்சாரம் செய்யவில்லையென்றால், செக்ஸ் ஓர் இயல்பான உணர்வாக ஏற்றுக் கொள்ளப்பட்டது என்றால், அங்கே வக்கிரங்களுக்கு இடமில்லை.

ஒழுக்கத்தைக் கற்றுக் கொடுக்கிறேன் பேர்வழி என்று மூர்க்கத்தனமாக செக்சை எதிர்க்கும் பாதிரியார்கள், மதகுருமார்கள், ஒழுக்கவாதிகள் - இவர்களால்தான் உங்களுக்குள் வக்கிர உணர்வு நுழைகிறது.

அத்தகைய வக்கிர உணர்வு இப்போது செக்ஸ் உணர்வே தோன்றாத பாலகனிடமும் இருக்கிறது. உண்மையான செக்ஸ் வைத்துக் கொள்ள முடியாத முதியவர்களிடமும் இருக்கிறது.

செக்சை தனிமனித விருப்பத்துக்கு விட்டுவிட்டால், அதிலே இந்த சமுதாயமோ, மதமோ, மதகுருமார்களோ, போதகர்களோ குறுக்கிடவில்லை என்றால் ஒவ்வொரு மனிதனும் ஏறக்குறைய 14 வயதில் செக்ஸ் வைத்துக் கொள்ளும் அளவிற்கு மனப் பக்குவமும், உடல் பக்குவமும் பெறுவான்; அதேபோல் ஏறக்குறைய அவனுடைய 42ஆவது வயதில் அந்த செக்ஸ் ஆசைகள் அவனை விட்டுத் தாமாகவே விலகிவிடும்.

ஒரு மனிதனுக்கு 42 வயது ஆகும் போது அவனுக்கு செக்ஸ் விஷயத்தில் பரிபூர்ண முதிர்ச்சி கிடைத்துவிடுகிறது. சே, இது என்ன குழந்தைத்தனமான விளையாட்டு என்ற எண்ணம் அவனில் தோன்றிவிடுகிறது.

அதன் பின் அவன் செக்சை முழுவதுமாக விட்டுவிடுகிறான். அந்த மலர்ச்சியும், பக்குவமும் மிகவும் அழகானது. தானாக, தன்னிச்சையாக நிகழும் எதுவுமே அழகாகத்தான் இருக்கும். ஏனென்றால் அது தாவோ மூலமாக நடக்கிறது. அப்படி ஒரு மனிதன் பரிபூர்ணமாக மலரும் போது அவனிடம் கோபமும் இருக்காது, பேராசையும் இருக்காது.

*மனிதனுக்கு இந்த சக்தி இல்லாததற்குக் காரணம் அவன் மனம் தெளிவில்லாமல் இருப்பதுதான். அவனது ஆசைகள் கட்டுக்கு அடங்காமல் இருப்பதுதான்.*

ஆழ்நிலை சிந்தனை நமக்குள்ளே ஒரு தெளிவைத் தருகிறது. தியானம் ஓர் அழகான உள் ஒழுக்கத்தை உருவாக்குகிறது. தியானம் என்பதற்கு தாவோ சொல்லும் அர்த்தம் என்ன தெரியுமா?

மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓர் இடத்தில் உட்காருவது அல்ல. இல்லை வலுக்கட்டாயமாக ஒரே பொருளை மனதில் நினைத்துக் கொண்டிருப்பது அல்ல. தியானம் என்பது நமது மனத்தை, அதன் செயல்பாடுகளை சற்று தள்ளி நின்று ஒரு சாட்சி பாவத்தில் கவனிப்பதுதான்.

*ஆசைகளைக் கடந்து செல்லும் வல்லமை படைத்த ஒருவன் தனக்குள்ளே பார்த்து ......*

இது தான் தியானம் என்று கோ ஹ்சுவான் சொல்கிறார்.

*ஒருவன் தனக்குள்ளே பார்த்து மனதைப் பற்றி நினைக்கும் போது...*

மனதின் செயல்பாடுகளை அமைதியாகக் கவனித்துக் கொண்டிருக்கிறான் தியானி. மனதில் எழும் எண்ணங்கள், நினைவுகள், கனவுகள், ஆசைகள் எல்லாவற்றையும் பார்க்கும் போது அவனுக்கு ஒரு ஞானம் பிறக்கிறது. அது என்ன ஞானம்?

*தன் மனதிற்குள் மனம் இல்லை என்பதை உணர்ந்துவிடுகிறான்.*

இது மிகவும் விசேஷமான சூத்திரம். உங்கள் மனதை அமைதியாக, தெளிவாகக் கவனிக்கத் தொடங்கும் போது அந்த மனம் தானாகவே மறைந்து விடுகிறது. உங்கள் விழிப்புணர்வு அதிகமாக அதிகமாக மனம் உள்ளே ஒடுங்கிவிடுகிறது.

ஒரு சதவிகிதம் விழிப்புணர்வு இருந்தால் 99 சதவிகிதம் மனம் இருக்கும். 99 சதவிகிதம் விழிப்புணர்வு இருந்தால் 1 சதவிகிதம் தான் மனம் இருக்கும். விழிப்புணர்வு 100 சதவிகித மாகும் போது மனம் முழுவதுமாக மறைந்துவிடுகிறது. எல்லா எண்ணங்களும் மறைந்து விடுகின்றன. மனம் காலியாக இருக்கிறது. அந்த காலியிடத்துக்கு தாவோ வேகமாக வந்து சேருகிறது.

அது வருவதற்கான சரியான வெற்றிடத்தை நீங்கள் இப்போது உருவாக்கிவிட்டீர்கள்.

*வெளியே பார்த்து, வெளியே தெரியும் வடிவங்களைப் பற்றி விசாரம் செய்யும் போது,*

இப்போது உங்களால் வெளியே பார்க்க முடிகிறது. முதலில் உங்களுக்குள்ளேயே பாருங்கள். உங்களுடைய பார்வையால், விழிப்புணர்வால் உங்கள் மனம் மறைந்து விடுகிறது. அதன் பின் உண்டாகும் தெளிவால் நீங்கள் வெளியே பார்க்கத் தொடங்குகிறீர்கள்.

*வெளியே பார்த்து, வெளியே தெரியும் வடிவங்களைப் பற்றி விசாரம் செய்யும் போது,*

இப்போது வெளியே தெரியும் உருவங்களை தியானம் செய்யுங்கள். மரங்கள், மேகங்கள், விண்மீன்கள், நிலா.. போன்ற வெளியுருவங்களை தியானியுங்கள்.

*அந்த வடிவத்திற்குள் வடிவம் இல்லை என்பதை அறிந்து கொள்கிறான்.*

அப்படிப் பார்க்கும் போது உங்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் இப்போது கடல் தனியாக அலை தனியாக பார்க்காமல் எல்லாம் கடல் தான் என்ற உண்மை தெரிந்து பார்க்கிறீர்கள். வடிவத்துக்குள் வடிவம் இல்லை. அலை என்று கடலை விட்டுத் தனியாக எதுவும் இல்லை. வெளியே மரங்கள் இல்லை. கோடிக்கணக்கான வடிவங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் உயிர் தான் இருக்கிறது. அது உருவமற்றது.

*இன்னும் தூரத்தில் இருப்பனவற்றைப் பார்க்கும் போது, பருப்பொருளைப் பற்றி விசாரம் செய்யும் போது, பருப்பொருளிற்குள், பருப்பொருள் இல்லை என்பதை உணர்ந்து கொள்கிறான்.*

இதுவும் முக்கியத்துவம் வாயந்த சூத்திரம்தான். இருபதாம் நூற்றாண்டில் தான் விஞ்ஞானிகள் பருப்பொருள் உண்மையிலேயே இல்லை என்ற மாபெரும் உண்மையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். எல்லாமே சக்தியின் வடிவம் தான் என்பதைச் சொல்லியிருக்கிறார்கள்.

ஐன்ஸ்டீன் பருப்பொருளைச் சக்தியாக மாற்றுவதற்கு ஒரு சமன்பாட்டையே உருவாக்கினார். ஆனால தாவோ இந்த அடிப்படை உண்மையை 5000 ஆண்டுகளுக்கு முன்னாலேயே உணர்ந்திருந்தது.

*பருப்பொருளிற்குள், பருப்பொருள் இல்லை*

உங்களால் தியானம் செய்ய முடியும் என்றால் முதலில் உங்களுக்குள் இருந்து தொடங்குங்கள். அதன் பின் உங்களைச் சுற்றிப பாருங்கள். சுற்றி உள்ள பொருள்களின் ஆழத்தில் இருக்கும் மையப்பகுதியைப் பாருங்கள். முதலில் மனம் மறைகிறது. பின் வடிவங்கள் மறைகின்றன. அதன் பின் பருப்பொருளும் மறைந்து விடுகிறது.

பாக்கி நிற்பது என்ன? மனம், வடிவம், பருப்பொருள் - இவை மூன்றும் சேர்ந்திருப்பதுதான் நாம் காணும் உலகம். இவை மூன்றும் மறைந்து விட்டால் விஞ்சி நிற்பது என்ன? அது தான் தாவோ. அது தான் இயற்கை. அந்த இயற்கையில் வாழ்வது என்பது உண்மையான சுதந்திர வாழ்க்கை. அது தான் நிரந்தரமான ஆனந்தம்.

கடவுளைக் குறிக்க கோ ஷ்சுவான் உபயோகிக்கும் வார்த்தை தாவோ. புத்த பெருமான் கடவுளுக்குப் பயன்படுத்தும் சொல் தம்மா. புத்தர் சொல்கிறார், இந்த தம்மா சனாதனமானது.

நிரந்தரமாக இருக்கும் ஒரு விதியை நீங்கள் தெரிந்து கொள்ளும் போது நீங்களும் நிரந்தரமாகிறீர்கள்.

காலம் இடம் முதலியவற்றை எல்லாம் கடந்து நிற்கிறீர்கள். நீங்கள் இல்லை. அதே சமயம் நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு தனி வஸ்துவாக இல்லை. அதே சமயத்தில் முதல் முறையாக நீங்கள் முழுமையாக, பூரணமாக, பிரம்மமாக இருக்கிறீர்கள்.

இது தான் என்னுடைய பார்வையும். நான் தாவோவை அப்படியே ஏற்றுக் கொண்டவன்.

என்னால் மற்ற மதங்களைப் பற்றி இந்த கருத்தைச சொல்ல முடியாது. ஆனால் தாவோவைப் பற்றிச் சொல்ல முடியும். தாவோவின் பார்வையில் இருக்கும் தீர்க்கமும் ஆழமும் மற்ற எந்த மதங்களின் பார்வையிலும் இல்லை என்று என்னால் உறுதியாகச் சொல்லமுடியும்.

இந்த பூமியில் தாவோவைப் போன்ற ஆழமான மதம் வேறு எதுவும் இல்லை.

❍

## 10. வாழ்க்கைக்கு 'சரி' என்று சொல்லுங்கள்

*முதல் கேள்வி:*

*என்னால் சரி என்று சொல்லமுடியவில்லை. மற்ற வர்கள் சொல்வது இருக்கட்டும். என்னால் எனக்கே சரி என்று சொல்லமுடியவில்லை. என்னுடைய கவலைகள், பிரச்சினைகள் எல்லாமே இதனால் தான் வருகிறது என்று நினைக்கிறேன்.*

ஆனந்த் ரெனாட்டா,

இன்று இதுதான் மிகப்பெரிய பிரச்சினை. இதை ஒவ்வொரு மனிதனும் சந்தித்துக் கொண்டிருக்கிறான். ஏனென்றால் இது வரை நமது சமுதாய அமைப்பே பழிப்பதன் அடிப்படையில் தான் இருக்கிறது.

இன்று இருக்கும் மதங்கள், சமுதாயங்கள் எல்லாம் கூட்டணி அமைத்துக் கொண்டு உங்கள் மனதில் மிக அதிகமான குற்ற உணர்வை உண்டாக்கியிருக்கின்றன. நீங்கள் யாராக இருக்க வேண்டுமோ, அப்படி இல்லை. உங்களால் அடைய முடியாத லட்சியங்களை உங்களுக்கு கொடுக்கின்றன. அதை அடைய முடியாத போது உங்களுக்கு உங்கள் மேலேயே வெறுப்பாக இருக்கிறது. உங்களுக்குக கிறுக்குப் பிடித்தது போல் இருக்கிறது.

எல்லாவற்றிலும் முழுநிறைவைக் கண்டே ஆக வேண்டும் என்ற உங்கள் மனப்பாங்குதான் உங்கள் மனநோய்களுக்குக் காரணம். யாராலும் முழுநிறைவாக இருக்க முடியாது. யாரும் அப்படி இருக்கத் தேவையில்லை. எல்லாரும் முழுநிறைவில்லாமல் இருப்பதால் தான், மனிதர்களிடம் குற்றம் குறைகள் இருப்பதால் தான் நம்மால் நமது வாழ்க்கையை அனுபவிக்க முடிகிறது.

எல்லாவற்றிலும் முழுநிறைவு காண்பது என்பது மரணத்திற்கு சமம் குற்றம் குறைகள் நிறைந்ததுதான் வாழ்க்கை.

உங்களிடம் குற்றம் குறைகள் இருப்பதால் தான் உங்களால் வளர முடிகிறது. நீங்கள் முழுநிறைவாக இருந்துவிட்டால் அதன் பின் வளர்ச்சிக்கு எங்கே இடம் இருக்கும்? அதன் பின் உங்களுக்கு எதுவுமே நடக்காது.

நடக்க வேண்டியதெல்லாம் நடந்து நீங்கள் தான் முழுநிறைவைக் கண்டுவிட்டீர்களே! அதன் பின் வாழ்வதில் என்ன நோக்கம், என்ன பயன், என்ன அர்த்தம் இருக்க முடியும், சொல்லுங்கள். அந்த நிலையில் உங்களுக்கும் பிணத்துக்கும் அவ்வளவாக வித்தியாசம் எதுவும் இருக்காது.

அதனால் தான் சொல்கிறேன், கடவுள் என்பவரே குற்றம் குறைகள் நிறைந்த ஒரு நிகழ்வுதான். ஏனென்றால் இந்த பிரபஞ்ச இருப்புநிலையில் கடவுள் தான் மிக அதிகமான பரிணாம வளர்ச்சி அடைபவர். முழு நிறைவும் பரிணாம வளர்ச்சியும் ஒன்றுக்கு ஒனறு முரணானது.

இதனால் தான் எல்லா மதங்களும் பரிணாம வளர்ச்சித் தத்துவத்தை எதிர்க்கின்றன. உயிரினங்களில் பரிணாம வளர்ச்சித் தத்துவத்தை வரையறுத்துச் சொன்ன விஞ்ஞானி சார்ல்ஸ் டார்வினை, கிறிஸ்தவ மதம் மூர்க்கத்தனமாக எதிர்த்தது.

அந்த எதிர்ப்புக்குக் காரணம் இதுதான். கிறிஸ்தவ மதம் முழுநிறைவான ஓர் இறைவனை நம்பியது. முழுநிறைவான் இறைவன் குற்றம் குறைகள் நிறைந்த உலகை நிச்சயம் படைத்திருக்க மாட்டார். முழுநிறைவான ஓர் இறைவனிடமிருந்து குற்றங்குறைகள் நிறைந்த உலகம் எப்படி வந்திருக்க முடியும்?

எந்த குறையும் இல்லாத மிக நேர்த்தியான உலகும் உயிரினங்களும் இறைவனிடமிருந்து வந்தது என்று வைத்துக் கொண்டால், அவை எப்படி பரிணாம வளர்ச்சி அடைந்திருக்க முடியும்? எங்கோ காட்டில் மரத்துக்கு மரம் தாவிக் கொண்டிருந்த ஒரு வகைக் குரங்கு எப்படி ஆறறிவு உள்ள மனிதனாக பரிணாம வளர்ச்சி பெற்றிருக்க முடியும்?

பரிணாம வளர்ச்சிக் கொள்கையை ஏற்றுக்கொண்டால் இந்த உலகம், இறைவனின் படைப்பு எல்லாமே குற்றம் குறைகள் நிறைந்தது என்பது தெளிவாகிவிடும். அதனால் இறைவனிடமே குறை இருக்கிறது என்ற கூற்றும் உணமையாகிவிடும்.

உலகத்தில் உள்ள எந்த மதத்துக்கும் கடவுளிடம் குற்றம் இருக்கிறது என்று சொல்லுமளவிற்கு துணிச்சல் இல்லை. ஆனால் நான் சொல்கிறேன், இறைவனிடமும் குறை இருக்கிறது. குறை இருந்தால்தானே பரிணாம வளர்ச்சி ஏற்பட முடியும்? குறைகளே இல்லாத ஒன்று வளரவே முடியாது. வளர்ச்சி என்பது குறைகளை நிறைகளாக்குவதுதானே! குறை என்பது உயிரோட்டத்தின் அடையாளம். வளர்ச்சியின் சின்னம்.

கடவுளிடம் இருக்கும் குற்றம் குறைகள் வரையறையற்றவை. அவர் எப்போதும் முழுநிறைவான நிலையை அடையவே மாட்டார். எந்த நொடியில் கடவுள் தனது குற்றம் குறைகள் அனைத்தையும் களைந்து முழுநிறைவு பெறுகிறாரோ, அதே நொடியில் பிரபஞ்ச இருப்புநிலை இல்லாத்தாகிவிடும்.

கடவுள் எப்போதுமே முழு நிறைவாய் இருப்பவர் என்ற இந்த கோட்பாட்டின் காரணமாகத்தான் நாம் பல நூற்றாண்டுகளாக அந்த முழுநிறைவை அடைய பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.

இதில் இரண்டு விளைவுகள் ஏற்பட வாய்ப்பு இருக்கிறது.

ஒன்று, நீங்கள் எளிமையாக, வெகுளியாக இருந்தால், இந்த முழுநிறைவைத் தேடும் முயற்சி உங்களைப் பைத்தியக்காரனாக்கி விடும். உங்களால் எப்போதும் முழுநிறைவை அடைய முடியாது என்பதால் உங்கள் மனதில் எப்போதும் மலை போன்ற குற்ற உணர்வு தங்கி நிற்கும். அது உங்களை அழுத்திவிடும்.

உங்கள் வாழ்க்கையில் உள்ள மகிழ்ச்சியை அழித்துவிடும். உங்கள் வாழ்க்கையில் விஷத்தைக் கலந்துவிடும். அது உங்களை ஆனந்தமாக ஆட விடாது, பாடவிடாது, கொண்டாடவிடாது. உங்களைத் தற்கொலைக்குத் தூண்டிவிடும்.

இரண்டாவது விளைவு: நீங்கள் எளியவராக, வெகுளியாக இல்லையென்றால் நீங்கள் சாமர்த்தியசாலியாக, சூழ்ச்சிக்காரராக இருந்தீர்கள் என்றால் அது உங்களை ஆஷாடபூதியாக்கிவிடும்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் அவல நிலைக்கு உங்களை ஆளாக்கிவிடும். நீங்கள் எப்போதும் முழுநிறைவைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பீர்கள். ஆனால் அது பேச்சளவில் மட்டும்தான் இருக்கும்.

அது வெறும் முன் தோற்றம்தான். முகமூடிதான். அந்த முகமூடிக்குப் பின்னால் குற்றம் குறைகள் நிறைந்த உங்கள் யதார்த்த நிலை அப்படியே இருக்கும். அந்த நிஜ முகத்தை வெளியில் காட்டாமல் மறைக்க படாதபாடு படுவீர்கள்.

இந்த இரண்டு விளைவுகளுமே அசிங்கமதான். கிறுக்குப் பிடித்து அலைவது, மனதில் குற்ற உணர்வைச் சுமப்பது, வெளி வேஷம் போடுவது, உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவது - எல்லாமே அசிங்கம்தான்.

ஆனால் உங்கள் மதங்கள் உங்களுக்கு வேறு வழிகள் எதையுமே விட்டுவைக்கவில்லை ஒன்று பைத்தியக்காரனாக, குற்றவுணர்வுடன் வாழ். இல்லையென்றால் வேஷம் போடு. இந்த இரண்டைவிட்டால் வேறு தெரிவே இல்லை, என்ற ரீதியில் தான் மதங்கள் பிரச்சாரம் செய்துகொண்டிருக்கின்றன.

மதங்கள் 'ஆம்' சொல்வதைப் பற்றி, அனைத்தையும் அப்படியே ஏற்றுக் கொள்வதைப் பற்றி வாய்கிழியப் பேசுகின்றன. ஆனால் இல்லை சொல்வது எப்படி என்று சொல்லித்தருகின்றன. எதையும் மறுப்பது எப்படி என்று விரிவாக வியாக்கியானம் செய்கின்றன.

இந்த மதங்கள் எல்லாமே நாத்திக மதங்கள்தான். என்ன ஆச்சரியமாக இருக்கிறதா? கடவுளை ஏற்றுக் கொள்ளும் மதங்களை நாத்திகம் என்று நான் சொல்வதை உங்களால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை இல்லையா?

என்னைப் பொறுத்தமட்டில் ஆத்திகம் என்பது வாழ்க்கைக்கு ஆமாம் சொல்வது. வாழ்க்கையை அப்படியே ஏற்றுக்கொள்வது. இந்த அடிப்படை ஆமாம் கொள்கை தான் ஆத்திகத்தின் அடித்தளம்.

நாத்திகம் என்பது எல்லாவற்றையும் அடி ஆழத்தில் இருந்து மறுப்பது. வாழ்க்கையை இல்லை என்று மறுப்பது. அப்படிப் பார்க்கும் போது இந்த மதங்கள் எல்லாமே நாத்திகம் பேசுபவைதானே!

ஆத்திகத்துக்கும் கடவுளுக்கும் சம்பந்தமில்லை. அதேபோல் நாத்திகத்துக்கும் கடவுள் மறுப்புக் கொள்கைக்கும் சம்பந்தம் இல்லை.

ஆத்திகம் என்பது குற்றம் குறைகள் நிறைந்த இந்த வாழ்க்கையை அப்படியே ஏற்றுக் கொள்வது. இந்த யதார்த்த வாழ்க்கைகு ஆம் சொல்வது. எந்த நிபந்தனையும் இல்லாமல் வருவதை அப்படியே எதிர்கொள்வதுதான் ஆத்திகம்.

என்னைப் பொறுத்த மட்டில் நாத்திகம் என்பது வாழ்க்கையை மறுப்பது. வாழ்க்கையை முழுநிறைவாக்குகிறேன் பேர்வழி என்று யதார்த்த வாழ்க்கையை இல்லை என்று ஒரேயடியாக மறுப்பது.

நீங்கள் கேட்கிறீர்கள்

*என்னால் சரி என்று சொல்லமுடியவில்லை. மற்றவர்கள் சொல்வது இருக்கட்டும். என்னால் எனக்கே சரி என்று சொல்ல முடியவில்லை.*

ஏனென்றால் எல்லாமே தப்பு என்று உங்களுக்கு உருவேற்றி வைத்திருக்கிறார்கள். நீங்கள் பாவி உங்களை நம்ப வைத்திருக்கிறார்கள். நீங்கள் செயவது எல்லாம் தவறு. நீங்கள் சிந்திப்பதும் தவறு. ஏன், உங்கள் இருப்புநிலையே தவறு. நீங்களே தவறு என்று ஆனபின் உங்களால் எப்படி உங்களுக்கே ஆமாம் சொல்ல முடியும்?

உங்கள் முன் பல மகத்தான கருத்துகளை, லட்சியங்களை வைத்திருக்கிறார்கள். "நீங்கள் இப்படி இருக்க வேண்டும், நீங்க்ள் இதைச் செய்ய வேண்டும், " என்று உருவேற்றிவைத்திருக்கிறார்கள். உங்களுடைய யதார்த்த நிலையை அந்த மகத்தான் லட்சியங் களுடன் சதா ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டேயிருக்கிறீர்கள்.

நிச்சயமாக அந்த லட்சியங்களின் முன்னால் நீங்கள் குறை யுள்ளவராகத் தெரிவீர்கள். அப்படித் தெரியும் போது, நீங்கள் குற்றம் குறைகள் நிறைந்தவர் என்று நீங்கள் உணரும் போது உங்களையே நீங்கள் வெறுக்கிறீர்கள். இது சரியில்லை என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்கிறீர்கள். உங்களால் உங்களையே காதலிக்க முடியவில்லை. உங்களையே அழித்துக் கொள்ள வேண்டும் என்னும் அளவிற்கு உங்களுக்கு வெறுப்பு வருகிறது.

மற்றவர்களை நேசியுங்கள் என்று மாயந்து மாய்ந்து சொன்னார்களே தவிர உங்களை நீங்களே நேசியுங்கள் என்று யாருமே உங்களுக்குச் சொல்லித் தரவில்லை. முதலில் நீங்கள் உங்களை நேசித்தால் தான் அதன் பின் நீங்கள் மற்றவர்களை நேசிக்க முடியும். உங்களுக்கு உங்கள் மீதே வெறுப்பிருந்தால் இந்த உலகத்தில் வேறு யாரையும் உங்களால் நேசிக்க முடியாது.

உங்களை நீங்கள் நேசிக்கும் போதுதான் நேசிக்கும் கலையையே கற்றுக் கொள்கிறீர்கள். பல குற்றம் குறைகளோடு இருக்கும் உங்களை நீங்கள் நேசிக்கமுடிந்தால் தான் குற்றம் குறைகள் உள்ள மறற மனிதர்களை உங்களால் நேசிக்க முடியும். ஆனால் உங்கள் குறைகளுக்காக உங்களையே நீங்கள் வெறுக்கும் போது, குறைகள் நிறைந்த மற்றவர்களை உங்களால் எப்படி நேசிக்க முடியும்? மற்றவர்களை இன்னும் அதிகமாக வெறுப்பீர்கள்.

பெற்றோர்கள் குழந்தைகளை வெறுக்கிறார்கள். குழந்தைகள் பெற்றோர்களை வெறுக்கிறார்கள். மனைவி கணவனை வெறுக் கிறாள். கணவன் மனைவியை வெறுக்கிறான். இதற்கெல்லாம் ஒரே அடிப்படை காரணம் அடுத்தவர்களிடம் இருக்கும் குறைகளை அவர்கள் காணமுடிவதுதான். ஒவ்வொருவரும் குற்றம் குறையே இல்லாத முழுநிறைவான அப்பழுக்கற்ற மனிதரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

அத்தகைய மனிதர்களை உங்களால் இந்த உலகத்தில் காணவே முடியாது. அதிகபட்சம் தங்களை குற்றமற்றவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் சில முட்டாள்களைச் சந்திக்கலாம். போலந்து நாட்டுக்காரரான போப்பாண்டவன் ஜான் பால் அந்த ரகத்தைச் சேர்ந்தவர்தான். போப்பாண்டவர்கள் குற்றமற்றவர்களாம். ஏனென்றால் அவர்கள் கடவுளின் நேரடிப் பிரதிநிதிகளாம். இந்தியாவில் சத்திய சாய்பாபா தன்னைக் குற்றமற்றவர் என்று சொல்லிக்கொள்கிறார்.

எனக்கென்னவோ இவர்கள் வடிகட்டின முட்டாள்கள் என்று தான் தோன்றுகிறது. கொஞ்சம் கூட மரியாதை, நாகரிகம், பழகும் முறை தெரியாத முட்டர்ள்கள். அவர்களுக்கு அறிவு என்பது லவலேசமும் கிடையாது. கொஞ்சமாவது அறிவு இருந்திருந்தால் எல்லாரிடமும் குறை இருக்கிறது என்ற உண்மையை உணர்ந்திருக்க முடியும். கொஞ்சமாவது அடக்கம் இருந்திருந்தால் இந்த விதிக்கு அவர்கள் விதிவிலக்கல்ல என்ற உண்மையையும் அறிந்திருக்க முடியும்.

இந்தியாவில் இருக்கும் சமணர்கள், 'மகாவீரர் குற்றம் குறைகள் அற்றவர்' என்று பல நூற்றாண்டுகளாக சல்லியடித்துக் கொண்டிருக்கிறார்ள். புத்தர் இதைக் கேட்டு பல முறை சிரித்திருக்கிறார். புத்தர் மகா ஞானி. அவர் எப்போதும் தன்னை குற்றமற்றவர் என்று சொல்லிக் கொண்டதேயில்லை.

எந்த அறிவுள்ள மனிதனும் தன்னைக் குற்றமற்றவன் என்று சொல்லிக் கொண்டதேயில்லை. மகாவீரர் குற்றமற்றவர் என்று அவரது சீடர்கள் சொல்வதைக் கேட்டு புத்தர் அர்த்தம் பொதிந்த ஒரு புன்னகை பூத்தார்.

மகாவீரர் தன்னைக் குற்றமற்றவர் என்று சொல்லிக் கொண்ட தில்லை. சீடர்களின் கூற்றைப் பற்றி அவர் என்ன நினைத்தார் என்பது நமக்குத் தெரியாது. ஏனென்றால் சமண மதத்தின் பாரம்பரியக்கதையின் படி மகாவீரர் ஒரு வார்த்தைகூட

பேசவில்லை. அவருடைய அமைதிக்கு பொருள் விளக்கம் கொடுத்தார்கள் அவருடைய சீடர்கள். ஆனால் மகாவீரர் அப்படி நினைத்திருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை. மகாவீரரைப் போன்ற ஒரு ஞானி சத்தியமாக அப்படி நினைத்திருக்க மாட்டார்.

புத்தர் சொல்கிறார், ''மகாவீரர் காலையில் தெருவில் நடந்து போகிறார். கால்தவறி படுத்துக் கொண்டிருந்த ஒரு நாயின் வாலை மிதித்து விடுகிறார். நாய் குரைக்கும் போதுதான், அங்கே ஒரு நாய் இருந்ததையே தெரிந்து கொள்கிறார். காலையிருட்டில் அந்த நாய் முதலில் அவருக்குத் தெரியவில்லை. முக்காலமும் உணர்ந்த ஒரு ஞானிக்கு நாயின் வால் இருக்குமிடம் தெரியவில்லை என்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.''

புத்தர் மேலும் சொல்கிறார்: ''பல முறை மகாவீரர் யாருமே இல்லாத வீட்டிற்கு முன் பிச்சை எடுத்துக் கொண்டிருந்திருக்கிறார். அந்த வீடு பல ஆண்டுகளாகப் பூட்டிக் கிடக்கும். அங்கே மனித வாசனையே இருக்காது. மக்கள் அவரிடம் போய், 'இந்த வீட்டில் ஆட்கள் இல்லை. நீங்கள் வேறு எங்காவது செல்லுங்கள்' என்று சொன்னபின்தான் அவர் அந்த இடத்தை விட்டு நகர்வார்.

ஆனால் மகாவீரரின் சீடர்கள் அவருக்கு முக்காலமும் தெரியும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். கடவுளைப் போல் அவர் சர்வவல்லமை படைத்தவர், எல்லாம் தெரிந்த சர்வக்ஞன், எல்லா இடத்திலும் இருப்பவர் என்று அவரைப் பற்றி மற்றவர்கள் பீலா விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அவர் வயிறு சம்பந்தபட்ட நோயினால் பல காலம் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். அதனால் தான் அவர் இறந்து போனார். அது புற்றுநோயாகக்கூட இருக்கலாம். அந்தக்காலத்தில் புற்றுநோய் என்பது மக்களுக்குத் தெரியாது. என்றாலும் மகாவீரர் கடவுளைப் போன்றவர், எல்லாம் தெரிந்தவர் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் இதெல்லாம் அவரைப் பின்பற்றுபவர்களின் வார்த்தைகள். எனக்குப் புரிகிறது. பின்பற்றுபவர்கள் எப்போதுமே முட்டாள்களாத்தான் இருப்பார்கள். இல்லாவிட்டால் அவர்கள் ஏன் பின்பற்ற வேண்டும்?

என்னைப் பின்பற்றுபவர்கள் என்று யாரும் இல்லை. நீங்கள் எல்லாரும் என் நண்பர்கள். எனக்குப் பின்பற்றுபவர்களே தேவை யில்லை. முட்டாள்கள் சூழ வாழ்வது எனக்குப் பிடிக்காத விஷயம்.

சத்திய சாய்பாபா தன்னைக் குற்றமற்றவர் என்று சொல்லிக் கொள்கிறார். அவருக்கு எல்லாம் தெரியுமாம். அவர் இதுவரை வாழ்க்கையில் ஒரு தவறு கூட செய்த்தில்லையாம். அவறால் தவறு செய்யவே முடியாதாம். இது எப்படி இருக்கு? இவர்கள் எல்லாரும் பைத்தியங்கள். அகம் பிடித்தவர்கள். இவர்களைத் திருத்தவேமுடியாது.

முழுநிறைவு என்பது சாத்தியமேயில்லை. நீங்கள் குறையுள்ள வர்கள்தான். ஆனால் அதனால் பாதகமில்லை. குறையோடுதான் வாழமுடியும். உங்கள் குறைகளை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் போது மனித இனத்தையே ஏற்றுக் கொள்கிறீர்கள்.

அந்த ஏற்றுக்கொள்ளலில்தான் உங்களால் வாழ்க்கைக்கு ஆம் என்று சொல்ல முடியும். அப்போது தான் நீங்கள் உங்களையும் நேசிக்க முடியும், அடுத்தவர்களையும் நேசிக்க முடியும். ஏனென்றால் அடுத்தவர்களிடமும் குறை இருக்கிறது.

இன்னும் நீங்கள் உங்கள் பெற்றோர்கள் உங்களுக்காக உரு வாக்கிக் கொடுத்து லட்சியங்களுக்காக வாழ்ந்து கொண்டிருக் கிறீர்கள். அந்த முறையில் எல்லாப் பெற்றோர்களும் தங்கள் பிள்ளைகளின் மனங்களில் நஞ்சைச் செலுத்திவிட்டார்கள். இது ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடந்து வந்திருக்கிறது. இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது.

குழந்தையின் மனதில் பெற்றோர்களின் கருத்துகளான நஞ்சு புகுந்தவுடன், அந்த குழந்தை பாவம், அது தன்னுடைய கருத்து என்று நினைத்துக் கொண்டிருக்கிறது. அந்த நஞ்சு குழந்தையின் அடி ஆழம் வரைப் பாய்ந்துவிடுகிறது. குழந்தையின் அடி வேர் வரை அந்த நஞ்சின் தாக்கம் இருக்கிறது. அதனால் அந்த நஞ்சு வெளியில் இருந்து செலுத்தப்பட்டது என்பதையே அந்த குழந்தை மறந்துவிடுகிறது.

அதன் பின் அந்த கருத்துகளின் படி வாழ வேண்டும் என்று அந்த குழந்தை நினைக்கிறது. அது முடியாத காரியம். அதனால் அந்த குழந்தையின் வாழ்வில் வெறுப்பும் விரக்தியுமே மிஞ்சுகிறது.

*இரண்டாவது கேள்வி:*

*அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்று நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். ஒரு சிறிய புல் கூட இறைவனின் சங்கல்பமின்றி அசையாது என்று நீங்கள்*

*சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்படி இருக்கும் போது இந்த அரங்கத்தில் மெட்டல் டிடெக்டர் பரிசோதனை? எதற்கு இவ்வளவு பாதுகாப்பு ஏற்பாடுகள்?*

இதைக் கேட்டிருப்பவர் பிரகாஷ் சிங் மதுபான் என்ற இந்தியர். சரி, பதிலுக்கு வருவோம்.

இதுவும் அவனுடைய விருப்பம்தான். அவனன்றி சிறு புல் கூட அசையாது என்றால் மெட்டல் டிடெகடர் மட்டும் எப்படி அவனுடைய அருளின்றி இயங்கும்? அவனன்றி அணுவும் அசையாது என்றால், அவனுடைய அருள் இல்லாமல் காவலர்கள் எப்படி இயங்குவார்கள்?

இதைக் கேட்டவர் புத்திசாலித்தனமான கேள்வி கேட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். என்னால் பதில் சொல்ல முடியாத கேள்வியைக் கேட்டுவிட்டதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கலாம்.

உங்களுக்கு கடவுளைப் பற்றியோ, அவரது விருப்பங்களைப் பற்றியோ கொஞ்சம் கூட தெரியாது என்பது தெளிவாகிறது. அதனால் தான் இப்படி கேட்டுக் கேட்டுப் புளித்துப்போன வாக்கியங்களைப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். கீறல் விழுந்த பழைய இசைத்தட்டுக்களைப் போல் சொன்னதையே சொல்லிக் கொண் டிருக்கிறீர்கள்.

இதில் உள்ள முட்டாள்தனம் உங்களுக்குப் புரியவில்லை. இந்த கேள்வி உண்மையிலயே உங்களிடமிருந்து தான் வந்த தென்றால், உங்கள் புரிந்து கொள்ளுதலில் விளைவாகவே இந்த கேள்வி எழுந்ததென்றால், இது அர்த்தமற்றது. ஆனால் இந்த கேள்வி உங்கள் புரிந்து கொள்ளுதலில் எழவில்லை.

வேறு யாரோ இந்த கேள்வியை உங்களுக்குள் விதைத் திருக்கிறார்கள். எல்லாப் பெற்றோர்களும் இதே தவறைச் செய்து கொண்டிருக்கிறாரக்ள். தங்கள் மனதில் எழும் முட்டாள்தனமான எண்ணங்களை தங்கள் குழந்தைகளுக்குள் விதைத்துக் கொண் டிருகிறார்கள். அவர்கள் பாவம், இதைத் தெரிந்து செய்யவில்லை. அவர்கள் மனதில் அவர்களுடைய பெற்றோர்கள் அதேபோல் விதைத்திருக்கிறார்கள்.

இது பரம்பரை பரம்பரையாக தொடர்ந்து நடந்து கொண் டிருக்கும் அபத்தம். எப்போதாவது ஒரு நாள் நீங்கள் இந்த அபத்தக் களஞ்சியத்திலிருந்து வெளியில் குதித்தேயாக வேண்டும்.

ரெனாதா, உங்கள் பெயரே மிகவும் அழகாக இருக்கிறது. அதற்கு மறுபிறவி என்று பொருள். இங்கே என்னுடன் இருக்க வேண்டுமென்றால் நீங்கள் உங்கள் பழைய வாழ்க்கையைவிட்டு விட்டு, ஒரு புதிய பிறவி எடுக்க வேண்டும். அதற்கான முதல் படி உங்கள் மேல் திணிக்கப்பட்டிருக்கும் கருத்துகளைத் தூக்கிக் கடாச வேண்டும்.

ரோஜா மலர்கள் அழகாக இருக்கின்றன. அதற்கு முக்கிய காணம் என்ன தெரியுமா? அவை தாமரை மலர்களைப் போல் பெரிதாக இருக்க வேண்டும் என்று ஒரு போதும் எண்ணியதில்லை. அப்படி நினைத்துக் கொண்டிருந்தால்

அவற்றின் வாழ்க்கையே சோகமயமாகிவிடும். அவற்றின் வளர்ச்சி தடைப்பட்டுவிடும். அவற்றின் மலர்ச்சியில் முழுமை இருக்காது. தாமரையோடு தங்களை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண் டால் அவை வெட்கத்தால் உள்ளேயே சுருங்கிப் போயிருக்கும். ரோஜா மலர்கள் அழகாக, வாசம் உள்ளவையாக இருப்பதற்குக் காரணம் அவை எப்படி படைக்கப்பட்டனவோ அப்படியே இருக்கின்றன.

மல்லிகை மலர்கள் தாங்கள் ரோஜாக்கள் போல் இளஞ் சிவப்பாக இல்லையே என்று ஒருநாளும் வருத்தப்பட்டதில்லை. சிறிய புல் தான் ஆலமரத்தைப் போல் பிரம்மாண்டமாக இல்லையே என்று ஒரு போதும் வருத்தப்பட்டது இல்லை. அவை இருக்கும் நிலையிலேயே சந்தோஷமாக இருக்கின்றன.

ஒரு ஜென் துறவியிடம் ஒருவன் கேட்டான், “நீங்கள் எப்போதும் சந்தோஷமாக இருக்கிறீர்கள்? என்னால் ஏன் அப்படி இருக்க முடியவில்லை?”

“நல்ல கேள்வி. மற்றவர்கள் எல்லாம் இந்த இடத்தை விட்டுப் போனபின் நான் உனக்குப் பதில் சொல்கிறேன். அதுவரை இங்கேயே உட்கார்ந்திரு.”

அந்த துறவியிடம் மக்கள் வந்து போன வண்ணம் இருந்தார்கள். எந்த நேரத்திலும் யாராவது ஒருவர் அவர்களுடன் இருந்தார். கேள்வி கேட்டவனுக்கு சலிப்பு தட்டிவிட்டது. ‘பதிலும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் என் பிழைப்பைப் பார்க்கக் கிளம்புகிறேன்.’ என்று சொல்லிவிட்டுக் கிளம்ப நினைத்தான் அவன். ஆனால் ஏதோ காரணத்தால் கிளம்பவில்லை.

மாலை சூரியன் அஸ்தமிக்கும் நேரம். துறவியைப் பார்க்க வந்தவர்கள் எல்லாரும் போய்விட்டார்கள். அவனும் துறவியும் மட்டும் தனியாக இருந்தார்கள்.

“இப்போது யாரும் இல்லை. தயவு செய்து என் கேள்விக்குப் பதில் சொல்லுங்களேன்.”

“சொல்கிறேன். ஜன்னலுக்கு வெளியே பார். பெரிய மரம் ஒன்று இருப்பது தெரிகிறதா?”

“ஆமாம்.”

“அதன் பக்கத்தில் ஒரு சிறிய புதர் இருப்பது தெரிகிறதா?”

“ஆமாம். அதுவும் தெரிகிறதா?”

”நானும் பல வருடமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஒரு முறையாவது அந்த புதர் பக்கத்தில் இருக்கும் பெரிய மரத்தைப் பார்த்து, ‘நீ ஏன் இவ்வளவு பெரிதாக இருக்கிறாய்? நான் ஏன் சிறிதாக இருக்கிறேன்?’ என்று ஒரு முறை கூட கேட்டதில்லை.

“அதனால் தான் மரமும், புதரும் சந்தோஷமாக இருக்கின்றன. மரம் பெரியது. புதர் சிறியது. அதனால் என்ன? இரண்டுக்குமே அதனதன் தனித்தன்மை இருக்கிறது. அவை தங்களுக்குள் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வதில்லை.

“அருகருகே இருந்தாலும் ஒன்றைப் பார்த்து ஒன்று பொறாமைப்படுவதில்லை. கடந்த 15 வருடங்களாக அவை ஏன் தங்களை ஒருவரோடு ஒருவர் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள வில்லை என்று கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அவற்றின் மகிழ்ச்சி முழுமையானதாக இருக்கிறது.

“நீ மகிழ்ச்சியாக இல்லாததற்குக் காரணம் எப்போதும் உன்னை மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருப்பதுதான். நான் சந்தோஷமாக இருப்பதற்குக் காரணம் இந்த ஒப்பிடுதலை நான் அடியோடு ஒழித்துவிட்டதுதான். நான் என்னை நானாக அப்படியே ஏற்றுக் கொண்டுவிட்டேன். இதுதான் என் மகிழ்ச்சியின் ரகசியம்.”

நீங்கள் எப்போதும் அந்த மனிதனைப் போல ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். சிலர் உங்களை விட அழகாக இருக்கிறார்கள். சிலரின் கண்கள் உங்களுடையதை விட அழகாக இருக்கிறது.

சிலரின் தலை முடி உங்களுடையதைவிட அடர்த்தியாக, பளபளப்பாக இருக்கிறது. சிலர் உங்களை விட பலம் மிகுந்தவர்களாக இருக்கிறார்கள். சிலர் உங்களைவிட அறிவில் சிறந்தவர்களாக இருக்கிறார்கள். பலரிடம் உங்களிடம் இல்லாதது இருக்கிறது

- இதற்கு முடிவேயில்லை. இது உங்களுக்கு மேலும் மேலும் கவலையையே தரும்.

இந்த சமுதாயம் உங்களைப் பார்த்து, ''ஏசு நாதரைப் போல் மாறுங்கள்.'' ''புத்தனைப் போல் இருங்கள்.'' ''இருந்தால், பகவான் கிருஷ்ணரைப் போல் இருக்க வேண்டும்'' என்று சதா உருவேற்றிக் கொண்டேயிருக்கிறது.

புத்தர் எப்போதும் கிருஷ்ண பரமாத்மாவைப் போல் இருக்க வேண்டும் என்று விரும்பியது கிடையாது. அதனால் தான் அவரால் எப்போதும் மகிழ்ச்சியாக இருக்க முடிந்தது. கிருஷ்ணர் யாரைப் போலவும் இருக்க முயற்சித்ததே கிடையாது.

அதனால் தான் அவரது வாழ்க்கையே ஒரு கொண்டாட்ட மாக இருந்தது. ஏசு நாதர் மோசசைப் போல் இருக்க வேண்டும் என்று ஒரு நாளும் கனவு கண்டதில்லை. அதனால்தான் அவர் மகிழ்ச்சியாக இருந்தார். சிலுவையில் அறையப்படும் அந்த நேரத் தில் கூட அவர் நிறைவாகவே இருந்தார். ஆனால் நீங்களோ வேறு யாரையாவது போல் இருக்க சதா பாடுபட்டுக் கொண்டிருக் கிறீர்கள்.

ஒருவரைப் போல் இருக்க வேண்டும் போன்ற அபத்தமான லட்சியங்களை உடனே கைவிடுங்கள். அத்தகைய லட்சியங்களை முற்றிலுமாக அழித்துவிடுங்கள். அப்போதுதான் உங்கள் ஆழ்மனத்திலிருந்து உங்கள் இருப்புநிலையின் ஆழத்திலிருந்து எதையும் ஏற்றுக் கொள்ளும் பக்குவம் வரும். எதற்கும் இசையும் இன்ப நிலை வரும். அது மட்டுமே உங்களுககுப் பரிபூரண நிறைவைத் தரும்.

என்னைப் பொறுத்த மட்டில் அது மட்டுமே உண்மையான மதம். உங்களை முற்றிலுமாக நிறைக்கும் அந்த இசைவே உண்மையான மதம். இப்போது உங்களிடம் இசைவின்மையும், எதிர்மறை எண்ணங்களுமே நிறைந்திருக்கின்றன. எதையுமே இல்லை என்று மறுக்கும் எதிர்மறைப் போக்கு உங்களிடம் அதிகமாக இருக்கிறது.

அதுதான் உங்கள் வாழ்க்கையையே நரகமாக்கிவிட்டது. நீங்கள் இப்போதுதான் விழிப்புணர்வுடன் செயல்பட வேண்டும். உங்கள் பெற்றோர்களும், உங்க்ள் சமுதாயமும், நீங்கள் சேர்ந்திருக்கும் சர்ச்சும் உங்கள் மேல் திணித்த இந்த குப்பைகளைக் களைந்தெறிய வேண்டும்.

அப்படி அந்தக் குப்பைகளைக் களையும் போது உங்களுக்கு வலி ஏற்படும். நீங்கள் ஆண்டாண்டு காலமாக நம்பிக் கொண்டிருந்த ஒன்று உங்களிடமிருந்து பறிக்கப்படும் போது உங்களுக்கு அது வேதனையாகத்தான் இருக்கும்.

அது உங்கள் இரத்தத்தில் இரத்தமாகக் கலந்துவிட்டது. உங்கள் எலும்பில், அதில் உள்ள மஜ்ஜையில் அந்த குப்பைகள் கலந்து விட்டன. எனவே அவற்றைக் களையும் போது உங்களுக்கு ரணங்கள் தோன்றும். அது வெறும் சீழ் என்றாலும் அதை எடுக்கும் போது உங்களுக்குப் பயங்கரமாக வலிக்கத்தான் செய்யும்.

அமெரிக்காவில் ஒரு மூதாட்டி சந்நியாசம் வாங்கிக் கொண்டாள். பாவம், அவள் தவறான காரணங்களுக்காக சந்நியாசத்தைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். இங்கே பலர் தவறான நோக்கங்களுக்காக சந்நியாசம் வாங்கிக் கொள்கிறார்கள்.

அவர்கள் சந்நியாசம் என்று நினைத்துக் கொண்டிருந்தது வேறு, நான் போதிக்கும் சந்நியாசம் வேறு என்பது சில நாட்களுக்குப் பிறகுதான் அவர்களுக்குத் தெரிகிறது. இந்த மூதாட்டி அழகாகக் கடிதங்கள் எழுதுவாள். அந்த கடிதங்கள் எல்லாம் கவிதைகள் போல மிக அழகாக இருக்கும்.

அவள் சந்நியாசி ஆனதற்கு காரணம் ஏசு நாதரைப் பற்றி நான் எழுதியிருந்த புத்தகத்தைப் படித்ததுதான். *கடுகின் விதை* என்று நான் எழுதியிருந்த புத்தகம அந்த மூதாட்டியை மிகவும் பாதித்திருக்க வேண்டும். அதற்குக் காரணம் நான் அல்ல. ஏசு நாதர். அவளுக்கு ஏசு நாதரை மிகவும் பிடிக்கும்.

ஏசுவைப் பற்றி நானும் உயர்வாகச் சொன்னதால் என்னை விரும்பி என்னிடம் சந்நியாசம் வாங்கிக் கொண்டாள்.

நேற்று அவளிடம் இருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. அவள் இப்போது பயங்கரமான மன உளைச்சலில் இருக்கிறாளாம். என்ன செயவ்து? என்று கேட்டு எழுதியிருக்கிறாள்.

என் பேச்சுக்கள் பதிவு செய்யப்பட்ட சில ஒலிநாடாக்களை அவள் கேட்டிருக்கிறாள். அதில் நான் ஓர் இடத்தில் சொல்லியிருக்கிறேன்.

'ஏசு நாதர் எப்படி தோற்றமளித்தார் என்று நமக்கு இப்போது வரலாற்றுப் பூர்வமான ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன. அவர் பார்க்க அழகில்லாதவராக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவர் நான்கு அடி ஐந்தங்குல உயரம் தான்

இருந்தார். கூன் போட்டிருந்தார். அவரது முகம் பார்க்கச் சகிக்காது, என்று சரித்திர ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

இதைக் கேட்ட அந்த பெண், 'நான் இப்போது என் பழைய குருவான ஏசுநாதரையே நாடிப் போகப்போகிறேன். உங்கள் சந்நியாசியாக இருக்க விரும்பவில்லை.'

அவளுடைய மனக்கட்டுத்திட்டங்களில் இருந்து விடுதலை பெற கிடைத்த அரிய வாய்ப்பைத் தவற விட்டுவிட்டாள் அந்த பெண்மணி. அவள் மீண்டும் தனது பழைய வாழ்க்கைக்கே திரும்பிவிட்டாள். அவளது வாழ்க்கையின் மகத்தான நொடி அவள் கண் முன் வந்தது. மேலே செல்லும் கதவு திறந்தது. ஆனால் அவள் அதைக் கவனிக்காமல் வேறு பக்கம் போய்விட்டாள்.

உங்களில் பலர் இங்கே தவறான காரணங்களுக்காக இருக்கிறீர்கள். அப்படி இருந்தால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் நீங்கள் மாட்டிக் கொள்வீர்கள். நான் உங்களை உங்கள் போக்கில் விடமாட்டேன். உங்களுக்கு இடையூறுகள் தருவேன். என்னால் உங்கள் லட்சியங்கள், கனவுகள், கருத்துகள், கோட்பாடுகள் எல்லாமே பாதிக்கப்படலாம். அவற்றை நான் தகர்த்துத் தரைமட்டமாக்கிவிடுவேன்.

உங்களுக்குள் நான் ஒரு வெடிகுண்டைப் பற்ற வைக்கப் போகிறேன். என்னுடைய பணியே அழிவுப்பணிதான். இதுவரை நீங்கள் உங்கள் வாழ்க்கையின் லட்சியங்களாக நினைத்துக் கொண்டிருக்கும் குப்பைகளை அழிக்கும் பணியே என் அழிவுப்பணி. மற்றவர்களிடம், இந்த சமூகத்திடம் நீங்கள் கற்றுக் கொண்ட சம்பிரதாயமான வார்த்தைகளை, வார்த்தைப் பிரயோகங்களை அழிப்பதே என் முதல் கடமை.

அதன் பின் தான் நான் உங்களை உங்கள் மனக்கட்டுத் திட்டத்திலிருந்து விடுவிக்க முடியும். அதற்குப் பிறகு தான் உங்களால் வாழ்க்கையை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியும். எதற்கும் தயங்காமல் ஆமாம் சொல்ல முடியும்.

ஒவ்வொரு மரமும் தயக்கமில்லாமல் வாழ்க்கைக்கு ஆமாம் சொல்கிறது. ஒவ்வொரு விலங்கும், பறவையும் ஆம் என்று சொல்லத் தயங்குவதில்லை. அவற்றுக்கு அதைச் சொல்லித்தர வேண்டும் என்ற அவசியம் இல்லை. இல்லை என்பதுதான் சொல்லித்தரப்பட வேண்டும். ஆம் என்பது இயல்பாக வருவது இயற்கையாக வருவது. ஆம் என்பது தாவோவின் பகுதி. இல்லை என்பது மனக்கட்டுத்திட்டத்தின் அடையாளம்.

நீங்கள் சரியாகச் சொன்னீர்கள்.

*என்னுடைய கவலைகள், பிரச்சினைகள் எல்லாமே இதனால் தான் வருகிறது என்று நினைக்கிறேன்.*

உண்மைதான். இது உங்களுடைய உன்னதமான பயணத்தின் தொடக்கம். நீங்கள் சரியான திசையை நோக்கித்தான் நின்று கொண்டிருக்கிறீர்கள். பயணத்தைத் தொடக்க வேண்டும். தொடர்ந்து செல்ல வேண்டும். அவ்வளவுதான் நீங்கள் செய்யவேண்டியது. அதற்கு பல காலம் பிடிக்கலாம்.

அதற்கு நீங்கள் பாடுபட வேண்டியதிருக்கும். பாதையின் நடுவே பல தோல்விகளை, ரணங்களை, வலிகளை, வேதனை களைச் சந்திக்க நேரிடலாம். சரியான பாதையில் நடக்க நாம் ஒவ்வொருவரும் கொடுக்க வேண்டிய விலை அது.

ஆனால் உங்கள் கடந்த காலத்தைக் கடாசி எறியும் அளவுக்குத் துணிச்சல் வந்துவிட்டால் - நீங்கள் கிறிஸ்தவர், இந்து, முகமதியர், சமணர், பௌத்தர் என்ற கடந்த கால அடையாளங் களைத் தூக்கியெறியும் அளவிற்குத் தைரியம் வந்துவிட்டால், உங்கள் மனக்கட்டுத்திட்டங்களை உதறித்தள்ளும் அளவிற்குத் துணிச்சல் வந்துவிட்டால், அதன் பின் உங்கள் வாழ்க்கை ஓர் அழகிய ஆற்று நீரின் ஓட்டமாக மாறிவிடும்.

நீங்கள் சென்று கலக்க வேண்டிய கடல் வெகுதூரத்தில் இல்லை. கடலில் கலக்கச் செல்லும் ஆறு கையில் வரைபடங் களையும், திசைகாட்டும் கருவிகளையும் எடுத்துக் கொண்டு செல்வதில்லை. ஒவ்வொரு நதியும் தனது தன்னிச்சையான, இயல் பான ஓட்டத்தின் மூலம்தான் கடலைச் சென்றடைகிறது. அதுதான் தாவோவின் வழி.

*மூன்றாவது கேள்வி:*

*ஓஷோ, எனக்கு சந்நியாசம் மேற்கொள்ள விருப்பம் இல்லை. தன் கையே தனக்குதவி என்ற கொள்கையுடையவன் நான். இதைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?*

இதை ஏன் என்னிடம் கேட்கிறீர்கள்? இதையும் நீங்களே செய்து கொள்ளவேண்டியதுதானே! இதில் என் கருத்து என்ன என்பதைத் தெரிந்து கொள்ள ஏன் ஆர்வம் காட்டுகிறீர்கள்? ஏன் இந்தக் கேள்வி?

உங்கள் மனதின் அடி ஆழத்தில் சந்நியாசம் மேற்கொள்ள வேண்டும் என்ற ஆசை இருக்கலாம். இல்லாவிட்டால் இந்த கேள்வி வந்திருக்காது. இப்போது வாழும் வாழ்க்கையை உதறித் தள்ள வேண்டும், கொஞ்சம் தாண்டிக் குதிக்க வேண்டும் என்ற ஏக்கம் உங்களுக்குள் இருக்கிறது என்று நினைக்கிறேன்.

ஆனால் அந்த ஏக்கத்தை ஏற்றுக் கொள்ள நீங்கள் அஞ்சுகிறீர்கள். அந்த அச்சத்தை அறிவார்ந்ததாகக் காட்டிக் கொள்ள விரும்புகிறீர்கள். தன் கையே தனக்கு உதவி என்ற கொள்கையுடன் வாழ்ந்து வருபவன் நான் என்று வீராவேசமாகப் பேசுகிறீர்கள். ஆனால் எனக்கென்னவோ சந்நியாசம் மேற்கொள்ள வேண்டும் என்ற ஆவல் நாள் தோறும் மேலும், மேலும் வலுப்பெற்று வருவதாகத் தோன்றுகிறது.

சந்நியாசம் என்பது தெரியாததற்குள் தவ்விக் குதிப்பதுதான். உங்கள் மனம் எப்போதும் தெரிந்ததைச் சுற்றியே வாழ்கிறது. அது தெரிந்த விஷயங்களையேச் சுற்றிச் சுற்றி வருகிறது. தெரியாத விஷயங்களுக்குள் செல்ல மனதுக்குத் தெரியாது.

குண்டாஞ்சட்டியில் குதிரை ஓட்டுவது போல் மனம் தெரிந்ததையே சுற்றிச் சுற்றி வருகிறது. புதிய விஷயங்களோடு அது உறவாட முடியாது. தெரியாத விஷயங்களோடு அது உறவு வைத்துக் கொள்ள முடியாது. தன்னால் அறியமுடியாத விஷயங்களைப் பற்றி மனதிற்கு ஒன்றுமே தெரியாது. அத்தகைய விஷயங்களை மனம் அடியோடு வெறுக்கிறது.

சந்நியாசம் என்பது ஒரு பெரிய தாவல். இக்கரையிலிருந்து அக்கரைக்கு தாவும் அரிதான செயல். பாம்பு தனது பழைய சட்டையை உரித்துக் கொள்ளும் செயலைப் போன்றது அது. உங்கள் பழைய தோல் உங்களுக்கு அலுத்துவிட்டது. ஆனாலும் அதைவிட மனமில்லாமல் கூடவே சுமந்து கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

இங்கே பலர் தங்கள் புதுப் பிறப்பை, சந்நியாசம் அடைந்ததால் அடைந்த மறுபிறவியைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைப் பார்த்து உங்கள் மனதில் ஏக்கம் இன்னும் அதிகமாகிவிட்டது. நாமும் அவர்களைப் போல் தாவிக் குதித்தால் என்ன என்று நினைக்க ஆரம்பித்துவிட்டீர்கள்.

ஆனால் உங்களிடம் துணிச்சல் இல்லை. ஆசை இருக்கிறது, தைரியம் இல்லை. அதனால் அந்த ஆசை இருப்பதையே மறுக்க

வேண்டும் என்று நினைக்கிறீர்கள். ஏனென்றால் யாரும் தனக்குத் துணிவில்லை என்று அவ்வளவு எளிதாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

உங்களைக் கோழை என்று ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாக உங்கள் ஆசைகளை இல்லை என்று மறுக்கிறீர்கள். 'நான் தைரிய சாலியாக்கும்' என்று எல்லாருமே வேஷம் போட விரும்புகிறார்கள். மற்றவர்களுக்கு முன்னால் வேஷம் போட்டு ஏமாற்றினால்கூட பரவாயில்லை, மன்னித்துவிடலாம். 'நான் துணிச்சல்காரன்' என்று பலரும் தங்களைத் தானே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

'எனக்கு அசாத்திய தைரியம் இருக்கிறது. நான் செய்ய நினைத்ததை யார் தடுத்தாலும் செய்துவிடுவேன். ஆனால் இதைச் செய்வதற்கு எனக்கு விருப்பமில்லை. விருப்பமின்மை தான் தடையே ஒழிய, துணிவின்மை இல்லை.'

ஏன் என்னைக் கேட்கிறீர்கள்? இந்த கேள்வி எங்கிருந்து வந்தது? ஏன் வந்தது? 'நீங்கள் சந்நியாசியாக வேண்டும் என்று நான் உங்களைக் கேட்கவேயில்லையே? நீங்கள் இங்கு இருக்கிறீர்கள் என்பதே எனக்குத் தெரியாது. நீங்கள் இங்கே வந்த சுவடு தெரியாமல் போயிருக்கலாம். இந்த கேள்வியைக் கேட்டிருக்கவே வேண்டாமே!

நீங்கள் யாரென்று எனக்குத் தெரிந்திருக்கவே தெரிந்திருக்காது. நீங்கள் ஒன்றும் பேசாமல் வந்தவழியே போயிருந்தால் உங்கள் மனதில் இந்த எண்ணம் இருக்கிறது என்று யாருக்குமே தெரிந் திருக்காது. சரி, உங்களால் துணிச்சலாக முடிவெடுக்க முடிய வில்லையா?

பரவாயில்லை. எனக்கு விருப்பம் இருக்கிறது ஆனால் தைரியம் இல்லை என்ற உண்மை நிலையை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் கோழை என்பதை முழுமனதுடன் ஏற்றுக் கொள்ளுங்கள்.

உங்களிடம் ஆசை இருக்கிறது. அந்த ஆசையை உள்ளேயே போட்டு அமுக்கி வைக்காதீர்கள். உங்களிடம் இருக்கும் கோழைத்தனத்தை ஒத்துக் கொள்வது தான் தைரியத்தின் முதல் படி. உங்கள் கோழைத்தனத்தை ஒத்துக் கொள்ளும் போது அது கொஞ்சம் கொஞ்சமாக மறையத் தொடங்குகிறது.

கோழைத்தனத்தை மூர்க்கத்தனமாக மறுக்கும் போது தான் அது உள்ளேயே வாழத் தொடங்குகிறது. அதை முழுமனதுடன்

ஒத்துக்கொண்டால், அதன்பின் கோழைத்தனம் அதிக நேரம் அங்கே இருக்க முடியாது.

*தன் கையே தனக்குதவி என்ற கொள்கையுடையவன் நான்.* என்று சொல்கிறீர்கள்.

சரி, இந்த சந்நியாசத்தை எப்படி நீங்களாகவே மேற்கொள் வீர்கள், சொல்லுங்கள். உங்களுக்கு சந்நியாசத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. அது நீங்கள் இதுவரை அறிந்திராத ஒரு புதிய கோட்பாடு. நான் சொல்லும் சந்நியாசத்தைப் போல் இதுவரை மனித வரலாற்றில் இருந்ததேயில்லை.

இதுவரை இந்து மதத் துறவிகள் இருந்திருக்கிறார்கள், புத்த பிட்சுகள் இருந்திருக்கிறார்கள், சமண மதத் துறவிகள் இருந்திருக்கிறார்கள். ஆனால் இவர்கள் எல்லாருமே வாழ்க்கையை எதிர்த்தவர்கள்.

என் சந்நியாசம் வாழ்க்கையை உள்ளபடி அப்படியே ஏற்றுக் கொள்வது. இது போன்ற ஒரு நிலையை இதுவரை யாரும் சொன்னதேயில்லை. இதுவரை சந்நியாசம், துறவு என்று இருந்ததெல்லால் வாழ்க்கையில் இருந்து தப்பித்து ஓடி ஒளிந்து கொள்ளும் வழிகளாகவே இருந்திருக்கின்றன.

நான் உபதேசிக்கும் துறவு வாழ்க்கையில் இருந்து தப்பித்து ஓடுவதல்ல. அது தப்பித்தலுக்கு நேர் எதிரானது. ஏனென்றால் என்னைப் பொறுத்த மட்டில் கடவுள், வாழ்க்கை என்ற இந்த இரண்டு சொற்களும் ஒரே பொருளுடையவைதான். இதுவரை கடவுளை இயல்பான வாழ்க்கைக்கு எதிரான சக்தி என்றே சொல்லி வந்திருக்கிறார்கள்.

நீங்கள் கடவுளை அடைய வேண்டுமென்றால் உங்கள் வாழ்க்கையைக் கைவிட வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நான் சொல்கிறேன். எவ்வளவு முழுமையாக வாழ முடியுமோ, அவ்வளவு முழுமையாக வாழுங்கள். எவ்வளவு அழுத்தமாக வாழ முடியுமோ அவ்வளவு அழுத்தமாக வாழுங்கள். எவ்வளவு ஆர்வத்துடன் வாழமுடியுமோ, அவ்வளவு ஆர்வத்துடன் வாழுங்கள். அப்போதுதான் உங்களால் கடவுளை ஓரளவாவது அறிந்து கொள்ள முடியும். வாழ்க்கைக்கு வெளியே கடவுள் என்று யாரும் இல்லை.

என்னைப் பொறுத்த மட்டில் கடவுள் ஓர் ஆள் இல்லை. ஓர் உருவம் இல்லை. வாழ்க்கைச் சக்தியின் மறு பெயர்தான் கடவுள்.

எங்கேயோ தூரத்தில் ஒரு குயில் கூவும் சத்தம் கேட்கிறதா? அதுதான் கடவுள். இதோ நீங்கள் மௌனமாக இருக்கிறீர்களே, இந்த மௌனம்தான் கடவுள். பறவைகள் சத்தமிடுகின்றனவே இதுதான் கடவுள்.

கடவுள் எங்கோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் இல்லை. கடவுள் எங்கும் விரவியிருக்கிறார். சொல்லப்போனால் கடவுள் ஒரு பெயர்ச்சொல் அல்ல. அவர் ஒரு வினைச் சொல். அவர் ஒரு செயல். ஆனால் புழக்கத்தில் இருக்கும் மொழிகள் எல்லாம் கடவுளை ஒரு பெயர்ச் சொல்லாகவே வைத்திருக்கின்றன. நமது மொழிகளுக்கு பெயர்ச்சொற்களின் மேல் ஒரு தணியாத மோகம். அதுதான் இதற்குக் காரணம். இந்த மொழிகள் எல்லாம் வினைகளைக் கூட பெயர்களாக மாற்றிவிடுகின்றன.

என்னுடைய பணி இதற்கு நேர் மாறானது. பெயர்ச் சொற்களை எல்லாம் வினைச் சொற்களாக மாற்ற நான் பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன். கடவுள் என்று யாரும் இல்லை. இறைமை, கடவுள் தன்மை இருக்கிறது இது ஒரு பண்பு. ஒரு செயல்பாடு. ஒருவித அனுபவம். உயிரோட்டமுள்ள, எல்லைகளுக்குக் கட்டுப்படாத ஒரு புனிதமான அனுபவம் தான் கடவுள்.

இதெல்லாம் என்னவென்றே உங்களுக்குத் தெரியாது. பின் எப்படி நீங்கள் இதனைச் செய்யப் போகிறீர்கள்? இந்த 'தன் கையே தனக்குதவி' கொள்கையைப் பற்றி நான் பலவற்றைக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஐம்பதுகளின் முக்கியமான கொள்கையாக இருந்தது இது.

அப்போது பிரபலமான *நியுயார்க் டைம்ஸ்* பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்தது.

'உங்கள் ஈஸ்டர் பண்டிகையை நீங்களே உருவாக்கிக் கொள்ளுங்கள். ஐயாயிரம் டாலர் அனுப்பிவையுங்கள் போதும். தேவையானவற்றை எல்லாம் நாங்கள் உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.'

ஒரு மனிதர் கர்மசிரத்தையாக ஐயாயிரம் டாலரை அந்த விளம்பரதாரருக்கு அனுப்பிவைத்தார். அடுத்த இரண்டு நாட்களில் அவர் பெயருக்கு பெரிய பார்சல் ஒன்று வந்தது.

ஆவலுடன் அதனைப் பிரித்துப் பார்த்தார். உள்ளே இருந்த சாமான்களின் பட்டியல்.

ஒரு டப்பா நிறைய ஆணிகள். இரண்டு பெரிய உத்தரப் பலகைகள். ஒன்று மூன்று மீட்டர் நீளம். மற்றொன்று ஒன்றே முக்கால் மீட்டர் நீளம். அது போக 33 வயதான ஒரு யூதப் பெண்மணி.

(விளக்கம்: ஈஸ்டர் என்பது சிலுவையில் அறையப்பட்ட ஏசுநாதர் உயிர்த்தெழும் விழா. அதை அப்படியே உருவாக்குவதற்காக அந்த நிறுவனம் சிலுவை தயாரிக்க உத்தரப்பலகைகளும், ஏசுநாதரை அதில் வைத்து அறைய ஆணிகளும்., கடைசியில் எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல் ஏசுநாதரை உருவாக்க கன்னி மரியாளும் (33 வயது யூதப் பெண்மணி) அனுப்பியிருந்தது. இது எப்படி இருக்கு?)

அனா ஆவன்னா கூடத் தெரியாத நீங்கள் எப்படி எல்லாவற்றையும் நீங்களே செயது கொள்ளப் போகிறீர்கள். நீங்கள் புத்தர்-களத்தின் ஒரு பகுதியாக மாற வேண்டும். பலர் வளர்ந்து கொண்டிருக்கும் ஓர் இடத்தின் பகுதியாக நீங்கள் இருக்க வேண்டும்.

அப்போதுதான் உங்களால் வளரமுடியும். தன்னந்தனியாக பாலைவனத்தில் இருந்தால் நீங்கள் வளர மாட்டீர்கள். பல மரங்கள் வளரும் தோப்பில் ஒரு மரமாக இருந்தால் நீங்கள் வளர்வதற்கு வாய்ப்புக்கள் அதிகம்.

இது ஓர் ஆச்சாரியனின் தோட்டம். இங்கே பல மரங்கள் நாளொரு மேனி பொழுதொரு வண்ணமாக வளர்ந்து கொண்டிருக்கின்றன. பல மரங்கள் பூத்து, காய்த்து கனிகின்ற இடம் இதுதான். உங்களுக்குள் இருக்கும் அந்த ஆன்மிக வித்துக்கு அதீத நம்பிக்கை உண்டாகும். ‘மற்ற விதைகள் வளரும் போது நான் வளர முடியாதா?’ என்று அந்த வித்து நம்பிக்கை கொள்ளும்.

ஒரு குறிப்பிட்ட கூட்டமைப்பில்தான் இது நடக்க வாய்ப்பு இருக்கிறது. அதனால் தான் ஞானம் பெற்றவர்கள் எல்லாருமே இப்படிப் பட்ட கூட்டமைப்புக்களை உருவாக்கிவைத்தார்கள். அப்போது தான் உங்களால் எது நடக்கக்கூடும் என்று பார்த்து உணர முடியும். வளர்ச்சியின் பல நிலைகளில் உள்ளவர்களை இங்கே பார்ப்பீர்கள்.

ஆரம்ப நிலையில் இருப்பவர்கள், சிறிது தூரம் முன்னேறியவர்கள். வெகு தூரம் சென்றவர்கள். ஞானத்தின் உச்சத்தை ஏறக்குறைய தொட்டுவிட்டவர்கள், முழுமையான ஞானத்தில் மலர்ந்து கனிந்தவர்கள் என்று பல நிலைகளில் உள்ளவர்களை இங்கே பார்க்கலாம்.

இதையெல்லாம் பார்க்கும் ஒரு விதைக்கு தன்னம்பிக்கை பிறக்கிறது. இல்லையென்றால் அதற்கு எப்போதும் சந்தேகம் இருந்து கொண்டேயிருக்கும். என்னால் இதைச் செய்ய முடியுமா? என்னிடம் அப்படி வளர்வதற்கான சக்தி இருக்கிறதா என்று சதா ஐயப்பட்டுக்கொண்டேயிருக்கும்.

என்னைப் பொறுத்த மட்டில் சந்நியாசம் என்பது ஒரு பெரிய ஒருங்கு நிகழ்வுக்குள் (synchronicity) கலப்பதுதான். இந்த ஒருங்கு நிகழ்வைப் பற்றி இசைக் கலை வல்லுனர்கள நன்கு அறிவார்கள். நீங்கள் ஒரு பரிசோதனையைச் செய்து பார்க்கலாம். இதற்கு முற்றிலும் காலியான ஓர் அறை தேவை. அறையின் கதவுகள், ஜன்னல்கள் அனைத்தையும் அடைத்துவிடுங்கள். அறையின் ஒரு சிதார் இசைக்கருவியை வையுங்கள்.

மறு ஓரத்தில் மற்றொரு சிதாரை இசைக்கத் தொடங்குங்கள். அப்போது ஓர் ஆச்சரியம் அங்கே நிகழும். நீங்கள் இந்த சிதாரை இசைக்கும் போது எதிர்பக்கம் சுவரில் சாய்ந்து நிற்கும் சிதாரில் இருந்தும் இசை கிளம்பத் தொடங்கும். அந்த சிதாரை யாரும் இசைக்கவில்லை என்றாலும் அந்த இசைக்கருவி எப்படியோ இந்த சித்தாருடன் ஓர் ஒருங்குநிகழ்வுக்குள் வந்துவிடும்.

அதன் தந்திகள் அதிரத் தொடங்கும். அதிலிருந்து சில சத்தங்கள் வரும். இது எல்லாரும் அறிந்ததுதான். நீங்கள் பெரிய சிதார் வல்லுனராக இருந்தால் அடுத்த சிதாரைத் தொடாமலேயே உங்களால் இசையை உருவாக்க முடியும். சரி, மூலையில் சாத்தி வைக்கப்பட்டிருக்கும் அந்த சிதாருக்கு என்ன ஆயிற்று? அந்த அறையை நிரப்பிய இசை அதிர்வுகளை அது தன்னுள்ளே வாங்கிக் கொள்கிறது. அப்படிச் செய்யும் போது அதனுள் அதற்கு இசைவான அதிர்வுகள் உருவாகத் தொடங்குகின்றன.

ஓர் ஆச்சாரியனைச் சுற்றி ஒரு கூட்டமைப்பில் உள்ளவர்கள் அமர்ந்து இருக்கும் போது அங்கே சில ஞான அதிர்வுகள் உருவா கின்றன. விழிப்புணர்வுடன், மென்மையாக, அன்புடன், ஆச்சாரி யனைச் சரணடையும் மனநிலையில் யார் இருக் கிறார்களோ அவர்களால் இந்த ஞான அதிர்வுகளைக் கண்கூடாகப் பார்க்க முடியும்.

வேடிக்கை பார்க்க வந்த வெளியாட்களாக இல்லாமல் யார் தங்களை அந்த ஞான வெளியில் அர்ப்பணித்துவிட்டார்களோ அவர்கள் அதை உணர முடியும். என்ன நடக்கிறது என்பதைத் தள்ளி நின்று பார்க்காமல் நடக்கும் நிகழ்வில் பங்கேற்க யாருக்கு துணிச்சல் இருக்கிறதோ அவர்கள் அதை உணர முடியும்.

அப்போது உங்கள் இதயம் ஆச்சாரியனின் இதயத்துடன் இசைவாக அதிரத் தொடங்குகிறது. ஆயிரக்கணக்கான இதயங்கள் அப்படி இசைவாக இயங்கும் போது, ஒரே கதியில், ஒரே சுருதியில் இயங்கும் போது, உங்களால் அதில் கலந்து கொள்ளாமல் இருக்க முடியாது. தெரியாததை நோக்கி வளர அதுவே வழி. சந்நியாசம் என்பது ஒரு புதிரான பயணம்.

உங்களுடைய சாதாரண, தன்னுணர்வில்லாத நிலையில் இதையெல்லாம் நீங்களாகவே நிச்சயமாகச் செய்ய முடியாது.

நான்கு இத்தாலியக் குடிகாரர்கள் குடி போதையில் சவப்பெட்டியில் பிணம் வைக்கப்பட்டிருந்த ஓர் அறைக்குள் வந்தார்கள். அங்கே ஒரு பியானோவும் இருந்தது.

சவப் பெட்டி எங்கேயிருக்கிறது என்று தேடிக் கொண்டே வந்த ஒருவன் கால் இடறி அந்த பியானோவின் மேல் விழுந்தான்.

"இதோ இருக்கிறது சவப்பெட்டி" என்று நண்பர்களை அழைத்தான்.

"திறந்து பார். உள்ளேயிருப்பவனை அடையாளம் தெரிகிறதா என்று பார்."என்று சொன்னான் மற்றொருவன்.

உடனே பியானோவைத் திறந்து பார்த்த முதலாள் சொன்னான்.

"உள்ளே இருப்பது யார் என்று தெரியவில்லை. அது யாராக இருந்தாலும், அந்தாளுடைய பற்கள் பெரிதாக, வரிசையாக, அழகாக இருக்கின்றன."

ஐயா, இந்த கேள்வியைக கேட்ட நீங்களும் ஓர் இத்தாலியர்தான் தானாக எதையும் செய்வதை மறந்துவிடுங்கள்.

மாலை நேரம் முழுவதும் குடித்துக் கொண்டிருந்த இரண்டு இத்தாலியர்கள் கடைசியில் ரோம் நகருக்குப் போக பேருந்து நிலையத்துக்கு வந்தார்கள். அவர்கள் அதிர்ஷ்டம், கடைசிப் பேருந்து போய்விட்டிருந்தது. அடுத்த பேருந்து மறுநாள் காலைதான் புறப்படும் என்று தெரிந்து கொண்டார்கள்.

பேருந்துகள் நிறுத்திவைக்கப்பட்டிருந்த இடத்துக்குச் சென்றார்கள்.

"ஏய், நீ உள்ளே போய் எப்படியாவது ஒரு பஸ்ஸைக் கிளப்பிக் கொண்டு வா. அதை ஓட்டிக் கொண்டு நாம் ரோமுக்குப் போய்விடலாம்."

''நல்ல யோசனை.''

''சரி, நீ வரும் வரை, நான் வெளியில் இருந்து போலீஸ்காரன் யாராவது வருகிறானா என்று பார்க்கிறேன்.''

முதலாமவன் உள்ளே போனான். சிறிது நேரத்தில் பயங்கர சத்தம் கேட்டது. ஒரு வண்டி மற்றொன்றின் மேல் மோதி, இடித்துத் தள்ளும் நாராசமான சத்தம் அது. அந்த சத்தம் அரை மணி நேரம் நீடித்தது. கடைசியில் பல இடங்களில் இடி வாங்கி நசுங்கிய பேருந்து ஒன்று இரண்டாமவன் பக்கத்தில் வந்து நின்றது.

''ம்... ஏறிக் கொள் போகலாம்.''

''உனக்கு ஏன் இவ்வளவு நேரமாயிற்று?'' என்று கேட்டான் அவன்.

''அதுவா? ரோம் நகரத்துக்குச் செல்லும் பஸ கடைசியில் இருந்தது. அதை மறித்து பல பஸ்களை நிறுத்தித் தொலைத்திருந் தார்கள். அதை வெளியே எடுப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.''

*நான்காம் கேள்வி:*

*நீங்கள் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை?*

ஏனென்றால் எனக்கு பைத்தியம் பிடிக்கவில்லை.

ஏசுநாதர் கண்ணாடியின் முன் நின்று தனது நிறத்தையும், தெளிவான கண்களையும் கர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். பின் தனது நீளமான தலைமுடியை எண்ணெய் தடவி அழகாக வாரிப் பின்னலிட்டுக் கொண்டார். அதன் பின் தன் புருவங்களில் இருந்த முடியைச் சீர் செய்து கொண்டார். சீப்பினால் தனது மீசையைச் சரி செய்து கொண்டார்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அவரது தாய் மேரி சொன்னாள்.

''மகனே, நீ பார்க்க மிகவும் அழகாக இருக்கிறாய். இது தான் கல்யாணம் செய்து கொள்ள ஏற்ற காலம்.''

''கல்யாணமா? எனக்கா? அம்மா, அந்த கொடுமைக்குப் பதிலாக என்னைப் பேசாமல் சிலுவையில் அறைந்து கொன்று விடுங்கள்.''

*ஐந்தாவது கேள்வி:*

*ஓஷோ, உங்கள் ஜோக்குகள் என்னைப் பயமுறுத்து கின்றன. என்னைக் குழப்புகின்றன. இறைவனைப் பற்றி புத்தர் சொன்ன சூத்திரங்கள் எதையாவது சொல்லுங்களேன்.*

*பி.கு. நாளை நான் இத்தாலிக்குச் செல்கிறேன். நன்றி*

உங்கள் நிலை எனக்குப் புரிகிறது. ஜோக்குகள் ஆபத் தானவை. அதனால் தான் இதுவரை எந்த குருவும் ஜோக்குகளை உபாயங்களாகப் பயன்படுத்தியதில்லை. ஆனால் எனக்கு ஆபத்துகள் பிடிக்கும். ஜோக்குகளை உங்களுடைய இருப்புநிலையின் அடி ஆழம் வரைச் செல்ல நீங்கள் அனுமதித்தால் அவை மிகவும் அழகானவையாகத் தோன்றும்.

அந்த இடத்துக்கு எந்த சூத்திரங்களும் போக முடியாது. ஆனால் ஜோக்குகள் எளிதாக அங்கே சென்றுவிடும். காரணம், நீங்கள் சூத்திரங்களைக் கேட்கும் போது உங்களுக்குத் தூக்கம் வந்துவிடுகிறது. சூத்திரங்களைக் கேட்கும் போது கொட்டாவி விடாமல் இருப்பது கஷ்டமான காரியம்.

ஏனென்றால் சூத்திரங்கள் முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேசுகின்றன. பாலைவனங்களில் இருக்கும் வறட்சியை அவற்றில் காணலாம். எவ்வளவு நேரத்துக்குத்தான் உங்களால் பாலைவனத்தைப் பார்த்துக் கொண்டு இருக்க முடியும்? சீக்கிரத்திலேயே நீங்கள் கொட்டாவி விட ஆரம்பித்துவிடுவீர்கள். நீங்கள் எங்கே திரும்பினாலும் அதே காட்சியைத்தான் காண்பீர்கள். நாலாபக்கமும் கண்ணுக்குத் தெரியும் தொடுவானம் வரை நீங்கள் பார்ப்பதெல்லாம் வெறும் பாலைவனம்தான்.

அதுவும் நான்கு பக்கங்களும் அச்சசல் ஒரே மாதிரியாக இருக்கும். சூத்திரங்களும் அப்படியேதான் காட்சியளிக்கின்றன. அவை பாலைவனத்தைப் போன்றவை. தூக்கத்தை வரவழைப் பவை. சூத்திரங்கள் நமது செவிகளுக்குத் தாலாட்டுப் பாட்டாகத் தோன்றுகின்றன.

உங்களுக்கு தூக்கமின்மை நோய் இருந்தால், புத்தரின் சூத்திரங்களையோ, பதஞ்சலியின் சூத்திரங்களையோ ஒன்றிரண்டு படியுங்கள். தூக்கம் சொக்கிக் கொண்டுவரும். தூக்கமாத்திரைகள் கூட செய்யமுடியாததை சூத்திரங்கள் செய்துவிடும்.

வசியம் செய்பவர்கள் இதையேதான் செய்கிறார்கள். சூத்திரம் போன்ற ஒரே மாதிரியான சொற்களை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள். ஒரே ஒலியை மீண்டும் மீண்டும் கேட்க நேரும் போது மனதில் அதீத சலிப்பு உண்டாகிறது. மனம் அந்த சலிப்பில் இருந்து தப்பிக்க வழிகளைத் தேடுகிறது. அதற்கான ஒரே வழி தூக்கம்தான்.

முல்லா நசிருதீன் ஒரு சமயம் தூக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்தார். தூக்க மாத்திரைகள், வெந்நீர் ஒத்தடங்கள் எதுவும் பலனளிக்கவில்லை. அவரது மகன்களுக்கு இது பெரிய கவலையாகப் போயிற்று.

ஊரெல்லாம் தேடி ஒரு வசியம் செய்பவனைக் கண்டுபிடித்தார்கள். "கவலைப்படாதீர்கள். இன்று இரவு நான் உங்கள் வீட்டுக்கு வருகிறேன். உங்கள் தந்தை எப்படித் தூங்குகிறார் என்பதைப் பாருங்கள்."

சொன்னபடியே இரவு வந்த அந்த வசியக்காரன் முல்லாவைப் படுக்கையில் படுக்கவைத்து,

"இதோ நீங்கள் தூங்கிவிட்டீர்கள்." "இதோ நீங்கள் தூங்கிவிட்டீர்கள்" என்று சொன்னதையே மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருந்தான்.

முல்லா படுக்கையில் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்தார். விளக்குகள் அணைக்கப்பட்டுவிட்டன. முல்லாவின் காதருகில் வசியக்காரன் மென்மையாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

"நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கத்தில் ஆழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் இமைகள் கனமாகிக் கொண்டிருக்கின்றன. மேலும் கனமாகிக் கொண்டிருக்கின்றன. நீங்கள் தூகத்தில் கொஞ்சம் கொஞ்சமாக ஆழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். ஆழ்ந்த உறக்கம் உங்களை ஆட்கொள்கிறது. இதோ நீங்கள் தூங்கிவிட்டீர்கள்...."

சிறிது நேரத்தில் முல்லாவிடமிருந்து குறட்டை சத்தம் கேட்டது. வசியக்காரன் சத்தம் போடாமல் அந்த அறையை விட்டு வெளியேறினான்.

தந்தையின் குறட்டைச் சத்தத்தைக் கேட்ட முல்லாவின் மகன்கள் சந்தோஷத்தில் வசியக்காரனுக்கு பேசிய தொகையைவிட இருமடங்கு அதிகமாகக் கொடுத்து அவனை அனுப்பிவைத்தனர். அதன் பின் தங்கள் தந்தை தூங்கும் அழகைப் பார்க்க அவரது அறைக்குள் நுழைந்தனர்.

முல்லா மெதுவாக ஒரு கண்ணால் தனது மகன்களைப் பார்த்தார்.

“அந்த கிறுக்கன் போய்விட்டானா? அவன் பேசிப் பேசியே என்னைக் கொன்றிருப்பான். சலிப்பூட்டும் அவன் பேச்சை நிறுத்த வேண்டும் என்பதற்காகத்தான் நான் குறட்டை விடுவதைப் போல் நடித்தேன். அவனைத் துரத்த எனக்கு வேறு வழி தெரியவில்லை.”

சூத்திரங்கள் சலிப்பூட்டுபவை. ஏறக்குறைய செத்துவிட்ட நிலையில் இருக்கும் முதியவர்கள்தான் கதா காலட்சேபங்களுக்கும், ஆன்மிகப் பேருரைகளுக்கும் செல்கிறார்கள். அவர்களை எல்லா தேவாலயங்களிலும், எல்லாக் கோயில்களிலும் பார்க்கலாம்.

இந்த ஆசிரமத்துக்கு வருபவர்கள் இங்கே பல இளைஞர்கள் இருப்பதைப் பார்த்து வியப்படைகிறார்கள். மதம் சம்பந்தப்பட்ட ஓர் இடத்தில் இளவயதுக்காரர்களா? அவர்களால் நம்பவே முடியவில்லை. வயதானவர்கள், வாழ்க்கையில் பிடிப்பில்லாதவர்கள், இருக்கிறோமா செத்துவிட்டோமா என்ற வித்தியாசம் தெரியாமல் பெயருக்கு வாழ்பவரக்ள் தான் இந்த மாதிரி இடங்களில் குழுமி யிருப்பார்கள்.

இங்கே இவ்வளவு இளவயதுக்காரர்கள் இருக்கிறார்களே, இவர்கள் என்ன செய்கிறார்கள்? இங்கே சொல்லப்படும் சூத்திரங்களுக்காக அவர்கள் இங்கே இருக்கவில்லை. நான் இங்கே சூத்திரங்களுக்காக இருக்கிறேன். அதனால் நானும் அவர்களும் ஓர் ஒப்பந்தத்திற்கு வந்துவிட்டோம்..

நான் சொல்லும் சில சூத்திரங்களை அவர்கள் கேட்க வேண்டும். அது முடிந்தவுடன் நான் நல்ல ஜோக்குகளைச் சொல்ல வேண்டும். ஜோக்குகளுக்காக அவர்கள் சூத்திரங்களைக் கேட் பார்கள். சூத்திரங்களுக்காக நான் ஜோக்குகளைச் சொல்வேன். நான் ஜோக்குகள் சொல்வதை நிறுத்திவிட்டால் அவர்கள் இந்த இடத்தைவிட்டு ஓடிவிடுவார்கள்.

ஜோக்குகள் மட்டுமே சொல்ல வேண்டுமென்றால் அதற்கு நான் தேவையில்லை. நான் பெரிய ஜோக்குகள் புத்தகத்தை இங்கே வைத்துவிட்டு என் வழியே போய்விடலாம். ஸ்வாமி தீர்த்தா அந்த ஜோக்குகளைப் படித்துக் காண்பிப்பான். நான் இங்கே இருக்க வேண்டிய அவசியமே இல்லை.

நான் இங்கே இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் நான் சொல்லும் சில சூத்திரங்களை நீங்கள் கேட்டேயாக

வேண்டும். நீங்கள் இங்கே இருக்கவேண்டும் என்று நான் விரும்பி னால் நான் சில ஜோக்குகளைச் சொல்லியே ஆக வேண்டும். இதுதான் எங்களுக்கிடையே காலம் காலமாக இருக்கும் ஒப்பந்தம்.

அது போக ஜோக்குகளுக்கென்று ஒரு முக்கியத்துவம் இருக்கத்தான் செய்கிறது. நீங்கள் நினைப்பதைப் போல ஒரு முறை சிரித்துவிட்டு மறந்துவிடுவதற்காக நான் ஜோக்குகளைச் சொல்லவில்லை. ஜோக்குகளின் தன்மை புதிரானது. அவை எப்படி உங்கள் ஆழ்மனங்களில் மாற்றத்தை உண்டாக்குகிறது என்பது இன்னும் புரியாத புதிராகவே இருக்கிறது.

ஒரு ஜோக் என்ன செய்கிறது, எப்படி உங்களுடைய இருப்புநிலையின் அடி ஆழம் வரை செல்கிறது, எப்படி உங்களிடம் சிரிப்பைத் தோற்றுவிக்கிறது, எப்படி அது உங்களுக்கு ஒரு விழிப்புணர்வை உண்டாக்குகிறது என்பது உங்களுக்குத் தெரியாது. அவற்றின் செயல்பாடு விசித்திரமானது.

உடலுறவின் போது ஏற்படும் உச்சநிலை எப்படிச் செயல்படுகிறதோ அப்படித்தான் ஒரு ஜோக்கும் செயல்படுகிறது. நான் சொல்லும் பல ஜோக்குகள் செக்ஸ் சம்பந்தமானவையாகவே இருப்பதற்கு வலுவான காரணம் இருக்கிறது. செக்ஸ் ஜோக்குகள் உங்களுக்குள் ஒரு சக்தியைத் தோற்றுவிக்கிறது.

அடுத்து என்ன நடக்கப்போகிறதோ என்ற ஆர்வத்தை உண்டாக்குகிறது. எப்படியும் நீங்கள் எதிர்பார்ப்பது நடக்காது என்று உங்களுக்குத் தெரியும். ஏனென்றால் எதிர்பார்த்தது நடந்துவிட்டால் அது ஜோக்கேயில்லை. எதிர்பாராததுதான் நடக்கப் போகிறது என்று உங்களுக்குத் தெரியும்.

அது எப்படி நடக்கப் போகிறது என்பதை அறியத் துடித்துக் கொண்டிருப்பீர்கள். நீங்கள் அந்தத் துடிப்பில் இருக்கும் போது நீங்கள் கொஞ்சம் கூட எதிர்பாராத ஒரு திருப்பம் ஏற்படுகிறது. இப்படித்தான் நடக்கும் என்று உங்களால் தர்க்கரீதியாக எதிர்பார்க்கமுடியாத அளவில் அந்த திருப்பம் அமையும் போது உங்களை அது பக பக வென்று சிரிக்க வைக்கிறது.

அந்த திருப்பம் நேரும் போது அது உங்களுக்குப் போதிய அவகாசம கொடுக்காமல் திடீரென்று நிகழ்ந்து விடுகிறது. நேரம் கிடைக்காததால் மனதினால் முழுவதுமாக ஈடுபடமுடியவில்லை. மனம் வேலை செய்ய வேண்டுமென்றால் அதற்கு கால அவகாசம் முக்கியம். ஜோக்கு தெற்கு நோக்கிப் பயணித்துக்

கொண்டேயிருக்கும் போது சட்டென்று திரும்பி வடக்குப் பக்கம் பயணிக்கத் தொடங்குகிறது.

மனத்தினால் இந்த திடீர் திருப்பத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. மனம் தெற்கு நோக்கித் தன் பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால ஜோக்கோ இப்போது வடக்கு நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. தனது நிலையை உணரும் மனம் அப்படியே ஸ்தம்பித்து நிற்கிறது. அந்த ஸ்தம்பித்தலில், அந்த நிற்றலில்தான் நீங்கள் அமைதியை, தியானத்தை அனுபவிக்கிறீர்கள்.

உடலுறவின் போது ஏற்படும் உச்சநிலையும் இதே போல்தான் நிகழ்கிறது. உங்களுக்குள் ஒரு சக்தி, ஓர் இறுக்கம் ஏற்படத் தொடங்குகிறது. அந்த சக்தி அதிகமாக அதிகமாக அந்த இறுக்கம் இன்னும் அதிகமாக அதிகமாக நீங்கள் மேல் நோக்கிப் போய்க கொண்டேயிருக்கிறீர்கள்.

அப்போது திடீரென்று ஒரு நெகிழ்வு ஏற்படுகிறது. அடக்கி வைக்கப்பட்டிருந்த சக்தி வெளிப்பட்டு நீங்கள் விடுதலை யடைந்ததைப் போல் உணருகிறீர்கள். அந்த இறுக்கம் சட்டென்று தளர்கிறது.

இந்த நிகழ்வு எதிர்பாராமல் திடீரென்று நிகழ்வதால் - ஒரு கணப்பொழுதில் நிகழ்வதால் - மனதால் இதறகு ஈடுகொடுக்க முடியவில்லை. அந்த ஒரு கணத்தில் மனம் மறைந்துவிடுகிறது. மனதால் அந்த திடீர் விடுதலையைத் தாக்குப்பிடிக்கமுடியவில்லை. அதற்கு மனதிற்கு அவகாசம் வேண்டும். அது அங்கே கிடைக்கவில்லை.

நீங்கள் ஒரு ஜோக்கைப் புரிந்து கொள்ள முடிந்தால், அதற்கு காரண-காரிய விளக்கம் கொடுக்க முடிந்தால் அதன்பின் அதில் சுவையிருக்காது. அந்த ஜோக் எதை நோக்கிப் போய்கிறது, தர்க்கரீதியாக அதன் முடிவென்ன என்று நீங்கள் தெரிந்து கொண்டால் அது ஜோக்காக இருக்காது.

அந்த ஜோக்கின் ஆரம்பத்தில் இருந்து நீங்கள் புரிந்து கொண்டதைப் போல் அதன் முடிவு இருக்காது. அப்படி இருந்தால் அந்த ஜோக் உங்களுக்கு சிரிப்பைத் தராது. சலிப்பைத்தான் தரும். அந்த ஜோக்கின் முடிவு முற்றிலும் எதிர்பாராததாக, எதிர்பார்க்க முடியாததாக இருக்க வேண்டும்.

அது தான் ஜோக்கின் அழகு. அது உங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்கிறது. உங்களை ஆட்டுவிக்கிறது. அது உங்களைத்

தூக்கத்திலிருந்து எழுப்புகிறது. ஓர் அருமையான ஜோக் சொல்லப்படும் போது தூங்குவது மிகவும் கடினம்.

புத்தர் தனது சீடர்களிடம் அடிக்கடி சொன்ன வார்த்தை, "தூங்கியது போதும். விழித்தெழுங்கள்."

அதைச் சொல்ல வேண்டும் என்ற தேவை எனக்கில்லை. நான் ஒரு ஜோக்கைச் சொல்வேன். என் சீடர்கள் எந்த நிலையில் இருந்தாலும் உடனே விழித்தெழுவார்கள்.

அமெரிக்காவில் ஃப்ளாரிடாவுக்குச் சென்று கொண்டிருந்த விமானத்தில் இன்ஜின் கோளாறு ஏற்பட்டது. அந்த விமானத்தில் 240 பயணிகள் இருந்தார்கள். விமானம் மோதி பெரிய விபத்து ஏற்படப்போகிறது என்பதைத் தெரிந்து கொண்ட கேப்டன், ஊழியர் களை அழைத்து நிலைமையை விளக்கிவிட்டுச் சொன்னான,

"ஆளாளுக்கு ஒரு பாராச்சூட்டை எடுத்துக் கொண்டு குதித்துவிடுங்கள். உயிர்பிழைக்க அதுதான் வழி."

ஓர் இளம் அதிகாரி கேட்டான்.

"பயணிகளை என்ன செய்வது?"

அமெரிக்காவில் கோபத்தில் அடிக்கடிப் பயன்படுத்தும் வார்த்தைப் பிரயோகத்தை அந்த கேப்டன் பயன்படுத்தினான்.

"Fuck the passengers."

"சார், அதற்கெல்லாம் நேரம் இருக்குமா என்ன?" என்று அப்பாவியாகக் கேட்டான் அந்த அதிகாரி.

உங்கள் ஜோக்குகள் பயமுறுத்துகிறது என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஜோக்குகள் உங்களை ஏன் பயமுறுத்துகின்றன?

அவை உங்களுக்குள் இருக்கும் பல விஷயங்களைத் தகர்த் தெறிகின்றன. மதம் என்பது மிகவும் கனமான விஷயம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அது உண்மையில்லை. குறைந்தபட்சம் நான் பார்க்கும் மதம் அப்படிப்பட்டது இல்லை. என்னுடைய மதம் விளையாட்டுத்தனமானது.

அது உண்மையானதாக இருக்கும், ஆனால் கனமானதாக, சீரியசானதாக நிச்சயம் இருக்காது. அன்பும், சிரிப்பும்தான் என்னு டைய மதம். அது துறவறத்தைப் பற்றியதல்ல, கொண்டாட்டத்தைப் பற்றியது. மகிழ்ச்சியைப் பற்றியது.

நான் கடவுளைப் பற்றிக் கவலைப்படவில்லை. நீங்கள் என்னடாவென்றால் கடவுளைப் பற்றி புத்தர் எழுதிய

சூத்திரங்களைச் சொல்லுமாறு கேட்கிறீர்கள். உண்மையைச் சொல்லப் போனால் புத்தர் ஒரு போதும் கடவுளை நம்பியதில்லை. கடவுளைப் பற்றி அவர் ஒரு சூத்திரமும் எழுதியதில்லை. இந்த கோணத்தில் பார்க்கும் போது புத்தர் பரம நாத்திகர். அவர் எப்போதும் கடவுளை நம்பியதில்லை.

எல்லாருக்கும் தந்தையாக இருக்கும் கடவுளை, இந்த உலகத்தைப் படைத்த கடவுளை நம்பும் அளவிற்கு புத்தர் குழந்தைத் தனமானவர் கிடையாது. இவை எல்லாம் மனிதன் எட்டுக்கட்டிய கற்பனைக் கதைகள்.

ஒவ்வொரு மாதமும் சொர்க்கத்தில் இருக்கும் புனித பீட்டரும், நரகத்தின் அதிபதியான சாத்தானும் சந்தித்து வந்திருக்கும் புதிய ஆவிகளை தங்களுக்குள் பிரித்துக் கொள்வது வழக்கம்.

அன்று புதிதாக வந்த ஓர் ஆவியைப் பார்த்து புனித பீட்டர் கேட்டார்.

"உன் பெயர் என்ன?"

வெள்ளைத் தாடியுடன் இருந்த அந்த ஆவி அமைதியாகச் சொன்னது.

"கார்ல் மார்க்ஸ்."

"ஆஹா, நீ ஒரு நாத்திகவாதியாயிற்றே! அதனால் நீ நரகத்துக்குத்தான் போக வேண்டும்."

அடுத்த மாதம் நடக்கவிருந்த சந்திப்புக்கு சாத்தான் கால தாமதமாக வந்தது. அது வரை அப்படி நிகழ்ந்ததேயில்லை. சாத்தானின் நிலைமை பார்க்க பரிதாபமாக இருந்தது. சாத்தானின் கொம்புகளில் ஒன்று முறிந்திருந்தது. அதன் வால் கருகியிருந்தது, அதன் நிறமே மங்கியிருந்தது.

"என்ன ஆயிற்று உனக்கு? ஏன் இந்த அலங்கோலம்?" புனித பீட்டர் அன்பாகக் கேட்டார்.

"எல்லாம் அந்த படுபாவி கார்ல் மார்க்சால் வந்த வினை. நரகம் மிகவும் வெப்பமாக இருக்கிறது என்று புகார் சொல்லிக் கொண்டேயிருந்தான் அவன். போதிய காற்றோட்டம் இல்லை, இடம் சுகாதாரமாக இல்லை என்ற புகார்கள் வேறு.

"சுருங்கச் சொன்னால் சில வேலை நிறுத்தங்கள், போராட்டங்கள், பேரணிகளுக்குப்பின் அவன் வைத்த கோரிக்கை களை நான் ஏற்க வேண்டியதாகப் போயிற்று. இப்போது நரகம்

குளிர்சாதன வசதி செய்யப்பட்டிருக்கிறது. சித்திரவதை நடக்கும் போது நடுவே ஒரு மணி நேரத்துக்கு ஐந்து நிமிடம் இடைவேளை தர வேண்டியிருக்கிறது.

"அந்த இடைவேளையின் போது வலி தெரியாமல் இருக்க மசாஜ் போன்ற வசதிகளும் செய்து தந்திருக்கிறேன். வெப்பத்தைக் கட்டுப் படுத்த வெப்பமானிகள், புதிய இயந்திரங்கள் நிறுவியிருக்கிறேன்.

"புனித பீட்டரே, எனக்குக் கிறுக்குப் பிடித்துவிடும் போல் இருக்கிறது. நீங்கள் தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். அந்த பயல் மார்க்சை ஒரு மாதமாவது சொர்க்கத்தில் வைத்துக் கொள் ளுங்களேன். ப்ளீஸ், எனக்காக..."

"என்ன விளையாடுகிறாயா? சொர்க்கத்தில் ஒரு நாத்திக வாதியா? வாய்ப்பேயில்லை. நீயாச்சு, மார்க்ஸ் ஆச்சு, என்னை விட்டுவிடு."

"எனக்காக அதைச செய்யக்கூடாதா?புனித பீட்டரே, ஆவிகள் இன்று இங்கு வரும், நாளை அங்கு போகும் நமது நட்பு காலம் தொடங்கிய காலத்திலிருந்து இருக்கிறது. அதை மறந்து விடாதீர்கள்."

"உண்மைதான். அதற்காக தேவதைகள், கடவுளுக்கு நடுவே ஒரு நாத்திகவாதியா? அது கொஞ்சம் கஷ்டம் ஆயிற்றே?"

"ஒரே ஒரு மாதம் தானே? அதன் பின் என்னிடம் திருப்பி அனுப்பிவிடுங்கள்."

"சரி. உனக்காக. சரியாக ஒரு மாதம் மட்டும்தான். அவனை இங்கே அனுப்பி வை."

அடுத்த மாத கூட்டத்துக்கு புனித பீட்டர், சாத்தான் இருவருமே சரியான நேரத்துக்கு வந்துவிட்டார்கள்.

சாத்தான் ஆர்வத்துடன் கேட்டது.

"புனித பீட்டரே, எப்படி இருக்கிறீர்கள்? கார்ல் மார்க்சால் தொந்தரவு ஏதாவது..."

"சேச்சே, அதெல்லாம் ஒன்றும் இல்லை. அவன் மிகவும் நல்லவனப்பா."

"அப்படியா? அவன் உங்களை எதிர்த்து வேலை நிறுத்தம் புரட்சி எதுவும் செய்யவில்லையா?"

"இல்லை. நாங்கள் பல முறை சந்தித்துப் பேசினோம். அப்பா.. என்ன அழகாக ஆணித்தரமாகப் பேசுகிறான். அவன் நாகரிகம் தெரிந்த நல்ல பண்பான மனிதன்."

“அப்படியா? கடவுள் என்ன சொல்கிறார்?”

“கடவுளா? அப்படி யாரும் இல்லையே? கடவுள் என்று யாருமே இருந்தது கிடையாது என்று உனக்கே தெரியுமே, சாத்தானே”

சாத்தான் இருந்த இடத்திலேயே மயங்கி விழுந்தது.

புத்தர் கடவுளைப் பற்றிச் சூத்திரங்கள் எதுவும் எழுதவில்லை. ஆன்மிக உலகத்தில் முதன் முதலில் தோன்றிய பக்குவமான ஞானி புத்தர்தான். அவரது உரைகளில் பக்குவம் தென்படுகிறது. குழந்தைத்தனம் இல்லை.

நீங்கள் நாளை இத்தாலி போகப்போவதாகச் சொல்கிறீர்கள். இதோ இந்த ஜோக்கையும், அதனால் வரும் சிரிப்பையும் கூடவே எடுத்துச் செல்லுங்கள்.

இத்தாலியில் ஒரு கிராமத்திலிருந்து இருவர் தங்கள் சொந்தக்காரப் பையன் ஒருவனைப் பார்ப்பதற்காக அமெரிக்காவின் நியு யார்க் நகரத்துக்கு வந்தார்கள். மூன்று நாட்கள் தொடர்ந்து ஊரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மூன்றாம் நாள் மாலை அந்த இருவரும் பாதை தவறி விட்டார்கள். அவர்களுடைய சொந்தக்காரப் பையனை அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. அருகில் உள்ள காவல் நிலையத்துக்குப் போனார்கள்.

“எங்களுடைய அத்தை பையனைக் கண்டுபிடித்துத்தர வேண்டும்.”

“அவன் பெயர் என்ன?”

‘ஜீனோ.”

“முழுப் பெயரைச் சொல்லப்பா.”

“தெரியாது சார். ஜீனோ என்று தான் கூப்பிடுவோம்.”

“அவன் எங்கே வசிக்கிறான்?”

“நியு யார்க் நகரில்.”

“விலாசம் தெரியுமா?”

“தெரியாது.”

“சரி விடு. அவன் பார்க்க எப்படி இருப்பான்?”

“ஒரு மனிதனைப் போல். ஆண்மகனைப் போல் இருப்பான்.”

தலையில் அடித்துக் கொண்டார் காவல் துறை அதிகாரி.

“அது சரி எந்த இடத்தில் அவனிடமிருந்து பிரிந்தீர்கள்?”

''அந்த இடத்தின் பெயர் தெரியாது சார். அங்கே அழைத்துக் கொண்டு போனால் அந்த இடம்தானா என்று சரியாகச் சொல்லி விடுவோம்.''

''கஷ்டம். சரி அது போகட்டும். அவன் உடலில் ஏதாவது வித்தியாசமாக இருக்கிறதா? தட்டையான மூக்கு, மாறுகண், செம்பட்டை முடி.. இப்படி ஏதாவது?'' இருவரும் நீண்ட நேரம் யோசித்தார்கள். ஒருவனின் முகம் பிரகாசமானது.

"சார், அவனுக்கு இரண்டு ஆசன வாய்(assnoles) இருக்கும்."

அதிகாரிக்கு ஆச்சரியம்.

"அது மட்டும் எப்படி அவ்வளவு நிச்சயமாச் சொல்ற?"

"சார், ரெண்டு நாளா ஜினோ எங்கள ஒரு நைட் கிளப்புக்குக் கூட்டிக்கிட்டுப் போனான். நாங்க உள்ள நுழைஞ்சதுமே அவனுக்குத் தெரிஞ்சவங்க கத்திச் சொல்வாங்க. "அதோ பாருங்கடா, ஜீனோ, ரெண்டு assholes கூட வந்திருக்கான்."

(ஜீனோவின் நண்பர்கள் assholes என்று தங்கள் இருவரையும் தான் சொல்கிறார்கள் என்பது தெரியாத அப்பாவிகள் அவர்கள்.)

நீங்கள் இத்தாலிக்குப் போய்விட்டுச் சீக்கிரமாகத் திரும்பி வாருங்கள். இத்தாலியின் மொத்தக் கூட்டமும் இங்கேதான் இருக்கிறது. இத்தாலியிலிருந்த ரசனைமிக்க மனிதர்கள் எல்லாரும் அங்கிருந்து மறைந்துவிட்டார்கள். அவர்கள் எல்லாம் இங்கே என்னுடன் இந்த ஆசிரமத்தில்தான் இருக்கிறார்கள்.

அன்று ஒரு நாள் இத்தாலி நாட்டின் செய்தித்தாள்களைப் படித்துக் கொண்டிருந்தேன். அந்த நாட்டின் பல இளைஞர்களும், இளைஞிகளும் திடீரென்று மாயமாக மறைந்துவிட்டார்கள் என்ற செய்தியைப் பார்த்தேன். இத்தாலியின் அரசாங்கம் இதற்காக மிகவும் கவலைப்படுகிறதாம். அவர்களுக்கு என்ன ஆயிற்றோ என்று பயப்பட்டுக் கொண்டிருக்கிறார்களாம்.

அவர்கள் யாரும் பயப்படத் தேவையில்லை. தொலைந்து போனவர்களை எங்கேயும் தேடத் தேவையில்லை. அவர்கள் எல்லாரும் இங்கேதான் இருக்கிறார்கள். ஒன்று இங்கு ஏற்கனவே வந்து தங்கியிருக்க வேண்டும், இல்லையென்றால் வந்து கொண்டிருக்க வேண்டும், வழியில் இருக்க வேண்டும். நீங்கள் அங்கே போய் என்ன செய்யப் போகிறீரக்ள்? விரைவிலேயே திரும்பி வந்துவிடுங்கள்.

இப்போது இத்தாலியைப் பார்க்க இத்தாலி மாதிரியே இல்லையாம். எப்படி இருக்கும்? அங்குள்ள சுவையான மனிதர்கள்

எல்லாரும் இங்கேயல்லவா இருக்கிறார்கள்? இங்கே ஒரு மினி இத்தாலியே இருக்கிறது.

கொஞ்சம் கொஞ்சமாக என் ஜோக்குகள் உங்களை நல்ல அறிவு நிலைக்கு வர உதவி செய்யும். உங்கள் குழப்பத்தில் இருந்து வெளியே வர அவை துணை நிற்கும். நல்ல சிரிப்பை விட ஆரோக்கியமானது வேறு எதுவும் இல்லை. நமது உடல் நலத்துக்கு நல்ல சிரிப்பு அதி முக்கியமானது.

என்னுடைய சந்நியாசிகள் சிரிக்கும் சந்நியாசிகளாக இருப்பதையே விரும்புகிறேன். என்னுடைய சீடர்கள் தான் உலகத்திலேயே அதிகமாக ஆடிப் பாடக்கூடியவர்கள் என்று மக்கள் பேச வேண்டும் என்பதுதான் என் ஆசை. எனக்கு சோகமான, முகத்தை உம் என்று வைத்துக் கொண்டு கனமான ஆன்மிக விஷயங்களைப் பேசிக் கொண்டிருப்பவர்கள் தேவையில்லை.

சோகமான முகங்கள் என் கண்ணில் படக்கூடாது. நீங்கள் இங்கே வரும் போது சோகமான முகத்துடன் தான் வருகிறீர்கள். ஆனால் அது உங்களுடைய நிஜ முகம் அல்ல. அது வெறும் முகமூடியே. நான் உங்களைத் தாக்கும் போது அந்த முகமூடி கிழிந்துவிடுகிறது. அதனுள் ஒளிந்து கொண்டிருக்கும் உங்களுடைய மகிழ்ச்சியான முகம் தெரிகிறது.

எந்தக் குழந்தையும் சோகமான முகத்துடன் பிறப்பதில்லை. எல்லாக் குழந்தைகளும் சிரிக்கும் வல்லமையுடன் பிறக்கின்றன. தங்கள் உடல் வெடித்துவிடும் அளவிற்கு சந்தோஷத்துடன் பிறக்கின்றன. நாம் தான் அந்த குழந்தையின் மகிழ்ச்சியை அழித்து விடுகிறோம். அந்த மகிழ்ச்சியை உங்களுக்கு மீட்டுத் தருவதே எனது பணி. உங்கள் குழந்தைப் பருவதை உங்களுக்கு மீண்டும் கொடுப்பதுதான் என் வேலை.

*ஆறாவது கேள்வி*

*எனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்.*
*நீங்கள் எங்களுக்கு எவ்வளவு கொடுக்கிறீர்கள்*
*என்பது எனக்குத் தெரிந்தால்*
*அந்த பரவசம் தரும் வேதனையில்*
*நான் இறந்துவிடுவேன்.*

தர்ம சேதனா,

நீ மிகவும் தாமதமாக வந்திருக்கிறாய். நீ ஏற்கனவே இறந்துவிட்டாய். ஆனால் அதைக் கண்டுபிடிக்க உனக்கு

நேரமாகும். எல்லா வேலையும் முடிந்த பின் தான் அது உனக்குத் தெரியும். நான் செய்ய வேண்டிய அறுவை சிகிச்சையை எப்படிச் செய்வேன் தெரியுமா?

எல்லாம் முடிந்தபின் 'ஐயோ என் குடல் வாலைக் காணோமே, டான்சில்ஸைக் காணோமே, என் தலையைக் காணோமே, என்று நீங்கள் பயந்து அலறும் போதுதான் நான் அறுவை சிகிச்சை செய்ததே உங்களுக்குத் தெரியும். நீங்கள் ஒரு காலியான மூங்கிலான பின்னால்தான் அதை உங்களால் உணர முடியும்.

இப்போது தர்ம சேதனா ஓர் உள்ளீடில்லாத காலி மூங்கில் இப்போது அவள் தயாராக இருக்கிறாள். இந்த பிரபஞ்சம் எங்கும விரவி நிற்கும் முழுமை அவள் மூலம் இசைக்க ஆரம்பிக்கலாம். மறுபிறவி எடுக்க வேண்டுமென்றால், முதலில் சிலுவையில் அறையப்பட வேண்டும்.

கீழை நாட்டு சாத்திரங்களை உங்கள் குருவை மரணத்திற்கு ஒப்பிடுகின்றன. ஒரு நுட்பமான வகையில் அது உண்மைதான். ஆனால் அது பாதி உண்மையைத்தான் குறிக்கிறது. குருதான மரணம். குருதான் உயிர்த்தெழுதல்.

*ஏழாவது கேள்வி*

*எனது இதயம் எங்கே இருக்கிறது?*

அதே கேள்விதான். நான் அதை எடுத்துக் கொண்டு விட்டேன். இப்போது அது உங்களிடம் இருக்காது. உங்களிடம் உள்ள அனைத்தையும் வெளியே எடுத்துவிட வேண்டும். ஏனென்றால் உங்களுக்குள் இருப்பது எல்லாமே குப்பைதான். அதுவும் மக்கி விஷமாகிப்போன குப்பை. நீங்கள் அதை பழைமையான பொருள்கள் என்று சொல்லிப் போற்றிப் பாதுகாக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் அது குப்பைதான். எனக்கு பழைய பொருள்களில் நாட்டம் இல்லை. எனது மனம் எப்போதும் புதுமையையே நாடிச் செல்லும்.

முக்தா எனக்காக ஒரு பழைய ரோல்ஸ் ராய்ஸ் காரை வாங்க வேண்டும் என்று நினைத்தாள்.

“முக்தா, எனக்கு பழையது எதுவுமே வேண்டாம்.”

“ஓஷோ,உங்களுக்குப் புரியவில்லை. இந்த கார் மிகவும் அழகாக இருக்கிறது. 1939ஆம் வருடத்திய மாடல் இது. தங்கத் தகடுகள் கொண்டு வேயப்பட்ட மேற்கூரை உடையது.”

"அதை மறந்துவிடு, முக்தா. எனக்கு புதில் தான் விருப்பம்."

இப்போது ஷீலா புதிய லிங்க்கன் காண்டினென்டல் கார் கொண்டு வரப் போகிறாள்.

"ஷீலா, எனக்கு 1981ஆம் வருட மாடல் தான் வேண்டும்."

"என்ன ஓஷோ, விளையாடுகிறீர்களா? இப்போது நடப்பது 1980ஆம் ஆண்டு. இப்போது எப்படி 1981ஆம் வருட மாடல் கார் கிடைக்கும்?"

"நீ முயற்சி செய், ஷீலா. உனக்கு அந்த கார் வரும் போது 1981ஆம் ஆண்டு பிறந்திருக்கும்."

*கடைசிக் கேள்வி:*

*ஓஷோ, எனக்குக் கொஞ்சம் கூட பொறுமையே இல்லை. கடவுளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற பேராசை இருக்கிறது. ஆனால் அதற்காக கடவுளைத் தேடுவதில் எனது நேரத்தை வீணடிக்க எனக்கு மனதில்லை. கடவுளைக் கண்டுபிடிக்க ஏதாவது குறுக்கு வழி இருந்தால் சொல்லுங்களேன்.*

இப்படித்தான் ஒரு முறை உங்களைப் போன்ற துடிப்பான இளைஞன் ஒருவன் பெரிய மகானைச் சந்தித்துக் கேட்டான்.

"ஞானம் அடைய எத்தனை ஆண்டுகள் ஆகும்?"

"பத்து ஆண்டுகள்."

"அ...ப்...பா... அவ்வளவு நாள் ஆகுமா?"

"என்னை மன்னித்து விடப்பா. தவறாகச் சொல்லிவிட்டேன். 20 வருடம் ஆகும்."

"ஐயா முதலில் சொன்னதே அதிகம். ஏன் மேலும் மேலும் கூட்டிக் கொண்டே போகிறீர்கள்?"

"இன்னும் ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கும் போது உனக்கு 30 ஆண்டுகள் கூட ஆகலாம் என்று தோன்றுகிறது."

கடவுளை அடைய குறுக்கு வழிகள் எதுவும் கிடையாது. உங்களுக்குப் பொறுமையில்லை என்றால் உங்களால் எப்போதும் கடவுளை அடைய முடியாது. கடவுளை அடைய பொறுமை ஒன்றுதான் வழி.

உங்களிடம அளவில்லாத பொறுமை இருந்தால், இதோ இந்த கணத்திலேயே உங்களால் கடவுளைக் கண்டு கொள்ள முடியும். இது தான் மெய்ப்பொருளைத் தேடுவதில் உள்ள மிகப் பெரிய முரண்பாடு. உங்களிடம் காத்திருக்கும் பொறுமை இல்லை என்றால் நீங்கள் காலம் உள்ள வரையிலும் காத்திருக்க வேண்டும்.

அந்த இளைஞனுக்குப் பதில் சொன்ன மகான் மரியாதை தெரிந்தவர். அதனால் தான் 30 வருடம் என்று சொன்னார். காத்திருக்கும் பொறுமை இல்லையென்றால் நீங்கள் காலம் முழுவதும் காத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இதுதான் ஆன்மிகத்தின் மிக அழகான முரண்பாடு. நீங்கள் பொறுமையாக இருந்தால், உங்கள் பொறுமை முழுமையானதாக இருந்தால், இதோ, இங்கேயே இப்போதே உங்களால் கடவுளைக் காண முடியும்.

குறுக்கு வழியைத் தேடாதீர்கள். உண்மையை அடைய குறுக்கு வழிகளே கிடையாது. இருக்கவும் முடியாது. உண்மையை உங்களால் மலிவாக வாங்க முடியாது. அதற்குரிய முழு விலையையும் நீங்கள் கொடுத்தேயாக வேண்டும்.

பொறுமையும் அன்பும் ஒன்றுதான். பொறுமை என்றாலே அன்பு என்று தான் பொருள். ஏனென்றால் அன்பிற்கு மட்டும் தான் காத்திருக்கத் தெரியும். அன்பு காலம் முழுவதும் காத்திருக் கவும் தயாராக இருக்கும். அப்படி காத்திருக்க முடிவதாலேயே அன்பு இந்தக் கணத்திலேயே மெய் ஞானப்பரிசைப் பெற தயாராகி விடுகிறது.

இரண்டு இளைஞர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவன் தான் வீழ்த்திய பெண்களைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொண்டிருந்தான்.

“எப்படியப்பா உன்னால் இத்தனை பெண்களை மயக்க முடிகிறது? எனக்கும் அந்த ரகசியத்தைச் சொல்லிக் கொடேன்.”

“மிகவும் சுலபம். நான் என்ன செய்வேன் தெரியுமா? எனது காரில் முன்னால் உட்கார்ந்திருப்பவர் பார்க்கும் இடத்தில் வெள்ளை நிறத்தில் பளிச் என்று ஓர் அழகான வட்டத்தை வரைந்து வைத்திருக்கிறேன். என்னுடன் வரும் பெண் அந்த வட்டத்தைப் பற்றிக் கேட்பாள்.

அப்படியே பேச்சு வளரும். நான் அந்த வெள்ளை நிறத்தோடு தொடர்புடைய குணங்களை விலாவாரியாக எடுத்துரைப்பேன்.

வெள்ளை என்றால் தூய்மை, கற்புநிலை, ஒழுக்கம்....பேச்சு அப்படியே வளர்ந்து கொண்டே போகும். அதன் பின் மகான்களின் தூய்மையைப் பற்றிப் பேசுவோம். பேச்சு கொஞ்சம் கொஞ்சமாக தந்திர யோகத்தை நோக்கித் திரும்பும். இப்படியே தொடரும் பேச்சு ஒரு கட்டத்தில் உடலுறவில் போய்த்தான் முடியும்.

“நீ எப்படி பேசி ஆளை மயக்குகிறாய் என்பதைப் பொறுத்துத்தான் உனது வெற்றியே இருக்கிறது. உனது காரிலும் இதே போல் ஒரு வெள்ளை வட்டத்தை வரைந்து தருகிறேன். நீ உன் சாமர்த்தியத்தைக் காண்பி . அதன் பின் பெண்கள் எல்லாம் எப்படி படுக்கையில் வீழ்கிறார்கள் என்று பார்.”

கேள்வி கேட்ட இளைஞன் எல்லாவற்றையும் நன்றாகக் கவனித்தான். அவனுடன் படிக்கும் ஒரு பெண்ணை காரில் அழைத்துக் கொண்டு போகும் வாய்ப்பு கிடைத்தது.

எதிர்பார்த்ததைப் போலவே அந்த பெண் அந்த வெள்ளை வட்டத்தைப் பார்த்து ஆச்சரியத்துடன் கேட்டாள்.

“அந்த வட்டம் மிக அழகாக இருக்கிறது இல்லையா?”

“ஆமாம். நாம் இப்போது உடலுறவு கொள்ளலாமா?”

பொறுமையின்மையின் விளைவு இதுதான்.

